# HINDU LAW.

# ஹிந்து லா.



லா பப்ளிஷர்

ஆர். சுப்பிரமணிய அய்யர் அவர்கள்.

இயற்றியது.

மதுகரவேணிவிலாசம் புஸ்தகசாலை,

வேப்பேரி போஸ்டு - மதராஸ்.



விலை ரூ. 2 0 -0. தபால் சார்ஜ் அணு 4.

# விஷய சூசிகை.

## 4-வது மைனர்களின் சம்ரட்சணம்.



## 6-வது பொது ஐக்கிய குடும்பம்.

## 6-வது கடன்கள்.



## 7-வது சொத்தின் விநியோகம்.

# லா ரிப்போர்ட்டுகளின் குறிப்புகள்.

இ. லா. ரி—இந்தியன் லா ரிப்போர்ட.

இ. லா. ரி. 1 ம. 12—இந்தியன் லா ரிப்போர்ட் மதராஸ் சீரிஸ் 2-வது வாலம் 12-வது பக்கம்.

3 கல்-3 க. 17-கல்கத்தா சீரிஸ் 3-வது வாலம் 17-வது பக்கம்.

3 அல-3 அ. 78-அலகாபாத் சீரிஸ் 3-வது வாலம 78-வது பக்கம்.

8 பம் 11-பமாய் சீரிஸ் 8-வது வாலம் 11-வது பக்கம்.

2 க. ஐ. 16-கல்கத்தா ஐகோர்ட் ரிபோர்ட் 2-வது வாலம் 16-பக்கம்.

3 பம். ஐ. 78-பம்பாய் ஐகோர்ட் ரிப்போர்ட் 3-வது வாலம் 78-வது பக்கம்.

6 அ. ஐ. 32-அலகாபாத் ஐகோர்ட் ரிப்போர்ட் 6-வது வாலம் 32-வது பக்கம்.

3 ம. ஐ. 16-மதராஸ் ஐகோர்ட் ரிப்போர்ட் 3-வது வாலம் 16-வது பக்கம்.

ம. தீ-மதராஸ் தீர்ப்புகள்.

ம. ஸ. தீ-மதராஸ் ஸதர்கோர்ட் தீர்ப்புகள்.

ப்ங். ஸ. தீ-பங்கால் ஸதர்கோர்ட் தீர்ப்புசள்.

பாரோ-பாரோடேல் ரிப்போர்ட்.

மார்லி-மார்லி டைஜெஸ்டு.

டப்ளியூ மேக்-டப்ளியூமேக்னுடன் இந்து லா.

எப். மேக்-எப் மேக்னுடன் இந்து லா.

ஸ்ட்ரே-ஸ்ட்ரேஞ்சு இந்து லா.

ஸ-ஸதர்லாண்டு விக்கிலி ரிப்போர்ட்.

# ஹிந்துலா.

## 1-வது மூலாதாரங்கள்.

1. நியாயபரிபாலனவிதம்.—இந்துதேசமானது இங்கிலீஷ்க்காரர் கைவசமாகி அவர்களுடைய ஆளுகைக்கு வந்தபிறகு ஸிவில், கிரிமினல், ரிவினியூ விஷயங்களில் அவர்கள் அனேக சட்டங்களை ஏற்படுத்தினதுபோல, நமது மதாசாரவிஷயமாய்வரும் தாவாக்களைத் தீர்மானஞ்செய்வதற்காக அங்கங்கே கோர்ட்டுகளில் பண்டிதர்களை ஏற்படுத்தி, அந்தப் பண்டிதர்களின் அபிப்பிராயப்படி ஜட்ஜிகள் தீர்ப்புச்செய்து வந்தார்கள். பிறகு நமது மூலகிரந்தங்களை பரிசோதித்து இங்கிலீஷில் தர்ஜுமா செய்துவிட்டபடியால், ஜட்ஜிகளே அவைகளைப்பார்த்து தீர்ப்புச் சொல்லும்படியாய், அப்பண்டிதர்களை 18?9-ம்ஹு த்தில் எடுத்துவிட்டார்கள். தற்காலத்தில் நமது சாஸ்திரிகளைக்காட்டிலும் வக்கீல்களும், ஜட்ஜிகளும் நமது மதவிஷயமாய் ஏற்பட்ட சந்தேகங்களைத் தீர்மானிக்க அனேக கிரந்தகர்த்தாக்களுடைய பிரமாணங்களை எடுத்துச்சொல்ல வல்லவர்களாயிருக்கிறார்கள்.

2 தர்மசாஸ்திரத்தின் சரித்திரம்.—சர்வஞரான கடவுளால் படைக்கப்பட்ட இவ்வுலகத்தின் கண் மனிதர்களின் கணக்கிலகப்படாத அனேகமாயிரம் ஆண்டுகளாக கல்வியிலும் ஐசுவரியத்திலும் நாகரீகத்திலும் மேன்மைபெற்றும், பலதேச ஜனங்களால் புகழ்ச்சியாகப் பேசப்பட்டதுமான ஆர்யவர்த்தமென்கிற இவ்விந்துதேச

மானது அனேகமாயிர வருஷங்களாக ஆரியர்களின் சொந்ததேச மாயிருக்கிறது. மகாதர்மிஷ்டர்களான மனுமாந்தாதா முதலிய இந்து அரசர்களால் ஆளப்பட்ட இந்த ஆர்யவர்த்தத்தில் இந்துமத மும், அந்தமதத்துக்கு ஆதாரமாயுள்ள வேதங்களும், ஸ்மிருதிக ளும், புராணங்களுமே நம்முன்னோர்கள் அநாதிகாலமுதற்கொண் டே நாகரீகம்பெற்றவர்களென்பதைக்குறிக்கின்றது; ஆரியர்கள் கல் வியிலும், ஐசுவரியத்திலும், நாகரீகத்திலும் உலகத்தில் அநேகமா யிரம் வருஷங்களாக சிறப்புப்பெற்றிருந்ததற்கு மூலகாரணமாயிரு ந்த சுருதி என்கிற வேதம் கடவுளால் ஆரியர்களுக்கு அளிக்கப்பட் டதாக கருதப்படுகிறது. இந்தவேதத்தை ஆதாரமாகக்கொண்டு தான் மனுமுதலிய நமது பெரியவர்கள் உலகரக்ஷணார்த்தம் ஸ்மிருதி கள் தர்மசாஸ்திரங்கள் தர்மசூத்திரங்கள் முதலிய கிரந்தங்களைச்செ ய்து அதை ஆரியர்கள் அனுஷ்டிக்கும்படி செய்திருக்கிறார்கள். இவைகளில் ஆதியும், முக்கியமானதும் மனுஸ்மிருதி; இதற்கிரண் டாவது யாக்ஞ்வல்கிய ஸ்மிருதி. இதற்குப்பிற்காலத்தில்தான் நார தர், பராசரர், சங்கர், லிகிதர், காத்தியாயனர், கௌதமர், வஸிஷ் டர், போதாயனர், ஆபஸ்தம்பர் முதலிய தேவாம்சங்கொண்ட ருஷி கள் அந்தந்தகாலத்திற்கும், தேசத்திற்கும் தக்கபடி பல கிரந்தங் களைச்செய்திருக்கிறார்கள்.

கிருதயுகத்தில் மனுஸ்மிருதியும், திரேதாயுகத்தில் யாக்ஞவல் கிய ஸ்மிருதியும், துவாபரயுகத்தில் சங்கர், லிகிதர் இவர்கள் ஸ்மிருதி களும், கலியுகத்தில் பராசரஸ்மிருதியும் முக்கிய ஆதார கிரந்தங்க ளாக கொள்ளப்படுகின்றன.

நமக்கு மூலாதாரங்கள் வேதங்கள், சுருதிகள் என்பதாகவே நமது கிரந்தகர்த்தாக்கள் சொல்லியிருக்கிறார்கள். ஆனால் விவகாரத் துக்கு வேண்டிய தக்க ஆதாரங்கள் சுருதிகளிலில்லாததால், அவை கள் அங்கங்கே அப்போதைக்கப்போது ஜனங்கள் நடந்துகொண்ட ஆசாரங்களை அனுசரித்தே பிற்காலத்தில் பல வித்வான்களால் பல தர்மசாஸ்திரங்கள் ஏற்பட்டிருக்கின்றன.

3. தற்கால அனுஷ்டான கிரந்தங்கள்.—பொதுவாய்த் தர்ம சாஸ்திரங்கள் ஒன்றாயிருந்தபோதிலும் தேசத்துக்குத் தேசம் வழக்கங்கள் வித்தியாசப்பட்டிருப்பதால், அவ்வழக்கங்களுக்குத் தக்கபடி வியாக்கியான கிரந்தங்கள் ஏற்படுத்தின கிரந்த கர்த்தாக்களையும் சாஸ்திரங்களையும் இதனடியில் காட்டியிருக்கிறோம்.

மனுவாதி மகான்களால் செய்யப்பட்ட மேற்சொன்ன பல மூலகிரந்தங்களுக்கு பிற்காலத்தில் அநேக வியாக்கியான கிரந்தங்கள் பல வித்துவான்களால் எழுதப்பட்டன. அவ்வியாக்கியானங்களில் அடியிற்கண்டவை முக்கியமானவைகள்:—

(1) மிதாக்ஷரை - இது விக்ஞானேசுவர யோகியால் செய்யப்பட்டது. அது பற்றி இதற்கு விக்ஞானேச்வரீயம் என்ற பெயருமுண்டு. இது பெரும்பான்மையில் யாக்ஞவல்கிய ஸ்மிருதியின் வியாக்கியானமாக இருக்கிறது

(2) தாயபாகம்-இது ஜீமூதவாகனரால் செய்யப்பட்டது.

(3) ஸ்மிருதிசந்திரிகை-இது விஜயநகர ராஜவம்சம் தக்ஷிணத்தில் அரசுபுரிந்த காலத்திலிருந்த தேவானந்தபட்டர் என்றவரால் செய்யப்பட்டது. இதை மிதாக்ஷரைக்கு அடுத்ததாகச்சொல்லலாம்.

(4) தாயவிபாகம் - இது ஷை விஜயநகர இராஜவம்சத்தில் மந்திரியாக இருந்த மாதவய்யர் என்னும் வித்வானால் செய்யப்பட்டது. அதனால் இது மாதவீயம் என்றும் சொல்லப்படும். இது முக்கியமாய் பராசரஸ்மிருதியின் வியாக்யானமாக இருக்கிறது.

(5) ஸரஸ்வதிவிலாஸம் - இது பிரதாபருத்திரர் என்பவரால் செய்யப்பட்டது.

(6) வியவஹாரநிர்ணயம் - இது வரதராஜர் என்பவரால் எழுதப்பட்டது. அதனால் இதற்குவரதராஜீயம்என்றபெயருமுண்டு.

(7) மயூகம் - இது நீலகண்டரால் இயற்றப்பட்டது.

(8) வீரமித்திரோதயம் - இது மித்திர மிஸ்ரர் என்பவரால் எழுதப்பட்டது. இதுவும் மேலேசொன்ன மயூகமும் அநேகமாய் மிதாக்ஷரையை அனுசரித்திருக்கின்றன.

(9) தத்தகசந்திரிகை - இது தேவாநந்த பட்டரால் செய்யப்பட்டது.

(10) தத்தகமீமாம்சை-இது நந்தபண்டிதரால் செய்யப்பட்டது. இதுவும் மேற்கூறிய தத்தகசந்திரிகையும் ஸ்வீகார விஷயத்தைப்பற்றியே முக்கியமாய் சொல்லுகின்றன.

மேற்கூறிய பல வியாக்கியான கிரந்தங்களில் மிதாக்ஷரையும், தாயபாகமுமே பிரதானமானவைகள். இவையிரண்டும் முக்கியமான சட்டவிதிகளில் நிரம்பவும் வித்தியாசப்படுகிறபடியால் இவைகள் இந்துலாவின் இரண்டு பிரிவுகளாக இருக்கின்றன. தாயபாகமானது இந்தியாவின் வடகிழக்கு பாகமாகிய பங்காளதேசத்தில் முக்கிய ஆதாரகிரந்தமாக வழங்குகிறது. மிதாக்ஷரையானது மற்ற இடங்களாகிய காசிப்பிரதேசத்திலும், மேல் இந்தியாவாகிய பம்பாய் இராஜதானியிலும், தென் இந்தியாவாகிய இச்சென்னை இராஜதானியிலும் ஆதார கிரந்தமாக இருக்கிறது. மேலும் ஸ்மிருதி சந்திரிகை, ஸரஸ்வதிவிலாஸம், வியவஹாரநிர்ணயம், தாயவிபாகம், ஆகிய இவை மேல் இந்தியாவிலும், மிதாக்ஷரையோடு ஆதாரமாக வழங்கி வருகின்றன. இவைகள் தவிர வேறு சில கிரந்தங்கள் அங்கங்கே மேற்சொன்னவைகளோடு உபயோகப்பட்டு வருகின்றன. அவைகளை அடியிற்கண்ட அட்டவணையிற்காணலாம்.

ஸ்வீகாரம் அல்லது தத்து விஷயங்களைக்குறித்த விதிகளுக்கு தத்தகசந்திரிகை, தத்தகமீமாம்சை என்ற மேற்சொன்ன இரண்டு வியாக்கியானங்களும் ஆதாரமாக இருக்கின்றன.

இதனடியில் காட்டியிருக்கிற ஷ்டியூலில் இன்னின்ன கிரந்தங்கள் இன்னின்னரால் எழுதப்பட்டதென்பதையும், எங்கெந்ததேசங்களில் அனுஷ்டானத்திலிருக்கிறதென்பதையும் ஒரே அட்டவணைப்படுத்தி விவரித்திருக்கிறோம்.

| கிரந்தகர்த்தாக்களின் பெயர். | தர்மசாஸ்திரங்களின் பெயர், | எந்த தேசத்தில் வழங்குகிறது. |
|---|---|---|
| விக்ஞானேச்வரர்<br>தெவாநந்தபட்டர்<br>பிரதாபருத்திரதேவர்<br>மாதவர்<br>வரதராஜர்<br>குபேரர்<br>வித்தியாரண்ணியர் | 1. மிதாக்ஷரம்<br>2. ஸ்மிருதிசந்திரிகை<br>3. ஸரஸ்வதிவிலாசம்<br>4. தாயவிபாகம்<br>5. விவகாரநிர்ணயம்<br>6. தத்தகசந்திரிகை<br>7. பராசரமாதவீயம் | தமிழ் முதலான தென்னிந்தியாவில். |
| விக்ஞானேசுவரர்<br>நீலகண்டர்<br>நந்தபண்டிதர் | 1. மிதாக்ஷரம்<br>2. விவகாரமயூகம்<br>3. தத்தகமீமாம்ஸை | மகாராஷ்டிரதேசம், வடகன்னடம், குஜராத்தி, பம்பாய் வடகொங்கணம், முதலியமேலிந்தியாவில். |
| விக்ஞானேச்வரர்<br>மித்திரமிச்ரர்<br>கமலாகர்<br>நந்தபண்டிதர் | 1. மிதாக்ஷரம்<br>2. வீரமித்திரோதயம்<br>3. நிர்ணயஸிந்து<br>4. தத்தகமீமாம்ஸை | காசிராச்சியத்தில். |
| விக்ஞானேச்வார்<br>வாசஸ்பதிமிச்ரர்<br>லக்ஷ்மிதேவி<br>சண்டேசுவரர்<br>நந்தபண்டிதர் | 1. மிதாக்ஷரம்<br>2. விவாதசிந்தாமணி<br>3. விவகாரசிந்தாமணி<br>4. விவாதசந்திரிகை<br>5. விவாதரத்னகரம்<br>6. தத்தகமீமாம்ஸை. | வடபேகார், மிதிலைதேசம். |
| ஜீமூதவாகனர்<br>ரகுநந்தர்<br>ஸ்ரீகிருஷ்ணதர்க்காலங்காரர்<br>ஜகன்னாதர்<br>குபேரர் | 1. தாயபாகம்<br>2 தாயதத்துவம்<br>3. தாயக்கிரமஸங்கிரகம்<br>4. விவாதபங்கார்ணவம்<br>5. தத்தகசந்திரிகை | கவுடதேசமென்கிற பங்காளம். |

4. (1) அனுஷ்டானம்.—சுருதிகள், ஸ்மிருதிகள், தர்மசாஸ்திரங்கள், மிதாக்ஷரதாயபாக முதலிய கிரந்தங்கள் இவைகளில் சொல்லப்பட்டவைகளுக்கு விரோதமாக சில ஆசாரங்கள் வழக்கமாக பல ஜனங்களால் அங்கீகரிக்கப்பட்டு வெகுகாலமாக அனுஷ்டிக்கப்பட்டுவந்தால் அந்த ஆசாரங்கள் தர்மசாஸ்திரத்துக்கு சமமாக ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறது. புராதனவழக்கம் தர்மசாஸ்திரத்துக்கு மேலானதென்று மனுவே அபிப்பிராயப்பட்டிருக்கிறார்.

(2) ஆனால், ஒருவழக்கமானது சட்டப்பிரமாணமுள்ளதாய் அங்கீகரிக்கப்படுவதற்கு அது பலர்களாலும் கிரமமாயும் சீராயும் சந்தேகமன்னியிலும் நெடுநாளாய் அனுஷ்டிக்கப்பட்டுவந்திருக்கிற நல்ல வழக்கமாக இருக்கவேண்டும். (7 மதா 3; 3 ம. ஹை கோரி 75; 7 ம. ஹை கோரி 250) புராதனமில்லாமலும் தொடர்ச்சியாய் அனுஷ்டிக்கப்படாமலும், சந்தேகத்துக்கிடமாயும், நியாய விரோதமாயும், துராசார சம்பந்தமாயும், இருக்கிற வழக்கங்கள் சட்டப்பிரமாணமுள்ளதாகமாட்டாது. (12 ம. 214; 1 ம. 168; 12 ம. 277; 1 ம. 235; 1 ம. ஹை கோரி 51; 14 பம் 90; 2 அ. 49; 1 க. 186; 4 பம் 545;) சிலர்கள்கூடி ஒப்பந்தமாய் நடத்திவருகிற வழக்கஞ் சட்டபிரமாணமுள்ள வழக்கமாகமாட்டாது. (8 மு. இ. அ. 420.)

(3) ஒரு சரியான வழக்கமானது ஒரு பிரதேசத்தையாவது ஒரு கூட்டத்தை அல்லது ஜாதியையாவது ஒரு குலம் அல்லது குடும்பத்தையாவது பற்றியதாக இருக்கலாம். (12 மு. இ. அ. 523; 6 மு. இ. அ. 164; 2 இ. அ. 263; 17 இ. அ. 134; 4 ம. 272; 6 ம. 274; 16 ம. 54.)

(4) மேற்சொல்லியவாறான ஒரு வழக்கம் எழுத்து மூலமாயிருக்கிற சாஸ்திர விதிகளையுங்கூட மீறினதாகும். நிச்சயமாயும் நியாயமாயும் புராதனமாயுமுள்ள ஒரு வழக்கமானது சாஸ்திர விதிகளுக்கு நேர்விரோதமாக இருந்தாலும் அவ்வழக்கமே பிரமாணமாகவுஞ் சட்டமாகவும் நியாயஸ்தலத்தாரால் ஒப்புக்கொள்ளப்படவேண்டும். (5 மு. இ. அ. 169; 12 மு. இ. அ. 436; 14 மு. இ. அ. 585; 11 ம. 398; 13 ம. 406; 16 ம. 54; 15 இ. அ. 51; 10 அ. 272; 17 இ. அ. 134.)

(5) சாஸ்திர விரோதமாயிருக்கிற ஒரு வழக்கமானது திருப்தியாய் ருசுப்படுத்தப்படாவிட்டால் அது நியாயஸ்தலங்களில் ஒப்புக்கொள்ளப்படமாட்டாது. (24 அ. 273.)

(6) ஒருவன் தன் சுயதேசத்திலிருந்து வேறொரு தேசத்தில் போய்வசித்தால் அவனுடைய வழக்க மாறுபட்டு அவ்விடத்திய ஆசாரத்தைத் தழுவுவது நியாயமல்ல. (2 மூ. இ. அ. 132; 12 மூ. இ. அ. 91.) ஆனால், அவ்விடத்திய வழக்கப்படி சிரார்த்த முதலிய கர்மங்களை அநுசரித்தால் அந்தப் புது தேசத்திய சாஸ்திரமே அவனுக்குச் செல்லும். (12 மூ. இ. அ. 96.)

5. (1) ஹிந்துலா யாருக்குறியது—ஆரியர்களாய்ப் பிறந்து ஹிந்து தர்மசாஸ்திரங்களை யநுசரிக்கிறவர்களுக்கு ஹிந்துலா செல்லுபடியாகிறது. ஹிந்துவாகப் பிறந்தவர்கள் கிறிஸ்து, மகம்மது முதலிய மதங்களில் சேர்ந்துவிட்டால் அவர்களுக்கு ஹிந்து தர்ம சாஸ்திரம் செல்லமாட்டாது. (10 மூ. இ. அ. 537; 1865ளுடத்திய 10-வது ஸக்ஸெஷன் ஆக்ட்.) ஆனால் அவர்கள் எந்தமதத்தை அநுஷ்டித்தார்களோ அந்தமதத்துக்குரிய சட்டமே செல்லும். ஆனால் அதுவரையில் உண்டாயிருந்த சொத்துபாத்தியம் போக மாட்டாது; (1850ளுடத்திய21-வதுஆக்ட்.) பம்பாய் இராச்சியத்திலுள்ள கோஜா ஜாதியர்களும் கச்சிமேமனஜாதியர்களும், மகம்மது மதத்தை யநுசரித்தாலும், ஹிந்து தர்மசாஸ்திர வழக்கத்தை யநுஷ்டிக்கிறார்கள். (1-பம். ஐ. 71, 73; 2-பம் ஐ 292; 12 பம், ஐ 294; இ. லா. ரி. 3-பம் 34; இ. லா. ரி. 6 பம் 452; இ. லா. ரி. 9 பம் 115; இ. லா ரி 10 பம் 1.)

(2) பவுத்தர், ஜைனர், ஸீக் பிரம்மசமாஜம் முதலான மதத்தைச்சேர்ந்தவர்களுக்கு ஹிந்துமத அநுஷ்டானமே வழக்கத்திலிருப்பதால் அவர்களுக்கும் ஹிந்துதர்மசாஸ்திர ஆசாரமே செல்லுமென்று தீர்ப்புகள் செய்யப்பட்டிருக்கின்றன. (8 ஸ. 116; 10 பம் ஐ. 258; இ. லா. ரி. 1 அ. 688.)

(3) சிலதேசங்களிலும், சில குடும்பங்களிலும் தர்மசாஸ்திரத்துக்கு விரோதமான ஆசாரங்களாவது, வாடிக்கைகளாவது, நடவடிக்கைகளாவது வெகுகாலமாக நடந்துவந்ததாக ருசுவானல், அவைகள் நியாயஸ்தலங்களில் செல்லத்தக்கவைகள். (12 மூ. இ.

அ. 436; 3 ம. ஐ. 50) ஆனல், அப்படிப்பட்ட வழக்கங்கள், ஆசாரங்கள் முதலியவைகள் நடுவில் விட்டுவிடப்பட்டால், பிறகு அப்படிப்பட்ட ஆசாரங்களை மறுபடி அனுஷ்டிக்க கோர்ட்டார் தீர்ப்புச் செய்யமாட்டார்கள்.

சிலவிடங்களில் ஏற்பட்ட துர்வழக்கங்கள் வெகுகாலமாக அனுஷ்டானத்திலிருந்தாலும் சட்டப்படி செல்லமாட்டாது. (3 ம. ஐ. 75, 77; 14 மூ. இ. அ. 570, 585; இ. லா. ரி. 2 பம். 140; 15. ம. 307.) அதாவது தாசிக்குப்பிறந்த பிள்ளைகள் பங்குகேட்பது, புருஷன் துஷ்டனாயிருக்கிறனென்று சில ஜாதியில் பெண்சாதி வேறொருவனை விவாகஞ்செய்துகொள்வது முதலியது சட்டப்படி செல்லாது.

6. தற்கால சட்டம்—மேற்சென்ன சாஸ்திரங்கள், வழக்கங்கள் தற்கால அரசாங்கத்தாரால் ஏற்கப்பட்டபோதிலும், காலதேச வர்த்தமானங்களை யனுசரித்து சிலவிதிகளை மாற்ற சட்டமேற்படுத்தியிருக்கிறார்கள், அவைகளாவன:—

(1) மதப்பிரஷ்டன் அல்லது ஜாதிப்பிரஷ்டனான ஹிந்துவுக்கு பிதுரார்ஜிதசொத்து பாத்தியமுண்டென்று 1850ளூத்திய 21-வது ஆக்டினாலும்,

(2) மேலான ஜாதியைச்சேர்ந்த விதவைகள் புனர்விவாகஞ் செய்துகொண்டால் செல்லத்தக்கதென்றும் அவர்களுக்குப்பிறக்கும் பிள்ளை சரியான வார்சென்று 1856ளூத்து 15-வது ஆக்டினாலும்,

(3) 16-வயதுக்கு மேற்பட்டவர்கள் பால்யாவஸ்தை நீங்கி மேஜராவதாக தர்மசாஸ்திரங்களிலிருந்த போதிலும், 18வது வயது முடிந்தபிறகே பிள்ளைகள் மேஜராவதாகவும், கோர்ட் ஆப் வார்ட்சாருடைய விசாரணையின் கீழ்ப்பட்ட மைனர்கள் 21-வது வயது சென்ற பிறகே மேஜராவதாகவும் 1875ளூத்து 9-வது ஆக்ட்டாகிய இந்தியன் மெஜாரிடி ஆக்ட்டினாலும்,

(4) பூர்வகிரந்தங்களில் காணப்படாத (சொத்தை தன்னிஷ்டப்படி தனக்குப்பிறகு விநியோகஞ்செய்ய) உயில் ஏற்பாடு செய்ப 1870ளூத்திய 21வது சட்டமாகிய ஹிந்து உயில் ஆக்டினாலும்,

(5) தகப்பன் பட்ட கடனை பிள்ளை கொடுக்கவேண்டுமென்று தர்ம சாஸ்திர மிருந்தபோதிலும், தகப்பன் சொத்து பிள்ளைக்கு வராதபோது தகப்பன் வாங்கிய கடனையடைக்க பாத்தியம் பிள்ளைக்கில்லையென்றும்,

(6) தர்ம சாஸ்திரப்படி எந்தவிஷயத்துக்கும் வாய்க்கருரே போதுமென்றிருந்தாலும், 100 ரூபாய்க்கு மேற்பட்ட ஸ்தாவர சொத்தை தானம், ஒத்தி, கிரயம் முதலியவை செய்வதாயிருந்தால் எழுத்து மூலமாயிருக்கவேண்டுமென்று 1882ஆு த்திய 4-வது ஆக்டினாலும்,—இன்னும் பலவிதிகள் தற்காலம் ஏற்படுத்தப்பட்டிருக்கிறன்றன.

6. ஹைகோர்ட் சித்தாந்தங்கள்.—தர்மராஜாங்கமென்று பெயர்பெற்ற பிரிடிஷ் அரசாட்சியில் கல்கத்தா, பம்பாய், மதராஸ், அலகாபாத் இந்த இடங்களில் ஸ்தாபிக்கப்பட்டிருக்கிற ஹைகோர்ட்டுகளின் ஜட்ஜிகளாலும், மகாராஜா சக்கிரவர்த்தி அவர்களுடைய பிரிவிகவுன்சில் என்கிற நியாயசபையிலுள்ள ஜட்ஜிகளாலும் தீர்மானிக்கப்படுகிற சித்தாந்தங்களும் சட்டமாக ஏற்றுக்கொள்ளப்படுகின்றன.

7. மருமக்க தாயச்சட்டம்.—சென்னை ராஜதானியைச்சேர்ந்த மலையாள இராச்சியத்திலுள்ள நாடர் என்கிற வகுப்பாருக்குள் விவாகம் இல்லாததால், அவர்களுக்குப்பிறக்கும் பிள்ளைகளுக்கு சொத்து பாத்திய மேற்படாமல் சகோதரி பிள்ளைகளுக்கு சேர்ந்துவிடுவதால், மாமன் சொத்துக்கு பாத்தியதையடைந்த மருமக்களில் ஜேஷ்டனுயிருப்பவன் கரணவன் என்கிற பெயரோடு குடும்ப எஜமானனுகி, மற்றவர்கள்ஜீவனும்சத்துக்குமட்டும் பாத்தியஸ்தராயிருர்கள்.

## 2-வது விவாகம்.

8. விவாகங்களின் விதங்கள்.—முன்காலங்களில் பிராம்ம. தைவ, ஆர்ஷ, பிராஜாபத்ய, காந்தர்வ, ராக்ஷஸ, ஆசுர, பைசர்சமென்னும் 8-வித விவாகங்கள் நடந்துவந்தன. அவைகளில்,

(1) வேதாத்தியயனம் செய்திருக்கிற பிராம்மணனை அழைத்துவந்து உபசரித்து மனமொப்பி பெண்ணை தானம் செய்வதாகிய "பிராம்மம்" என்பதும்,

(2) கிருககிருத்திய வைதிகசடங்குகளைச் செய்துவைக்கிற ஆசாரியனாகிய பிராம்மணனுக்கு கன்னிகையை அலங்கரித்துக்கொடுப்பதாகிய "தைவம்" என்பதும்,

(3) வரனிடமிருந்து ஒன்றல்லது இரண்டு ஜதை பசுக்களைப்பெற்றுக்கொண்டு கன்னிகையை கொடுப்பதாகிய "ஆர்ஷம்" என்பதும்,

(4) ஒரு பிர்ம்மசாரிக்கு பெண்ணைக்கொடுத்து தம்பதிகள் வைதிக லௌகிக காரியங்களை விதிப்படி நடத்தி வாழக்கடவீர் என்று ஆசீர்வதிப்பதாகிய "பிராஜாபத்தியம்" என்பதும்,

ஆகிய இந்நான்கும் பிராம்மணர்களுக் குரித்தானவைகள். ஸ்திரி புருஷர்கள் மனமொப்பிச்சேருவது காந்தர்வவிவாகம். யுத்தத்தில் ஜயித்து அல்லது பலாத்காரமாகக்கொண்டு போயாவது செய்யும் விவாகம் ராக்ஷஸ விவாகம். காந்தர்வ ராக்ஷஸவிவாகங்கள் க்ஷத்திரியர்களுக் குரித்தானவைகள். பெண்ணை விக்கிரயம்செய்வதாகிய ஆசுரவிவாகம் வைசியர், சூத்திரர் இவர்களுக்குரித்தானவைகள். தூக்கம், மயக்கம், பைத்தியம் இவைகளினால் மெய்மறந்திருக்கும்போது, ஸ்திரிகளுடன் சம்போகஞ்செய்வதும், மோசஞ்செய்தாவது, பலவந்தஞ்செய்தாவது சம்போகஞ்செய்வதும் பைசாசவிவாகம். இது எல்லா ஜாதிகளுக்கும் உரித்தானதல்ல.

**9.** தற்கால அனுஷ்டானம்.—தற்காலத்தில் பிராம்ம (கன்னியாதானம்) ஆசுர (கன்னியாவிக்கிரயம்) இவை இரண்டுந்தான் எல்லா ஜாதியாராலும் அனுஷ்டிக்கப்பட்டு வருகின்றன. பிராம்மண ஜாதியில் நடக்கிற ஆசுரவிவாகம் சாஸ்திர விரோதமாயிருந்தபோதிலும், வழக்கத்திலிருந்து வருவதால் அவைகளைக் கோர்ட்டார் நியாயமானதென்று அங்கீகரித்திருக்கிறார்கள். (இ. லா. ரி. 13 ம. 83.)

**10.** காந்தர்வவிவாகம்.—க்ஷத்திரிய ஜாதியில் காந்தர்வவிவாகஞ் செல்லுமென்று பங்காளா ஹைகோர்ட்டார் தீர்மானஞ்செய்திருக்கிறார்கள். ஆனால், அலஹாபாத் ஹைகோர்ட்டார் அந்த விவாகத்தை ஒப்புக்கொள்ளாமல், அப்படிப்பட்ட விவாகத்தில் வந்த ஸ்திரீயானவள் தாசிக்குச் சமானமானவளென்றும் தீர்ப்புச்செய்தி

ருக்கிறார்கள். (இ. லா. ரி. 3 அ 738.) மதராஸ் ஹைகோர்ட்டார், ஹோமம் முதலிய விதிகளுடன் சரியாக நடந்த காந்தர்வ விவாகம் செல்லுமென்று தீர்மானஞ் செய்திருக்கிறார்கள். (இ. லா. ரி. 12 ம. 72; 13 மூ. இ. அ. 506.) இக்காலங்களில் காந்தர்வ விவாகம் சில விடங்களிலுள்ள ஜமீன்தார்களும், இராஜாக்களும் செய்வதாகச் சொல்லுகிறார்கள். இவர்கள் தவிர மற்றவர்கள்செய்கிற காந்தர்வ விவாகமும், பொதுவர்க ராக்ஷஸம், பைசாசம் இந்தவிரண்டு விவாகமும் இந்தியன்பினல்கோடு 366, 376-வது பிரிவுகளின்படி தண்டிக்கப் டத்தக்க குற்றமாவதால் யாரும் செய்யக்கூடாது.

**11.** விவாகத்துக்கு வயது.—(1) கடவுளால் படைக்கப்பட்ட ஆண்பெண்களில் பெண்சீக்கிரம் வளர்ந்து பக்குவத்தை யடைகிற படியால், அப்பெண்ணை யடக்கியாளப் போதுமான வயதையுடைய பிள்ளைக்கு பெண்ணைக்கொடுப்பது அவசியமெனக்கருதி நம்முன்னோர்கள் பெண்ணைக்காட்டிலும் பிள்ளைவயதில் பெரியவனாக விருக்கவேண்டுமென்று சாஸ்திரத்தில் எழுதியிருக்கிறார்கள். இதுபிர்ம்ம, க்ஷத்திரிய, வைசியர்களாலும், சூத்திரஜாதிகளில் பலராலும் அனுஷ்டிக்கப்பட்டாலும், சிலசூத்திரஜாதிகளில் பால்மணமாறாத சிறுபுருஷ குழந்தைக்கு 20 வயதுள்ள குமரியைக் கலியாணம் செய்விப்பதுடன், அவள்வயற்றிற்பிறந்த குழந்தைகள் அவ்விளஞ்சிறுவனுக்குப் பிறந்ததாகவே ஒப்புக்கொள்ளப்படுகிறது.

(2) தர்மசாஸ்திரப்படி பெண்ணுக்கு 8-வது வயதுவந்ததும் விவாகஞ்செய்யலாம். விவாகத்திற்குமுன் ஒரு பிராம்மண கன்னிகை புஷ்பவதியாய்விட்டால் அவள்ஜாதிபிரஷ்டையாய் விடுவதாக சாஸ்திரத்தின்கருத்து.

(3) புஷ்பவதியாவதற்குமுன் விவாகஞ்செய்வது பிராமணர்களில் கட்டாயமாய் அனுஷ்டானத்திலிருந்தபோதிலும், க்ஷத்திரிய வைசியஜாதிகளிலும் சிலர் புஷ்பவதியாவதற்கு முன்னும், சிலர் பிறகும் விவாகஞ்செய்கிறார்கள். சூத்திரர்களில் புஷ்பவதியாகி தகுந்த பருவமடைந்தபிறகு தான் பெண்களுக்கு விவாகஞ்செய்கிறார்கள்.

**12.** பெண்ணை விவாகஞ்செய்விக்க அதிகாரம்.—(1) பெண்ணுக்குத்தகுந்தவரனை சம்பாதித்து விவாகம் செய்விக்குமதிகாரம்

முதல் முதலில் தகப்பனுக்கென்றும், அவனுக்குப்பிறகு வரிசையாய்பிதாமகன், தமயன், சிறிய தகப்பன், பெரியதகப்பன், மாமன், தாய், தாயாதி யிவர்களுக்கென்றும், இவர்களொருவருமில்லாமற் போனால், பெண்தானேவரனை நிச்சயித்துக்கொண்டு அரசன் அனுமதியின்பேரில் விவாகம்செய்துகொள்ளலாமென்றும் மிதாட்சரம் முதலான தர்மசாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கின்றன. குழந்தைகளின் கார்டியனுயிருக்க புருஷனுக்கு அடுத்தபடி பெண்சாதியிருந்தபோதிலும், பெண்ணை விவாகம்செய்யும் பாத்தியதையில் மிகவும் தாழ்ந்திருக்கிறாள்.

(2) பெண்சாதி குழந்தைகளுடன் குடும்பத்தை ஆதரிக்காமலிருக்கிற புருஷனைத் தள்ளிவிட்டிருந்தால், தாயாரே சுவதந்திரமாக பெண்ணுக்கு விவாகஞ்செய்பலாம். (இ. லா. ரி. 11 பம் 247.) தகப்பன் உயிரோடிருந்தும் அவனனுமதியின்றி, தாய் மோசடியாகவாவது பலாத்காரமாகவாவதில்லாமல், பெண்ணின்நன்மையின்பொருட்டும் க்ஷேமத்தை உத்தேசித்தும் நல்ல எண்ணத்தோடு பெண்ணுக்கு விதிப்படி விவாகஞ்செய்துகொடுத்து சாஸ்திரமுறை வழுவாமல் சடங்குகளை முடித்திருந்தால் செல்லுமென்று தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. (இ. லா. ரி. 14 ம. 316, 12 கல். 140; 19 அல. 515; 11 பம். 247; 22 பம். 509; 22 பம் 812.)

ஆனால், வேறு எந்த நிலமையிலும் தகப்பன் அனுமதியன்னியில்தாயாராவது வேறுயாராவது குமாரத்திக்கு விவாகஞ்செய்விப்பது செல்லமாட்டாது. (இ லா. ரி. 12 பம் 10.) தாயாரனுமதியன்றியில் தகப்பன் குமாரத்திக்கு விவாகஞ்செய்பலாம்.

(3) குமாரத்திக்கு விவாகம் செய்யும்படியான பாத்தியம் புருஷர்களுக்கேயல்லாமல் தாயாருக் குண்டாகமாட்டாதென்று தர்மசாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கிற எல்லா நியாயங்களும் அவிபக்த குடும்பத்துக்கேயொழிய, விபக்த குடும்பங்களில் பெரிய தகப்பன் சிறிய தகப்பன்களைப்பார்க்கிலும் தாயாருக் கதிகபாத்தியமானதால், அவளுடைய அனுமதியன்றியில் மேற்கண்டவர்களிலொருவரும் கன்னிகைக்கு விவாகம்செய்யக்கூடாதென்று மதராஸ் ஹைகோர்ட்டார் தீர்மானித்திருக்கிறார்கள். (4 ம ஐ. 339.)

(4) ஸபத்தினி மாதாவைக்காட்டிலும், மாதாமகனுக்கு (தாயின் தகப்பன்) கன்னிகையை விவாகஞ்செய்துகொடுக்க அதிசபாத்தி

யமுண்டென்று கல்கத்தா ஐகோர்ட்டார் தீர்மானித்திருக்கிறார்கள். (7 ஸ. 321.)

**13. விவாகத்தைநிறுத்தஅதிகாரம்.**-(1) கன்னிகையைவிவாசம் செய்து கொடுக்க அதிகாரம் யாருக்கென்று மேலே தெரிவிக்கப் பட்டிருக்கிறதோ அவர்கள் அனுமதிக்கு விரோதமாக கன்னிகையை விவாகம்செய்துகொடுக்க எத்தனிக்குப்பட்சத்தில் கோர்ட்டில் மனுக்கொடுத்து விவாகத்தை நிறுத்தலாம். (இலா. ரி. 11 பம் 253) கன்னிகையை சம்ரட்கித்துவருபவர்கள், கெட்ட எண்ணத் தோடாவது, சுயபிரயோஜனத்தை உத்தேசித்தாவது, அக்கன்னிகையின் நன்மைக்கு விரோதமான சம்பந்தத்தைத் தீர்மானஞ் செய்து விவாகஞ்செய்ய எத்தனித்தால் கன்னிகையின் பந்துவாவது சினேகிதனாவது கோர்ட்டில் மனுக்கொடுத்து விவாகத்தை நிறுத்தலாம். ஆனால், தகப்பனே அப்படிப்பட்டசம்பந்தம் ஏற்படுத்தி விவாசஞ்செய்ய எத்தனித்தால் அது எவ்வளவு அயோக்கியமாயிருந்தாலும் அதைநிறுத்த கோர்ட்டார் ஒப்புக்கொள்ளமாட்டார்கள். (இ. லா. ரி. 12 பம் 480 ; 8 கல். 266.)

(2) கோர்ட்டார் நிறுத்தும்படி செய்த உத்திரவைமீறி விவாகத்தை நடத்தினால், அப்படி நடத்தியவர்களை உத்திரவைமீறிநடந்த குற்றத்திற்காக சிட்சிப்பார்களேயொழிய, விவாகத்தை ரத்துசெய்ய மாட்டார்கள். (இ. லா. ரி. 11 பம் 247; இ. லா. ரி. 12 கல். 140; இ. லா. ரி. 14 ம, 260.)

**14. விவாகத்தை ரத்துசெய்தல்.**—அனுமதி கொடுக்கவேண்டியவர்களுடைய அனிமதியில்லாமலும், கன்னிகையை முதன் முதலில் நிச்சயம் செய்திருந்தவனுக்குக் கொடுக்காமலும், ஸ்திரிபுருஷர்கள் வரநிர்ணய விஷயமாய் விரோதப்பட்டும், பெரியரோகம், பைத்தியம், நபும்ஸகம் முதலிய காரணங்களாலும் விவாகத்தை நிறுத்தவேண்டியிருந்தால், விவாகம் பூர்த்தியாக நடப்பதற்குமுந்தி அதை நிறுத்துவார்களேயொழிய முடிந்துபோனபிறகு கோர்ட்டார் அதை ரத்து செய்யமாட்டார்கள். (இ. லா. ரி. 14 ம. 316.)

**15. கன்னிகாதானம்-சப்தபதி.**—விவாகத்துக்கு கன்னிகாதானம், சப்தபதி - இவ்விரண்டு காரியங்களும் அவசியம். (1) கன்னிகையைப்போஷித்துவருபவர்கள் கன்னிகையினுடைய க்ஷேமத்தை உத்

தேசித்த நல்ல வரனைத்தேடிக் கன்னிகாதானம் செய்வது; (2) பிள்ளை கன்னிகையின் கையைப்பிடித்தலாகிய பாணிக்கிரகணம்செய்து கொள்வது. தானம், பாணிக்கிரகணம் இவ்விரண்டும் எல்லா ஜாதியாருக்கும் முக்கியமானவை. தம்பதிகள் கையைப்பிடித்துக் கொண்டு ஹோமம்செய்த அக்கினிக்கு நேரே மந்திர பூர்வமாக ஏழடி நடப்பதற்கு "சப்தபதி" என்பது. இதன்பிறகு பேதிக்க முடியாத விவாகபந்த மேற்படுகிறது. மேலே சொன்ன விரண்டும் கிரமமாக நடந்தபிறகு விவாகத்தை ரத்துசெய்யமுடியாது. இவ்விதம் கிரமமாய் நடந்த விவாகத்தினல் புருஷன் பெண்ணை தன்னுடன் சம்சாரஞ்செய்ய கூட்டிப்போகவும் அவளை சம்ரக்ஷிக்கவும் கார்டியனுமிருக்கவும் கடமைப்பட்டவனுகிருன் இந்த தம்பதிகளுக்குண்டாகுஞ் சந்தானங்கள்தான் கிரமமான வார்சாகிருர்கள். ஆனல் மோசஞ்செய்தாவது, பலாத்காரமாகவாவது, கன்னிகையைக் கொண்டுபோய் விவாகஞ்செய்யும்பட்சத்தில் சப்தபதி மந்திர பூர்வமாய் நடந்திருந்தாலும் அந்த விவாகம் செல்லமாட்டாது. ஏனென்ருல் ஸம்ரக்ஷணைகர்த்தரன்னியில் செய்யுந்தானம் கன்னிகாதானமாகாததால் சப்தபதி கர்மம் பலிக்காமல்போவதுடன் விவாக பந்தமும்ஏற்பட முடியாது. (இ லா. ரி. 14 ம. 316.)

(1) சாஸ்திரத்தில் சொல்லியபடி சப்தபதிகர்மத்தில் ஏழாவது அடியின்பேரில் கால்வைக்குமவரையில் விவாகம் முடியவில்லையென்றும், அதுவரையிலும் விவாகத்தை நிறுத்திவிடலாமென்று மேற்படுகிறது. மேற்சொன்னபடி ஏழடியும் பூர்த்தியாய் ஆகவில்லையென்று வாதிப்பவர்கள் அதை ருசுச்செய்யவேண்டும். (இ. லா. ரி. 12 க 140.)

(2) ஆனல் சாஸ்திரத்தில் எப்படியிருந்தபோதிலும்தென்தேசங்களில் மங்கள சூத்திர தாரணமானவுடனே விவாகபந்தம் ஏற்பட்டுவிட்டதாகப் பொதுவாய் நம்பப்பட்டுவருவதால் அந்ததேசாசாரமே செல்லும். சப்தபதியைத்தவிர வேறு கர்மங்களின் முடிவால் விவாகம் பூர்த்தியாவதாக தேசாசாரமிருந்தால் அது செல்லும். (இ. லா. ரி. 5 க. 6, 92; இ. லா. ரி. 10 க 138.)

16. நிஷேகம்.—விவாஹபந்தம் பூர்த்தியாய் உண்டாவதற்கு நிஷேகமாக வேண்டியதவசியமில்லை. நிஷேகம் (திரட்சி) நடக்காமலேயிருந்தாலும் தாம்பத்தியம் விடமுடியாது (இ. லா. ரி. 9 ம. 466-)

17. பெற்றோரிஷ்டமின்றி பெண் விவாகம்.—பலாத்காரமாகவாவது மோசடியாகவாவது பெண்ணைக் கொண்டுபோய்க் கல்யாணம் செய்தால் அந்தக் கல்யாணத்தை ரத்துசெய்து, மறுபடி அந்தப் பெண்ணுக்குக்கல்யாணம் செய்யலாம். அப்படி அந்தப் பெண்ணை மோசடியாய்க்கொண்டுபோனவன் பினல்கோட் 363-வது பிரிவுப்படி தண்டனைக்குள்ளாகிறன். ஆனல், பெற்றோரிஷ்டப்படி சிறிய தகப்பன், பெரியதகப்பன், மாமன், பாட்டன் முதலிய பந்துக்களுடைய சம்ரக்ஷணையில் பெண்ணிருக்கும்போது அவர்கள் நல்ல எண்ணத்தோடு சரியானபடி அந்தப்பெண்ணுக்கு தகுந்த வரனை சம்பாதித்துப்பெற்றோர்கள் அனுமதியின்றி விவாகம்செய்யலாம். அதைசம்மதியாமல் பெற்றோர்கள் மறுபடிவிவாகஞ்செய்தால் பினல்கோட்494-வதுபிரிவுப்படி தண்டனைக்குள்ளாவார்கள். வேறு விவாகஞ்செய்ய இஷ்டமிருந்தால் முதலில் நடந்த விவாகம் நியாயமல்லவென்றுகோர்ட்டில் தாவாசெய்து ரத்துசெய்தபிறகு மறுபடி விவாகஞ்செய்யலாம்.

18. பெற்றோரிஷ்டமின்றிப் பிள்ளைக்கு விவாகம்.—பெற்றோர்களிஷ்டமின்றிப் பிள்ளையைக் கொண்டுபோய் கன்னிகையின் பெற்றோர்கள் பெண்ணைக்கொடுத்து பலவந்தமாக விவாகம்செய்துவிட்டால் அவர்கள் எவ்விதமான தண்டனைக்காவது, நஷ்டத்துக்காவது பாத்திரர்களாயினும், விவாகம் செல்லாமற் போகமாட்டாது.

19. விவாகம் வேதோக்தம்.—மேலே சொல்லப்பட்ட காரணங்களினல் ஹிந்துக்களுடைய விவாகம் மதசம்பந்தமான கருமமேயொழிய, கிறிஸ்துமத முதலானவைகளில் ஸ்திரீ புருஷர்கள் சம்மதித்துச் செய்துகொள்ளும் உடன்படிக்கைப்படி யல்லவென்று தெளிவாகிறது. அதினல்தான் இளங்குழந்தைகளுக்கும், பித்தர்களுக்கும், நபும்ஸகர்களுக்கும் செய்கிற விவாகம் செல்லுகிறது. (இ. லா. ரி. 5 அ 513; இ. லா. ரி. 1 அ. 549; 14 ம. 316; 19 அல 515) அப்படிப்பட்ட பித்தன் முதலானவர்களுக்கு வார்சு பாத்தியமில்லா மற்போனலும் அவர்கள் குமாரர்களுக்கு வார்சு பாத்தியமுண்டென்று ஏற்படுகிறது.

20, நிச்சயமான விவாகத்தை மாற்றுதல்.-(1) விவாகத்தை நிச்சயித்து லக்கினப்பத்திரிகை முதலானவை பந்துக்களுக்கு அனுப்

பின பிறகு விவாகத்தை மாற்றக்கூடாதென்று மனுஸ்மிருதியில் சொல்லியிருந்தபோதிலும், முதல் சம்பந்தத்தைக்காட்டிலும் இரண்டாவது சம்பந்தம்மேன்மையாயிருப்பதினலாவது அல்லது கெட்ட வியாதி, நபும்ஸகத்தன்மை முதலிய காரணங்கள் தெரியவருவதினலாவது விவாகத்தை மாற்றுவது தோஷமல்லவென்று யாக்ஞியவல்கியஸ்மிருதியில் சொல்லப்பட்டிருக்கிறது. நிச்சயதார்த்தமான பிறகு காரணமில்லாமல் விவாகத்தை மாற்ற எண்ணங்கொண்டால், பலவந்தஞ்செய்து விவாகத்தை நடத்தலாமென்று நாரதஸ்மிருதியில் சொல்லியிருந்தபோதிலும், இக்காலத்தில் அப்படிப்பட்ட விவாகத்தைப் பலவந்தஞ்செய்து நடத்த கோர்ட்டாருக்கதிகாரமில்லை. (1877ஹு த்திய 1-வது ஆக்ட்டாகிய ஸ்பெசிபிக்ரிலீப் ஆக்ட் 21-வது பிரிவு, 6-வது கிளாஸ்; 1 க. 741; 11 பம் 412.)

(2) ஆனல், தகுந்தகாரணமின்றி அக்கிரமமாக உடம்படிக்கையை மீறினவன்பேரில் நஷ்டமடைந்தவன் நஷ்டத்துக்காக தாவா செய்து அதைப் பெற்றுக்கொள்ளலாம். (7 பம். ஐ. 122; இ. லா. ரி. 11 பம். 422.) விவாகவிஷயமாய் பெண்ணின் தகப்பனுக்குக் கொடுத்தபணத்தை வரப்பற்றபிள்ளை தாவாசெய்யலாம். (இ. லா. ரி. 10 க. 1054.)

21. வேறு ஜாதியில் விவாகம்.—தர்மசாஸ்திரத்தில் எந்த ஜாதி புருஷனும் தன் சுயஜாதிப்பெண்ணையாவது, தன் ஜாதிக்கு தாழ்ந்த ஜாதிப்பெண்ணையாவது விவாகஞ் செய்துகொள்ளலாமென்றிருப்பதால், முற்காலத்தில் அவ்வழக்கம் சாதாரணமாய் நடந்துகொண்டிருந்தபோதிலும், இக்காலத்தி லனுஷ்டானத்திலில்லாததால் அப்படிப்பட்ட விவாகம் செல்லமாட்டாது. தன் ஜாதியிலும் ஒரே கோத்திரமுள்ள பெண்பிள்ளைகளுக்கு விவாகஞ் செய்யக்கூடாது.

22. தம்பதிகளின் குலகோத்திரங்கள்.—வதூவரர்களுக்குள் ஸபிண்டபந்துத்வம்கூடாது, அதாவது பிள்ளையின் முன்னேர்கள் பெண்ணின் முன்னேர்கள் (பிள்ளையையாவது பெண்ணையாவது பிடித்துக்கொண்டு) தகப்பன் வர்க்கத்தில் 7 - தலைமுறைகளுக்குள்ளும், தாய் வர்க்கத்தில் 5-தலைமுறைகளுக்குள்ளும், ஒருவராகவேயானல் விவாகங்கூடாதென்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆனல் தென்னிந்தியா மேலிந்தியா தேசங்களில் இதற்கு விரோதமாகமாமன் பெண்,

அத்தையின் பெண், சகோதரிகளின்பெண் இவர்களை பிராமண ஜாதியார்கள்கூட கல்யாணஞ்செய்வது கோர்ட்டில் அங்கீகரிக்கப்பட்டிருக்கின்றது. ஒரேகோத்திரமுள்ள குலங்களில் நடந்த விவாகம், சூத்திர ஜாதிகளைத்தவிர பிராமணஜாதிகளில் செல்லமாட்டாது. (இ. லா. ரி. 5 சு 708.)

23. செய்யக்கூடாத விவாகங்கள்.-(1) அண்ணன் தம்பிகளின் குமாரத்தி, தங்கை, அத்தை, சிறியதாயார், சிற்றப்பன் பெரியப்பன் பெண்கள், சிறியதாயார் பெரியதாயார் பெண்கள், இவர்களைச் சூத்திரர்கள் கூடக் கல்யாணஞ்செய்யக்கூடாது. (இ. லா. ரி. 6 ம 43.)

(2) கல்யாண விஷயத்தில் சபத்னி மாதாவைச்சேர்ந்த பந்துக்கள் சொந்தத் தாயாரைச்சேர்ந்த பந்துக்களைப்போலவே எண்ணி நிஷேதம் செய்யப்பட்டிருக்கிறார்கள்:

(3) ஸ்வீகாரமாகப்போன ஒருவன், ஜனனகுடும்பத்திலும், தத்தாகப்போன குடும்பத்திலும் மேற்சொன்ன உறவினர்களை விவாகஞ் செய்துகொள்ளக்கூடாது. இது முக்கியமாய் பிராமணர்களுக்குரியது.

(4) குரு சிஷ்யர் குமாரத்திகளையாவது, தன் தாயார்பேருள்ள பெண்ணையாவது, வரனைக்காட்டிலும் பெரிய வயதுள்ள பெண்ணையாவது தமக்கை கல்யாணமாகாதிருக்க தங்கையையாவது விவாகஞ் செய்யக்கூடாதென்று ஸ்மிருதிகளில் சொல்லப்பட்டிருக்கின்றது. ஆனால், இக்காலத்தில் மேலே சொல்லியபடி நடக்காமல் போன போதிலும், ஒருவேளை நடந்தால் செல்லாதென்று சொல்ல ஆதாரமில்லை.

(5) தர்மசாஸ்திரத்தில் கன்னிகையை ரஜஸ்வலையாவதற்கு முந்திவிவாகஞ்செய்து கொடுக்கவேண்டுமென்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால் இதுபிராமண ஜாதியில்மட்டும் அனுஷ்டானத்திலிருக்கிறது.

24. வெவ்வேறு ஜாதிகளில் விவாகம்.—பிர்ம்ம, க்ஷத்திரிய, வைசிய, சூத்திரர் என்று நான்கு ஜாதிகள்தான் தர்ம சாஸ்திரத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. இக்காலத்தில் ஒவ்வொரு ஜாதியினும் அனேகம் உட்பிரிவுகளிருக்கின்றன. ஒரு ஸ்மார்த்த வடமப்பிராமணர் பிரஹசரணம், வாத்திமன், மாத்துவாள், வைஷ்ணவாள், நியோ

கிகள் முதலான ஜாதிகளில் பெண்ணைக் கல்யாணஞ்செய்தால் சாஸ்திர விரோதமில்லை. பாஷைகளில் வித்தியாசத்தைப்பற்றிக்கூட தர்மசாஸ்திரத்தில் சொல்லியிராததால், ஒரு பாஷையைப் பேசுகிற வன் மற்றொரு பாஷையைப் பேசுகிற தன் சுவஜாதி பிராமண க்ஷத்திரிய, வைசிய சூத்திரப்பெண்ணைக் கல்யாணஞ்செய்யலாம். ஆனால் வெவ்வேறு ஜாதியில் விவாகஞ்செய்ய தற்காலம் அனுஷ்டானம் முக்கியமென்று கல்கத்தா ஹைகோர்ட்டில் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. (9 ஸ 552; இ. லா. ரி. 1 க. 1) மற்ற ஹைகோர்ட்டுகளில் வெவ்வேறுஜாதியில் விவாகஞ்செய்ய அனுஷ்டான மவசியமில்லையென்றிருக்கிறார்கள். (1 ம ஜ. 478; 13 மூ. இ. அ. 141; 14 மூ. இ. அ. 346, 352; இ. லா. ரி. 15 க 708.)

25. ரஜஸ்வலையாகாத பெண்சாதியை யிரட்சிக்கும் பாத்தியம்:- (1) விவாக பந்தத்தால் ஸ்திரீபுமான்கள் இகபர கர்மங்களில் ஒன்றாய் விடுகிறபடியால், விவாகமான சிறிய பெண்ணை அவள் புருஷனே சம்ரட்சிக்கவேண்டும்; புருஷன் மைனராகயிருந்தால், அவனைப் போஷிக்கிறவர் பெண்ணையும் சம்ரட்சிக்க வேண்டுமென்று தர்ம சாஸ்திரத்தில் சொல்லப்பட்டிருக்கிறது; ஆனால் பெண்கள் ரஜஸ்வலையாகிறவரையில் பிறந்த வீட்டிலேயே யிருப்பது தற்காலம் அனுஷ்டானத்திலிருப்பதால் அதற்குமுந்தியே பெண்சாதியை வீட்டுக்கு அனுப்பும்படி கட்டாயப்படுத்த புருஷனுக் கதிகாரமில்லை. (23 ஸ. 178; 17 கல். 298; 29 ம 255.)

(2) ரஜஸ்வலையான பிறகு பெண்களை யிரட்சிப்பது புருஷனுடைய கடமை (13 அ-126.) பருவமடைந்த பெண்புருஷன் வீட்டில் வசிக்ககடமைப்பட்டவள். அவள் பெற்றோர்கள் அல்லது போஷகர் பெண்ணை புருஷனிடத்துக் கனுப்பமாட்டேனென்பது சட்டவிரோதம். (11 மூ. இ. அ. 551; 28. க. 751.)

26. ருதுசாந்திக்கு வயது நிர்ணயம்.—பெண்கள் ருதுவானாலும் 12வயது முடிவானபிறகுதான் ருதுசாந்தி செய்யவேண்டும். அதற்குள் எவனாவது செய்தால், பினல்கோட் 376-வதுபிரிவுப்படி "பலவந்தப்புணர்ச்சி" என்னும் குற்றத்திற்காக தண்டனையடைவதுடன் அதற்கு உடந்தையாயிருந்தவர்களும் தண்டனையடைவார்கள்.

27. பெண்சாதி புருஷனுக் கடங்கியிருப்பது.—அன்னவஸ்திரங் கொடுத்துப் பெண்சாதியை இரட்சிப்பது புருஷன் கடமை. அவளும் புருஷன் சட்டளைக்குட்பட்டு அவனிஷ்டப்படி வீட்டுவேலைகளைச் செய்து அவனுடன் வாசஞ்செய்து ஸம்ஸாரஞ்செய்யவேண்டியது. (இ. லா. ரி 13 அல 126.) புருஷன் போகிற விடங்களுக்கெல்லாம் பெண்சாதிபோகக் கடமைப்பட்டவள்.

28. பெண்சாதியைக்கட்டுப் படுத்துவது.—வயதுவந்த பெண்சாதி தானாகவாவது, பெற்றோர்கள் முதலிய பந்துக்களின் துர்போதனையினாலாவது தன்புருஷனிடம் போகமாட்டேனென்றாலும், அல்லது அவனுடைய வீட்டைவிட்டு வெளியேபோனாலும், அவள் பேரிலும், அவளுடைய பந்துக்கள் பேரிலும் தாவாசெய்து அவளைப் புருஷன் வீட்டிலிருக்கும்படிகட்டாயப்படுத்தலாம். (இ லா. ரி. 5 க 500; இ. லா. ரி. 1 பம் 164.) ஆனால், அவள் கோர்ட்டார் உத்திரவை நிராகரித்தால், அவளை பலவந்தஞ்செய்து புருஷன் வீட்டுக்கனுப்ப சட்டமில்லாமற் போனபோதிலும், சீவில் புரோசிஜர் கோட் 260-வது பிரிவுப்படி கோர்ட்டாரவர்களுக்கு யுக்தமாகத்தோற்றினால் அவளை 6மீ வரையில் சீவில் ஜயிலில் வைக்கலாம். அவளுடைய ஸ்திரீதனமுதலிய சொத்துக்களை ஜப்திசெய்து, ஏலம்போட்டு புருஷனுக்குக் கொடுக்கலாம். (இ. லா. ரி. 5 க. 500; இ. லா. ரி. 13 அல 126; இ. லா. ரி. 10 பம் 301.)

29. பெண்சாதி புருஷனைவிட்டு நீங்குவது—புருஷன் மதப்பிரஷ்டனாகப்போனாலும், ஜாதிப்பிரஷ்டனாகப்போனாலும் புருஷன் வீட்டில் மாமியார் நாத்தனார் முதலியவர்கள் பெண்ணை அதிகமாக அடித்துத் தொந்திரவுசெய்தாலும், புருஷன் கெட்டவியாதியினால் அவஸ்தைப்படும்போது பெண்சாதி சமீபத்திலிருந்தால் அந்தவியாதி அவளுக்கு ஒட்டி பிராணாபாயம் உண்டாகுமென்று தோன்றினாலும் பெண்சாதி புருஷனைவிட்டு நீங்கியிருக்கலாம், (11 மூ. இ. அ. 126; இ. லா. ரி 1 பம் 164; இ. லா. ரி 5 க 500; இ. லா ரி 13 அ. 126) திருப்திகரமான ருஜு கோர்ட்டார் அவர்களுக்குத் தெரிந்தாலொழிய புருஷனைவிட்டு விலகியிருக்கப் பெண்சாதிகளுக்கு உத்திரவு கொடுக்கமாட்டார்கள். (இ. லா. ரி 4. அ. 374.) தகுந்த காரணமிருந்தால் அவளுக்கு ஜீவனாம்சம்கிடைக்கும். புருஷன் தாசியை வீட்டிலே

யே வைத்துக்கொண்டு அவளுடன் சம்சர்க்கஞ்செய்து கொண்டிருந்தாலும், பெண்சாதியை உபத்திரவஞ் செய்யாமலிருந்தால், அவனைவிட்டு நீங்கியிருக்க அந்தப் பெண்சாதிக் கதிகாரமில்லை. (1 ம. ஐ. 375) மகம்மதிய, கிறிஸ்தவ முதலான அன்னிய மதஸ்திரீகளை வைத்திருப்பவன் ஜாதிப்பிரஷ்டனாகிறபடியால், அவனுடன் ஹிந்து மதப் பெண்சாதி சம்சாரஞ்செய்யமாட்டாள். (14 ஸ. 145) அப்படிப்பட்டவன் தன் ஹிந்துப் பெண்சாதியை தன் வசப்படுத்த தாவா செய்ய பாத்தியமில்லை. (5 ஸ. 235) ஆனல், 1866 ஷு ௵த்திய 21வது ஆக்ட்டுப்படி மதபிரஷ்டன் தன்னுடைய விவாகத்தை ரத்துசெய்ய கோர்ட்டில் தாவா செய்யலாம்.

**30.** பெண்சாதியை வசப்படுத்த தாவாவுக்குக் காலமும் கட்டணமும்.—தாம்பத்திய சம்பந்தமானது செத்தாலொழிய விடாததலால் பெண்சாதியை ஸ்வாதீனப்படுத்திக்கொள்ள கொண்டுவரப்படுகிற தாவாவுக்குக் காலநிர்ணயமில்லை. (இ. லா. ரி. 13 அ 126.) இந்த பிராதுக்கு கோர்ட்டுபீசு ஸ்டாம்பு ரூ. 5.

**31.** ஸ்திரீ புனர்விவாகஞ்செய்துகொள்ள அதிகாரமில்லை.— 29-வது பாராவில் சொல்லியபடி புருஷனுடைய துர் நடத்தையினுல் பெண்சாதி விலகியிருப்பதாக ருஜூ ஏற்பட்டு புருஷன் செய்த தாவா தள்ளுபடியானலும், அதைக்கொண்டு தாம்பத்தியபந்தம் போய்விட்டதாக எண்ணி பெண்சாதி இரண்டாந்தரம் கல்யாணஞ் செய்துகொள்ளக்கூடாது. (18 க. 264, 13 அ. 126) விவாகபந்தத்தை ரத்துசெய்ய கோர்ட்டில் தாவா செய்து டிக்கிரிபெற்ற பிறகு புனர்விவாகம் செய்து கொள்ளலாம். (4 பம். 330.)

**32.** பெண்சாதிக்கு ஜீவனம்சம்.—தகுந்த காரணமில்லாமல் பெண்சாதி புருஷனைவிட்டு விலகியிருந்தாலும், வியபசாரியாயிருந்தாலும் அவளுக்குப் புருஷன் ஜீவனும்சம் கொடுக்கமாட்டான். (இ. லா. ரி 2 பம் 634) ஆனல், பிறகு நல்ல நடத்தையாயிருப்பவளுக்கு தயாதாட்சணியமாய் ஏதாவது சஞ்சிக்குக் கொடுக்கலாமென்று தர்மசாஸ்திரம் முறையிடுகிறது. தகுந்த காரணமின்றி அநாதரவாய் விடப்பட்டிருக்கிறபெண்சாதி தன் ஜீவனத்துக்காக புருஷன் பேரால் கடன்வாங்கினுல் அதை அவன் கொடுக்க கடமைப்பட்டவன். ஆனல், சம்சாரப் பொதுவிஷயமான செலவைத்தவிர

வேறே சொந்தச் செலவுக்காகப் பெண்சாதி கடன் வாங்கினல் அதைப் புருஷன் கொடுக்கமாட்டான். (1 ம. ஐ 375; இ. லா. ரி 3 அ 122; இ. லா. ரி 1 பம் 121.) விபசாரியானவள் புருஷன் பேரில் ஜீவனும்சத்துக்கு தாவா செய்யக்கூடாது. (1 ம. ஐ. கோ. ரி. 372, 2 ம. ஐ. கோ. ரி. 377.)

33. பெண்சாதியை வைத்துக்கொள்ளப் புருஷனைக்கட்டுப்படுத்தல்.-(1) நிஷ்காரணமாகத் தனது பெண்சாதியை துரத்திவிட்டால், அப்படித் தள்ளிவிடாமல் அவளோடு வைத்துக்கொள்ளும்படி தாவா செய்யலாம். கோர்ட்டு டிகிரிக்குப் பிறகும் நல்ல நடத்தையாயிருக்க அவனிடம் ஷரத்துகள் வாங்கலாம். சில சமயங்களில் அவனை விட்டிருப்பதே நலமாகத் தோன்றினல் ஜீவனும்சத்துக்குமட்டும் தாவாசெய்து அதைப் பெற்றுக்கொள்ளலாம்.

(2) புருஷன் பெண்சாதியை யிரட்சியாமல் நிஷ்காரணமாய்த் தள்ளிவிட்டால், மாஜிஸ்ட்ரேட்டாரிடம் மனுக்கொடுத்து அவள் ஜீவனும்சம் பெற்றுக்கொள்ளலாம். விபசாரியின் தாவா செல்லாது.

34. புருஷன் இரண்டாந்தாரம் செய்துகோள்ளல்.—முதல் தாரம் பிள்ளையில்லாதிருத்தல். மலட்டுத்தனம், துர்வியாதி, துர்மார்க்கம், துர்குணம், இவைகளுள்ளவளாயிருந்தால் புருஷன் 2-வது தாரம்விவாகம்செய்துகொள்ளலாமென்று தர்மசாஸ்திரத்தில் சொல்லப்பட்டிருந்தாலும், இக்காரணங்களில்லாமலே புருஷன் தன்னிஷ்டப்படி எத்தனை தாரங்களையாவது விவாஹஞ்செய்துகொள்ளத் தடையில்லை. புனர்விவாகம் செய்துகொண்ட காரணத்தைப்பற்றி, முதல் பெண்சாதி அவனைவிட்டு நீங்கக்கூடாது (1 ம. ஐ 375) அவனே அவளை தள்ளிவிட்டிருந்தால் அவளுக்கு ஜீவனும்சபாத்தியமுண்டு.

35. ஸ்திரீ புனர்விவாகம்.—புருஷனிறந்துபோனலும், வெகுகாலம் தேசாந்திரம் போய்திரும்பிவராமலிருந்தாலும், நபும்ஸகனயிருந்தாலும், ஜாதிபிரஷ்டனானலும் ஸ்திரீபுனர்விவாகஞ் செய்துகொள்ளலாமென்று நாரதருடைய கிரந்தத்திலும், புஷ்பவதியாவதற்குள் புருஷனையிழந்த கன்னிகை புனர்விவாகம் செய்துகொள்ளலாமென்று மனுஸ்மிருதியிலும் சொல்லப்பட்டிருக்கிறது. புனர்விவாகஞ்செய்து கொள்ளக்கூடாதென்று ஆதிகால தர்மசாஸ்திரங்

களில் ஆதாரச்தைக்காணுதபோதிலும் பிராம்மண, க்ஷத்திரியவைசி யர்களிலும், சூத்திரர்களில் உயர்வகுப்பாரிலும் ஸ்திரீகளுக்கு புனர் விவாகம் செய்வதில்லே. சூத்திரர்களில் கீழானவகுப்பாரில் ஸ்திரீக ளுக்குப் புனர்விவாகஞ் செய்வது வழக்கத்திலிருக்கிறது (6. ம. ஹை. கோ. ரி. 379; 1 ம. 226; 17. ம. 479.) ஈனசாதிகளில், புருஷன் உயிரோடிருக்கும்போதும் பெண்களுக்குப் புனர் விவாகம் செய்வது சிலதேசங்களில்வழக்கமாயிருக்கிறது (இ.லா. ரி. 4 பம். 330; இலா. ரி. 8. ம. 440) அதைத்தவிர மற்ற ஜாதிகளில் எந்தக் காரணத்தைக் கொண்டாகிலும் புருஷன் உயிரோடிருக்கும்போது ஸ்திரீகளுக்குப் புனர்விவாகம் செய்வது செல்லாது. அப்படிச்செய்து கொண்டால் இ.பி.கோ. 494-வது பிரிவுப்படி தெண்டனைக்குண்டான குற்றத்தை ச்செய்தவளாகிறுள்.

36. விதவாவிவாகம்.—மனுஸ்மிருதியில் கர்ப்பாதானத்துக்கு முந்தி வைதவியம் அடைந்த பெண்ணுக்கு புனர்விவாகம் செய்யலா மென்றிருந்தாலும், அதற்குப்பின் எழுதப்பட்ட சில ஸ்மிருதிகளில் கூடாதென்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால்தான் உபய கட்சிக்காரர்களுக்கும் ஆதாரங்கள் தர்மசாஸ்திரங்களிலிருக்கின்றன. எப்படி யிருந்தாலும் தற்காலத்தில் சில தாழ்ந்த ஜாதிகளில் தவிர மற்ற ஜாதிகளில் விதவா விவாகம் அனுஷ்டானத்திலில்லை. ஆனுல், 1856-ம் ௵ 15-வது ஆக்டுப்படி விதவைகள் புனர் விவாகஞ் செய்துகொள்ளலாம். அப்படி விவாகஞ் செய்துகொள்ள முதல் புரு ஷனுல் அனுமதி கொடுக்கப்பட்டிருந்தாலொழிய அவனுடையசொத் தில் அவளுக்கு யாதொரு பாத்தியமாவது ஜீவனும்சமாவது கிடை க்காது. (ஷை ஆக்ட் 1, 2 பிரிவுகள்) சரியானகாரணங்களைகாட்டி கோர்ட்டுமூலமாய் விவாகபந்தத்தை நீக்கிக்கொண்ட ஸ்திரீ புனர் விவாகஞ்செய்துகொள்ளலாமென்று பம்பாய் ஹைகோர்ட்டார் தீர் மானித்திருக்கிறுர்கள். (1. பம். 347; 4. பம். 330.)

37. கிறிஸ்து மதத்தில் சேருவது.—புருஷனுவது பெண்சாதி யாவது மதப்பிரஷ்டர்களாய் கிறிஸ்து மதத்தைச் சேர்ந்தால் சேரா தவர்கள் 6மீ காத்திருந்து ரூ2. ஸ்டாம்பு ஒட்டி டிஸ்ட்ரிக்ட் கோ ர்ட்டில் மனுக்கொடுத்து விவாகத்தை ரத்து செய்த பிறகுஅவர்கள்

புனர்விவாகம் செய்துகொள்ளலாம். (1866ஆ௵ 21 ஆக்ட்)மேலான ஜாதியான் சேர்ந்தால், அவன் பெண்சாதி புனர்விவாகம் செய்துகொள்ளமாட்டாளென்பது நிச்சயமாயிருந்தாலும், சட்டத்தில் செய்துகொண்டால் பாதகமில்லையென்று ஏற்பட்டிருக்கிறது.

## 3-வது புத்திரஸ்வீகாரம்.

### (1) ஸ்வீகாரம் யார் எடுத்துக்கொள்ளலாம்.

38. புத்திரனின்பிரயோசனம்.—புத்திரனில்லாதவன் இறந்த பிறகு 'புத்' என்னும் நரகத்தில் அவன் ஆத்துமா தள்ளப்படுமென்றும், அந்நரகத்திலிருந்து தப்புவதற்குப் பிள்ளை அவசியமென்றும் பிள்ளையைத் தவிர வேறொருவர் அந்த நரகத்திலிருந்து காப்பாற்றார்களென்றும், ஆகையால், ஒவ்வொருவனும் தன் உத்தர கிரியை நடத்தவும், தன் வம்சோத்தாரணத்திற்கும், தன் சொத்தை அனுபவிப்பதற்கும் அவசியம் பிள்ளையை பெற்றிருக்கவேண்டும். தன் மனைவியிடமாக தனக்குப்பிறக்கும் புத்திரன் ஔரஸன் என்று பெயர். புத்திரப்பேறில்லாதவன் புத்திரனைப்போல் வேறொருவனை யடையலாமென்றுதர்மசாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கின்றன.

39. வேறு வகைகளில் அடையும் போலிப்புத்திரர்கள் அடியிற்கண்டபடி பதின்மூன்று வகைப்படுவார்கள் :

(1) புத்திரிகா புத்திரன்:- தன் புத்திரியிடம் (பெண்ணினிடம்) பிறக்கும் முதல் பிள்ளை தனக்கும் பிள்ளையாக பாவிக்கப்படுவான் என்ற ஒப்பந்தத்துடன் அப்பெண்ணை ஒரு புருஷனுக்கு விவாகஞ்செய்து கொடுப்பது ஆதிகாலத்தில் வழக்கமாயிருந்தது. இப்படிப்பட்ட புத்திரியின் பிள்ளைக்கு புத்திரிகா புத்திரன் என்று பெயர்.

(2) தன் சம்மதத்தின்பேரில் தன் மனைவியிடமாக வேறு புருஷனுக்குப் பிறக்கும் பிள்ளை அல்லது க்ஷேத்திரஜன்.

(3) பெண்சாதி திருட்டுத்தனமாய் விபசரித்துப் பெற்ற பிள்ளை.

(4) கன்னிகையின் புத்திரன்.

(5) ஒருஸ்திரீயை விவாகம் செய்துகொள்ளும்போது அவளுடன் அடைகிற (விவாகத்துக்கு முன் அவளுக்கு பிறந்த) பிள்ளை.

(6) புனர் விவாகம் செய்துகொள்ளுகிறவளுடைய (முதல் விவாகத்துக்கு பிறந்த) பிள்ளை.

(7) ஸ்வீகாரன் அல்லது தத்துப்பிள்ளை.

(8) கிருத்தரமன்.

(9) விலைக்கு வாங்கின பிள்ளை.

(10) அனுதரவாய் இருந்து எடுத்து வளர்க்கப்பட்ட பிள்ளை.

(11) தானே வந்துசேர்ந்த பிள்ளை.

(12) சூத்திரஸ்திரீக்குப் பிறந்த பிள்ளை.

(13) வைப்பாட்டி பிள்ளை.

**40.** சந்தானத்தின் அவசியம்.—(1) சரியான வழியினாலாவது சரியென்று ஒப்புக்கொள்ளத் தகாத வேறு அநேக வழிகளினாலாவது ஓர் புத்திரனையடையவேண்டுமென்று சொல்லப்பட்டதினால் சந்தானபாக்கியத்தின் ஆவசியகமும் மகிமையும் வெளிப்பட்டது.

(2) ஆனால் மேற்சொல்லிய பலவழிகளாலும் புத்திரனையடையும் வழக்கம் பல காரணங்கள் பற்றி நாளடைவில் கொஞ்சங் கொஞ்சமாக நின்றுகொண்டே வர, கடைசியில் இப்போது ஆண் சந்ததியில்லாமற்போனால் ஸ்வீகாரத்தால் புத்திரனையடைகிற வழக்கமொன்றே நம்பிரதேசத்தில் அனுஷ்டிக்கப்பட்டு வருகிறது. இச்ஸ்வீகார புத்திரனைப்பற்றி பின்னால் விவரமாய் கூறப்படும்.

(3) ஸ்வீகாரத்தால்புத்திரனையடையும் வழக்கம் இல்லாத சில இடங்களில் பெற்ற தாய் தகப்பனால் கொடுக்கப்படாமல் தானே சம்மதித்து வந்தடைகிற பிள்ளையை இஷ்டத்தின்பேரில் ஒப்புக்கொண்டு புத்திரன்போல் பாவித்துக்கொள்ளும் வழக்கம் ஏற்பட்டு வருகிறது. இப்படியடையப்படும் பிள்ளை கிருத்தரமன் எனப்படுவான்.

புத்திரனாக எடுத்துக்கொள்ளப் படுவதற்கு அப்பிள்ளைபினுடைய சம்மதம் வேண்டியிருக்கிறபடியால் அவன் மைனாரிடியி

விருந்துநீங்கினவனுயிருக்கவேண்டும். இப்புத்திரன் புதுத்தகப்பனுக்கு உத்தரக்கிரியை முதலியவற்றைச்செய்யவும் அவனுடையசொத்து சுதந்திரங்களை யடையவும் உரியவனுக இருப்பதும் தவிர பிறந்த குடும்பத்தினின்றும் அதனுடைய சொத்து சுதந்திரங் களினின்றும் விலகாதவனுகவுமிருக்கிறுன். இவ்வித வழக்கம் மிதிலைநாட்டிலும், பஞ்சாப் காச்மீரப் பிரதேசங்களிலும் லங்கைத் தீவிலும் மலைபாளத்திலுள்ள நம்பூரி பிராமணர்களுக்குள்ளும் தவிர மற்றெங்கும் அனுஷ்டானத்தில் இல்லை. (11 மத. 164.)

(4) தென் இந்தியாவிலுள்ள சில ரெட்டி ஜாதிகளுக்குள் பிள்ளையில்லாமற்போனுல் பெண்ணின்புருஷனை மருமகனை பிள்ளையாக பாவித்துக்கொள்ளும் வழக்கம் நடந்துவருகிறது. இதற்கு இல்லத்த ஸ்வீகாரம் என்று பெயர். இவன் தன் பெண்சாதியின் தகப்பனுடைய சொத்துக்களன்றி தன் சொந்தத் தகப்பனுடைய சொத்துக்கும் பாத்தியஸ்தனுக இருக்கிறுன். (4 மத. 272 ; 21 மத. 226 ; 6 மத. 267.)

(5) அபிமானப்பிள்ளை அல்லது வளர்ப்புப்பிள்ளை.—பிரியத்தின்பேரில் பிள்ளை பொப்பந்தம் குடும்பத்தில் வளர்க்கப்படுகிறவன் அபிமான பிள்ளை யென்று சொல்லப்படுவான். ஆனுல் சாஸ்திரவிதிகளின்படி இவனுக்கு குடும்பத்தில் யாதொரு அந்தஸ்தும் பாத்தியமும் கிடையாது. அபிமானத் தகப்பனுக்கு இவன் வார்சாகவுமாட்டான். அத்தகப்பனுலே இஷ்டத்தின் பேரில் ஏதாவது சொத்து கொடுக்கப்பட்டிருந்தால் அதைமட்டும்அவன் அடையலாமேயன்றி வேறுவித சுதந்திரம் ஒன்றும் அவனுக்கு ஏற்படமாட்டாது. (20 அல 209.)

**41.** எவர்கள் ஸ்வீகாரம் எடுத்துக்கொள்ளலாம்.—புத்திரனுயிரோடிருக்கும்போதும், புத்திரனில்லாதபோது பவுத்திரன்,பிரபவுத்திரன் இவர்களில் யாரிருந்தாலும் புத்திரனைப்போல உத்தரகிரியை செய்ய பாத்தியப்பட்டவர்களாதலால் அவர்கள் உயிரோடிருக்கும் சமயத்திலும் ஸ்வீகாரம் எடுத்துக்கொள்ளக்கூடாது ஸ்வீகாரப் பிள்ளையாவது, அவனுக்குப் பிறந்த பவத்திரர், பிரபவுத்திரர்களில் யாராவதிருக்கும்போதும் ஸ்வீகாரங்கூடாது. ஆனுல் மேலேசொல்

ளப்பட்டவர்களில்லாமல் பிரபவுத்திரன் பிள்ளை யுயிரோடிருந்தாலும் அவன் 3 தலைமுறைக்கு மேல்பட்டவனுகி உத்தரகிரியைசெய்ய பாத்தியப்பட்டவனல்லாததால், வேறொருபிள்ளையை ஸ்வீகாரம் எடுத்துக்கொள்ளலாம். ஆனல் அவ்வளவு காலம்வரையில் ஜீவித்தவர்களில்லை. தௌஹித்திரன் (பெண்ணின் புத்திரன்) உயிரோடிருந்தால் ஸ்வீகாரம் செய்துகொள்வதில் தடையில்லை.

42. ஆண்சந்ததி யிருக்கும்போது ஸ்வீகாரம் செல்லாது.—(1) ஆண்சந்ததி பிறந்திருந்து பிறகு இறந்துபோயிருந்தாலும் ஸ்விகாரம் செய்துகொள்ளலாம். ஸ்வீகாரம் செய்துகொள்ளுங்காலத்தில் யாதொரு ஆண் சந்ததியும் உயிரோடிருக்கக்கூடாதென்பது சட்டத்தின் கருத்து. ஆண் சந்ததியிருக்க ஸ்வீகாரம் வாங்கிக்கொண்டால் அது செல்லமாட்டாது. (21. மு. இ. அ. 181; 22 பம். 482; 23 பம் 236.)

(2) அவுரஸபுத்திரன், பவுத்திரன், பிரபவுத்திரன், தத்துப்புத்திரன், பவுத்திரன் பிரபவுத்திரன் இவர்களில் யாராவது ஜீவித்திருக்கும்போதும் அவர்கள் துஷ்டர்களாயும், துன்மார்க்கர்களாயுமிருப்பதாயும் பிதாமாதா சொற்படி நடக்கிறவர்களாயில்லையென்கிற நியாயத்தைக்கொண்டும் வேறு ஸ்வீகாரஞ்செய்து கொள்ளக்கூடாது. மேற்சொன்னவர்கள் ஜாதிப்பிரஷ்டர்களானல் வேறு ஸ்விகாரஞ் செய்துகொள்ளலாம். இவர்கள் அனுமதியின்பேரிலு மெடுத்துக்கொண்ட ஸ்விகாரமும் செல்லமாட்டாது. (4 மூ. இ. அ. 1; 1856ளுத்து மதராஸ் தீர்ப்பு 20-வது பேஜ்)

43. ஜாதிப் பிரஷ்டனுகப்போன பிள்ளை யிருக்கையில் சுவீகாரம்.—சொந்தப் பிள்ளையாவது தத்துப்பிள்ளையாவது ஜாதிப்பிரஷ்டனுகப்போய்விட்டால் ஸ்விகாரமெடுத்துக்கொள்ளலாம். ஆனல், ஜாதிப்பிரஷ்டனன பிள்ளைக்கு சொத்துபாத்தியதை போகாதென்று 1850ளுத்து 21-வது ஆக்டில் சொல்லப்பட்டிருக்கிறது. ஆனல், தகப்பன் சம்பாதித்த சுவயார்ஜித சொத்துமட்டும் கிடைக்கும். சுவயார்ஜித சொத்தை சுவயமாகவே தன்னிச்சையாய் செலவுசெய்பலாமென்றிருப்பதால் ஒருவன் ஜாதிப்பிரஷ்டனன தன்பிள்ளைக்குச் சொத்தைக்கொடுக்காமல் வேறுவித வினியோகம் செய்வானென்

பது நிச்சயம். ஆகையால் ஸ்வீகாரம் எடுத்துக்கொண்டு அந்த ஸ்வீகாரப் பிள்ளைபேரில் தன் சொத்துக்களை உயில் எழுதிவைத்தால் செல்லும்.

44. தாயபாகத்துக்குத் தகுதியற்றவன் சுவீகாரமெடுப்பது.—பிறவிக்குருடு, செவிடு, ஊமை, குஷ்டரோகி, நபும்ஸகன், அங்கஹீனன், ஜடன், பைத்தியன் தீராதரோகி, முதலியவர்களை பிள்ளையாகப்பெற்றிருப்பவன் ஆண்சந்ததியை உடையவனாகமாட்டானென்றும் அவன் ஸ்வீகாரமெடுத்துக்கொள்ளலாமென்றும் தர்மசாஸ்திரத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால் மேற்சொன்ன பிறவிக்குருடர் முதலியவர்களுக்கு ஆண்சந்ததிகளிருந்தால் ஸ்வீகாரமெடுத்துக்கொள்ளக்கூடாது.

45. புத்தி சுவாதீனமில்லாதவன் சுவீகாரமெடுத்துக்கொள்ளக்கூடாது.—புத்திர ஸ்வீகாரஞ்செய்துகொள்வது மனப்பூர்த்தியான செய்கையாகவும் தத்தின் பிரயோசனமின்னதென்று அறியக்கூடியவர்களாயுமிருக்கவேண்டுமென்றிருப்பதால் பைத்தியக்காரன் ஜடன் முதலியோர் செய்துகொள்ளும் ஸ்வீகாரம் செல்லமாட்டாது. (10 மூ. இ. அ. 429; 8 கல். 149.)

46. 2 அல்லது அதற்குமேற்பட்ட சுவீகாரம்.—ஒரு ஸ்வீகாரப்பிள்ளை யுயிரோடிருக்கும்போது மற்றொருவனை ஸ்வீகாரமெடுக்கக்கூடாது. (19 இ. அ. 108. 19 க 513.) அவனிறந்து போகும்பட்சத்தில் மறுபடி ஸ்வீகாரம் எடுத்துக்கொள்ளலாம். 2-வது பிள்ளையுமிறந்தால் 3-வது பிள்ளையையும் இவ்விதமாக எத்தனை பிள்ளைகளையாவது எடுத்துக்கொள்ளலாம். (4 மூ. இ. அ. 1). முதலில் எடுத்த ஸ்வீகாரப்பிள்ளை யிருக்கும்பொழுது இரண்டாவது ஸ்வீகாரமெடுத்து அதன்பிறகு முதல் ஸ்வீகாரப்பிள்ளை இறந்துபோனாலும் இரண்டாவது ஸ்வீகாரம் செல்லாது. ஏனென்றால், முதலில் செல்லாத ஸ்வீகாரம் எக்காலத்திலும் செல்லாது. (4 மூ. இ. அ. 1, 22 பம். 551, 20 க. 487.) ஏககாலத்தில் 2, 3 சுவீகாரமும் செல்லாது. (இ, லா. ரி. 12 க 406, 686; 20 இ, அ. 40; 20 க. 487) புருஷனால் அனுமதி கொடுக்கப்பட்ட அவனிரண்டு சபத்னிகள் ஒரே காலத்தில் தனித்தனியாய் ஒவ்வொரு பிள்ளையை ஸ்வீகாரமெடுத்தால் இரண்டும் செ

ல்லாது. ஆனல் காலவித்தியாசமிருந்து மற்ற அம்சங்களில் நியாயமானதாயிருந்தால் முதலில் எடுத்த சுவீகாரம் செல்லும்.

**47.** புருஷர்கள் எல்லாரும் சுவீகாரம் எடுத்துக்கொள்வது.—பிரம்மசாரி, பெண்டாட்டி இழந்தவர்கள், பிள்ளையுண்டாகும் ஸ்திதியில் சம்சாரஞ்செய்துகொண்டு வருகிறவர்கள் ஸ்வீகாரமெடுத்துக்கொள்வது அனுசிதமென்று சிலர் சொன்னார், அப்படிப்பட்டவர்கள் ஸ்வீகாரமெடுத்துக்கொள்ளலாமென்று கோர்ட்டார் தீர்ப்புச் செய்திருக்கிறார்கள். (2 ம.ஐ. 367; 4 ம. ஐ. 270; இ. லா.ரி. 12 பம் 329; இ. லா. ரி. 12 அ. 352.)

**48.** பெண்சாதி கர்ப்பமாயிருக்கையில் சுவீகாரஞ்செய்துகொள்வது.—பெண்சாதி கர்ப்பமாயிருக்கையில் ஸ்வீகாரம் எடுத்துக்கொள்ளக் கூடாதென்று மதராஸ் ஹைகோர்ட்டார் 1860-ம்ளுத்தில் தீர்ப்புச் செய்திருக்கிறார்கள். (1860-ஞு மதராஸ் தீர்ப்பு 97 பக்கம்) ஆனல், தர்ம சாஸ்திரத்தில் அவுரஸ புத்திரன் பிறந்தால் ஸ்வீகாரப்பிள்ளைக்கு இன்ன பாகங்கொடுவென்று சொல்லியிருப்பதால் இதுகளை யோசித்து பெண்சாதி கர்ப்பிணியாயிருந்தாலும் ஸ்வீகாரமெடுத்துக்கொள்ளலாமென்று மதராஸ் ஹைகோர்ட்டிலேயே வேறொரு கேசில் தீர்ப்புச் செய்யப்பட்டிருக்கிறது- (இ. லா. ரி. 3 ம. 180.)

**49.** குஷ்டரோகிகள் முதலியவர்கள் சுவீகாரமெடுத்துக்கொள்வது—குஷ்டரோகிகள், அங்கவீனர்கள், நபும்ஸகர்கள், பித்தர்கள் பிறவிக்குருடு செவிடு ஊமை முதலியவர்கள்கூட ஸ்வீகாரம்எடுத்துக்கொள்ளலாம். அப்படி எடுத்துக்கொண்ட ஸ்வீகாரப்பிள்ளைக்கு பிதுரார்ஜித சொத்தில் யாதொரு பாத்தியமுமில்லை. ஆனல், குடும்ப சொத்தில் அவர்கள் தத்தம் தகப்பனுக்குக் கிடைத்த ஜீவனம்சமும், அவன் சுவயார்ஜித சொத்து ஏதாவதிருந்தால் அந்த சொத்தும் அந்த ஸ்வீகாரப் பிள்ளைகளுக்குக் கிடைக்கும்.

**50.** சுவீகாரத்துக்கு பெண்சாதி சம்மதம் அவசியமில்லை.—ஸ்வீகாரம் எடுத்துக்கொள்ளும் சுதந்திரம் புருஷனுக்கே உரித்தானது. புருஷன் பொருட்டாகவே ஸ்வீகாரம் செய்துகொள்ளப்படுகிறது

ஆகையால் ஸ்வீகாரத்துக்கு பெண்சாதியினுடைய சம்மதிர் இருக்க வேண்டுமென்ற அவசியமில்லே. மேலும் ஒருபையனை ஸ்வீகாரம் செய்துகொள்வதற்கு பெண்சாதி இஷ்டப்படாதவளாக இருந்தாலும், அவளுடைய ஆக்ஷேபனையைத் தள்ளிவிட்டுங்கூட புருஷனானவன் தன் இஷ்டப்படி ஸ்வீகாரம் வாங்கிக்கொள்ளலாம். அப்படிப் பட்ட ஸ்வீகாரமும் சட்டப்படி செல்லத் தக்கதாகும். (4மு.இ அ.2.)

51. மைனர்கள் சுவீகாரமெடுத்துக்கோள்வது.—இன்ன நன்மையை யடைவதற்கு ஸ்வீகாரம் எடுத்துக்கொள்வது என்றறியக் கூடிய ஞானமுள்ள மைனர்கள் சுவீகாரம் எடுத்துக்கொள்ளலாம். தானிறந்தபிறகும் எடுத்துக்கொள்ளும்படியாய் தன் பெண்சாதிக்கும் உத்தரவு கொடுக்கலாம். (15. ஸ. 548; இ. லா. ரி. 15 பம் 505; இ. லா. ரி. 1 க 289; 19 ஸ. 127) ஆனல், சர்க்காரால் பாதுகாத்து வருகிற மைனர்கள் மேலே கண்ட காரியங்கள் செய்வதற்கு முந்தி, கோர்ட் ஆப் வார்ட்ஸாரவர்களுடைய அனுமதி பெறவேண்டும். (இ. லா. ரி. 1 க. 289; 9 மூ. இ அ. 287; இ. லா. ரி. 2 பம் 529.),

52. ஸ்திரீகள் தானகவே ஸ்வீகாரமெடுத்துக்கோள்வது.—மிதிலதேசத்து ஸ்திரீகள் தவிர மற்றவர்கள் புருஷன் உத்திரவின்றி புருஷனுக்காக ஸ்வீகாரம் எடுத்துக்கொண்டாலும், தனக்காக மட்டுமென்று ஸ்வீகாரமெடுத்துக்கொண்டாலும் செல்லாது. (12 மூ இ. அ. 356.) பெண்சாதியனுமதியின்றி புருஷன் எடுத்துக்கொண்ட ஸ்வீகாரம் செல்லும். (4 மூ. இ. அ. 2.)

53. விதவைகள் சுவீகாரமெடுத்துக்கோள்வது. — தேசத்துக்குத்தக்கபடி விதவைகள் எடுத்துக்கொள்ளும் ஸ்வீகாரம் நான்கு விதம். (1) திராவிட தேசமாகிய மதராஸ் இராஜதானியிலும், மைசூர் ராச்சியத்திலும் புருஷனுடைய அனுமதியின்பேரிலாவது, புருஷன் அனுமதி கொடுக்காமலிருந்தால் அவனுடைய தகப்பன் (மாமனர்) அனுமதியின் பேரிலாவது மாமனரில்லாவிட்டால் மைத்துனன் (புருஷனின் சகோதரன் முதலிய ஸபிண்டர்கள் (ஞாயாதிகள்) அனுமதியின்பேரிலாவது, விதவைகள் சுவீகாரமெடுத்துக்கொள்ளலாம். (2) காசி, பங்காளா இராச்சியங்களில்புருஷனுடைய அனுமதியின்பேரில் மட்டுந்தான் விதவைகள் சுவீகாரம் எடுத்துக்கொள்ளலாம். (இ லா. 12 அ. 328.)

(3) மகாராஷ்டிர தேசங்களில், சுவீகாரம் முக்கியமாய் புருஷனுடைய ஆத்துமாவின் நன்மைக்காகவே செய்வதால், சுவீகாரம் எடுத்துக்கொள்ளவேண்டாமென்று புருஷன் உத்தரவு செய்திருந்தாலொழிய, அவன் அதை எடுத்துக்கொள்ள அனுமதி கொடுத்ததாகவே அபிப்பிராயப்படுவதால், பம்பாய் ராச்சியங்களில் விதவைகள் ஒருவருடைய அனுமதியில்லாமலே சுவயமாக சுவீகாரமெடுத்துக் கொள்ளலாம்.

(4) மிதிலதேசங்களில் சுவீகாரகாலத்தில் புருஷன் உயிருடனிருந்து அனுமதிகொடுத்தால்தான் பெண்சாதி சுவீகாரம் செய்துகொள்ளலாமென்று தர்ம சாஸ்திரத்திற்கு அர்த்தம் செய்தார்கள். ஆகையால், அவ்விடங்களில் விதவைகள் சுவீகாரம் செய்து கொள்ள அர்கர்களல்ல. ஆனால், கிருத்திரம சுவீகாரம் செய்து கொள்ளும் வழக்கம் ஏற்பட்டிருக்கிறது; இதுவிஷயம்பின்னால் விவரிக்கப்படும்.

54. சுவீகார அதிகாரம் கொடுப்பது மூன்றுவிதம். (1) தகுந்த சாட்சிகள் முன்னிலையில் வாயினால் பெண்சாதிக்கு அனுமதி கொடுப்பது. 7 மூ. அ. 54, 64) (2) 10 ரூ. ஸ்டாம்பு ஒட்டிய பத்திரத்தில் எழுத்துமூலமாய் எழுதி ரெஜிஸ்டர்செய்து அதிகாரங்கொடுப்பது. ரெஜிஸ்டர் செய்யாதிருந்தால் பத்திரம் செல்லாது.

(3) உயிலில் எழுத்துமூலமாய் எழுதி அதிகாரங்கொடுக்க வேண்டும். இதற்கு ஸ்டாம்பும் ரெஜிஸ்திரேஷனும் அவசியமில்லை.

சுவீகாரப்பிள்ளை ஒருவேளை இறந்துபோவானாகில் இரண்டாந்தரமாவது அவனுமிறந்தால் மூன்றாவதுதடவையாவது அதே மாதிரி அனேகந்தடவைகளாவது சுவீகாரமெடுத்துக்கொள்ளலாமென்று அனுமதி புருஷனால் கொடுக்கப்பட்டிருந்தால், அந்தவிதவை எத்தனைதடவை வேண்டுமென்றாலும் சுவீகாரமெடுத்துக்கொள்ளலாம். (10 மு இ. அ. 279; இ. லா. ரி. 1 க 289; இ. லா. ரி. 1 ம 174) ஆனால் பிள்ளையுயிருடனிருக்கும்போது வேறொருவனையாவது, ஒரேதடவையில் இரண்டுமூன்று பிள்ளைகளையாவது சுவீகாரமெடுத்துக்கொள்ளலாமென்று பெண்சாதிக்கு அதிகாரங்கொடுக்க

நியாயமில்லை. இந்தப் பிள்ளையிறந்துபோனால்மட்டும் இந்தஅதிகாரத்தைக்கொண்டு வேறொருபிள்ளையை எடுத்துக்கொள்ளும் சுவீகாரஞ் செல்லுமென்று சமீபத்தில் தீர்ப்பு செய்யப்பட்டிருக்கிறது. (இ லா.ரி. 26 ம. 681.) ஒருவன் தன் பெண்சாதிஇருவரும் தனித்தனியே ஒரு சுவீகாரமெடுத்துக்கொள்ளலாமென்று அதிகாரங் கொடுக்க நியாயமில்லை. இந்த அதிகாரத்தைக்கொண்டு ஒருத்திமட்டும் சுவீகாரமெடுத்துக்கொண்டாலும், ஆதியில் செல்லாத அதிகாரம் எப்போதும் செல்லாமல் ஸ்வீகாரம் ரத்தாய்விடும். (இ. லா. ரி. 19 க. 513.)

55. (a) புருஷன் சொன்னஷரத்துப்படி சுவீகாரமெடுப்பது.—(1) புருஷன் ஸ்வீகார மெடுத்துக்கொள்ளென்று பொதுவாய்ச் சொல்லியிருந்தால் யாரையாவது எடுத்துக்கொள்ளலாம். (2) இன்ன பிள்ளையை சுவீகார மெடுத்துக்கொள்கிறதென்று குறித்துச் சொல்லியிருந்தால், அந்தப் பிள்ளையைத்தவிர வேறேஎந்தப் பிள்ளையையும் சுவீகாரமாக எடுக்கக்கூடாது. அந்தப் பிள்ளை யிறந்துபோய் விட்டாலும் அவன் பெற்றோர் கொடுக்கமாட்டோமென்றாலும் சும்மாவிருப்பதைத் தவிர வேறொருவனை சுவீகாரம் செய்துகொள்ளக்கூடாது. (3) ஒருவனிறக்கும் சமயத்தில் பெண்சாதி கர்ப்பிணியாயிருந்தாள். பிறக்கும் பிள்ளை யிறந்துபோனால் சுவீகாரஞ்செய்துகொள்ளென்று அதிகாரம் கொடுத்தான். பிறகு பெண் பிறந்து சுகமாயிருந்தது. அதற்குமேல் சுவீகாரம் செய்யக்கூடாது (1864௵ கல். ஐ. கோர்ட் தீர்ப்புகள். காரிடன் 42-வது பக்கம்.) (4) இராமனுக்கு இரண்டாவது புத்திரன் பிறந்தால் சுவிகாரம் செய்துகொள்ளென்று புருஷன் அனுமதி கொடுத்தான். பெண்சாதி கொஞ்சநாள் சும்மாவிருந்து வேறொருபிள்ளையை எடுத்துக்கொண்டாள். இதுவிஷயமாய் சிலர், சுவீகாரப் பிள்ளை இராமனுடைய இரண்டாவதுபிள்ளையாயிருந்தால் நலம் என்று அபிப்பிராயப்பட்டுப்புருஷன் உத்திரவு கொடுத்தானென்று அபிப்பிராயப் பட்டார்கள். சிலர் இராமனுடைய 2-வது குமாரனைத்தவிர வேறொருவரையும் கூடாதென்று அபிப்பிராயப் பட்டார்கள். தற்கால அபிப்பிராயமும் அவ்விதமே வித்தியாசப்பட்டே யிருக்கிறது.

(b) ஒருவன் தன் சொத்துக்கள் தன் பெண்சாதியின் ஜீவதசைவரையில் அவள் ஸ்வாதீனத்திலேயே யிருக்கவேண்டுமென்று, அவளிறந்த பிறகுதான் தன் சொத்து ஸ்வீகாரப்பிள்ளையைச் சேரவேண்டுமென்று நிபந்தனை யேற்படுத்தினால் செல்லுமென்று தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. (இ. லா. ரி. 8. க. 357)

**56. சுவீகாராதிகாரம் பெண்சாதிக்குமட்டுங் கொடுப்பது.**—புருஷன் தனக்காக சுவீகாரஞ்செய்ய பெண்சாதிக்குமட்டும் உத்திரவு கொடுக்கலாம். மருமகள் விதவையாயிருந்தால் பிள்ளைக்கு சுவீகார மெடுத்துவைக்க அவளுக்கு உத்திரவு கொடுக்கலாம் (இ. லா. ரி. 12 பம் 185)

**57. சுவீகாராதிகாரம்பெற்ற பெண்சாதி சும்மாவிருக்கலாம்.**—சுவீகார மெடுத்துக்கொள்ளென்று புருஷனால் அனுமதி கொடுக்கப்பட்ட பெண்சாதி சும்மாவிருந்தால், சுவீகாரம் எடுத்துக்கொள்ளென்று கட்டாயப்படுத்த நியாயமில்லை. (7 மூ. இ. அ 190.) அப்படி சட்டாயப்படுத்தியாவது, பலவந்தப்படுத்தியாவது எடுத்துக்கொண்ட சுவீகாரம் செல்லாது. (இ. லா. ரி, 13 ம. 214, 220.)

**58. சுவீகாராதிகாரஞ்செல்லுங்காலம்:**—சுவீகாராதிகாரம்பெற்றவிதவை எவ்வளவுகாலத்திற்குப் பிறகுகூட சுவீகாரம் செய்து கொள்ளலாம். இதற்கு காலவரையறை கிடையாது. (4 பம். ஐ. 191. இ. லா. ரி. 9 பம் 58). ஆனால், சுவீகாராதிகாரம் கொடுத்தவனுடைய ஆஸ்தி அவளுடைய வசமிலிருந்துவேறொருவர்வசம் போனால், அதோடு சுவீகாராதிகாரம் போய்விடும். (10 மூ இ. அ 279; இ. லா. ரி. 10 ம 205; இ. லா. ரி. 17 க. 122; 18 க. 69 - 385; 17 பம். 164; 26 பம் 526.)

உதாரணம்—பிள்ளை இறந்துபோனால் ஸ்வீகாரம் செய்துகொள்ள பெண்சாதிக்கு ஒருவன் உத்திரவு கொடுத்தான். அவ்விதமே அந்தப் பிள்ளை விவாகமான பிறகு இறந்துபோனான். பிறகு அவனுடைய ஆஸ்தி முழுவதும் மருமகளுக்குப் பாத்தியமானதால், மாமியாருக்கு மறுபடி ஸ்வீகாரஞ்செய்து கொள்ள பாத்தியமில்லை. (19 மூ. இ. அ. 279; இ. லா. ரி. 10 ம 205; இ லா. ரி 17 க. 122) மருமகளிறந்த பிறகு பிள்ளையிறந்துபோனால், மாமியார் மறுபடி ஸ்வீகாரமெடுத்துக்கொள்ளலாம். (10 மூ.இ.அ 311;22ம 121) ஒரு வேளை மகனிறந்த பிறகு மருமகளிறந்து, அதற்குமேல் ஆஸ்திசொல்லாம்

மாமியாருக்குச் சேர்ந்தாலும் ஸ்வீகாரஞ் செய்துகொள்ளக்கூடாது. (10 மூ இ. அ. 279; இ. லா. ரி. 10 ம. 205; இ.லா.ரி.17 க. 122). பெண்சாதிக்கு ஸ்வீகாராதிகாரங் கொடுத்தபிறகு புருஷன்தானே ஸ்வீகாரமெடுத்துக்கொண்டால், முன்பெண்சாதிக்குக் கொடுத்த அதிகாரம் ரத்தாய்விடும்.

59. மைனர் விதவைகள் சுவீகார மேடுக்கலாம்.—சுவிகாரம் புருஷனுடைய நன்மைக்காகச் செய்வதால் விதவைகள் மைனராயிருந்தாலும் சுவீகார மெடுத்துக்கொள்ளலாம். (இ. லா. ரி. 18 க. 69) பம்பாய் தேசத்துவிதவைகள் சுவதந்திரமாக சுவீகாரஞ்செய்துகொள்வதால் மேஜரானபிறகுதான் அவர்கள் தத்து எடுத்துக்கொள்ளவேண்டும்.

60. வியபசாரியான விதவை சுவீகாரஞ் செய்துகொள்ளக்கூடாது.—புருஷனுல் அனுமதிபெற்றிருந்தாலும், வியபசாரியாயிருந்தால் வைதிக கர்மங்களைச் செய்ய யோக்கியதை போய்விடுவதால், அப்படிப்பட்ட விதவை தகுந்த பிராயச்சித்தங்களால் சுத்தியடைந்தாலொழிய ஸ்வீகார மெடுத்துக்கொள்ளக்கூடாது. வியபசாரத்தால் கர்ப்பங் தரித்தவளுக்கு பிராயச்சித்தமே கிடையாது. (5 க. ஐ. 362; 13 க ஐ. 39.)

61. தலைமயிர் வைத்திருந்த விதவை சுவீகாரம் எடுத்தல்.—விதவை தலைமயிர் வைத்திருந்தால் சுவீகாரம் செய்துகொள்ளக்கூடாது. ஆனல், அந்த தோஷத்தை பிராயச்சித்தங்களால் நிவாரணம் செய்தபிறகு சுவீகாரமெடுத்துக்கொள்ளலாம். (இ. லா. ரி. 11 பம். 381, 392.)

62. 2, 3 விதவைகளிருந்தால் யார் சுவீகார மேடுத்துக்கோள்வதேன்பது.—ஒருவனுக்கு 2, 3 விதவைகளிருந்தால், அவன் எவளுக்கு சுவீகாராதிகாரம் கொடுக்கிறனே அவள் மட்டும் சுவீகாரம் செய்துகொள்ளலாம். எல்லாருக்கும் தனித்தனியே சுவீகாராதிகாரம் கொடுத்திருந்தும் முதல் பெண்சாதி நிராகரித்தால் அவளனுமதியின்றி இரண்டாவது பெண்சாதி சுவீகாரம் எடுத்துக்கொள்ளலாம். (இ. லா. ரி. 18 க 69) பம்பாய் இராச்சியத்தில் முதல் பெண்சாதி சுவயமாகவும், இரண்டாவது பெண்சாதி முதல் பெண்சாதியின் அனுமதியின் பேரிலும் சுவீகார மெடுத்துக்கொள்ளலாம். ஆனல், விபசாரியான முதல்பெண்சாதியின் அனுமதி அனுவசியம்.

63. ஸபிண்டர்களின் அனுமதியால் விதவை சுவீகார மேடுத்தல்.—(1) புருஷனல் அனுமதிகொடுக்கப்படாதிருந்தாலும் ஸபிண்டர்களுடைய (தாயாதிகள்) அனுமதியால் சுவீகாரம் செய்து கொள்ளலாம். அப்படிப்பட்ட ஸபிண்டர்களில், முதலில் மாமனரா யிருந்தால் அவரனுமதியே போதுமானது. அவரிறந்திருந்தால் புருஷனுடைய அவிபக்த சகோதரர்களுடைய அனுமதி அவசியம். குடும்பம் பிரிந்திருந்தால் சில தாயாதிகளுடைய அனுமதியே போதுமானது. புருஷன் சுவீகாரம் வேண்டியதில்லையென்று சொல்லி இறந்துபோயிருந்தால், மேலே சொல்லப்பட்டவர்களுடைய அனுமதியிருந்தும் சுவீகாரம் செல்லாது. (12 மூ. இ. அ. 397; இ. லா, ரி. 1 ம. 69; இ. லா. ரி 1. ம 174)

(2) அநேக தாயாதிகளிருந்தால் எல்லாருடைய அனுமதியையும் பெறவேண்டுமென்ற அவசியம் இல்லை. அவர்களில் பெரும்பான்மை யோர் அனுமதிகொடுத்து மற்றவர் அசூசையினலாவது பொருமையினலாவது அவ்வித அனுமதியைக்கொடுக்க மறுதளித்தாலும் விதவையானவள் ஸ்வீகாரம் செய்து கொள்ளலாம். (23 மது. 486). ஆனல் சமீப தாயாதிகளிருக்க அவர்களை விட்டுவிட்டு தூரதாயாதிகளுடைய சம்மதம்மட்டும் வாங்கிக்கொள்வது பிரயோஜனப்படமாட்டாது. (12 மூ. இ. அ. 397; 2. ம ஹை. கோ. றி. 206; 3 ம. ஹை. கோ. றி. 283; 4 இ. அ. 113.)

(3) தாயாதிகளுடைய அனுமதியை விதவையானவள் அயோக்கியமாயும் மோசடியாயும் லஞ்சம் முதலியன கொடுத்து அக்கிரமமாயும் பெருமல் கிரமமாய் பெற்றிருக்கவேண்டும். ஆனல் வைதீகமான நோக்கங்களுடனேயே விதவையானவள் ஸ்வீகாரத்தைச் செய்துகொள்ள வேண்டும் என்ற அவசியமில்லை. கிரமமானபடி தான்பெற்ற அனுமதியின் பேரில் ஸ்வீகாரம் வாங்கப்பட்டிருந்தால் அது எவ்விதமான எண்ணத்தின் பேரில் விதவையால் செய்யப்பட்டிருந்தபோதிலும் சரியானபடி செல்லத் தகுந்ததேயாகும் என்று பிரிவி கௌன்ஸில் கோர்ட்டார் அவர்களால் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. (4 இ. அ. 113; 22 பம் 199, 206, 558.)

(4) மோசடியாகவாவது அயோக்கியமாகவாவது அக்கிரமமாகவாவது பெற்ற அனுமதிப்படி விதவையால் எடுத்துக் கொள்ளப்

பட்ட ஸ்வீகாரம் செல்லுபடியுள்ளதாக மாட்டாது. (7 இ. அ. 173; 2 மது. 270; 8 மது. 545; 26 மது. 627.)

(5) விதவையானவள் தாயாதிகளில் பெரும்பான்மையோருடைய அனுமதியைப் பெற்றுக்கொண்டு ஸ்வீகாரத்தைச் செய்துகொள்ளலா மென்றிருந்த போதிலும் புருஷனுடைய குடும்பமானது அவிபக்த நிலைமையிலேயே இருந்தால் அவள் எல்லா பாகஸ்தர்களுடைய சம்மதியையும் பெற்றுக்கொண்டே ஸ்வீகாரம் செய்துகொள்ளவேண்டும். (1 மது. 69; 26 மது. 627.) மேலும் அவிபக்தர்கள் சம்மதி கொடுக்காமல் விபக்தர்களுடைய சம்மதி இருந்தாலும் பிரயோசனப்படமாட்டாது. (1 மது. 69; 3 இ. அ. 164.) விபக்த குடும்பமாயிருந்தால் எல்லாருடைய சம்மதமும் பெறவேண்டுமென்ற அவசியமில்லை. சிலருடைய சம்மதம் இருந்தலே போதுமானது. கெட்ட எண்ணத்தினுலும் பொருமையினுலும் மற்றவர்கள் சம்மதம் கொடுக்க மறுதளித்தாலும் பாதகமில்லை. (2 மது. 202;)

(6) ஸ்வீகாரம் எடுத்துக்கொள்ளும்படி பெண்சாதிக்கு அனுமதி கொடுக்க அவகாசமில்லாமலாவது தவறியாவதுபோய் புருஷன் இறந்திருந்தால் அவனுடைய அனுமதிக்கு பர்த்தியாக மாமனர் மைத்துனர் முதலான சபிண்டர்களுடைய அனுமதியைப் பெற்றுக்கொண்டு ஸ்வீகாரத்தைச் செய்துகொள்ளலாம் என்பது சட்டத்தின் கருத்து. ஸ்வீகாரம் எடுத்துக்கொள்ள வேண்டாமென்று புருஷன் தடை செய்திருந்தாலும், அல்லது இறந்து போவதற்கு முன் அவனுல் செய்யப்பட்ட சொத்துக்களில் விநியோகம் முதலிய நடவடிக்கைகளால் ஸ்விகாரம் செய்துகொள்ள வேணுமென்கிற அபிப்பிராயம் அவனுக்கு இல்லை என்று அனுமானிக்கக் கூடியதாகவிருந்தாலும் விதவை ஸ்வீகாரம் செய்து கொள்ளக்கூடாது. இப்படிப்பட்ட விஷயத்தில் மாமனர் முதலிய தாயாதிகளுடைய அனுமதியும் பிரயோஜனப்பட மாட்டாது. (12 மு இ. அ. 443.)

குறிப்பு.—தாயாதிகள் கொடுக்கும் அனுமதி, மோசக் கருத்தாவாவது திரவிய லாபத்தைப் பற்றுவது கொடுத்ததாக எற்படக்கூடாது. (இ. லா. ரி. 2 ம. 270) விபக்த தாயாதிகளில் சிலர் சுவீகார மெடுத்துக்கொள்ள அனுமதி கொடுத்தாலும் போதுமானது. (இ. லா. ரி. 2 ம. 202)

64. மகாராஷ்டிர விதவைகள் ஒருவருடைய அனுமதியில்லாமலே ஸ்வீகாரமெடுப்பது.—(1) மகாராஷ்டிர தேசமாகிய பம்பாய் இராச்சியத்தில், விபக்தனான புருஷனுக்கு சுவீகாரஞ்செய்துகொள்ள அதிகாரங்கொடுக்கப்படாமற் போனபோதிலும், அவனிறந்துபோனாலும் அவன் ஆத்மா நல்லகதியை யடைவதற்கு அவன் விதவை வேறுயாருடைய அனுமதியின்றியிலும் சுவீகார மெடுத்துக்கொள்ளலாம். (5 பம். ஐ. 181; 10 பம். ஐ 257; இ. லா ரி 6 பம். 498, 505, 9 பம். 58) சுவீகாரங் கெட்ட எண்ணத்தினால் செய்யப்பட்டதாக வாதிக்கிறவர்கள் அதை ருசுப்படுத்தவேண்டும். (இ லா. ரி. 15 பம். 565) ஆனால், அவிபக்த குடும்பத்தைச்சேர்ந்த விதவை ஜீவனாம்சத்துக்குமட்டும் பாத்தியமுள்ளவளாவதால் சொத்துக்கு பாத்தியமுள்ள அவள் மாமனாராவது, மைத்துனர்களாவது அனுமதிகொடாமற்போனால் சுவீகாரஞ் செய்துகொள்ளக்கூடாது. (7 பம். ஐ. 153) புருஷன் சொத்து சட்டப்படி யாருக்குச் சேருகிறதோ அவர் அனுமதி பெற்றுத்தான் விதவை சுவீகாரஞ் செய்துகொள்ளவேண்டும். (8 பம். ஐ. 114.)

(2) புருஷன் வெளிப்படையாய் வாயினாலாவது, காரியத்தினாலாவது சுவீகாரம் வேண்டியதில்லையென்று சொல்லியிருந்தால் அவள் சுவீகாரமெடுத்துக்கொள்ளக்கூடாது, (7 பம். ஐ. அபண்டிக்ஸ்1.)

(3) புருஷன் மைனராகவிருந்து இறந்துபோனாலும் அவன் விதவை சுவீகாரமெடுத்துக் கொள்ளலாம். (இ. லா. ரி. 15 பம். 565)

## (2) ஸ்வீகாரங் கொடுக்கும் அதிகாரம் யாருடையது.

65. தகப்பன் தாயின் அதிகாரம் -ஒரு பிள்ளையைப்பிறனுக்கு தத்தாககொடுத்துவிட்டால் அப்பிள்ளையானவன் பிறந்த குடும்பத்தைவிட்டு முற்றிலும்விலகி அக்குடும்பத்தில் உடைத்தாயிருந்த சகலசுதந்திரங்களையும் இழந்து அன்னிய குடும்பத்தையே சேர்ந்தவனாக ஆய்விடுகிறான். ஆனபடியால்பிள்ளையைப்பெற்று வளர்த்து அவனுடைய க்ஷேமத்தையும் நன்மையையுமே சுபாவத்தில் கருதுகின்றவர்களான தகப்பன் தாய்மார்களைத் தவிர வேறுயாருக்கும் பிள்ளைதத்துக்கொடுக்கும் சுதந்திரங்கிடையாது.

பெற்ருேர்களிருவரில் தகப்பனேமுக்கிய பாத்தியஸ்தனுகவும் அதிக சுதந்தரவாளியாகவும் இருப்பதால் பிள்ளையை தத்துக்கொடுப்பதிலும் அவனுக்கே விசேஷ பாத்தியம் இருக்கிறது.

66. சுவீகாரங் கொடுக்க தாய்தகப்பனுக்கு அதிகாரம்.—தாயாரனுமதியன்றி தகப்பன் பிள்ளையை சுவீகாரம் கொடுக்கலாம். (11 பம். ஐ. 199). தாய்மட்டும் புருஷன் அனுமதியன்றி கொடுக்கக்கூடாது. ஆனல், புருஷனிறந்துபோயிருந்தாலும், வெகுகாலம் தேசாந்திரம் போயிருந்தாலும் ஜாதிப்பிரஷ்டனுனுலும், சன்னியாசியானுலும், நீங்காத பித்தனுனுலும், இறந்தவனேப்போல் பாவிப்பதால், புருஷன் அனுமதியின்றி தாய் சுவீகாரம் கொடுக்கலாம். (இ. லா. ரி. 2 பம் 377; 1 ம. 154; 30. க 965.) ஆனல், ஒரே குமாரனுபிருந்தால் புருஷன் உத்திரவு அவசியம் வேண்டும். (4 பங்காளாசதர்கோர்ட்டு தீர்ப்பு 320; 12 பம் ஐ. 364; இ. லா. ரி. 6 பம். 521;)

புருஷன் பிள்ளையை சுவீகாரம் கொடுக்கவேண்டாமென்று வெளிப்படையாய்ச் சொல்லி யிறந்துபோயிருந்தாலும், சந்தர்ப்பம் அவனுடைய நடவடிக்கை இதுகளிலிருந்து அவன் எண்ணத்தை அனுமானிக்கக்கூடியதாயிருந்தாலும், தன் பிள்ளைகளில் எவரையும் விதவை சுவீகாரம் கொடுக்கக்கூடாது. (இ. லா. ரி. 11 ம. 113) புருஷன் அனுமதியின்றி விதவை தன் சக்களத்தி பிள்ளையை எந்த விதத்திலும் சுவீகாரமாக கொடுக்கக்கூடாது. இ. லா. ரி. 16 ம 384.)

67. தமயன் முதலானவர்கள் சுவீகாரங் கொடுப்பது.—பிள்ளையை சுவீகாரங் கொடுப்பது பெற்ருேர்களுடையதேதவிர, பாட்டன் தமயன், சித்தப்பன், பெரியப்பன் முதலிய பந்துக்களுக்குப்பாத்தியமில்லை. (3 பங்காளஸதர் கோர்ட்தீர்ப்பு 337;1 852ளு மதருஸ் தீர்ப்பு 97; 10 பம். ஐ. 235) தாய் தகப்பன் இல்லாத பையன் சுவீகாரத்துக்கு யோக்கியமாவனல்ல. (10 பம். ஐ. 268; 2 ம. ஐ. 129; 6 பம். ஐ. 83) ஆனல், பெற்ருேர்கள் இன்னருக்குப் பிள்ளையை ஸ்வீகாரம் கொடுக்கவேண்டுமென்று நிச்சயித்து, தான் முதலிய ஸ்வீகாரச்சடங்கு செய்யும் சமயத்தில் வியாதி முதலிய காரணங்க

னால் சக்திபற்றவராயிருந்தால், அந்த தானத்தை மற்ற பந்துக்கள் மூலமாய் செய்துகொள்ளலாம். ஒருவேளை தத்து சமயத்தில் தாய் தாப்பன் இறந்தாலும் அவர்களால் தானங்கொடுக்க அதிகாரம் பெற்றவன் அப்படி நிச்சயமாயிருந்த சுவீகாரத்தை செய்துகொடுக்கலாம். (8 பம். ஐ. 244; இ. லா. ரி. 7 ம 549; 21 ம. 497; 22 பம். 590.) மேலும், அவர்களிறந்துபொகுமுன் சுவீகார விஷயமாய் என்ன ஷரத்துகள் ஏற்படுத்தி யிருந்தார்களோ அவ்விதமாகவே தானஞ்செய்யவேண்டும். (இ. லா. ரி. 2பம் 377)

## (5) எந்தப் பிள்ளையை ஸ்வீகார மெடுத்துக்கொள்ளலாம்.

68. ஸ்வீகாரப்பிள்ளையின் ஜாதியுங் கோத்திரமும்.—வேறு ஜாதிகளில் ஸ்வீகாரஞ்செய்யலாமென்று ஸ்மிருதிகளிலிருந்தபோதிலும் தற்கால சம்பிரதாயப்படி, தன்சுயஜாதி வகுப்பிலேயே சுவீகாரமெடுத்துக்கொள்ளவேண்டும், ஆனல் ஸ்வகோத்திரமில்லாத வேறு எந்த கோத்திரப் பிள்ளையையும் சுவீகார மெடுக்கலாமென்று வழக்கத்தில் வந்துவிட்டது. ஆனல் தர்மசாஸ்திரத்தில் ஸகோத்திரத்தில் அண்ணன் தம்பிகளின் பிள்ளைகளையாவது அவர்களில்லாவிட்டால் சமீப தாயாதிகளின் பிள்ளைகளையாவது எடுத்துக்கொள்ள வேண்டுமென்று முறையிட்டிருக்கிறது. (15 க. ஐ. 405; இ. லா. ரி. 3 க. 587; 6 பம் ஐ. 70; இ. லா. ரி. 10 பம் 80.)

69. சாஸ்திர விருத்தாசாரங்கள்.—(1) சுவீகாரப்பிள்ளை சுவீகாரமெடுத்துக்கொண்டதகப்பனுக்கு, ஔரஸ பிரதி பிம்பனுக அதாவது பெற்ற பிள்ளைக்குச் சமானமானவனுக விருக்கவேண்டுமென்று சவுனகர் சொன்ன வாக்கியத்தை யனுசரித்து சுவீகாரப் பய்யனுடைய ஜனனதாயார் கன்னிகையாயிருந்தால் சுவீகாரஞ்செய்துகொள்ளுகிற தகப்பன் அவளைக்கல்யாணம் செய்துகொள்ளத்தகுந்தவனுயிருக்கவேண்டும். ஆகையால், தௌகித்திரன், சகோதரி பிள்ளை, அத்தைபிள்ளை, தயின் சகோதரியின்பிள்ளை, தம்பி, சிற்றப்பன், பெரியப்பன், மாமன் முதலானவர்களை சுவிகாரஞ்செய்துகொள்ளக்கூடாது. (1 ம ஜ. 240; 2 ம. ஐ. 462; 7 ம. ஐ. 250; 9 மு. இ. அ. 506; இ. லா. ரி. 3 பம். 273, 298; இ லா. ரி 8 அ. 1; இ

லா. ரி. 12 அ. 51; இ. லா ரி 11 ம. 49; 26 பி. அ. 153; 21 அ. 412. 17 அ. 294.)

(2) சுவீகாரமெடுத்துக்கொள்பன் தானே சுவீகாரம் போயிருந்தால் மேலே சொன்ன உறவை ஜனன குடும்பத்திலும் ஸ்விகார குடும்பத்திலும் பார்க்கவேண்டியது. மேலே சொன்ன நியமங்கள் சூத்திரஜாதிக்குமட்டும் கிடையாது. 1858௵த்து மதராஸ் தீர்ப்பு 117 - வது பக்கம்.

(3) தர்ம சாஸ்திரங்களில் சொல்லியிருக்கிற விஷயத்திற்கு விரோதமாக தமக்கை தங்கைகளின் பிள்ளை, சிறியதாயார் பெரியதாயார் பிள்ளைகள், அத்தைமகன், தம்பி, சிறியதகப்பன், அம்மான் இவர்களைக்கூட சுவீகாரமெடுத்துக்கொள்கிற வழக்கத்தைத் தற்காலம் அனுஷ்டித்துவருகிறார்கள். (இ. லா. ரி. 9 ம. 44; இ. லா. ரி. 7 ம. 3; இ லா. ரி. 11 ம 55,)

(4) ஆகிலும் மேற்சொன்ன விதியானது பிராமணர் முதலிய உயர்ந்த ஜாதியாருக்கே எடுத்ததல்லாமல் சூத்திரர்முதலிய கீழ்ஜாதியார்களால் அனுஷ்டிக்கப்படவேண்டிய அவசியமில்லை. (2 ம. ஹைகோ. ரி. 462; 3 ம. 15; 11 ம. 49). சூத்திரர்முதலிய ஜாதியார்கள் ஸகோதரி பிள்ளை, பெண்ணின் பிள்ளையான தௌஹித்திரன், முதலானவர்களையும் தத்துவாக்கிக் கொள்ளலாம். (10 கல். 688)

(5) சூத்திரர்களுக்குள் தாயாருடைய சகோதரியின் பிள்ளையை தத்துவாங்கிக் கொள்ளுவதும் செல்லுமென்று தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. (1 மது. 62)

(6) பிராமணர்முதலிய உயர்ந்த ஜாதியாருக்குள் தௌஹித்திர சுவீகாரமும் சகோதரி புத்திர சுவீகாரமும் ஹிந்துதர்ம சாஸ்திரங்களின்படி ஒப்புக்கொள்ளப்படத்தக்கதல்லவாகையால் அவைகள் சாதாரணமாய் செல்லுபடியுள்ளதாகமாட்டாது. (1 மது. ஹை. கோரி. 420; 7 மது. ஹைகோரி. 250; 24 அல. 195; 21 அல. 412)

114. ஆனல் அப்படிப்பட்ட சுவீகாரங்கள் சாஸ்திர விரோதமாக இருந்தாலும் பிராமணர் முதலியோர்களுக்குள்ளாகவும் வழக்

கமாய் நடந்துவருகிறதென்று பின்னிட்ட வியாச்சியங்களில் ரூபிக்கப்பட்டபடியால் வழக்கத்தை யனுசரித்து அவ்வித சுவீகாரங்களும் அவ்வழக்கம் இருக்கும் இடங்களில்செல்லத் தகுந்ததாகும் என்று இப்பால் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது (7 மத. 3; 9 மத. 44; 14 அல. 53;) ஆனால் அவ்விதவழக்கம் இருக்கிறதாக திருப்தியாய் ரூபிக்கப்படாமற்போனால் சாஸ்திரவிரோதமான அந்த தத்துக்கள் ஒப்புக்கொள்ளப்படமாட்டாது. (24 அல. 195; 17 அல. 294.)

70. எந்தப் பிள்ளைகளை சுவீகாரமெடுக்கக்கூடாதென்பது.— ஊமை, குருடு, செவிடு அங்கஹீனம். குஷ்டரோகம் முதலிய வியாதிகளால் பிடிக்கப்பட்ட பிள்ளைகளை சுவிகாரமெடுத்துக்கொள்ளக்கூடாது. மேலும், ஒருதரம் சுவீகாரமாகப்போன பிள்ளையை மறுபடி வேறொருவர் சுவீகாரமெடுக்கக்கூடாது.

71. சுவிகாரபிள்ளையின் வயது.—(1) சுவீகாரப்பிள்ளை ஐந்து வயதுக்குட்பட்டும், ஜனனகுடும்பத்தில் சவுளகர்மம் (அதாவது குடுமிவைப்பது) நடத்தப்படாமலிருக்கவும் வேண்டுமென்று தத்தக மீமாம்சையில் சொல்லியிருக்கிறது. (2) பிரம்ம க்ஷத்திரிய வைசிய ஜாதிகளில் உபநயனத்திற்கு முந்தியும், சூத்திரஜாதியில் விவாகத்திற்கு முந்தியும் பிள்ளைகளை சுவீகாரம் செய்துகொள்ளலாமென்று தத்தக சந்திரிகையில் சொல்லப்பட்டிருக்கிறது. (3) எவ்வளவு வயதுள்ளவனாயிருந்தாலும், கல்யாணமாகி பிள்ளைகளைப் பெற்றவனாயிருந்தாலும், சுவிகாரப்பிள்ளை சுவிகார தகப்பனைக்காட்டிலும் பெரியவனாக மட்டுமில்லாதிருந்தால், அவனை சுவீகாரஞ்செய்து கொள்ளலாமென்று மயூககிரந்தத்தில் சொல்லியிருக்கிறது. இதை யனுசரித்தே பம்பாய் ராச்சியத்தில் எல்லா ஜாதியாரிலும் அனுஷ்டானமிருப்பதாக பம்பாய் ஹைகோர்ட்டார் தீர்ப்புகள் செய்திருக்கிறார்கள் (4) பம். ஐ. 191, 8 பம். ஐ. 67, 11 பம். ஐ. 190, 12 பம் ஐ. 364, இ. லா. ரி. 10 பம். 80.)

பம்பாய் ராச்சியம் தவிரமற்றப் பிரதேசங்களில், பிர்ம்ம, க்ஷத்திரிய வைசிய ஜாதிகளில் தத்தஹோமம் முக்கியமானதால் உபநயனத்துக்கு முந்தியே பிள்ளையை ஸ்விகாரம்செய்யவேண்டுமென்றும், ஸ்வீகாரதகப்பனும்பிள்ளையும் ஒரேகோத்திரமுள்ளவனாகவிருந்தால்

அந்தப்பிள்ளையை உபநயனத்திற்கு பிறகு கூட ஸ்விகாரஞ்செய்து கொள்ளலாமென்றும் தீர்மானஞ்செய்யப்பட்டிருக்கின்றன. (இ. லா. ரி. 9. அ. 253; 6 பங். ஸ. கோ. தீ. 219; 1853ளு பங் ஸ. சோ. தீ. 553; 1859. பங். ஸ. கோ. தீ. 229, 1 ம தீ. 106, 406; 1859ளுத்திய ம. தீ. 118; இ. லா. ரி. 6 ம. 43; இ. லா. ரி. 13. ம. 128.)

உபநயனத்துக்குப் பிறகு வேறு சோத்திரத்தைச் சேரமுடியாதென்று கருத்துக்கொண்டே இந்தவிதி ஏற்படுத்தப்பட்டிருக்கிறது.

மேலும் சகோத்திர பிள்ளையாயிருந்தாலும் விவாகஞ்செய்வதற்கு முந்தியே ஸ்வீகாரஞ்செய்து கொள்ளவேண்டும். (இ. லா. ரி. 13 ம. 128; 6 ம, 43.) முதல்மூன்று ஜாதி தவிற நான்காவது ஜாதியாகிய சூத்திரர் விவாகத்திற்கு முந்திபிள்ளையை சுவிகாரஞ்செய்து கொள்ளலாம்.

72. ஏகபுத்திர ஜேஷ்ட புத்திர சுவீகாரங்கள்.—ஏகபுத்திர ஜேஷ்டபுத்திர சுவீகாரங்கள் கொடுக்கிறவர்களுக்கும் வாங்குகிறவர்களுக்கும் மகாதோஷமுண்டாகுமென்று தர்மசாஸ்திரத்தில்சொல்லியிருந்தபோதிலும் முற்காலத்தில் அபிப்பிராயபேதமிருந்தபடியால் சில ஹைகோர்ட்டார் செல்லுமென்றும் சில ஹைகோர்ட்டார் செல்லாதென்றும் தீர்ப்புகள் செய்யப்பட்டிருக்கின்றன. மதராஸ் ஹைகோர்ட்டாரும் அலகாபாத் ஹைகோர்ட்டாரும் ஏகபுத்திர சுவிகாரம் பாவமுள்ளதாயிருந்தாலும் நடந்துபோனல் செல்லுமென்றே தீர்மானித்திருக்கிறார்கள். (1. ஸ்ட்ரேஞ்சு தீர்ப்புகள் 91, 125; 1 ம. ஐ. 54; இ. லா. ரி. 11 ம. 43; 2. அ. 67.) கல்கத்தா ஹைகோர்ட்டார் சூத்திரஜாதிகளில் கூட ஏகபுத்திர ஸ்வீகாரஞ்செல்லமாட்டாதென்றே தீர்ப்புச்செய்திருக்கிறார்கள். (3. ப. ஸ. கோ. தீ. 232; 1. க. ஐ. 221; 10 ஸ. 347; 2 க. 365; 3 க. 443) ஒரு கேசில் கல்கத்தா ஹைகோர்ட்டார் ஜேஷ்ட பிள்ளைபிறந்தபிறகு அவன் பெண்சாதி ஸ்வீகாரஞ்செய்து கொண்டாள். ஸ்வீகார பேரனிருப்பதால் ஜீவித்திருக்கிற இளையபிள்ளை களிருவரையும் ஸ்வீகாரங்கொடுக்கலாமென்று தீர்ப்பு செய்திருக்கிறார்கள். (இ. லா. ரி. 17 க 518, 536.) பம்பாய் ஹைகோர்ட்டாரும் ஏகபுத்திர ஸ்வீகாரம் செல்லு

6

மென்றே முதலில் தீர்மானித்திருந்தார்கள். (2 பாரோ. 75; 7 பம் ஐ. அபண்டிக்ஸ். 26; 4 பம் ஐ. 191; 24 பம். 367.) ஆனல் கடைசியாக 1889வருஷத்தில் பம்பாய் ஐகோர்ட்டுபுல் பெஞ்சில் ஏக புத்திர சுவீகாரஞ் செல்லாதென்றே நிச்சயித்து தீர்ப்புச்செய்திருக்கிறார்கள் (இ. லா. ரி. 14 பம். 249.) ஏக புத்திர ஸ்வீகாரஞ்செல்லாதென்றே இப்போது பிரிவிகவுன்சிலில் கூட உறுதிப்பட்டிருக்கிறது. (26. இ. அ. 113; 22 ம. 398.)

அடியிற் கண்ட பிள்ளைகளை ஸ்வீகாரஞ்செய்து கொண்டதற்காக செல்லுமென்று தீர்ப்பு செய்யப்பட்டிருக்கிறது. (a) பெண்சாதியின் சகோதரன், (4 ம. 15) (b) பெண்சாதியின் சகோதரன் குமாரன் (22 பம் 973.) (c) பெண்சாதியின் சகோதரியினுடைய குமாரன். (20 ம. 283.) (d) சகோதரனுடைய பேரன் (6 க. 41.) (e) சகோதரியினுடைய பிள்ளையின் பிள்ளை (பேரன்.) (f) தாயின் சகோதரியின் மகளுடைய மகன். (7 ம. 548), தகப்பனின் சகோதரன் பிள்ளை. (14 ம 459.)

73. துவியா முஷ்யாயன சுவீகாரம்—ஏகபுத்திரனிருக்கையில் அவனை வேறொருவனுக்கு சுவீகாரமாகக் கொடுக்கும்போது ஜனன பிதாவுக்கும் சுவிகாரப்பிதாவுக்கும் அவனே உத்தரகிரியைகளை நடத்தவேணுமென்று ஏற்பாடுசெய்துகொண்டு கொடுக்கும் சுவிகாரத்துக்கு துவியா முஷ்யாயணம், அதாவது இரண்டு தகப்பன்களுக்குப்பிள்ளையாயிருந்து கர்மம்செய்வதாம்.

புருஷர்கள் இருவர் சேர்ந்து வேறொருவனுடைய பிள்ளையை துவியாமுஷ்யாயண சுவீகாரமெடுத்துக்கொள்ளக்கூடாது.

புருஷன் அனுமதியில்லாமல் விதவை ஏகபுத்திரனை துவியா முஷ்யாயண சுவிகாரமாகக் கொடுக்கக்கூடாது. (4 பா. ஸ. 320; 12 பம். ஐ. 364; இ. லா. ரி. 6 பம். 524.)

## (4) ஸ்வீகார கர்மங்கள்.

74. சுவீகாரதானம், சுவீகார பரிக்கிரஹம்.—(1)சுவீகாரத்துக்குச் செய்யவேண்டிய பிரதம கிரியைகளைச் சாஸ்திரோக்தமாய் முடித்தபிறகு சுவீகாரப்பிள்ளையின் பாத்திபஸ்தனல் கைமேலாக

தானம் செய்யப்பட்டு, சுவீகாரம் வாங்கிக்கொள்ளுகிறவனால் பரிக்கிரகம் செய்யவேண்டியது. அப்போது சொல்லவேண்டிய மந்திரத்தின் தாத்பரியத்தை இங்கு விவரித்திருக்கிறது. தானம் வாங்குகிறவன் சுவீகாரம் கொடுக்கிறவனிடம் போய் பிள்ளையைத் தனக்கு சுவீகாரமாகக் கொடுக்கவேணுமென்று கேட்க அவன் கொடுத்தேனென்று சொல்லி தானம்கொடுக்க, சுவீகார பிதா பிள்ளையைப் பார்த்து "நான் உன்னை தானம்வாங்கிக் கொண்டேன், மதாசார சாஸ்திரப்படி கிரியைகள் செய்வதற்கும், வம்சவிருத்திக்காகவும் பெற்றுக்கொண்டேன் என்று சுவிகரிக்கவேண்டியது. ஆனால் இது அங்கங்குள்ள வழக்கப்படி செய்தால் போதுமானது. (இ. லா. ரி 9 க 381; இ. லா. ரி. 11 ம. 5; இ. லா. ரி. 13 ம. 214; 7. இ. அ. 24.)

(2) தானமில்லாமல் பரிக்கிரகம் செல்லமாட்டாது. தானபரிக்கிரஹ விஷயத்தில் அந்தந்த தேசத்தில் நடந்துவருகிற வழக்கமே பிரதானமென்று கோர்ட்டார் ஒப்புக்கொள்ளுகிறார்கள்.

(3) சுவீகாரமெடுத்துக்கொள்வதாக வெகுநாளாக பிள்ளையை வளர்த்துக் கடைசியாக தானபரிக்கிரஹமில்லாவிட்டால் சுவீகாரம் செல்லாது. ஸ்வீகாரம் கொடுக்கிறதாகவும், எடுத்துக்கொள்ளுகிறதாகவும் தஸ்தாவேசுகள் ஏற்பட்டிருந்து. பிறகுதானமும் பரிக்கிரகமும் ஏற்படாவிட்டால் தத்து செல்லாது. (6) க. 381; 13 ம. 214; 7. இ. அ. 250; 19 க 452.)

75. தத்தஹோமம்—சுவீகாரம்நிறைவேறுவதற்குதத்தஹோமம் முக்கியமானது. பிரம்ம க்ஷத்திரிய வைசியர்களுக்கு மட்டும் தத்தஹோமம் அவசியமென்றும், சூத்திரர்கள் வைதிக கர்மங்களுக்குப்பாத்திரர் இல்லாகதால் அவர்களுக்குத்தத்தஹோமம் அநாவசியமென்றும் சொல்லித் தீர்ப்புச்செய்திருக்கிறார்கள். (13 க. ஐ. 401; இ. லா. ரி. 5 க. 770; இ. லா, ரி. 6 க. 381; இ. லா. ரி. 5 ம. 358; 7 இ. அ. 250; 7 ம. 548; 13 ம. 214; 11 பம். 381.)

தேசாசாரப்படி சூத்திரஜாதிகளில்கூட தத்தஹோமஞ்செய்து தான பரிக்கிரகம் செய்கிற வழக்கமிருந்தால் அந்தவழக்கப்படியே

தத்தஹோமஞ்செய்யாமல் தானபரிகிரக மட்டுஞ் செய்தால் செல்ல மாட்டாது. (இ. லா. ரி, 6 க 381; இ. லா. ரி. 6 க 13 ம. 214.)

பிரம்ம, க்ஷத்திரிய வைசிய ஜாதியர்களில் ஸ்விகாரபிள்ளை ஸ்வகோத்திரனாவது, தௌகித்திரனாக (பெண்ணின்பிள்ளை) வாவதிருந்தால் தத்தஹோமம். வேண்டியதில்லையென்று இப்போது எல்லா கோர்ட்டாராலும் தீர்ப்பு செய்யப்பட்டிருக்கின்றன. (11 ம. 5; 6 அ. 276; 24 பம். 218; 13 ம. 214; 5 க. 770.)

76. தீட்டில்சுவீகாரம்.—வேதமந்திரங்களைத் தீட்டில் சொல்லக்கூடாததால் அப்படிப்பட்ட சந்தர்ப்பங்களில் முதல் மூன்று ஜாதியார் சுவிகாரமெடுக்கக்கூடாது. (13 ம. 222; 18 ம. 397.) ஆனால் சூத்திர ஜாதிகளில் சுவீகாரமெடுக்க வேத மந்திர மூலமான கிரியைகளில்லாததால் தீட்டில்கூட அவர்கள் சுவிகார மெடுத்துக்கொள்ளலாம். (5 ம. 358; 9 மூ. இ. அ. 506.)

## (5) தள்ளிவிடப்பட்ட ஸ்வீகாரங்கள்.

77. செல்லாத சுவிகாரங்கள்.—சுவீகாரங்கொடுக்க பாத்தியமில்லாதவர்களால் கொடுத்த சுவிகாரமும், சுவீகாரம் வாங்க பாத்தியமில்லாதவர்களால் ஏற்றுக்கொண்ட சுவிகாரமும், சுவீகாரமாக எடுத்துக்கொள்ளக்கூடாத பிள்ளைகளின் சுவிகாரங்களும், சாஸ்திர விருத்தமான சுவிகாரங்களும் செல்லமாட்டாது. ஆனால் அந்தந்த தேசாசாரப்படி சாஸ்திரத்தில் சொல்லியிருக்கிற சில அம்சங்களை விட்டிருந்தாலும் பாதகமில்லை. (12 பம் ஐ. 398; இ. லா. ரி. 10 ப. ஐ. 86; இ. லா. ரி. 3 க 601; அன்னிய சோத்திர பிள்ளையையாவது, ஐந்து வயதிற்கு மேற்பட்ட பிள்ளையையாவது ஸ்வீகாரமெடுத்தல் சாஸ்திர விரோதமானாலும் செல்லக்கூடியது. (இ லா. ரி. 9 அ. 354; 3 க. 587.)

78. சுவிகார சம்பந்தமான தாவாவுக்கு காலமும் பத்திரகிரயமும்.—(1) சுவிகாரத்தை ஏற்றுக்கொள்ளாதவன் ஸ்விகாரம் எடுத்த சங்கதி அவனுக்குத்தெரிந்ததுமுதல் 6-வருஷத்துக்குள்ளும், சுவீகாரத்தை உறுதிப்படுத்த இஷ்டமுள்ளவன், சுவிகாரப்பிள்ளையின் பாத்தியத்துக்கு ஆக்ஷேபனை அல்லது கெடுதியுண்டானநாள்முதல் 6-வருஷத்

துக்குள்ளும் தாவாசெய்யவேண்டும். மேலேகண்ட தாவார்களுக்கு பத்திரக்கிரயம். .ரூ. 10.

(2) சுவீகாரத்தைஸ்தாபிக்க அல்லது ஆக்ஷேபிக்கமட்டுங் காலாவதி ஆறுவருஷமேயொழிய, ஸ்தாவரசொத்துக்கள் விஷயமாய்கொண்டுவரப்படும் தாவாக்களுக்கு எல்லாவிஷயம்போல 12 வருஷகாலாவதிக்குட்பட்டிருக்கின்றன. (இ. லா. ரி. 8 அ. 644; 14க. 401.)

79. சுவீகாரவிஷயமாய் தீர்ப்புகள்.—சுவிகாரத்தைக் கோர்ட்டார் ஒருதாவாவில் உறுதிப்படுத்தினால், அந்ததாவாவில்சேராமலிருந்தவர்கள் மறுபடியும்தாவாசெய்து ருஜூமூலமாய் சுவிகாரத்தை ரத்துசெய்யலாம். (2ம. ஐ. 276; 3ம ஐ. 217; 14 மூ இ அ. 367; 1. க. 289.)

(6) சுவீகாரத்தை உறுதிப்படுத்துவது.

80. சுவீகாரவிஷயத்தில் பந்துக்கள்சம்மதம்.—(1) வெகுகாலத்துக்குமுன் நடந்திருந்த சுவிகாரத்தை பந்துக்கள் ஆட்சேபிக்காமலே விட்டுவிட்டு காலதாமதஞ்செய்தால், சுவிகாரத்தைக் கோர்ட்டார் உறுதிப்படுத்துவார்கள். (14. மூ. இ. அ. 67; 7பம். ஐ. அபெண்டிக்ஸ்33,) சொத்து பாத்தியமுள்ளவர்கள் ஒருவனுக்கு ஏற்பட்டிருக்கும் சுவீகாரத்தை ஒப்புக்கொண்டு அதற்கு உடந்தையாயுமிருந்தால் அந்த சுவீகாரம்செல்லும்; ஆனால் மேலேகண்டசுவீகாரங்கள் எல்லாராலும் சாஸ்திர விருத்தமானதென்று நம்பக்கூடியதாயிருந்தால், எந்தபந்துக்களால் ஒப்புக்கொள்ளப்பட்டதாயிருந்தாலும் செல்லாது. (2ம். ஐ. 114; 270, 428; 7ம. ஐ. 250; 11பம். ஐ. 190; 11பா. 381, 396; 2 அ. 366; 14மூ. இ. அ. 77; 7 ம. 3.)

(2) மேலும் குடும்பத்திலுள்ளவர்களாலும், அண்டை அயல் வீட்டிலுள்ளவர்களாலும் ஒருவனை தத்துப்பிள்ளையென்று அழைக்கப்பட்டுவந்து அதற்குத்தகுந்தாற்போல பலநடவடிக்கைகள் நடத்தப்பட்டிருந்தால் அவைகள் சுவிகாரத்தை ருசுப்படுத்தத் தகுந்த சாட்சியாகும்.

ஆனால் சுவிகாரவிஷயமாய் ஒருவியாச்சியத்தில் செய்யப்பட்ட தீர்ப்பானது அதேவிஷயமான மற்றொருவியாசசியத்தில் சாட்சியமாக உபயோகப்படுத்தலாம். (9. மூ. இ. அ. 287.)

81. சுவிகார ருசுபளு.—சுவீகாரம் செய்துகொண்டதாக யார் சொல்லுகிறார்களோ அவர்களே அதை ருஜுப்படுத்தவேண்டும். (3 க. ஐ. 146) அனேகமாய் சுவீகாரமெடுத்துககொண்டவன் கிழவனையும், ரோகஸ்தனையும், தாயாதிகளிடத்தில் விரோதமுள்ளவனையும் விருப்பதைக்கொண்டும் மற்றகாரணங்களைக் கொண்டுந்தான் சுவீகாரம் நடந்திருக்குமென்று கோர்ட்டார் ஊகிக்கிறார்கள். சுவீகாரபிதா திடகாத்திரமுள்ளவன், சந்தான முண்டாகக்கூடிய நிலைமையிலிருந்தான் என்று ருசு ஏற்பட்டால்சந்தேகத்திற்கிடமுண்டு. (4மூ இ. அ. 414; 7மூ. இ. அ. 64; 1ம. 69; 15 ஸ. 548; 2பம். ஐ 21; 1857ளுத்து மதராஸ்தீர்ப்புகள் 53.) ஒருவருக்குந்தெரியாமல் இரகசியமாக வெடுத்துக்கொண்டதத்து செல்லாது.

## (7) ஸ்வீகாரத்தால் ஏற்பட்ட பிரயோசனம்.

82. சுவீகாரப்பிள்ளைக்கு ஜனனகுடும்ப பாத்தியமில்லை.—நியாயமாய்கொடுக்கப்பட்ட ஒரு சுவீகாரப்பிள்ளை தன்ஜனனகுடும்ப கோத்திரம், சொத்து வார்சு பாத்தியம் முதலிய சகலத்தையும்விட்டு நீங்கி, சுவீகாரம்போன கோத்திரத்தையடைந்து சுவீகாரதகப்பனுக்கு சகல வைதிகசம்பந்தமான கிரியைகளைச்செய்து அவனுடைய சொத்தையும் அடையவேண்டியது. சுவிகாரதகப்பனும் சுவிகாரப்பிள்ளையைத்தன் வயிற்றிற்பிறந்த பிள்ளையைப்போல போஷித்து உபநயனமுதலியகிரியைகளைச் செய்யவேண்டியது. (1ம. ஐ. கோரி 363; 26. ம. 394.) ஆனால் சுவீகாரப்பிள்ளைக்கு ஜனனகுடும்பத்தில் சகலவிதமான பாத்தியமும்போனபோதிலும் அந்தக்குடும்பத்திலிருந்தால் யாரையாரை விவாகம்செய்துகொள்ளக் கூடாதோ அவர்களை சுவீகாரம்போனபிறகும் விவாகஞ்செய்யக்கூடாது.

83. ஸ்வீகாரன் ஸ்விகார குடும்பத்தின் முன்னோர்களுக்கும் வார்சாவது—ஸ்வீகாரன் ஸ்வீகாரமெடுத்துக்கொண்டவனல்லாமல் சுவீகாரதகப்பனின் பாட்டன்முதலிய முன்னோர்களுக்கும், பக்க தாயாதிகளானசிற்றப்பன் பெரியப்பன்முதலியவர்களுக்கும்,சுவீகாரத்தாயார் அவள்சொத்துக்களுக்கும் அந்தத்தாயாரின் தகப்பனுக்கு தௌகித்தனாகவும் தாய்வழியைச்சேர்ந்த மற்ற பந்துக்களுக்கும் வார்சாக எற்பட்டு சொத்தையடைய பாத்தியமுள்ளவனாகிறான், (7

ம. 255; 5 க. 615; 6 க 289; 8 க. 302; 8. இ அ. 229; 10இ அ. 138; 6 கல், 256; 1அ. 256; 9 க. 70; 10 க, 232.) துவியா முஷ்யாயண ரூபமாக சுவீகாரம் செய்தால் அந்தப்புத்திரனுக்கு உபய குடும்பத்திலும் சொத்து பாத்தியமுண்டு. இந்தவழக்கம் கெயாவுக்குச்சமீபமான தேசங்களிலும், மலையாளத்தில் நம்பூரிஜாதியிலும் நடந்துவருகிறது. மற்றவிடங்களில் கிடையாது. (ம. ஐ. 180; 1858ஹைப். ம தீ. 117; 11ம. 167, 168.)

84. ஏற்பட்ட சுவீகாரம் ரத்தாகமாட்டாது.—சாஸ்திரப்படி கிரமமாக நடந்த சுவீகாரம் எந்தவிதத்திலும் தள்ளமுடியாது. சுவீகாரப்பிள்ளை சுவீகாரகுடும்பத்தின் பாத்தியதையைத்தானே தள்ளிவிடலாமென்றிருந்தாலும் அவனுக்குப்பிறகு ஜனன குடும்பத்தில் பாத்தியமுண்டாகமாட்டாது, (2. அ. 366; 2. பாரோ 666; . ம. ஐ. 144; 270, 428; சாட்சிசட்டம் 115-வது பிரிவு.)

விலை கொடுத்து வாங்கி தத்தஹோமம் முதலியது செய்து பிள்ளை சுவீகாரஞ்செய்துகொண்ட பிறகு, ஸ்வீகார தகப்பனே விலை கொடுத்து வாங்கிய காரணத்தால் தத்துரத்தாக வேண்டுமென்று சொன்னாலும் செல்லாது. (29 ம. 161.)

85. சுவீகாரப் பிள்ளையின் வார்சுபாத்தியம்.—ஒரு குடும்பத்தில் ஔரஸபுத்திரன் (பெற்றபிள்ளை) என்னவார்சு பாத்தியதைகளை அடைவானோ அந்த பாத்தியதைகள் சுவீகாரப்பிள்ளைக்குமுண்டு. (இ. லா. ரி. 6க 289. இ. லா. ரி. 5 க. 615; 1 பம். ஸ. 209; 9 ஸ. 423; 1859ஹைபம். ஸ. தீ. 1091; 3 ஸ. 49; இ. லா. ரி. 1அ. 259; இ. லா. ரி. 6 க 256; இ லா. ரி. 10க. 232; இ. லா. ரி. 9க. 70.)

புருஷனிறந்த பிறகு தன் புருஷன் நற்கதிக்காக ஒரு விதவை ஸ்வீகாரமெடுத்துக்கொண்டாள். பிறகு அவனுடன் மனஸ்தாபப்பட்டு சொத்துக்களை தன் சுவாதீனத்தில் வைத்துக்கொண்டு தன் பேரில் பட்டாவும் செய்துகொண்டு 10-வருஷகாலமாக அனுபவித்து வந்தாள். பிறகு தத்து புத்திரன் சொத்து தனக்குக்கிடைக்க வேண்டுமென்று வழக்கிட்டதில், சொத்து சுவாதீனமான 6-வருஷத்துக்குள் தாவா செய்யாததால் காலாவதி ஆய்விட்டதென்று ஆட்சேபம் செய்யப்பட்டது. தத்து ஸ்தாபிதமான வழக்கு கோ

ண்டு வரவில்லை யென்றும், சொத்து சுவாதீனமாக வேண்டுமென்று வழக்குச் செய்திருப்பதால் அதற்கு 12-வருஷம் காலாவதியுண்டென்றும் சொல்லி தீர்மானம் செய்தார்கள். (26 ம. 291; 32. பம் 7.)

86. சுவீகாரத்துக்குப்பிறகு ஔரஸபுத்திரன் பிறந்தால் சுவீகாரப்பிள்ளையின் பாகம்.—(1) சுவிகாரத்துக்குபபிறகு ஒருவேளை ஔரஸன் (சொந்தப்பிள்ளை) பிறந்தால் சுவிகாரம் ரத்தாகமாட்டாது. ஆனால் சுவிகாரனைக்காட்டிலும் ஔரஸனுக்கு குடும்பத்தில் அதிக அந்தஸ்தும் பாத்தியதையுமுண்டு. சுவிகாரப்பிள்ளைக்கும் ஔரஸப்பிள்ளைக்கும் பாகம் கொடுப்பதைப்பற்றி அந்தந்த தேசங்களில் வெவ்வேறுவிதமாய் சாஸ்திரங்களுக்கு அர்த்தமெழுதி அப்படியே வழக்கத்தில் ஆசரித்து வருகிறார்கள். பங்காளாதேசத்தில் சுவிகாரப்பிள்ளையைக்காட்டிலும் ஔரஸப்பிள்ளைகளுக்கு இரண்டுமடங்கும், காசிதேசத்தில் ஔரஸப்பிள்ளைகளுக்கு 3-மடங்கும், மதராஸ், பம்பாய் இராச்சியங்களில் ஔரஸப்பிள்ளைகளுக்கு 4-மடங்கும் பாகித்துக்கொடுப்பது வழக்கமாயிருக்கிறது. பம்பாய் மதராஸ் ராச்சியங்களிலுள்ள வழக்கப்படி ஒரு ஔரஸனும் ஒரு சுவீகாரனுமிருந்தால் தகப்பன்சொத்தை 5 - பாகம் போட்டு ஒருபாகம் தத்தனுக்கும். நான்குபாகம் ஔரஸனுக்குஞ்சேரும். இரண்டு ஔரஸன் பிறந்துவிட்டால் சொத்தை 9 பாகமாக்கி ஔரஸ பிள்ளைகள் ஒவ்வொருவரும் நான்குபாகமும், தத்தனுக்கு ஒருபாகமும் அடையவேண்டும். இதுபோலவேதான் மற்றதேசவழக்கப்படியும் பாகிக்கவேண்டும். (9ஸ. 423; 1ம. ஐ. 45; இ. லா. ரி. 16பம். 327; 17 பம். 100; 7 ம 253.)

(2) பிரம்ம, க்ஷத்திரிய வைசியஜாதிகளில்மட்டும் ஔரஸனுக்கும் சுவீகாரனுக்கும் பாகவிஷயமாய் வித்தியாசமேற்பட்டிருந்தாலும் சூத்திரஜாதிகளில் அவ்வித வித்தியாசமில்லை. சுவிகாரனும் ஔரஸனும் சமபாகமாகத்தான் பங்கிட்டுக்கொள்ளவேண்டும். (4. ம. 272.)

(3) ஆனல், பாகிக்கக்கூடாத ஜமீன்விஷயத்திலே, சுவிகாரபுத்திரனைக்காட்டிலும் ஔரஸபுத்திரன் ஜமீன்சொத்து முழுவதையும்,

சர்வசுவதந்தரமாக அடைகிறுன். சுவிகார ஜமீன்சொத்தில் ஜீவனும் சத்துக்குமட்டும் பாத்திடஸ்தனுகிறுன். (17ம. 435.)

87. ஔரஸனிறந்தால் சுவிகாரப்பிள்ளையின் பாத்தியம்.—ஔரஸப்பிள்ளை சந்ததியின்றி யிறந்துபோனுல், அவனுடைய சொத்துக்களெல்லாம் சுவிகாரபுத்திரனைச்சேர்ந்துவிடும். (1ம.ஐ. 49.) சொத்துப்பிரிவினையானபிறகு இறந்துபோன ஔரஸனுக்குப் பெண்ணிருக்கும்பட்சத்தில் அந்தப்பெண்ணுக்குச் சொத்துசேர்ந்துவிடும்.

88. (1) துவியா முஷ்யாயணன்ஔரஸன்.-துவியாமுஷ்யாயணவிதமாய் சுவிகாரஞ் செய்துகொள்ளப்பட்டவன் உபயதகப்பனுடைய சொத்துக்கும் பாத்தியஸ்தனுயிருக்கிறுன். இவனுடைய ஜனகதகப்பனுக்கு வேறொருபிள்ளைபிறந்தால் துவியாமுஷ்யாயணனுக்கு அந்த பிள்ளையின்பாகத்தில் பாதிகிடைக்கும், அதாவதுசொத்தை மூன்று பாகப்போட்டு சொந்தபிள்ளைக்கு இரண்டுபாகமும் துவியாமுஷ்யாயணனுக்கு ஐந்தில் ஒருபாகமும் கிடைக்குமென்று தத்தகசந்திரிகையில் சொல்லப்பட்டிருக்கிறது.

(2) துவியா முஷ்யாயணனுடைய ஸ்விகாரதகப்பனுக்கு ஔரஸபிள்ளைபிறந்தால், ஸ்வீகார பிள்ளைக்கு என்ன பாகங்கிடைக்குமென்று 86-வது பாராவில் சொல்லப்பட்டிருக்கிறதோ அந்த பாகத்தில் பாதிதான் துவியாமுஷ்யாயணனுக்குக் கிடைக்கும். அதாவது:—ஒரு ஔரஸனிருந்தால் பங்காளாராச்சியத்தில் 6-ல் ஒரு பாகமும், மதராஸ், பம்பாய் தேசங்களில் 10-ல் ஒருபாகமும், காசி தேசத்தில் 8-ல் ஒருபாகமும் துவியா முஷ்பாயணனுக்குக் கிடைக்கும்.

(3) உபய குடும்பங்களிலும் ஔரஸபுத்திரனுண்டானுல், துவியாமுஷ்யாயணனுக்கு ஜனனகுடும்பத்தில் பாகமே கிடையாதென்றும், ஸ்வீகார குடும்பத்தில் அந்தந்த தேசத்தில் சாதாரணமாய் ஸ்வீகாரனுக்கு கிடைக்கவேண்டிய பாகங்கிடைக்குமென்று மயூக கிரந்தத்தில் சொல்லியிருக்கிறது.

89. (1) ஸ்வீகாரத்துக்குப் பிறகுதான் ஸ்வீகாரனுக்கு சோத்து சேருமென்பது:—ஸ்வீகாராதிகாரம்பெற்ற விதவை உடனே ஸ்வீகாரமெடுத்துக்கொள்ள வேண்டுமென்கிற கட்டாயமில்லை. எவ்வளவு

நாள் கழிந்தபிறகுகூட ஸ்வீகாரமெடுத்துக் கொள்ளலாமென்று முன் சொல்லியிருக்கிறோம். அவள் ஸ்வீகாரஞ் செய்துகொள்ளுகிற வரையில் அவள் புருஷன் சொத்து அவனிறந்த நிமிஷமே அவனுடைய சமீபவார்சு யாரோ அந்தவார்சுக்கு சேர்ந்து விடும். அவள் ஸ்வீகாரஞ்செய்து கொண்டால் அந்த சொத்து உடனே ஸ்வீகாரப் பிள்ளைக்குச் சேர்ந்து விடும். ஆனால், அப்படிப்பட்ட சொத்து இறந்துபோனவனுடைய வார்சுக்குச் சேர்ந்து, பிறகு அந்தவார்சின் வார்சுக்குச் சேர்ந்துவிட்டால், அதற்குமேல் ஸ்வீகாரஞ் செய்து கொண்ட பிள்ளைக்கு சொத்துச்சேராது. (10 மு. இ. அ. 279; 10 ம. 205; 17 க. 122.)

(2) புருஷனிறந்த பிறகு வார்சுபாத்தியமாக சொத்தை யடைந்த விதவை புருஷன் அனுமதிகொடுத்தபடி ஸ்வீகார மெடுத்துக் கொண்டால் சொத்து முழுவதும் ஸ்வீகாரனுக்குச் சேர்ந்துவிடுவதால் ஜீவனாம்சத்துக்கு மட்டும் அவள் பாத்தியமுள்ளவளாகிறாள். (3 மு. இ. அ. 229; 1 ம. 174; 7 பம். 225; 11 பம். 281, 397) இறந்தவனுக்கு இரண்டு மூன்று விதவைகளிருந்து அவர்களுக்கு அவன் சொத்து சேர்ந்திருக்கும்பட்சத்தில் அவர்களில் ஸ்வீகாராதிகாரம் பெற்றவள் ஸ்வீகாரமெடுத்துக்கொண்டவுடன் அவர்களுக்குக்கிடைத்திருந்த சொத்தெல்லாம் ஸ்வீகாரனைச் சேர்ந்துவிடும். (5 பம். ஐ. 181, 192.)

உதாரணம்:—(1) A,B என்கிற இரண்டு அவிபக்த சகோதரர்களில், A என்பவன் தன் பெண்சாதிக்கு ஸ்வீகாராதிகாரங் கொடுத்து விட்டு இறந்துபோனான். அவனிறந்ததும் அவன் சொத்துக்கு B. என்பவன் வார்சாகி, A என்பவன் விதவைக்கு ஜீவனாம்சபாத்தியமட்டு முண்டாகிறது. ஆனால் அவள் ஸ்வீகாரஞ் செய்துகொண்டால் ஸ்வீகாரன் B. என்பவனோடு குடும்ப சொத்துக்கெல்லாம் கூட்டு பாகஸ்தனாகிறான்.

(2) ஒருவேளை விதவை சுவீகாரமெடுப்பதற்குள் B என்பவனிறந்து போய் சொத்து B. என்பவனுடைய வார்சுக்கு கிரமமாய்ச்சேர்ந்தபிறகு அவள் சுவீகாரஞ் செய்துகொண்டால், அந்த பிள்ளைக்கு சொத்து கிடைக்க மாட்டாது. (8 பம். ஐ. 114; 6 பம். 498,525, 15 பம் 565; 2 க. 295; 7 க 293; 12 க. 18)

(3) சென்னப்பட்டண இராஜதானியில் பாகஞ்செய்யக்கூடாத ஒரு ஜமீனில் A. என்பவன் தன் பெண்ஜாதிக்கு ஸ்வீகாராதிகாரம் கொடுத்து

விட்டு இறந்து போனன். உடனே A என்பவனுடைய சொத்து அவனுடைய அவிபக்த சகோதரனை B எனபவனுக்குச் சேர்ந்தது. பிறகு A என்பவனுடைய விதவை ஸ்வீகாரமெடுததுக்கொண்டாள். உடனே ஜமீன் முழுவதும் ஸ்வீகாரப்பிள்ளைக்கு சேர்ந்தது. (இ. லா. ரி. 1 ம. 69)

(4) A. என்பவன் விவாகமில்லாமலே இறந்து போனன். அப்போது அவனுடைய சபத்னீகமாதா உயிருடனிருந்தாலும் அவளுக்கு நியாயப்படி அவன் சொத்துச்சேராமல் அவனுடைய தாரதாயாதிகளான வார்சுகளுக்குச் சேர்ந்துவிடும். அதன் பிறகு அவளால் எடுத்துக்கொண்ட ஸ்வீகாரப்பிள்ளைக்கும் சொத்துச்சேராது. (8. ம ஐ. 103; 12 க. 216; 9 பம். 94; 1 பம். 463)

(5) மேற்சொன்ன நான்காவது உதாரணத்தில் A. என்பவனிறந்து போனபோது அவனைப்பெற்றதாய் உயிருடனிருந்து அவளுக்கு சொத்து சேர்ந்தபிறகு அவள் ஸ்வீகாரமெடுத்துக்கொண்டால் அந்த தத்து பிள்ளைக்கு சொத்து பாத்தியமுண்டாகிறது (இ. லா. ரி. 1 ம. 174.

**90.** ஸ்வீகாரத்துக்கு முன் சோத்தின் துர்வினியோகம்:—சுவீகாரப்பிள்ளைக்குச் சேரவேண்டிய சொத்தின் பாத்தியம் அவன் சுவீகாரமாகப்போனநாள் முதலுண்டாகிறது. அதற்கு முன் அந்தச் சொத்தை வைத்திருந்தவர்கள் கிரமமான நடவடிக்கையில் சொத்தை நடத்தியிருந்தால் அந்த நடவடிக்கையை ரத்துசெய்ய சுவீகாரப்பிள்ளைக்கதிகாரமில்லை. ஆனல், அவருக்குள்ள பாத்தியதையை மீறி சொத்தைப்பற்றி நடத்தியிருந்தால் ஸ்வீகாரப்பிள்ளை அவைகளை ஆக்ஷேபித்து தன் வசப்படுத்திக்கொள்ளலாம். (1850ளுத்து ப. தீ. 533; 7 மு இ. அ. 169, 178; 5க. 251; 5பம். 630; 3பம் ஸ. 220, 367; 1856ளு பம். ஸ. 170; 4 ம. 160; 8 மூ. இ. அ. 443; 11 பம். 609, 614; 24 ஸ. 183; 2 க. 307; 16 க. 140.) ஆனல் பிற்காலத்தில் ஸ்வீகாரத்துக்குமுந்தி தாயால்செய்யப்பட்ட துர்வினியோகத்தை உடனே ஆட்சேபிக்க ஸ்வீகாரனுக்கதிகாரமில்லையென்றும், அவளிறந்தபிறகு தான் அந்த சொத்தை அவனடையக்கூடுமென்றும் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. (6 பம். 463; 26 ம. 143.)

உதாரணம்—ஒரு மிட்டாதாருடைய சொத்து ஸ்வீகாரப்பிள்ளை ஏற்படுவதற்குமுன் அவன் சிறியதகப்பன் சுவாதினத்திலிருந்து; அந்த சொத்தின்வரவுசெலவு கணக்குகளைக் காட்ட அந்தச்சிறிய தகப்பன் கட்டுப்பட்டவ

னல்ல. ஆனால் சொத்தை விற்கவாவது வேறே துர்விநியோகமாவது செய்திருக்கக்கூடாது. (இ. லா. ரி. 1 ம. 69.)

**91.** இறந்தவன் செய்யும் ஷரத்துகள்.—(1) பெண்சாதிக்கு சுவீகாராதிகாரம் கொடுத்தபோது, அவள் ஜீவதசைவரை சொத்தை முழுவதையுமாவது, யாதொரு பாகத்தையாவது அனுபவித்து அதற்குப் பிறகு சுவிகாரபுத்திரனுக்குச் சேரவேண்டுமென்று புருஷன் எழுதிவைத்துப் போயிருந்தால் அதன்படியே செல்லும், (1855ளு பம. ஸ. 139; 1859ளு பம் ஸ. 162; இ. லா. ரி. 5 க. 357; 8 க. 357.)

(2) சில சொத்துவிஷயமாய் ஒருவன் ஜனனபிதாவோடு வுடம்படிக்கை செய்துகொண்டு அவன் குமாரனை மீதிசொத்துக்குமட்டும் சுவீகாரம் எடுத்துக்கொண்டால் அந்த வுடம்படிக்கைப்படி சுவீகாரதகப்பனால் விநியோகஞ்செய்த சிலசொத்து ஸ்வீகாரப்பிள்ளைக்குச் சேராது. (இ லா. ரி. 12 ம. 490; இ. லா. ரி. 14 ம. 172; 6 பம். ஐ. 224.)

(3) ஆனால், ஒருவனுக்கிருந்த சொத்தெல்லாம் இதராளுர்க்குச் சேரும்படி உயிலெழுதி வைத்துவிட்டுப் பிறகு சுவிகாரஞ் செய்துகொண்டால் அந்த உயில் ரத்தாய்விடும். (6-பம். ஐ. 230; 6 மூ. இ. அ. 320.)

(4) சுவீகாரத்தாயார் தன்னுடைய வயதுவராத சுவீகாரப்பிள்ளையோடாவது அல்லது சுவீகாரத்துக்குமுன் ஜனனபிதா முதலிய பந்துக்களோடாவது சொத்து விஷயமாய்ச் செய்துகொள்ளும் உடம்படிக்கை செல்லாது. (இ. லா. ரி. 2 ம. 91; இ. லா. ரி. 16 ம 400; 3 பம் 387; 1? ஸ. 63)

**92.** சுவீகார விஷயமாய்க் குடும்பத்தார் ஏற்பாடு.—ஒரு குடும்பத்தில் எவரும் தத்து செய்துகொள்ளக்கூடாதென்று ஒருவருக்கொருவர் உடன்படிக்கை செய்துகொண்டால் அவ்வுடன்படிக்கை செல்லாது. அவ்வுடன்படிக்கைக்கு விரோதமாய் செய்யப்பட்ட சுவீகாரமும் ரத்தாகமாட்டாது. (இ. லா. ரி. 9 ம. 499.)

**93.** சுவீகாரமில்லாமல் பாத்தியமில்லே.—இன்னாருடைய குமாரன் இன்னானை சுவிகாரமெடுத்துக்கொண்டு சொத்துக்களையெல்

லாம் அவனுக்குக் கொடுவென்று புருஷன் சொல்லிப் போயிருந்த படி சுவிகாரஞ் செய்யாமல் அவன் விதவை சும்மாயிருந்தால், அப்படிக் குறித்துச்சொன்ன பிள்ளைக்கு எவ்வித பாத்தியமும் கிடையாது. (இ. லா. ரி. 12 பம் 202; இ. லா. ரி. 16 ம. 355; இ. லா. ரி. 11 க. 463; இ. லா. ரி. 12 க. 688.

**94.** சுவீகாரம்ரத்தானுல் ஜனனகுடும்பத்தில் சேரலாம்.—சுவீகாரம் தர்மசாஸ்திரப்படி செய்யப்படவில்லை யென்றுவது, கிரமமாய் செய்யப்படவில்லை யென்றுவது ரத்தாய்விட்டால் அந்தப்பிள்ளை ஜனன குடும்பத்தில் சேரலாமென்று விதித்திருக்கிறது. 1 ம. ஐ. கோ 363; 12 பம். ஐ. கோரி. 397;) ஆனுல், தற்காலத்தில் தான பரிகிரகங்கள் சரியாய் நடந்திருந்து சுவீகாரம் ரத்தானுல் அந்தப் பிள்ளைக்கு ஜனன குடும்பத்தில் பாத்தியம் உண்டாகமாட்டாதென்றும், தானபரிகிரகங்கள் சாஸ்திரப்படி நடக்காதிருந்தால் பிரம்ம, க்ஷத்திரிய, வைசியர்கள் உபநயனத்துக்கு முன்னும், சூத்திரர் கல்யாணத்துக்கு முன்னும், ஜனன குடும்பத்தில் சேரலாமென்றும் தீர்ப்பு செய்திருக்கிறுர்கள். (12 பம் ஐ. 397; 1856 - 59ஹு கல் ஸுபிரீம் கோ. தீர்ப்பு 137 பக்கம்; 13 க. ஐ. அபெண்டிக்ஸ் 42.)

**95.** சுவீகாரம் ரத்தானுல் அவனுக்குக் கொடுத்ததானம்செல்லுமா.—உயில் அல்லதுதான சாசனத்தில் குறிக்கப்பட்டிருந்தபிள்ளை சுவிகாரப்பிள்ளை என்கிற காரணமில்லாமல், இன்னுன் என்று குறிபிடுவதற்காக 'ஸ்வீகாரன்'' என்கிறநாமத்தோடு அவன் பெயர் விவரமாய்ச் சொல்லப்பட்டிருந்தால் சுவீகாரம் ரத்தானுலும் தானம் செல்லும். (24 ம. 214; 19. இ. அ. 101.) ஆனுல், அப்படிப் பட்ட தான சுவீகாரப்பிள்ளை என்கிற எண்ணத்தால் செய்யப்பட்டதென்கிற முழுநம்பிக்கையோடு செய்ததாயிருந்தால் ஸ்வீகாரம் ரத்தானுல் தானம் செல்லாது. (12 இ. அ. 72; 23 பம். 718; 11 க. 463; 12 க. 686; 16 ம. 355; 15 பம். 573; 24 இ. அ. 86)

உதாரணம்.—(1) "கிருஷ்ணய்யருடைய ஸ்வீகாரப்பிள்ளையாகிய வாசுதேவனுக்கு இந்த ஒருவேலி நிலத்தையும் தானங்கொடுத்தேன்" என்று ஒருவன் உயில் எழுதிவைத்தான்; சுவீகாரம் ரத்தானுலும் தானம் செல்லும்.

2. "முத்துசாமியை" நான் சுவீகாரஞ் செய்துகொண்டேன்; என் பெண்சாதி ஷை முத்துசாமி உயிருடனிருக்கையில் வேறொருவனையும் ஸ்வீகாரஞ் செய்துகொள்ளக்கூடாதென்றும், அவனுக்கே என் சொத்தெல்லாம் சேரவேண்டியதென்றும், அவன் சுவீகாரத்துக்கு வேண்டிய காரியங்களை என் பெண்சாதியே செய்யவேண்டுமென்றும் ஒருவன் உயில் எழுதிவைத்தான். பிறகு அவன் பெண்சாதி சுவிகாரத்துக்கு வேண்டிய கர்மம் ஒன்றும் நடத்தாமல்போனாலும் அந்தப் பிள்ளைக்குக் கொடுத்த தானம் செல்லும். (26. ஸ. 91.)

3. "குப்புசாமி" என்பவன் ஒரு பையனை குழந்தைமுதல் தன் அபிமான புத்திரனாக வளத்துக்கடைசியில் தன் சொத்தையெல்லாம் அவனுக்கு உயிலெழுதிவிட்டு இறந்துபோனான். இந்தப்பிள்ளை ஸ்வீகாரப் பிள்ளையாக இல்லாதபோதிலும் தானம் செல்லும். (1861-ஆு மதராஸ் தீர்ப்பு 124; 1 ம. ஐ- 393.)

4. "எனக்கும் என் முன்னோர்களுக்கும் உத்தரகிரியை முதலானது செய்துவிட்டு நீ என்னுடைய சொத்துக்களை அடையவேண்டியது என்கிற உடன்படிக்கையின்பேரில் நான் உன்னை ஸ்வீகாரம் எடுத்துக்கொண்டேன்" என்று ஒருவன் ஒரு சம்மதிபத்திரம் எழுதினான். பிறகு ஸ்வீகாரம் செல்லாதென்று போய்விட்டது. இதில் ஸ்வீகாரத்தை உத்தேசித்தே தானம் செய்ததால் ஸ்வீகாரமில்லாவிட்டால் தானம் செல்லாது. (இ. லா. ரி. 11 க. 463; 12 க. 686; இ. லா. ரி. 12 பம். 185, 202; இ. லா. ரி. 15பம்573.)

## (8) கிருத்திரம ஸ்வீகாரம்.

96. கிருத்திரம ஸ்வீகாரம்.—(1) இது மிதிலதேசத்திலும், மலையாளத்தில் நம்பூதிரி ஜாதிகளிலும் தற்காலத்தில் வழக்கமாயிருக்கிறது. புருஷன் பெண்சாதிகளிருவரும் சேர்ந்தாவது தனித்தனியாக வாவது சுவீகாரமெடுத்துக்கொள்ளலாம். ஆனால் ஒருவர் பேருக்கு மற்றொருவர் எடுக்கக்கூடாது. (2 பம். ஸ. தீ. 173; இ. லா. ரி. 11 ம. 174)

(2) சுவீகாரம் செய்துகொள்ளப்பட்டவன் சுவஜாதியாயிருக்க வேண்டும்; வயதைப்பற்றி நிபந்தனை இல்லை. உபநயனம், விவாகம் ஜனனகுடும்பத்தில் நடந்திருந்து பிள்ளைகளைப்பெற்றிருந்தாலும், தாய் தகப்பன் இல்லாவிட்டாலும் சுவீகாரம் செய்யலாம். (8 ஸ. 155; 6 பம். ஸ. தீ. 192; 3 பம். ஸ. தீ. 145; 3 பம். ஸ. தீ. 144) இந்த சுவீகாரத்துக்கு வைதிக கர்மங்களை கிடையாது. "நீ என்

பிள்ளையாயிருக்கவேண்டுமென்று" சுவீகார பிதா கேட்டு, நான் உன்பிள்ளையாயினேன் என்று சுவீகாரப்பிள்ளை சொன்னுற் போதுமானது. கிருத்திரம சுவீகாரப்பிள்ளைக்கு அவன் ஜனன குடும்பத்திலுள்ள பாத்தியதை போகமாட்டாது. (1 பம் ஸ. தீ. 9; 6 பம். ஸ. தீ. 271.)

(3) சுவீகார குடும்பத்தில் எவனுல் சுவிகரிக்கப்பட்டானே அவனுக்குமட்டும் உத்தரகிரியைசெய்து அவனுடைய சொத்துக்கு மட்டுந்தான் அவன் வார்சுதாரனுகிருன். ஸ்வீகாரப்பிதாவினுடைய தகப்பன் பாட்டன், அண்ணன் தம்பி முதலானவர்களுக்கு உத்தரகிரியை செய்யவாவது அவர்களுடைய சொத்தை யடையவாவது அந்த ஸ்வீகாரபுத்திரனுக்கு பாத்தியமில்லை. (1 பம். ஸ. தீ. 15; 3 பம் ஸ. தீ. 307; 2 பம். ஸ. தீ. 23; 8 ஸ 155; 25. ஸ. 255) பெண்சாதியாவது புருஷனுவது தனக்கு மட்டுமென்று ஸ்வீகாரமெடுத்துக்கொண்டால் அந்த தத்தன் ஸ்வீகாரதாய் அல்லதுதகப்பனுக்குமட்டும் உத்தரகிரியைசெய்து அவன் அல்லது அவள் சொத்தையடையலாம். (2 பம். ஸ, தீ. 23; 7 ஸ. 500; 8 ஸ. 155)

97. மாப்பிள்ளை.—சிலவிடங்களில் சூத்திரர்கள் ரெட்டிகள் இவர்கள் வீட்டு மாப்பிள்ளையை வீட்டில் வளர்த்துப் பிள்ளையைப் போல் வைத்துக்கொண்டிருந்து பிறகு மாமனுர் சொத்துக்கு அவன் பாத்தியனுகிருன். அந்த மாப்பிள்ளைக்கு ஜனன குடும்ப பாத்தியம் போகமாட்டாது. வீட்டுமாப்பிள்ளைக்கு தத்துபுத்திரனைப்போல் மாமனுர் சொத்துபாத்தியாகிறது. ஆனுல், அது அவன் சுவயர்ஜிதசொத்தாக பாவிக்கப்படுகிறது. மாப்பிள்ளையை வீட்டில்வைத்துக்கொண்டபிறகு மாமனுருக்குப் புத்திரனுண்டானுலும் அந்தப் புத்திரனுடன் மாப்பிள்ளைக்கும் சமபாகமுண்டு. (இ. லா. ரி. 6 ம. 267; இ. லா. ரி. 4 ம. 272; இ. லா. ரி. 12. ம 442; 7 ம ஐ. 25.)

98. யாழ்ப்பாண சம்பிரதாயம்.—யாழ்ப்பாணம் முதலிய விடங்களிலுள்ள தமிழர்கள் கிருத்திரம ஸ்வீகாரம்போன்றதொன்றை எடுத்துக்கொள்வதுடன், ஒரு பெண்ணையும், பிள்ளையையும் ஸ்வீகாரஞ்செய்துகொண்டு அவர்களுக்கு விவாகஞ்செய்வித்து வீட்டில் வைத்துக்கொள்கிற வழக்கமுண்டு.

99. பேண் தத்து.—தென்னிந்தியாவில் தாசிகள்பெண் ஸ்வீகாரஞ்செய்துகொள்வது வெகுகால வழக்கமாயிருக்கிறது. பெண் சுவிகாரம் தாசிகளைத்தவிர மற்ற ஜாதியார்கள் எடுக்கக்கூடாது. பெண் சுவீகாரத்துக்குத்தான் பரிகிரஹ முதலான கர்மங்கள் கிடையாது. இன்ன ஜாதிப்பெண்ணைத்தான் சுவீகாரம் செய்துகொள்ள வேண்டுமென்கிற நியமமும் கிடையாது. எந்தவிதமாகவாவது ஒரு பெண்ணை வாங்கி வளர்ப்பதே போதுமானது. (இ. லா. ரி. 13 பம். 690; இ. லா. 11 ம. 393; இ. லா. ரி 13 ம 133; 2 மார்லிஸ் டைஜஸ்டு 133; இ. லா. ரி. 4 பம் 545; இ. லா. ரி. 14 பம் 90.)

ஏக கன்னிகையைத் தான் சுவீகாரஞ் செய்துகொள்ளலாம். அதற்குமேல் எடுக்கலாமென்று தேசாசாரமிருந்தால் இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட கன்னிகைகளை சுவீகாரம் செய்துகொள்ளத்தடையில்லை. (இ. லா. ரி. 11 ம 393, இ. லா. ரி. 12. ம 214.)

தாசிகள் விபசாரத் தொழில் செய்வதற்காக சுவீகாரம் எடுக்கக்கூடாது. (4 பம். 545; 21-ம 229 ) அவர்களுடைய சொத்துக்கு வார்சாக இருக்கவேண்டுமென்கிற உத்தேசத்தோடு எடுப்பதால் தான் சுவீகாரம் ஊர்ஜிதப்பட்டு வருகிறது. சுவீகாரப் புத்திரிகளை மைனர் நீங்குவதற்குள் (16 வயதிற்குள்) விபசாரத் தொழிலுக்குரிய கர்மங்கள் (சுவாமிக்கு பொட்டுக்கட்டுவது) சாந்தி முதலியது செய்தால் அப்படிச் செய்கிறவர்களும் அதற்குடந்தையாயிருப்பவர்களும் அந்தப்பெண்ணுடன் விபசாரஞ் செய்தவனும் இந்தியன் பினல்கோட் 372, 373-வது பிரிவுகளின்படி தண்டனைக்குள்ளாவார்கள். தாசிகள் ஸ்வீகார மெடுத்துக்கொள்வது தென்னிந்தியாவிலும் மேலிந்தியாவிலும் வழக்கமாயிருக்கிறது.

---

## 4-வது மைனர்களின் சம்ரக்ஷணம்.

---

**100.** மைனர்களென்பது.—நமது புராதன தர்மசாஸ்திரங்களில் ஸ்திரீ புருஷர்களுக்கு 16 வயது முடிந்துவிட்டால் தக்கவயதுவந்தவர்களென்று சொல்லப்பட்டிருக்கின்றன. ஆனால், தற்காலம் 1875-ளூ நடத்திய 9-வது சட்டமாகிய இந்திய மெஜாரிடி ஆக்ட்டுப்படி 18 வயது முடிந்தபிறகுதான் தக்க வயதுவந்ததாக ஏற்படுத்தியிருக்கிறார்கள். சர்க்கார் பார்வையில் போஷித்துவருகிற மைனர்களுக்கு (கோர்ட் ஆப்வார்ட்ஸ் மைனர்கள்) மட்டும் 21-வது வயது கழிந்த பிறகுதான் தக்கவயது வந்ததாக எண்ணப்படுகிறார்கள்.

**101.** குழந்தைகள் சம்ரக்ஷணை.—(1) தர்மசாஸ்திரப்படி குழந்தைகளை யிரட்சிப்பது முதலில் தகப்பன், பிறகு தாய், தாயில்லாவிட்டாலும், இரட்சிக்கத் தகுதியற்றவளாயிருந்தாலும், பிறகு அண்ணன், பெரிய தகப்பன், சிறிய தகப்பன் முதலிய பிதா வம்சஸ்தர்களும், அவர்களில்லாவிட்டால் தாய் வம்சஸ்தர்களு மிரட்சிக்கவேண்டியது. (1852ளூ ம. தீ. 105; 1854ளூ பம். ஸ. தீ. 329 மிதிலதேசத்தில் தகுந்த வயதுவராத குழந்தைகளைக் காப்பாற்றும் பாத்தியம் தகப்பனைக்காட்டிலுந் தாய்க்கே அதிகமென்று சொல்லப்பட்டிருக்கிறது. (இ. லா. ரி. 5 க. 43.)

(2) பிரிவினையாகாத குடும்பத்தில் குழந்தைக்குச் சேரவேண்டிய சொத்துடன்கூட குடும்ப பூராசொத்தையும் விசாரணைசெய்கிற குடும்ப எஜமானன் குழந்தையின் கார்டியனாயிருக்க தாயைக்காட்டிலும் அதிக பாத்தியமுடையவனாகிறான். ஆனால் அக்குழந்தையின் சரீர சம்ரட்சணையைத் தாயே செய்யவேண்டியது. (3. ம. ஐ. 69; இ. லா. ரி. 5 க 219; 1847ளூ பம். ஸ. தீ. 557.) குடும்பம் பிரிக்கப்பட்டு மைனர் சொத்து வேறாக்கப்பட்டால், சொத்தை பரிபாலிக்கவும் குழந்தைக்கு கார்டியனாயிருக்கவும் தாய்க்கு சுதந்தரமுண்டு.

குழந்தைகளை சம்ரட்சிக்க சிறிய தகப்பன், பெரிய தகப்பன், இவர்களைக் காட்டிலும், ஸபத்நீக மாதாவுக்கு அதிக பாத்தியம் கிடையாது. (1 மார்லீஸ் டைஜஸ்ட் 275; 2 பாரோ. 144; 7 ஸ. 321.)

**102.** தகப்பன் தன்பிள்ளைக்கு வேறொருவனை கார்டியனுயிருக்க நேமிக்கலாம்.—குழந்தைகளின் சம்ரட்சணையில் பூர்ண சுவதந்திரமுள்ள தகப்பன் தனக்குப்பிற்காலத்தில் இன்னார் குழந்தைகளுக்கு கார்டியனுகயிருக்கவேண்டுமென்று உயில் மூலமாய் நியமிக்கலாம். அப்படி நியமிக்கப்பட்டவன் தாய் முதலியவர்களைக்காட்டிலும் மூர்தின பாத்தியமுள்ளவனுகிருன். (17 பம். 560.) உயில் மூலமாய் கார்டியனை நியமிக்குமதிகாரம் தகப்பனைத்தவிர தாய் முதலிய வேறு யாருக்கும் கிடையாது. (21 ம. 401.)

**103.** வைப்பாட்டி குழந்தைகளை இரட்சிப்பது.—சாஸ்திரப்படி வைப்பாட்டியின் குழந்தைகளைக் காப்பாற்றுவது முதல் கடமை அவளுடையதே (4 க. 377.) ஆனல், அவள்வசத்திலில்லாமல் தகப்பனுலாவது அல்லது அவனுல் ஏற்படுத்தின வேறொருவராலாவது குழந்தைகள் சமாட்சிக்கப்பட்டால், அவளுடைய பாத்தியம் போய்விடும். தாய் விபசாரிபாயிருந்தாலும், குழந்தைகளை அவளிடம் விடுவது அவர்களின் க்ஷேமத்துக்கு கெடுதலாயிருக்கும் போதும் தன் குழந்தைகளைத் தன்னிடத்தில் விடவேண்டுமென்று வைப்பாட்டி செய்கிற தாவா செல்லாது. (இ. லா. ரி 4 க. 374; இ. லா. ரி. 12 ம. 67.)

**104.** விதவை மைனராயிருந்தால் இரட்சிக்குங் கடமை.—தர்மசாஸ்திரப்படி மைனரான விதவைகளை அவள் புருஷனுடைய தாயாதிகளே காப்பாற்றவேண்டும். மற்ற எவரும் அவளைக் காப்பாற்றமாட்டார்கள். (இ. லா. ரி. 16 க. 584.)

**105.** போஷகர் கெட்டவர்களானுல், மைனரை யிரட்சிப்பிலிருந்து நீங்குவது.—தர்மசாஸ்திரப்படி மைனர்களைப்போஷிக்கும் பாத்தியம் தகப்பன், தாய் தமையன் முதலிய பந்துக்களைச் சேர்ந்தாயிருந்தாலும் அவர்கள் கெட்ட நடவடிக்கையுள்ளவர்களாயிருந்தாலும், அந்தக் குழந்தைகளுடைய க்ஷேமத்துக்கும் நன்மைக்குங் கெடுதியுண்டாகும்படியான காரியங்களைச் செய்தாலும், அப்படிப்பட்ட குழந்தைகளுக்குப் பந்துவாயினும், சிநேகிதனுயினும் கோர்ட்டில் மனுக்கொடுத்து அவர்களை குழந்தைகளின் சம்ரட்சணையிலிருந்து நீக்கி வேறொருவரை ஏற்பாடுசெய்யலாம். (3 ம. ஐ. 69; 14 மூ. இ அ 209; இ. லா. ரி. 1 அ 549, 598.)

**106.** சுவீகார மைனர் ரட்சணை.—பிள்ளையை சுவீகாரம் கொடுத்தபிறகு அவனைக் காப்பாற்றும் பாத்தியம் ஜனனபிதாவுக்கு இல்லாதுபோய், சுவீகாரப் பிதாவுடையதும் அவனைச் சேர்ந்தவர்களுடையதாயுமிருக்கிறது ஆனால், சுவீகார தகப்பனாவது அவனைச் சேர்ந்தவர்களாவது சுவீகாரப்பிள்ளையைக்கெட்ட எண்ணத்தோடு வருத்தப்படுத்தினாலும், வேறு எவ்விதமாகவாவது அந்தப்பிள்ளையினுடைய க்ஷேமத்துக்குக் கெடுதியுண்டாகும்படி ஏதாவது செய்தாலும், ஜனனதகப்பன் முதலியவர்கள் அந்தப்பிள்ளையை யிரட்சிக்கலாம். (3 பம். ஐ. 1.)

**107.** புனர்விவாகஞ் செய்துகொண்ட தாயின் சம்ரட்சணையிலிருந்து மைனரை நீக்குவது—புருஷனிறந்தபிறகு பெண்சாதி புனர்விவாகம் செய்துகொண்டால் முதல் புருஷனால் அவளுக்குண்டான குழந்தைகளை அவள்வசமிருந்து விலக்கி, கோர்ட்டார் மூலமாய் முதல் புருஷன் பந்துக்களிடத்தில் ஒப்புவித்து அவர்களிடத்தில் தக்க ஜாமீன்வாங்கலாம். (1856ளுடத்து 15 வது ஆக்ட்டாகிய ஹிந்து விதவா புனர்விவாக சட்டம் 3-வது பிரிவு.)

**108.** மதப்பிரஷ்டையான தாயிடமிருந்து குழந்தைகளை நீக்குவது.—தர்ம சாஸ்திரப்படி பிதாவின் மதத்தையே பிள்ளை யனுசரிக்கவேண்டியது. ஆகையால், தாயார் குலப்பிரஷ்டையாகவாவது மதப்பிரஷ்டையாகவாவது போனால் அவளுடைய போஷணையிலிருக்கிற குழந்தைகளை சம்ரட்சிக்கும் பாத்தியம் அவளை விட்டு நீங்கிவிடும். குழந்தைகள் நன்மை தீமை என்கிற வித்தியாசந் தெரியாத மைனராயிருக்கிற சமயத்தில், மதப்பிரஷ்டையான தாயாரிடத்திலிருந்து அவள் மதத்தையே தாங்களும் அனுஷ்டிப்பதாகச்சொன்னாலும் அதை ஏற்றுக்கொள்ளாமல் அவர்களை அவளிடமிருந்து நீக்கிவிடலாம். ஆனால், அவர்கள் தகுந்த வயது வந்தவர்களாயும், பகுத்தறிவு உள்ளவர்களாயுமிருந்து, அவர்களைத் தாயாரிடமிருந்து நீக்கினால் அவர்கள் நன்மைக்குப் பாதகமுண்டாகுமென்று தோன்றினால் அவளிடமிருந்து அவர்களை நீக்கக் கோர்ட்டார் உத்திரவு செய்யார்கள். (14 மூ. இ. அ. 309.)

புருஷனுடன் தகுந்த காரணமின்றி, சண்டையிட்டோ அல்லது வேறு காரணத்தினாலோ வேறாகவிருக்கிற தாயிடம் பிள்ளைக

யிருந்தால், கோர்ட்டில் தாவா செய்து குழந்தைகளைத் தன் சுவாதீனத்தில் வரவழைத்துக்கொள்ளலாம். (இ. லா. ரி. 8 க. 369.)

**109.** தகப்பன் மதப்பிரஷ்டனுனல் மைனர் ரட்சணம்.—(1) தகப்பன் மதப்பிரஷ்டனுய்விட்டால், அவனுடைய மைனர்குழந்தைகளுக்குக் கார்டியனுயிருக்கும் பாத்தியம் அவனுக்குப்போகமாட்டாது. அந்தக்குழந்தைகளும் தகப்பன் அனுசரித்த மதத்தையனுஷ்டிக்க வேண்டியது தான். (14 மூ. இ. அ. 309; 9 ம. 391.) ஆனுல், மதப்பிரஷ்டனுனபிறகு துர்வழக்கங்களால் கெட்ட காரியங்களைச் செய்துகொண்டு குழந்தைகளுடைய நன்மைக்கு விரோதமான காரியத்தைச் செய்தால் அப்படிப்பட்ட தகப்பனிடமிருந்து குழந்தைகளை நீக்கிவிடலாம். (பேர்ரீ துறை ஒரியண்டல் கேஸ் 91) தகப்பன் வேறு மதத்தில் சேர்ந்தாலும் தன்மக்களை பழைய மதத்திலேயே வளரும்படி விட்டிருந்தால் பிறகு தன் வசப்படுத்த பாத்தியமில்லை. (25 க. 881.)

(2) அன்னிய மதஸ்தன் ஒருவன் ஒரு மைனரை தன் வசத்தில் வைத்திருந்ததை வெகுகாலம் தெரிந்திருந்தும் மீட்காமலிருந்தால் பிறகு அந்தமைனரை மீட்கும் சுதந்தரம் தகப்பன் முதலானவர்களுக்குப்போய் விடுகிறது. (16 பம். 307; 23 கல். 290.)

**110.** மைனர்களின் ஸ்வதந்திரம் —18 வயது ஆகாத மைனர்கள் தங்கள் கார்டியனுத்திரவில்லாதிருக்கையில் சுவயேச்சையாய் எதையும் செய்யக்கூடாது. பகுத்தறியும் அறிவு தங்களுக்கு வந்துவிட்டதால் தாங்கள் பிறமதங்களை அனுஷ்டிப்போமென்றும், அப்படிப்பட்ட வேறு மதகுருக்களால் பாதுகாக்கப்படுகிறேமென்றும் சொன்னுலும் அதைக் கோர்ட்டார் ஒப்புக்கொள்ளாமல் அந்த மைனர்களுடைய நியாயமான கார்டியனிடம் அவர்களை ஒப்பித்து விடுவார்கள். (இ. லா. ரி 9 ம. 391; பேர்ரீ ஒரியண்டல் கேஸ் 103.)

மேலும் எவனுவது 14 வயதுக்குட்பட்ட ஆண்பிள்ளையையாவது 16 வயதுக்குட்பட்ட பெண்பிள்ளையையாவது அவர்களுடைய கார்டியனிடமிருந்து பிறமதங்களில் சேர்த்துக்கொள்கிற எண்ணத்துடன் எவராவது கொண்டுபோனுல் பினல்கோட் 363-வது பிரிவுப்படி தண்டனைக்குள்ளாவார்கள்.

**111.** கார்டியனை நீக்க சர்க்காருக்கதிகாரம்.—எல்லா ஜனங்களையும் அவர்களுடைய சொத்து சுதந்திரங்களையும் பாதுகாத்துக் கொண்டு தேசபரிபாலனம் செய்கிற இராஜாங்கத்தாரே எல்லா மைனர்களுக்கும் மேலான கார்டியன்களாக இருக்கிறார்கள். ஆனது பற்றி கார்டியன்களில்லாத மைனர்களுக்கு சரியான கார்டியன்களை நியமிக்கும் அதிகாரம் சர்க்காரைச் சேர்ந்ததாக இருக்கிறது; மேலும் சுபாவமாய் ஏற்பட்டிருக்கிற ஒரு கார்டியன் மைனருடைய அக்கரைக்கு விரோதமாய் நடந்துகொண்டால் அவனை அவ்வதிகாரத்தினின்றும் நீக்கிவிட்டு சரியான வேறு கார்டியனை நியமிக்கவும் சர்க்காருக்கு அதிகாரமுண்டு.

**112.** பித்தர்களின்சொத்தை சர்க்கார் பரிபாலிப்பது.—தக்க வயதை யடைந்தும் சித்த சுவாதீன மில்லாமலிருக்கிற பைத்தியக்காரர் முதலியோர்களும் மைனர்களொப்பந்தப் பாவிக்கப்படத்தக்கவர்களாயிருக்கிறபடியால் அவர்களுடைய தேகசம்ரக்ஷணையின்பொருட்டும் சொத்தின் பாதுகாப்பின்பொருட்டும் தக்ககார்டியன் ஒருவனை நியமிக்கும் அதிகாரமும் சர்க்காரையே சேர்ந்ததாக இருக்கிறது.

**113.** பித்தன், மைனர் இவர்கள் சொத்தை சர்க்காரில் பரிபாலிக்க ஜில்லா கோர்ட்டாருக்கு அதிகாரம்.—மைனர்களுக்கும், சித்த சுவாதீன மின்மையால் மைனர்களொப்பந்தம் பாவிக்கப்படுகிற பைத்தியக்காரர் முதலியோருக்கும் சரியான கார்டியன்களை நியமிக்கும் அதிகாரத்தை நமது கவர்ன்மெண்டார் ஒவ்வொரு ஜில்லா கோர்ட்டாருக்கும் கொடுத்திருக்கிறார்கள். இதைப்பற்றி 1890-ளு த்திய 8-வது ஆக்ட்டாகிய கார்டியன் அண்டு வார்ட்ஸ் ஆக்ட்டைப் பார்க்க.)

**114.** கார்டியனை நீக்க அதிகாரம்.—எப்படிப்பட்ட மைனர் கார்டியனையும் தகுந்த காரணத்தின் பேரில் சம்ரக்ஷணைபாத்தியத்தினின்று நீக்கவும்,சரியான கார்டியன் ஒருவனை நியமிக்கவும் சர்க்கார் அல்லது நியாயஸ்தலத்தாருக்கு அதிகாரமுண்டு. (7 மது. ஐ. கோ. ரி. 69; 14 மு. இ. அ. 309; 12 பம். 480.)

**115.** தகப்பனை கார்டியனிலிருந்துநீக்குவது.—தகப்பன் தாய் முதலான கார்டியன்களுடைய நடத்தையானது அதிக விபரீதமாயும்

மைனருடைய க்ஷேமத்துக்கும் அபிவிர்த்திக்கும் கெடுதியை யுண்டு பண்ணக்கூடிய அவ்வளவு துன்மார்க்க முள்ளதாயு மிருந்தால், அக் கார்டியன்கள் தங்கள் அதிகாரத்தினின்று நீக்கப்படுவார்கள். ஆனால் தகப்பனே கார்டியன் அதிகாரத்தினின்று நீக்குவதற்கு தக்க விசேஷமான காரணம் இருக்கவேண்டும். (25 கல். 885; 1 அல. 549.)

116. மைனர்சொத்து விஷயமாய் கோர்ட்டார்கடமை.—ஒரு மைனருடைய சொத்து சுதந்திரங்கள் ஒரு வியாச்சியத்தில் சம்பந்தப்பட்டதாயிருக்கும்போது மைனரின் பாத்தியதைக்கு கெடுதிவராமலிருக்கும்படி பாதுகாக்கவும் கோர்ட்டார் கடமைப்பட்டிருக்கிறார்கள். (5 மத. 337.)

117. மைனர் கார்டியனுக்குள்ளடங்கியிருப்பது–மைனர்கள்யாவரும் தக்க வயதாகிய மெஜாரிடியை அடையும் வரையில் சம்ரக்ஷணைக்கர்த்தர்களுடைய கட்டுக்குள்ளடங்கி யிருக்கவேண்டும். கார்டியனுடைய அதிகாரத்தை மீறித்தங்கள் இஷ்டம்போல் சுயேச்சையாயிருக்க மைனர்களுக்கு சுதந்திரமில்லை. ஆகையால் மைனர்கள் கிறிஸ்து முதலிய அன்னிய மதத்தில் சேரவாவது அவர்களைப் பிறர் சேர்த்துக்கொள்ளவாவது கூடாது. ஒருக்கால் மைனர்கள் அன்னிய மதத்தில் சேர்ந்துவிட்டாலும் அல்லது சேர்க்கப்பட்டுவிட்டாலும் அவர்களைத் திரும்பியும் சுவாதீனப்படுத்திக்கொள்ள தகப்பன் தாய் முதலான கார்டியன்களுக்கு அதிகாரமுண்டு. அன்னியமதத்தில் சேர்ந்ததற்கு மைனருடைய சம்மதம் ஏற்பட்டிருந்தாலும் பிரயோஜனப்படமாட்டாது. (9 மத. 391; 14 மு. இ. அ. 309.)

118. மைனர்கள் பொருப்பு.—மைனர்களால் எழுதியாவது, வாய்மொழியாகவாவது செய்துகொடுக்கும் உடன்படிக்கைகள், மைனருக்கு இலாபகரமாயிருந்தாலொழிய, செல்லாது. ஆனால், அப்படிச் செய்துகொடுத்தவன் தக்க வயது வந்தபிறகு அந்த உடன்படிக்கையை ஊர்ஜிதஞ்செய்தால் பிறகு அதுசெல்லும். (3 ஸ. 10; 13 ஸ. 166, 172;8 மு. இ. அ.119; இந்தியன் காண்டிராக்ட் ஆக்ட். 11 பிரிவு) மேலும் மைனருக்கு எவ்விதமான கடன் கொடுத்துப் பிராது செய்தாலும் செல்லாது. (இ. லா. ரி. 12 பம். 50; இ. லா. ரி 18 க. 259; 18. ம. 415; 25 பம். 146.) ஆனால், அவசியமான ஆகாரத்துக்குவேண்டிய வஸ்துக்களேதாவது கொடுத்திருந்தால் அவை

களைவாங்குவதற்காகச் செய்யும் பிராது செல்லும். (இந்தியன் காண்டிராக்ட் ஆக்ட் 68-வது பிரிவு) மைனர்கள் கொடுத்த கடன்மட்டும் செல்லும்.

**119.** மைனர்கார்டியன் அதிகாரம்.—(1) ஒரு மைனருக்கு கார்டியனாக ஏற்பட்டவன் அவனுடையசொத்து விஷயமாய் அவன் செய்த பரிபாலனம், செலவுமுதலிய காரியங்கள் மைனருக்கு இலாபத்தைக் கொடுக்கத்தகுந்ததும், அவனுக்குத் தக்கவயது வந்திருந்தால் தானே செய்யத்தகுந்த காரியங்களாயிருக்கவும் வேண்டும். மேலும் கார்டியன் அக்கிரமமான செலவு அல்லது துர்வினிபோகப் படுத்தக்கூடாது. கெட்ட எண்ணத்தோடு தன் சுவயப்பிரயோசனத்துக்காக எந்தக்காரியமும் செய்ததாயிருக்கக்கூடாது. (2 ம. ஐ 47; இ. லா. ரி. 12 பம். 686; இ. லா. ரி. 14 பம். 564; இ. லா. ரி. 4 க. 76; இ. லா. ரி. 5 க 363; இ. லா. ரி. 3. அ. 535; இ. லா. ரி. 9. பம் 365; 10 மூ இ. அ. 454; 6 மூ. இ. அ. 393; 26 பம். 433; 29 அல. 135) கார்டியன்செய்த நடவடிக்கைகளை மைனர்மேஜரான பிறகு அக்காரியத்தை உறுதிசெய்துவிட்டால் அவைகள் செல்லும். (8 மூ. இ. அ. 319.) சொத்தை விக்கிரயஞ்செய்தால், இலாபமாயும் நியாயமாயுமிருக்கும்பட்சத்தில் மைனர் கட்டுப்படுவான்; இல்லாவிடில் கார்டியன் செய்த விக்கிரயம் செல்லாது. (8 பம். ஐ. 81; 3 பம். ஐ. 254, 237; 7 அ. ஐ. 201.)

மைனர்கள் கார்டியன் மைனர் சொத்தை பெந்தகம் வைத்து சுயபிரயோசனப்படுத்திவிட்டான். பெந்தகம் பெற்றவன் மைனரையும், மைனர் கார்டியனையும் சேர்த்து தாவாசெய்து பெந்தகச் சொத்தை ஏலத்தில் விற்றுவிட்டான். பிறகு மைனர் மேஜரானதும் தாவாசெய்து அந்த ஏலவிற்பனையை ரத்து செய்து விட்டான். (28. அல. 137.)

(2) கார்டியனல் அக்கிரமமாகச் செய்யப்பட்ட உடன்படிக்கைகள், டிக்கிரிகள், இராஜி நாமாக்கள், விர்ப்பனைகள் முதலிய காரியங்கள் செல்லாது, மைனர் நீங்கிய பின்னர்தான் அப்படிப்பட்ட அக்கிரமமான காரியங்களைக் கோர்ட்டு மூலமாய் ரத்துசெய்யவேண்டும். யாதொரு கார்டினல் நியாயமாய்ச்செய்யப்பட்ட எல்லா நடவடிக்கைகளுக்கும் மைனர் கட்டுப்பட்டவனே. (6 மூ. இ. அ.

293; இ. லா. ரி. 6 அ. 417; இ. லா. ரி. 3 பம். 234, 237; 6. அ. 417; இ. லா. ரி. 3 ம. 103; இ. லா. ரி. 13 பம். 137; இ. லா. ரி. 11 ம. 309; இ. லா. ரி. 12 ம 483; 14 மூ. இ. அ. 393; இ. லா. ரி. 5 க 450; இ. லா. ரி. 10 க. 357; 1859ஞு பம். ஸ. தீ 913; 6 க. 687; 6 க. 687; இ. லா. ரி. 17 க. 361.)

கோர்ட்டார் அனுமதியின்றி நல்ல எண்ணத்தோடு கார்டியன் மைனர் விஷயமான தாவாவை பஞ்சாயத்துத்தீர்மானத்துக்கு விடுவது நியாயமானதாகும். (28. அல. 35)

**120.** கார்டியன் செய்த சேலவு.—கார்டியன் அவசியமான செலவுகளின்பொருட்டும் மைனருடைய அக்கரையின் பொருட்டும் கடன் முதலியன வாங்கவும் சொத்துக்களை பந்தக பருதீனங்களுக்குட்படுத்தவும் கார்டியனுக்கு அதிகாரமுண்டு. நியாயமானதாயும் மைனரின் நன்மையின் பொருட்டு மிருக்கிற கார்டியன்களுடைய செய்கைகளை மைனர்கள் ஆக்ஷேபிக்கமுடியாது. மேலும் குடும்பசம்ரக்ஷணை முதலிய அவசியமான செலவுகளுக்கும், அச்செலவுகள் நிமித்தம் கார்டியன் அல்லது குடும்ப மானேஜரால் வாங்கப்படுகிற கடன்கள், செய்யப்படுகிற குடும்ப சொத்தின் பந்தகபருதீனங்கள் ஆகிய இவைளுக்கும் மைனரானவன் கட்டுப்பட்டவனாக இருக்கிறான். (2 ம. ஹை. கோ. ரி. 47; 12 பம். 686; 14 பம். 562; 5; கல். 363; 3 அல. 535; 20 பம். 61; 26 கல். 820; 17 மது. 306; 20 மது 330.)

**121.** மைனரின் தாவாக்கள்—மைனரானவன் யுக்தவயதையடையாமலிருக்கிற காரணத்தினாலே கோர்ட்டில் வியாச்சியம் செய்யவாவது அல்லது அவன்பேரில் பிறனொருவன் வியாச்சியம் தொடரவாவது கூடாது. மைனர்களுக்காக அவர்களின் கார்டியன்களே வியாச்சியங்களில் கக்ஷிக்காரர்களாக இருந்து மைனர்களின் பொருட்டு நடவடிக்கைகளை நடத்தவேண்டும், இவ்விதம் நடத்தப்பட்ட தாவாக்களில் ராஜிசெய்ய வேண்டியிருந்தால் கோர்ட்டாரே விசாரித்து ராஜி செய்ய உத்தரவு கொடுக்கவேண்டும். அப்படிக்கில்லாவிட்டால் அந்தராஜி செல்லாது. (29 ம. 104.)

**122.** மைனரின் பாபர் வியாச்சியம்.—மைனரின் பொருட்டு வியாச்சியம் செய்ய வேண்டியதாயிருந்து மைனரும் சொத்தில்லாத

வனாக இருந்தால், அடுத்த சிநேகிதன் தன் சொந்தத்தில் சொத்து உடையவனாக இருந்தாலும் மைனருக்காக பாபர் வியாச்சியம் கொண்டு வரலாம். (3 மது. 3.)

**123.** அவிபக்த குடும்பத்தின் மைனர் சொத்தை பாகிப்பது.—அவிபக்த குடும்பத்தைச்சேர்ந்தவனாயிருக்கும் மைனருடைய பங்கு சொத்தானது பிரிக்கப்பட வேண்டுமென்று தாவா கொண்டுவரக்கூடாது. ஆனால் குடும்பத்தலைவன் முதலானவர்களுடைய நடவடிக்கைகளால் மைனரின் பாக சொத்துக்குக் கெடுதியும் நஷ்டமும் நேரிடக்கூடியதாயிருந்தாலும், அல்லது மைனரின் பாத்தியதை மறுதளிக்கப்பட்டாலும் மைனரின் பொருட்டு அடுத்த சிநேகிதன் பாகத்துக்காக வியாச்சியம் செய்யலாம். (8 கல். 537 )

**124.** மைனரின் தாவாவின் காலம்.—பாரதொரு தாவாவின் வியாச்சியமூலமானது வாதியின் மைனாரிடி காலத்திலேயேதொடங்கி முடிவும் பெற்றிருந்தால், அப்போது மைனாரிடி நீங்கினதினம் முதல் மூன்று வருஷங்களுக்குள்ளாக அந்த வியாச்சியம் அவ்வாதியால் கொண்டுவரப்படலாம்; ஒரு வியாச்சியத்துக்குள்ள காலாவதியானது வாதி மைனாரிடியிலிருந்து நீங்கினதுமுதல் மூன்று வருஷங்களுக்கு மேற்பட்ட அதிக காலம்வரையிலிருந்தால் அந்தக்காலத்திற்குள்ளாகவும் அந்தவியாச்சியம் கொண்டுவரப்படலாம். (9 கல். 663. (லிமிடேஷன் ஆக்ட்டு 7-வது பிரிவையும் பார்க்க.)

**125.** கார்டியன் செய்த துர்விநியோகத்தை ரத்துசெய்வது.—கார்டியனுடைய துர்விநியோகங்களை ரத்துசெய்வதற்காகவும், மோசடியாயும் அக்கிரமமாயும் உள்ள கார்டியனுடைய நடவடிக்கைகளால் நேரிட்ட நஷ்டத்தை பெறுவதற்காகவும் செய்யப்படுகிற வியாச்சியமானது மைனாரிடி நீங்கினது முதல் மூன்றுவருஷங்களுக்குள்ளாக கொண்டுவரப்பட வேண்டும்.

**126.** மைனர் செலுத்தவேண்டிய கடன்கள் காலாவதியாயிருந்தால் கார்டியன் பொறுப்பு—(1) மைனர் பாத்தியப்படவேண்டிய கடன்களில் ஏதாவது காலாவதியாய்ப் போயிருந்தால் அப்படிப்பட்டதைத் தீர்க்கவாவது, அல்லது வட்டி முதலியன செலுத்தியோ ஒப்புக்கொண்டோ அக்கடனுக்கு மறுபடியும் உயிருண்டாக்கவாவ

து கார்டியனுக்கு அதிகாரமில்லே. ஆகையால் கார்டியனுடைய அப்படிப்பட்டசெய்கைகள் மைனரை எவ்வளவும் கட்டுப்படுத்த மாட்டாது. (20 பம். 155.)

(2) ஆனல் காலாவதிதோஷத்துக்குட்படாமலிருக்கிறகடனுக்காக வட்டி முதலியன செலுத்தி அதைக் காலாவதியாய்ப்போகாமல் நிறுத்தி வைக்கவும் அவன் காலாவதியை அதிகப்படுத்தவும் கார்டியனுக்கு அதிகாரமுண்டு. (5 மதா. 169; 17 மதா. 221; 18 மதா. 456, 26 பம். 221; 29 கல். 647)

யாதொரு கார்டியன் அக்கிரமமாயும், நஷ்டமுண்டாக்கக்கூடிய காரியங்களைச் செய்திருந்தால், மைனர் தகுந்த வயது வந்த பிறகு தனக்கு நேரிட்ட நஷ்டத்தை வாங்க அந்த கார்டியன்பேரில் தாவா செய்து பெறவேண்டும். (1867ளு பம். ஹ. தீ. 349)

---

## 5-வது பொது ஐக்கிய குடும்பம்.

---

127. குடும்பம் ஓர் சிறியராச்சியம்—ஆதிகாலத்தில் ஹிந்து குடும்பங்களில் பிரிவினையும் வேறுபாடும் இல்லாமலிருந்ததுடன் தகப்பனுனவன் குடும்ப மென்னும் இராச்சியத்துக்கு ஓர் சிற்றரசன் எனச் சொல்லும்படி குடும்பத்தில் சகல அதிகாரங்களையு முடையவனுக இருந்தான். குடும்பத்திலுள்ள எல்லா ஸ்தாவர ஜங்கம சொத்துகளும் தகப்பனுக்கே சொந்தமானதா யிருந்தன. அவனுக்குக் கீழிருக்கும் பிள்ளை முதலியோர் சம்பாதிப்பதும் அவனுடைய ஆதீனத்துக்குட்பட்ட தாகவே யிருந்தன. அக்காலத்தில் தகப்பனுள்ள வரையில் பிள்ளைகளுக்கு சொத்துக்களில் யாதொரு சுதந்திரமும் இல்லாமலிருந்தது.

128. தகப்பனிறந்தபிறகும்குடும்ப பொது-(1) தகப்பன் இறந்த பிற்பாடும் பிள்ளைகள் சொத்துக்களைத் துண்டுதுண்டாகப் பிரித்துக் கொண்டு தனித்தனியா யிருக்கும் வழக்கமும் ஆதிகாலத்தில் இல்லை. அநேக குடும்பங்கள் வெகுகாலம்வரையில் பாகம் செய்துகொள்ளாமல் சேர்க்கையாகவே இருந்து வந்ததாகவும், அதனுல் அப்படிப்பட்ட குடும்பங்களின் சொத்துக்கள் நாளடைவில் பாகிக்கத்தகாத தன்மையை யடைந்ததாகவும் தெரியவருகிறது.

(2) இக்காலத்திலும் இவ்விதம் பாகார்கமில்லாத சொத்துக்களை யுடைய குடும்பங்கள் மலையாளத்திலும் தென்கன்னடத்திலும் இருக்கின்றன.

129. பிற்கால வேறுபாடுகள்.— ஆனால் காலஞ் செல்லச்செல்ல குடும்ப எஜமானனான தகப்பனுடைய அதிகாரம் குறையத்தொடங்கிற்று. தகப்பனிடமிருக்கும் முன்னோர்கள்தேடிய சொத்தில் பிள்ளைகளும் பாத்தியம் பாராட்டத் தொடங்கினார்கள். குடும்பஸ்தர்களுக்குள்ளிருந்த ஒற்றுமையுங் தளர ஆரம்பித்தது. குடும்பத்திலுள்ள ஒருவன் தன் சொந்தப்பிரயாசையாலும் சாமர்த்தியத்தாலும் சொத்து சம்பாதித்தால் அதை அவன் பொதுக்குடும்ப சொத்தாகப் பாவிக்காமல் தன் சொந்தமாகவே பாராட்டத் தொடங்கினான். அதிகமாய்ச் சம்பாதிக்கிறவன் தன்னுடைய அவ்வித சம்பாத்தியங்கள் சகோதரர் முதலிய மற்றவர்களுக்குஞ் சேராமல் தன்னையும் தன் பெண்டு பிள்ளைகளையுமே சேரவேண்டுமென்று விரும்பினான். மேலும் ஒவ்வொருவரும் தனித்தனியாயிருந்தால் குடும்பத்தில் அப்போதப்போது நடத்தப்படும் சிரார்த்தம் முதலிய பல வைதீகச்சடங்குகளை அவரவர்கள் தனித்தனியாய்ச் செய்யலாமென்றும், அவ்வாறு தனித்தனியான பலசடங்குகள் ஏற்படுவதினால் அவைகளுக்கு அதிகமான பலன் உண்டென்றும் பிராம்மணர்கள் அபிப்பிராயப்பட்டார்கள். இவ்விதமான அநேக காரணங்களினால் குடும்பங்களில் வேறுபாடும் பிரிவினையும் உண்டாக, சகோதரர்கள் தங்கள் தகப்பன் முதலிய முன்னோரிட மிருந்து அடைந்த சொத்துக்களைத் தங்களுக்குள் பாகித்துக் கொண்டு அவரவர்களுடைய பெண்டு பிள்ளைகளுடன் தனித்தனியா யிருக்கத் தொடங்கினார்கள்

130. குடும்பம் பிரிவினை உண்டானகாலம்,—அக்காலத்திலும் தகப்பன் உயிரோடிருக்கும் வரையில் பிள்ளைகளுக்கு குடும்பசொத்துக்களில் யாதொரு சுதந்திரமும் இல்லாமலிருந்தது. தகப்பனிறந்த பிறகே பிள்ளைகள் குடும்ப சொத்துக்களைப் பாகித்துக்கொள்ள அதிகாரமுள்ளவர்களாக ஏற்பட்டார்கள். தகப்பனுள்ள வரையில் குடும்பசொத்தைப் பாகித்துக்கொள்ளவாவது, பாகித்துக் கொடுக்கும்படி அவனைக்கேட்கவாவது பிள்ளைகளுக்கு அக்காலத்தில்அதிகாரமில்லை. ஆனாலும் தகப்பனானவன் விருத்தாப்பிய தசையை யடைந்து மிகவு

ய் ஒடுங்கிப்போய்விட்டால் பிள்ளைகள் குடும்பசொத்துகளை பாகம் செய்துகொள்ளலாமென்று கொஞ்சகாலத்துக்குப்பிறகு ஏற்பட்டது. அதற்கும் பிறகு கடைசியாய், பாட்டன் முதலிய முன்னோர்கள் தேடிய குடும்பசொத்தில் தகப்பனும் பிள்ளைகளும் சமமான பாத்தியஸ்தர்கள் என்றும், அப்படிப்பட்ட பூர்வார்ஜிதமான சொத்தை பாகித்துக் கொடுக்கும்படி தனக்கிஷ்டமான போது மகன் தகப்பனைக் கேட்கலாமென்றும் ஏற்பட்டு விட்டது. இத்தென்னிந்தியாவில் பிரமாண கிரந்தமாக வழங்கி வரும் மிதாக்ஷிரை என்னும் வியாக்கியான நூலை எழுதிவைத்த விக்ஞானேசுவர யோகியும் இவ்விதமே சொல்லியிருக்கிறார்.

**131.** பிதுரார்ஜித சுவயார்ஜித பெயருண்டானகாரணம்.—மேற்கூறியவாறு குடும்பங்களில் ஐக்கியபத்தியம் குறைந்து வேறுபாடும் சுயநயமும் ஏற்பட்டதினால், தகப்பனுடைய அதிகாரம் மட்டுப்பட்டதோடு பிள்ளைகளுடைய சுதந்திரமும் அதிகரித்தது. அதனால் குடும்ப நிலைமையும் சொத்துக்களின் தன்மையும் இருவகையான பிரிவையடைந்தன. பிதா (தகப்பன்) முதலான முன்னோர்வழியாக வந்த சொத்துக்களுக்கும் ஒருவனால் சுயமாகவே சம்பாதிக்கப்படுகிற சொத்துக்களுக்கும் உள்ள வித்தியாசத்தால், முந்தியது பிதுரார்ஜிதமென்ற பெயரையும், பிந்தியது சுயார்ஜிதமென்ற பெயரையும் அடைந்தது. குடும்பஸ்தர்களெல்லோரும் ஐக்கியமா யிருந்து குடும்ப யோக க்ஷேமங்களை ஒன்றாய் நடத்துவது அவிபக்த நிலைமையென்றும், குடும்பஸ்தர்கள் பாகம் செய்துகொண்டு தனித்தனியாய் இருப்பது விபக்தநிலைமை யென்றும் வழங்கத்தொடங்கிற்று.

**132.** பிதுரார்ஜிதம்.—முதல் மூன்று முன்னோர்களாக தகப்பன் பாட்டன் முப்பாட்டன்(பிதா, பிதாமகர், பிரபிதாமகர்) ஆகிய இவர்களிடமிருந்து அடையும் சொத்துக்கள் பிதுரார்ஜிதம் எனப்படும். பிதுரார்ஜிதமான சொத்துக்கள் இம்மூன்று முன்னோர்களாலேயே தேடப்பட்டிருக்க வேண்டுமென்பதில்லை. இம்முன்னோர்களுடைய பூர்வீகர்களால் தேடப்பட்டு இம்முன்னோர்கள் வழியாக வந்திருக்கிற சொத்துக்களுக்கும் பிதுரார்ஜிதமேயாகும். தவிர பிதுரார்ஜித சொத்தானது இம்மூன்று முன்னோர்களாலும் ஒருவரின் பின் ஒருவரால் அடையப்பட்டு வந்து கடைசியில் ஒருவனுக்குக்

கிடைத்திருக்க வேண்டு மென்பது மில்லை. இம்மூன்று முன்னோர் களில் எவரிட மிருந்து கிடைத்திருந்தபோதிலும் அச்சொத்து பிது ரார்ஜிதமே யாகும்.

தகப்பன் பாட்டன் முப்பாட்டன் ஆகிய மூன்று நேரான முன் னோர்களிடமிருந்து அடையப்படும் சொத்துக்கள் பிதுரார்ஜித மாகு மென்ற காரணத்தால் ஒருவனுடைய பிதுரார்ஜித சொத்தில் அவ னுடைய மகன், பேரன், கொள்பேரன் (புத்திரன் பௌத்திரன், பிர பௌத்திரன்) ஆகிய முதல் மூன்று ஆண் சந்ததியார்களும் குடும்பத் தில் பிறந்த மாத்திரத்தினாலேயே பாத்தியஸ்தர்களாக ஏற்படுகிறார் கள். (5 அல, 430.)

**133.** போதுக்குடும்பம்.—ஹிந்து குடும்பங்களில் சாதாரண மாய்த்தகப்பன், பிள்ளை, பேரன்கள் முதலியவர்கள் சேர்ந்து ஒரே குடும்பமாய் ஜீவனம் செய்துகொண்டிருப்பது வழக்கம். இக்குடும்ப ங்களில் சிலராவது, எல்லோருமாவது, பொதுச்சொத்தை பாகம் செய்து கொண்டு தனியாய்ப் போய் சம்சாரம் செய்தாலும், அவர் களுக்கு சந்ததி யுண்டானவுடனே மறுபடியும் சந்ததிகளுடன் பொது குடும்பம் ஏற்படுகின்றன. இந்த பொதுகுடும்பத்தைப்பற்றியும், பொதுசொத்தைப்பற்றியும் பின்னால் விவரமாய்ச்சொல்லப்படும்.

(2) குடும்பப் பொதுவான சொத்தில் பாகத்துக்குரியவர்க ளாயிருக்கிற பாகஸ்தர்கள் ஏகோபித்திருந்துகொண்டு குடும்பயோக க்ஷேமாதிகளை ஒருமித்து நடத்திவருவது அவிபக்த குடும்பம் அல் லது பொது நிலைமை என்று சொல்லப்படும்.

**134.** அவிபக்த குடும்பத்தைச் சேர்ந்தவர்கள்.—(1) ஹிந்து தர்மசாஸ்திரங்களின்படி ஸ்திரீகள் பாகத்துக்குரியவர்களல்ல. நம்மு டைய மிதாக்ஷரை கிரந்தத்தின்படிக்கும் ஸ்திரீகளுக்கு குடும்ப சொ த்தில் பாகபாத்தியம் கிடையாது. ஆனதுபற்றி புருஷர்களே அவி பக்த குடும்பத்தைச்சேர்ந்த பங்காளிகளாக இருக்கிறார்கள்.

(2) அவிபக்த குடும்ப பாகஸ்தர்களாக இருக்கத் தகுதியுடைய வர்கள் இன்னின்னார்களென்பது வைதீகமான சில சாஸ்திர விதிகளை யனுசரித்ததாகவிருக்கிறது. தர்ம சாஸ்திரங்களின்படி ஒரு ஹிந்து வானவன் தன்னுடையதகப்பன், பாட்டன், முப்பாட்டன் ஆகிய

முதல் மூன்று முன்னோர்களுக்கும் உத்தரக்கிரியைகளைச் செய்பவும் அக்கிரியைகளிலும் சிரார்த்தாதிகளிலும் அவர்களின்பொருட்டு பூர்ணமான பிண்டங்களைப்போடவும் பாத்தியஸ்தனாகவும் கடமைப் பட்டவனாகவும் இருக்கிறான்; அதுபற்றி உத்தரக்கிரியை முதலியவற்றைச் செய்து பிண்டம்போட பாத்தியஸ்தர்களாக இருக்கிற ஒருவனுடைய பிள்ளை, பேரன், கொள்பேரன் ஆகிய மூவரும் ஒருவனுக்கு சபிண்டர்களெனப்படுவார்கள். மேலும்பிண்டம்போடுகிறவர்களன்றி பிண்டத்தைப் பெறத்தக்கவர்களான தகப்பன், பாட்டன், முப்பாட்டன் ஆகிய மூவரும் ஒருவனுக்கு சபிண்டர்களாக இருக்கிறார்கள். அல்லாமலும் ஒரே முன்னோர் அல்லது முன்னோர்களைக்குறித்து மேற்சொன்ன பிண்டங்களை எவர்கள் போடத் தகுந்தவர்களா யிருக்கிறார்களோ அவர்களும் ஒருவருக்கொருவர் சபிண்டர்களாகிறார்கள். அதாவது தகப்பனுடைய சந்ததியாரான சகோதரன், சகோதரனிட பிள்ளை, சகோதரனிடபேரன் ஆகிய இவர்களும், பாட்டன் முப்பாட்டன்களுடைய முதல்மூன்று சந்ததியார்களும், ஒருவனுக்கு சபிண்டர்களாக இருக்கிறார்கள். இவ்வாறு கீழாகவும், மேலாகவும், சுற்றுப்பக்கத்திலும் உள்ள முதல் மூன்று ஆண் தலைமுறையைச் சேர்ந்தவர்கள் ஒருவனுக்கு சபிண்டர்கள் என்று சொல்லப்படுவார்கள். (6 மத. ஹை. கோ. ரி. 94.)

(3) மேற்கூறியபடி பலர்கள் ஒருவனுக்கு சபிண்டர்களாயிருந்தாலும் அப்பலர்களில் அநேகர் ஒருவருக்கொருவர் சபிண்டர்களாகிறதில்லை. எவர்கள் ஒருவருக்கொருவர் சபிண்டர்களாக இருக்கிறார்களோ அப்படிப்பட்டவர்களே அவிபக்த குடும்ப பாகஸ்தர்களாய் இருக்கத்தகுந்தவர்களாகிறார்கள். அதாவது அவிபக்த குடும்பத்திலிருக்கப்பட்ட ஒவ்வொரு பாகஸ்தனும் மற்றொவ்வொருவனுக்கும் சபிண்ட முறையில் இருக்கவேண்டும். அவ்விதமில்லாதவன் அந்த அவிபக்த குடும்பத்தைச் சேர்ந்த பாகஸ்தனாமாட்டான்.

உதாரணம்: A-என்பவனுக்கு B-என்றபிள்ளையும், C-என்ற பேரனும், D-என்ற கொள்பேரனும், E-என்ற கொள்பேரனுடைய பிள்ளையும், இருக்கிறதாக வைத்துக்கொண்டால், E-என்பவன், B, C, D, என்ற மூவருக்கும் சபிண்டனாக இருந்தாலும் A-க்குச் சபிண்டனாகிறதில்லை. ஆகையால் A, B, C, D, ஆகிய இவர்களடங்கிய

குடும்பத்தில் E-பாகஸ்தனுகமாட்டான். A-இறந்தபிறகே E-யான வன் பாகஸ்தனுகிருன். ஏனெனில் A-என்பவன் உயிரோடிருக்க B, C, D, மூவரும் ஒருசமயம் இறந்துபோய்விட்டால் அக்குடும்ப சொத்து பூராவும் A-என்பவனையே சேர்ந்து அவனுக்குப்பின் அவ னுடைய விபக்த சகோதரர் முதலான சமீப தாயாதிகளை வார்சு பாத்தியப்படி சேர்ந்துவிடுமேயன்றி E - என்பவனுக்குச் சேரமா ட்டாது. ஆகையால் அவிபக்த குடும்பத்தைச் சேர்ந்தவர்களெல் லோருமே ஒருவருக்கொருவர் சபிண்ட முறைமையில் இருக்க வேண்டும்.

(4) பாட்டன், தகப்பன், சகோதரர் முதலானவர்களோடு அவி பக்த குடும்பமாயிருந்து பிறகு அவர்களிடமிருந்து பாகம் பிரித்துக் கொண்டு விலகுகிற ஒவ்வொருவனும் மகன் பேரன் முதலான ஆண் சந்ததியார்களுடன் மறுபடியும் அவிபக்த (பொது குடும்ப) நிலைமை யை அடையக்கூடியவனுக இருக்கிருனென்று 133 - வது பாராவில் சொல்லியிருக்கிறது. ஆனதுபற்றி அவிபக்த நிலைமையும் விபக்த நிலைமையும் ஒவ்வொரு குடும்பத்தினும் மாறி மாறி வந்துகொண் டேயிருக்கிறது.

**135.** போதுகுடும்ப எஜமானன்.—பொதுக்குடும்பத்திலுள்ள ஸ்திரீகள் ஜீவனும்சத்துக்கு மட்டும் பாத்தியஸ்தர்கள். புருஷர்க ளில்கூட எல்லாரும் பொதுச்சொத்துக்கு பாத்தியஸ்தர்களல்ல. சா தாரணமாய் அந்தகுடும்பத்தில் தகப்பன் எஜமானனுயிருந்து எல்லாக் காரியத்தையும் நடத்தவேண்டியது. தகப்பன் கிழத்தனம் முதலிய காரணங்களால் அசக்தனுயிருந்தாலும் அல்லது இறந்துபோனுலும் பிள்ளைகளில் மூத்தவனும், அவனும் அசக்தனுயிருந்தால் புத்தி யுள்ள தம்பி குடும்பகாரியங்களை நடத்தவேண்டும்.

**136.** தகப்பனுக்குப்பிறகு குடும்ப எஜமானன். பூர்வார்ஜித மான குடும்பசொத்தில் பிள்ளைகள் தகப்பனேடு சமமான பாத்தி யஸ்தர்களாக இருந்தாலும், குடும்பத்தலைவனுன தகப்பனே குடும்ப சொத்துக்களைத் தன் வசத்தில் வைத்துக்கொண்டு பரிபாலனம்பண் ணவும் குடும்பகாரியங்களை நடத்திவரவும் அதிகாரமுடையவனுக இ ருக்கிருன். (1 அல. 77). தகப்பன் இறந்தபிறகு பிள்ளைகளில் மூத் தவனுயிருக்கும் ஜேஷ்ட சகோதரனே குடும்ப மானேஜரென்னும்

அதிகாரத்தை சாதாரணமாய் அடைவான். மூத்தவன் இருக்க இளையவன் அவ்வதிகாரத்தையும் அந்தஸ்தையும் அடைவது விசேஷமாய் வழக்கத்திலில்லை. ஆனால் இளையவனொருவன் மற்ற பாகஸ்தர்களுடைய சம்மதம் அல்லது அங்கிகாரத்தின்பேரில் குடும்ப காரியங்களை நடத்திவந்தால் அவனே மானேஜராகவும் பாவிக்கப்படலாம். (29 சல். 751.)

**137.** குடும்ப எஜமானன் செய்கிறசெலவு —அவிபக்த குடும்பப்பொதுவான சொத்துக்கள் குடும்பத்தலைவனான மானேஜருடைய வசத்தில் இருக்கத்தக்கதாயிருக்கின்றன. குடும்ப அவசியமான செலவுகளின்பொருட்டு அவன் தன்னிஷ்டப்படி செலவு செய்யலாம். சம்பளத்துக்கு வேலைபார்க்கிற ஏஜண்டு முதலான அன்னிய மனுஷனைப் போல அவன் குடும்பச்செலவுகளை மட்டாயும் செட்டாயும் செலவழிக்கக் கடமைபட்டவனல்ல. (3 மது. ஹை. கோ. ரி. 177; 10 பம். 528; 17 பம். 271; 2 மது. 339; 22 அல. 307.)

**138.** குடும்பசெலவுக்கு கணக்கு.—குடும்ப மானேஜரானவன் தன்னால் செய்யப்படுகிற செலவுகளுக்குக் கணக்கு வைத்துக் கொள்ளவேண்டுமென்ற அவசியமுமில்லை. ஆகிலும் பாககாலத்தில் அவன் மற்றவர்களால் கணக்குக் கேட்கப்படலாமாகையால் குடும்பார்த்தமாய் செய்யப்படும் செலவுகளுக்கு அவன் கணக்கு வைத்து வருவதே உசிதமானதாகும். (17 பம். 271.)

**139.** செலவைகுறைக்க கேட்கக்கூடாது.—குடும்பம் ஒன்றாயிருக்கும் வரையில் குடும்பார்த்தமாயும் நல்ல எண்ணத்தோடும் குடும்ப மானேஜரால் செய்யப்படும் செலவுகளுக்கும் மற்றவர்கள் கட்டுப்பட்டேயிருக்கவேண்டும். குடும்பத்தலைவன் அதிகமாய்ச் செலவு செய்கிறானென்றாவது அவனுடைய மேல்விசாரணை குடும்பத்துக்கு லாபகரமாயில்லை என்றாவது அபிப்பிராயப்படும் பாகஸ்தர்கள் பாகம்பிரித்துக் கொள்ள வழிதேடலாமேயன்றி மானேஜருடைய அதிகாரத்தை மட்டுப்படுத்தவாவது குடும்பச்செலவுகளை மட்டாகச் செலவழிக்க வேண்டுமென்று அவனை நிர்பந்திக்கவாவது இடமில்லை. (1 மது. 561; 5 பம். 48; 1 அல. 105; 4 கல். 425.)

**140.** மோசடியானசெலவை வசூல்செய்வது.—ஆனால் குடும்ப மானேஜரால் செய்யப்படும் மோசடியான நடவடிக்கைகளை ரத்து

செய்துகொள்ளவும், அதனால் நேரிடும் நஷ்டங்களுக்கு அவனையே உத்தரவாதியாக்கவும், அவனால் செய்யப்படும் அனாவசியமான செலவுகளை அவனிடமிருந்து வசூல்செய்து கொள்ளவும் மற்ற பாகஸ்தர்களுக்கு பாத்தியமுண்டு. (4 பம். 29.)

**141.** எல்லாம் குடும்பக்கடனாகமாட்டாது.—மேலும் குடும்ப மானேஜரால் வாங்கப்பட்ட எல்லாக்கடன்களும் குடும்பார்த்தமானவையே என்று பாவிக்கப்படவுமாட்டாது. (21 பம். 808; 5 கல். 34.)

குடும்பப் பொதுவான திரவியத்தை மானேஜரானவர் தன் சொந்தச் செலவுகளுக்காக உபயோகித்திருந்தால் அதை அவனிடமிருந்து மற்ற பாகஸ்தர்கள் குடும்பத்துக்கு வசூல் செய்யலாம்.

**142.** குடும்ப எஜமானன் நடவடிக்கை.—குடும்ப மானேஜரானவன் குடும்பத்துக்கு வரவேண்டிய பணம் குத்தகை முதலியவற்றை வரப்பற்றவும், குடும்பத்திலிருந்து கொடுபட வேண்டியவைகளைக் கொடுக்கவும் குடும்பார்த்தமாயுள்ள சகலவித செலவுகளைச் செய்யவும், அவைகளின் பொருட்டு அவசியமானால் கடன்கள் வாங்கவும், அச்செலவுகளுக்காகவும் கடன்களுக்காகவும் அவசியமானால் குடும்பப்பொதுவான சொத்துக்களை அவசியத்தினளவுக்கு பந்தக பராதீனங்கள் செய்யவும் அதிகாரமுடையவனாக இருக்கிறான். மானேஜருடைய மேற்சொன்ன நடவடிக்கைகளுக்கு மற்ற பாகஸ்தர்களும் உடன்பட வேண்டியவர்களாக இருக்கிறார்கள். (9 கல். 508.)

**143.** குடும்ப எஜமானனுடைய நஷ்டநடவடிக்கை.—ஆனால் குடும்பார்த்தமாயுள்ள அவசியமான காரணங்களன்னியில் குடும்பத் தலைவனானவன் தன் பங்கு வீதத்துக்கு மேற்பட்டசொத்தை பந்தக பராதீனம் செய்யக்கூடாது. (26 கல். 820; 21 அல. 83.) மேலும் காலாவதியாய்ப்போன ஒரு கடனை ஒப்புக்கொள்ளவாவது அக்கடனைக் குடும்ப சொத்திலிருந்து தீர்க்கவாவது குடும்ப மானேஜருக்கு அதிகாரமில்லை. அது விஷயமாய் அவன் செய்யும் நடவடிக்கைகள் மற்றவர்களை எவ்வளவும் கட்டுப்படுத்தவுமாட்டாது. (20 பம். 155; 17 பம். 512; 17 மது. 221.)

**144. குடும்ப பொதுசொத்தை வாங்குகிறார் கவனிக்கவேண்டிய விஷயம்.**—குடும்ப மானேஜருக்கு மற்ற பாகஸ்தர்களைக் காட்டிலும் விசேஷமான அதிகாரமிருந்தாலும் குடும்பப் பொது சொத்தின் வினியோகமாவது குடும்பார்த்தமாயுள்ள அவசியத்தைப் பொருத்ததாக இருக்கவேண்டியிருக்கிறபடியால், அவனுடைய பங்கு வீதத்துக்கு மேற்பட்ட சொத்தை அவனிடமிருந்து வினியோகம் பெறுகிறவர்கள் அவ்வினியோகத்தின் அவசியத்தைச் செவ்வையாய் விசாரித்துத் தெரிந்துகொண்டும் நல்ல எண்ணத்தோடும் வினியோகம் பெறவேண்டும். இல்லாவிடில் அவ்வினியோகம் மற்ற பாகஸ்தர்களுடைய பங்கு சம்பந்தப்பட்டமட்டில் செல்லமாட்டாது. (6 மூ. இ. அ. 391.)

**145. தகப்பன் முதலிய முன்னோருக்கு அதிக அதிகாரம்**-குடும்பார்த்தமாயுள்ள செலவுகளின் பொருட்டும் கடன் முதலிய அவசியங்களின் பொருட்டு மாத்திரம் குடும்ப மானேஜரானவன் தன் பங்கு வீதத்திற்கு மேற்பட்ட குடும்ப சொத்தை வினியோகம் செய்யலாமென்று மேலே சொன்ன விதியானது ஜேஷ்ட சகோதரன் முதலான சாதாரண மானேஜருக்கே ஏற்பட்டது. தகப்பன் பாட்டன் ஆகிய முன்னோர்கள் குடும்ப மானேஜராக இருந்தால் அவர்கள் தங்கள் சொந்தக்கடன்களுக்காகவுங்கூட தங்கள் பங்குவீதத்துக்கு மேற்பட்ட குடும்ப சொத்தை வினியோகம் செய்ய அதிகாரமுள்ளவர்களாக இருக்கிறார்கள். (1 இ. அ. 321; 16 மத. 99; 27 மத. 326; 17 இ. அ. 11.)

**146. அவிபக்த குடும்பப்பொது சொத்துக்கள்.**—(1) அவிபக்த குடும்பஸ்தர்கள் தங்கள் தகப்பன் பாட்டன் முப்பாட்டன் ஆகிய முதல் மூன்று முன்னோர்களிடமிருந்து அடைந்திருக்கும் சொத்துக்களும், அச்சொத்துக்களுடைய விருத்தியம்சங்களும், அச்சொத்துக்களின் சகாயம் அல்லது உபயோகத்தைக்கொண்டு சம்பாதித்திருக்கிற சொத்துக்களும் குடும்பபொதுவானதாகும். அதாவது பிதுரார்ஜித சம்பந்தமான சொத்துக்கள் யாவும் குடும்பப்பொதுவானதாக இருக்கின்றன. (3 கல். 908.)

(2) மேலும் எல்லா பாகஸ்தர்களுஞ் சேர்ந்து பிரயாசைப்பட்டு சம்பாதித்திருக்கிற சொத்துக்களும் அவர்களுடைய குடும்பப் பொதுவானதாகும் (3 பம். 151; 10 மூ. இ. அ. 490; 3 கல். 508.

(3) ஒருவன் தன் தாயின் தகப்பனிடமிருந்து தௌகித்திரபாத்தியப்படி அடைந்திருக்கிற சொத்தானது அவனுக்கும் அவனுடைய பிள்ளைகளுக்கும் பொதுவில் பாத்தியப்பட்ட குடும்பப்பொதுவான சொத்தாக இருக்கிறதென்று சமீபத்தில் தீர்மனிக்கப்பட்டிருக்கிறது. (25 மது. 687. (பிரிவிகௌன்சில் தீர்ப்பு); 27 மது. 382.)

(4) ஒரு சொத்தானது ஒரு பாகஸ்தனுல் குடும்ப திரவிய சகாயமன்னியில் தனியாய்சம்பாதிக்கப்பட்டிருந்தபோதிலும், அதையவன் தன் தனியான சோத்தாகப் பாராட்டாமல் குடும்பப்பொதுவான சொத்துக்களோடு கலந்து குடும்பப்பொதுவானதாகவே பாவித்து வந்திருந்தால் அதுவும் குடும்பப்பொதுவானதாய் விடுகிறது. (3 இ. அ. 259; 16 இ. அ. 71; 16. கல். 397; 26 இ. அ. 229; 15 பம். 519; 10 கல். 392; 27 மது. 228.)

**147.** அவிபக்த குடும்ப பொதுச்சேலவுகள்—(1) குடும்பத்திலுள்ள குழந்தைகள், ஸ்திரீ புருஷர் இவர்களுடையகாலக்ஷேபத்துக்காகவும், வஸ்திரம் முதலிய ஆடைகளுக்காகவும், வித்தியாப்பியாசம், உபநயனம், கல்யாணம் முதலியகாரியங்களுக்காகவும், இன்னும்மற்ற வைதிக லவுகிக கர்ம்மங்களுக்காகவும் குடும்ப சொத்திலிருந்து எஜமானன் தன்னிஷ்டப்படி செலவுசெய்யலாம். செலவை குருக்கவும், இவ்வளவு தான் செலவுசெய்ய வேணுமென்றும் கேட்க அந்தக்குடும்பத்திலுள்ள மற்றவர்களுக்கு அதிகாரமில்லை. வெகு செட்டாகவாவது உதாரியாகவாவது எஜமானன் சொத்தைச் செலவழிப்பது மற்றவர்களுக்கு ஏற்காதிருந்தால் அவரவர்களுக்கு வரவேண்டிய பாகத்தைமட்டில் கேட்கலாமேயொழிய அவனைக் கண்டிக்கஅதிகாரமில்லை. (3 ம. ஐ. 177; இ. லா. ரி. 10 பம். 528) குடும்பசொத்தை எஜமானன் துர்வினியோகம் செய்தால் பாககாலத்தில் அதை அவன் பங்கில் குறைக்கலாம். ஆனல், குடும்ப இலாபத்துக்காக வர்த்தகம் செய்து நஷ்டமடைந்தால் அந்த நஷ்டத்தை எல்லாருமொத்துக் கொடுக்கவேண்டும்.

(2) ஒவ்வொரு ஹிந்துப்பெண்ணும் கட்டாயமாய் விவாகம் செய்யப்பட வேண்டுமென்றும், பிராமணர் முதலிய உயர்ந்த ஜாதிகளில் பெண்ணனவள் விவாகமாவதற்கு முந்தியே புஷ்பவதியாய்விட்டால் ஜாதிபிரஷ்டையாய் விடுகிருள் என்றும் சாஸ்திரங்களில்

சொல்லப்பட்டிருக்கிறது. ஆனதுபற்றிஒவ்வொருஹிந்து தகப்பனும் தன் பெண்களுக்கு விவாகம் செய்யக்கடமைப்பட்டவனாக இருக்கிறான். ஆகையால் பெண்களின் விவாகம் சுபசோபனாதிகளின் பொருட்டு ஏற்படுகிற செலவுகளும் குடும்பப்பொதுவானதாக இருக்கின்றன. பிராமணர் முதலிய உயர்ந்த ஜாதிகளில் ஆண் பிள்ளைகளுக்கு கட்டாயமாய் உபநயனம் செய்யப்படவேண்டுமாகையால் அதுநிமித்தம் ஏற்படுகிற செலவும் குடும்பப்பொதுவானதாகும். (4 மது. 1.)

(3) ஆண் பிள்ளைகளுக்கு விவாகம் செய்யப்படவேண்டுமென்பது சாஸ்திரத்தின்படி கட்டாயமானதல்ல, விவாகம் என்ற ஸம்ஸ்காரமானது ஸ்திரீகளுக்குத்தான் பிரதானமானதேயன்றி சாஸ்திரங்களின்படி ஆண்களுக்குப் பிரதானமானதல்ல. அதுபற்றி ஹிந்துவானவன் தன் குமாரர்களுக்கு விவாகஞ் செய்யக்கடமைப்பட்டவனல்ல. ஆனதால் குமாரர்களின் விவாகத்தின் பொருட்டு ஏற்படுகிற செலவுகள் குடும்ப அவசியமானபொதுச்செலவுகளாக மாட்டாது. அது நிமித்தம் ஏற்படுகிற கடனும் குடும்பார்த்தமான கடனாகமாட்டாது. அக்கடனானது அதன் பிரயோஜனத்தை யடைந்த அதாவது - அதைக்கொண்டு விவாகஞ்செய்யப்பட்ட பாகஸ்தர்களின் பங்குசொத்தைமட்டும் பொறுத்ததாகுமேயன்றி மற்றவர்களுடைய பங்கைப் பொறுக்கமாட்டாது. (4 மது. 1; 27 மது 206.)

**148. அவிபக்த குடும்பஸ்தர்களின் பாத்தியா பாத்தியம்.**—அவிபக்த குடும்பத்தைச் சேர்ந்த எல்லா பாகஸ்தர்களும் அக்குடும்ப சொத்துக்களைப் பொதுவிலனுபவிக்கவும் அவைகளிலிருந்து சம்ரக்ஷணாதிகளையடையவும் சுதந்திரமுடையவர்களாக இருக்கிறார்கள். பாகஸ்தன் குடும்ப சொத்துக்களின் பொது அனுபவத்தினின்றும் விலக்கப்பட்டுவிட்டால் அவன் பாக வியாஜ்யம் செய்யவேணுமென்ற அவசியமில்லையென்றும், குடும்பசொத்தை மற்றவர்களுடன் சேர்ந்து பொதுவாய் அனுபவித்துவரும் பொருட்டும் வியாச்சியம் செய்யலாமென்றும், பம்பாய் ஹைகோர்ட்டார் தீர்மானித்திருக்கிறார்கள். (20 பம். 467.)

**149. குடும்பபொது சொத்தை பாகஸ்தர்கள்சேர்ந்து அனுபவிக்கவேண்டும்.**—குடும்பப்பொதுவான சொத்துக்களை எல்லாபாகஸ்

தர்களும் பொதுவிலனுபவிக்க சுதந்திரமுடையவர்களாக இருக்கிறார்களென்றாலும், தகப்பன், ஜேஷ்ட சகோதரன் முதலான குடும்பத்தலைவனே குடும்ப சொத்துக்களைப் பரிபாலனம் செய்யவும் குடும்பகாரியங்களை நடத்திவரவும் அதிகாரமுடையவனாக இருக்கின்றான் குடும்பத்தலைவன் நீங்கலான மற்ற மேற்பட்ட பாகஸ்தர்களுக்கு அவ்வித அதிகாரமில்லை. பாகமாகும் வரையில் அவர்கள் குடும்ப சொத்திலிருந்து சம்ரக்ஷணை முதலியவற்றையடைய பாத்தியமுள்ளவர்களாக இருக்கிறார்களேயன்றி குடும்பப்பொதுவான சொத்தில் யாதொரு பாகத்தையாவது தனியாய் தங்கள் சுவாதீனப்படுத்திக்கொள்ளக் கூடாதவர்களாக இருக்கிறார்கள். (11 மூ. இ. அ. 75.)

**150.** அவிபக்த குடும்பத்தில் ஒருவன் பாகம் இவ்வளவென்று குறிப்பிடமுடியாதென்பது—பாகம் ஆகும் வரையில் குடும்பப்பொதுவான எல்லாசொத்துக்களும் அச்சொத்துக்களின் வரும்படிகளும் எல்லோருக்கும் பொதுவில் பாத்தியப்பட்டதாக இருக்கின்றன. பாகம் ஏற்படுகிறவரையில் அவிபக்தக்குடும்ப சொத்தில் ஒரு பாகஸ்தனுக்கு இவ்வளவு பங்கு இருக்கிறதென்று சொல்ல முடியாது. ஏனெனில் புதிதான பாகஸ்தர்கள் பிறக்கப்பிறக்க பாகஸ்தர்களின் எண்ணிக்கை அதிகரிக்கிறது. அதனால் ஒவ்வொருவருக்கும் கிடைக்கக் கூடிய பங்கு வீதம் குறைவடைந்துகொண்டேவரும் பாகஸ்தர்களில் யாராவது ஒருவன் ஆண்சந்ததியின்றி இறந்துபோனால் அவனுடைய பங்கு பாத்தியமானது அவனோடு மறைந்துபோய் பொதுக் குடும்ப சொத்துடன் சேர்ந்துவிட அதனால் உயிரோடிருக்கும் மற்ற பாகஸ்தர்களுடைய பங்கு வீதம் அதிகப்படுகிறது. ஆகையால் அவிபக்த குடும்பத்தைச் சேர்ந்த ஒருவன் தன்பங்கு இவ்வளவென்றாவது இன்னதென்றாவது குறிப்பிட முடியாது. (9 மு. இ. அ. 539; 16 மது. 11; 11 மூ. அ. 75.)

**151,** ஒருவன் சேலவேல்லாம் குடும்பபோதுசோத்தில் கோடுக்கவேண்டும்.—அவிபக்த குடும்பத்திலுள்ள ஒவ்வொரு பாகஸ்தனும் அவனுடைய பெண்டுபிள்ளைகளும் குடும்பப்பொதுவான எல்லா சொத்துக்களைக் கொண்டும் சம்ரக்ஷிக்கப் படுகிறார்களே யன்றி அவரவருடைய பங்கிலிருந்து அவரவர்கள் சம்ரக்ஷணைமுதலியவ

ற்றை யடைகிறார்க ளென்பதில்லை. குடும்பம் ஒன்றாயிருக்கும் வரையில் குடும்பார்த்தமாய் எவன் பொருட்டு எவ்வளவு செலவழிந்தாலும் அவ்வளவும் குடும்பப்பொதுவான செலவுகளாகவே பாவிக்கப்படும். உதாரணமாக:-ஒரு பாகஸ்தனுக்கு அநேக குழந்தைகளிருந்து அவர்களுடைய சம்ரக்ஷணை உபநயனம் விவாகம் சோபனம் முதலிய குடும்ப அவசியங்களின் பொருட்டு அதிகமாகச் செலவழிந்தாலும் அவையாவும் குடும்பப் பொதுவான செலவுகளாகவே எண்ணப்படும். ஒரு பாகஸ்தன் நிமித்தம் இவ்விதமாய் ஏற்படும் அதிகச்செலவுகளை மற்றவர்கள் ஆக்ஷேபிக்கவாவது பாகத்தில் ஒத்துக்கொடுக்க வேணுமென்று வழக்குச்சொல்லவாவது கூடாது. (5 பங்காள லா ரிபோர்ட்டு 347, 349.)

**152.** பொதுக்குடும்பத்தில் ஒருவனிறந்தால் அவன் சொத்து மற்றபாகஸ்தர்களுக்கு சேருவது,—(1) குடும்பம் அவிபக்தநிலைமையிலிருக்கும்போதே ஒருபாகஸ்தன் ஆண்சந்ததியின்றி இறந்துபோய் விட்டால் அவனுடைய பாகபாத்தியமானது பொதுக்குடும்ப சொத்தோடு சேர்ந்துவிட அப்பங்குக்குள்ள சொத்தையுஞ்சேர்த்து உயிரோடிருக்கும் மற்ற பாகஸ்தர்கள் அடைந்துவிடுகிறார்கள் என்று மேலே சொல்லப்பட்டது. (150-வது பிரிவைப்பார்க்க). அப்படியடைவதற்கு ஸர்வைவர்ஷிப் டாத்தியம் என்று இங்கிலீஷில் சொல்லப்படுகிறது. ஆண் சந்ததியை வைத்துவிட்டு இறந்துபோகிறவனுடைய பங்கு பாத்தியம் அச்சந்ததியாரையே சேருகின்றது. ஆண் சந்ததியின்றி இறந்துபோகிறவனுடைய பங்கு பாத்தியமானது சகோதரர் முதலிய மற்ற பங்காளிகளைச் சேருகின்றது. இறந்துபோனவனுடைய பெண்ஜாதி ஆயுசுகாலம்வரையிலும், புத்திரிகள் விவாகமாகும் வரையிலும் குடும்பத்தில் ஜீவனாம்ச பாத்தியஸ்தர்களாகமட்டும் இருக்கிறார்களேயன்றி அவர்களுக்கு யாதொரு பங்கு பாத்தியமும் கிடையாது. ஆனாலும் புத்திரிகளுடைய சம்ரக்ஷணையன்றி விவாகம் கிரகப்பிரவேசம் சாந்திமுகூர்த்தம் முதலிய சுபசோபனங்களும் குடும்ப சொத்திலிருந்து நடத்தப்படவேண்டும். (26 மதி. 497.)

(2) ஆண் சந்ததியின்றி ஒவ்வொரு பாகஸ்தனும் இறந்துகொண்டே வந்தால் குடும்பசொத்து முழுவதும் கடைசியில் உயி

ரோடிருக்கும் பாகஸ்தனையே சேர்ந்து, அவனுக்குப்பின் அவனுடைய சந்ததியாரையே யடைகிறது. அவனும் சந்ததியில்லாமல் இறந்து போனால் அவனுடைய விதவையே குடும்பசொத்துக்களை யடையத்தக்கவளாகிறாள். முன்னடியே இறந்துபோய்விட்ட பாகஸ்தர்களின் விதவைகள் கடைசியிலிறந்த பாகஸ்தனுடைய விதவையினிடமிருந்து ஜீவனாம்சம் பெறவேண்டியவர்களாகஇருக்கிறார்கள்.

(3) ஆண் சந்ததியையுடைய ஒரு பாகஸ்தன் இறந்து போனால் அவனுடைய பிரதிநிதிகளான மகன் முதலான அச்சந்ததியாரே அவனுடைய பங்கு பாத்தியத்தில் நிற்கிறபடியால், அப்பங்கு அவனுடைய சகோதரன் முதலான மற்றவர்களுக்கும் ஸர்வைவர்ஷிப்புப்படி பாத்தியப்படுகிறதில்லை. (5 மது. 362; 1 அல. 105.)

**153.** போதுக்குடும்பத்தில் ஒருவன் சுவயார்ஜிதம் அவன் சந்ததியாருக்குச் சேருவது.—ஒருவன் அவிபக்த குடும்பத்தைச் சேர்ந்தவனாக இருந்தபோதிலும் அவனுடைய சுவயார்ஜிதமான சொத்துக்கள் முழுவதும் அவனுக்கே பாத்தியப்பட்டதாயிருக்கின்றன. மற்றவர்களுக்கு அதில் யாதொரு பாத்தியமும் இல்லை. ஆண் சந்ததியில்லாமல் அவன் இறந்துபோனாலும் அச்சுவயார்ஜித சொத்துக்கள் அவனுடைய பெண்சாதி, பெண், தௌகித்திரன் முதலான வார்சுகளுக்குச் சேருமேயன்றி சகோதரன் முதலான அவிபக்த குடும்ப பாகஸ்தர்களுக்குச் சேர்ந்துவிடமாட்டாது. (9 மூ இ. அ. 610; 5 இ அ. 61; 5 இ. அ. 190; 1 மது. 312; 17 கல். 33.)

**154.** போதுக்குடும்பத்தில் ஒருவன் சுவயார்ஜிதத்தை செலவழித்து பின்வாங்கிக்கொள்ள ஏற்பாடுசெய்வது.—ஒருவன் தன் சுயார்ஜித சொத்தைக் குடும்பப்பொதுவான செலவுகளுக்கு உபயோகப்படுத்த வேண்டுமென்ற கட்டாயம் இல்லை. ஒரு சமயம் உபயோகப்படுத்தும்படி நேர்ந்தாலும் பின்னிட்டு அதை வாப்சு பெற்றுக்கொள்ளும் விஷயமாய் மற்றவர்களுடன் ஏதேனும் ஒரு ஏற்பாடு செய்துகொள்ளலாம். (1 மது. ஹை. கோ. ரி. 309.)

**155.** பாகவியாச்சியம்.—அவிபக்த குடும்பத்தைச் சேர்ந்த ஒவ்வொரு பாகஸ்தனும் தனக்குள்ள பங்கைப் பிரித்துக்கொடுக்கும்படி தனக்கிஷ்டமானபோது குடும்பத்தலைவனைக் கேட்கலாம்,

அவசியமானல் அதற்காக வியாச்சியமும் செய்யலாம். மேலும் குடும்பத்தினுடைய ஸ்திதி இன்னதென்று அறிந்துகொள்ளும்பொருட்டு குடும்பத்தலைவனைக் கணக்கும் கேட்கலாம். பாகவியாச்சியம் செய்யும்போதும் குடும்ப பரிபாலனத்தைப்பற்றி கணக்குகொடுக்கும்படிக்கு குடும்பத்தலைவனைக் கேட்கலாம். (17 பம். 271)

**156.** மைனருக்காக பாகவியாச்சியம்.—ஆனல் மைனராயிருக்கும் பாகஸ்தனுக்கு மேற்கூறியபடி பாகம் கேட்கவாவது பாகத்துக்காக வியாச்சியம் செய்யவாவது அதிகாரமில்லை. ஆகிலும் குடும்பத்தலைவனுடைய நடவடிக்கைகள் குடும்பசொத்துக்கும் மைனர் பாகத்துக்கும் நஷ்டம் உண்டுபண்ணக் கூடியதாயிருந்தாலும் அல்லது குடும்பத்தில் மைனரின் பாத்தியம் மறுதளிக்கப்பட்டாலும் மைனரின் போருட்டும் அவனுடைய கார்டியன் அல்லது அடுத்த சிநேகிதன் பாகத்துக்காக தாவா செய்யலம். (8 கல். 537; 16 பம். 99; 12. மதா. 401.)

**157.** ஒருபாகஸ்தனின் பங்கைவாங்கியவனல் பாகவியாச்சியம்—ஒவ்வொரு பாகஸ்தனும் குடும்பப்பொதுவான சொத்தில் தன் பங்கு வீதத்துக்குள்ளதை அடமானம் ஒத்தி கிரையம் முதலிய பந்தக பருதினங்களுக்குட்படுத்தவும் சுதந்திரமுடையவனக இருக்கிருன். (5 கல். 148). அவிபக்த குடும்பத்திலுள்ள ஒரு பங்காளியினிடமிருந்து ஒத்தி கிரையம் முதலான விநியோகத்தைப் பெற்ற அன்னியன் தான் விநியோகம் பெற்ற பங்கை மற்ற பாகஸ்தர்களுடன் சேர்ந்து பொதுவிலனுபவிக்கலாம். சவுகரியப்படாவிட்டால் பாகத்துக்காக வழக்கிட்டு தான் வாங்கின பங்கைத்தனியே பிரித்துச்சுவாதீனப்படுத்திக்கொள்ளலாம். (1 பம். 95; 2 பம். 676; 5 பம். 493.)

**158.** அவிபக்த பாகஸ்தனெருவன் தன்பங்கை தானஞ்செய்யக்கூடாது.—ஆனல் ஒருபாகஸ்தன் தன்பங்குக்குள்ள சொத்தை தானம் செய்யவாவது உயில்செய்யவாவதுகூடாது. ஏனெனில் அவிபக்த குடும்பத்தைச்சேர்ந்த ஒருபாகஸ்தன் இறந்துபோனல் அவனுடைய பங்கானது சர்வைவர்ஷிப் என்னும் ப்பாத்தியப்படி அவன் இறந்த நிமிஷமே மற்றவர்களையடைந்து விடுகிறது. இறந்த பிற்பாடே ஊர்ஜிதத்துக்கு வரவேண்டியதாயிக்கிற உயிலிற்கண்ட

பாத்தியமானது பிந்தினதாக ஏற்பட்டு விடுகிறபடியால் அவ்வுயில் பிரயோஜனமற்றதாய் விடுகிறது. (8 ம. ஹை. கோ. ரி. 6; 6 பம். 24.)

**159.** ஒரு பங்காளிக்கு அதிகச்சேலவு.—பொதுக் குடும்பத்தில் ஒருவனுக்கு அதிக குழந்தைகளிருந்து, அவர்களுடைய சுபசோபனுதிகளுக்காவது, வேறு காரணங்களுக்காவது அதிகச்செலவுபிடித்தால், அதை எல்லாரும் ஒத்துக்கொடுக்கவேண்டுமென்று 151-வது பிரிவில் சொல்லியிருக்கிறது. (5 க. ஐ. 347, 349) ஆனல் சிலகுடும்பத்தில் அதிகச்செலவு யாரால் சேர்ந்ததோ அவர்பாகத்தில் குறைப்பதும் வழக்கமுண்டென்று ஏற்பட்டிருக்கிறது. (5 மூ இ. அ. 540.)

---

**160.** போதுக் கடன்கள்.—குடும்பப் பொதுச்செலவுக்காக அக்குடும்ப எஜமானனுல் வாங்கப்பட்ட கடனை எல்லா பாகஸ்தனும் கொடுக்கவேண்டும். ஆனல் காலாவதி தப்பிப்போன யாதொரு பத்திரத்தை, எஜமானன் மற்ற பாகஸ்தர்களுடைய அனுமதியின்றி புதுப்பித்தால் அவன் மட்டும் அதற்குக் பட்டுப்படுவான். (143-வது பிரிவை கவனிக்கவும்) (இ. லா. ரி. 5 ம. 169; 17 பம். 512.)

**161.** குடும்ப போது வியாபாரம்.—குடும்பத்தில் பொதுவாக வியாபாரஞ்செய்து அது விஷயமாய் குடும்பத்தின் பொதுவில் எஜமானன் வாங்கின கடனை எல்லோரும் கொடுக்கவேண்டும். (இ. லா. ரி. 6 க. 815; இ. லா. ரி. 5 பம். 38) மேற்படி கடனுக்காக ஒருவன்பேரில் மட்டும் தீர்ப்பு வாங்கினுல் அதற்காக குடும்ப பொதுசொத்து முழுவதையும் ஜப்திசெய்யலாம். (இ. லா. ரி 20 க. 453.) பாகஸ்தர்களில் ஒருவனிறந்தாலும் வியாபாரம் நிறுத்தாமல் தொடர்ச்சியாய் நடத்தலாம். (6 க. 815; 5 பம். 38.)

---

**162.** வரவுசேலவை பரிசோதிப்பது—யாதொரு பொதுக் குடும்பத்திலுள்ள எவராவது குடும்ப வரவுசெலவு கணக்குகளைக் காட்டும்படி, சாதாரண காலத்திலாவது, பாககாலத்திலாவது குடும்ப எஜமானனைக் கேட்டால் அவன் தடையின்றிக் காட்டவேண்டும். (5 க. ஐ. 354) பாககாலத்தில் தவிர மற்ற காலத்தில் கணக்குக்கேட்

கக்கூடாதென்று முன் தீர்மானமாயிருந்தது. (6 மூ. இ. அ. 540; 9 ஸ. 483; 3 க. ஐ. 1) ஆனல், இப்போது ரத்தாய்விட்டது.

163. பொது தாவா.—(1) பொதுகுடும்பத்தாருக்கு வரவேண்டிய கடனைப்பற்றி தாவாசெய்தால் எல்லாரும் சேர்ந்துவாதியாக தாவாசெய்யவேண்டும். (23 ம. 190) மேற்படி குடும்பசொத்தைப் பற்றியாவது அவர்களால் கொடுக்கவேண்டிய கடனைப்பற்றியாவது வேறேபாராவது தாவா செய்தால் அந்தக் குடும்பத்தாரெல்லாரையும் பிரதிவாதிகளாகச் சேர்க்கவேண்டும். இல்லாவிட்டால் தாவா செல்லாது. (இ. லா. ரி. 3 ம. 234; இ லா. 11 க. 338, 615: இ. லா. ரி. 17 .க 160: இ. லா. ரி. 1 க 226; 11 பம். ஐ. 69; இ. லா. ரி. 6 ம. 90; 12. பம். ஐ. 85; இ. லா. ரி. 3 பம். 23; இ. லா. ரி. 7 க. 470; 7 அ- ஐ. 58; இ, லா. ரி. 8 க. 353; 12 க ஐ. 291; இ. லா. ரி. 4 க. 96; இ. லா. ரி. 5 க. 941; இ. லா. ரி. 7 பம். 217.)

(2) ஆனாலும் ஒரு பாகஸ்தன் குடும்பத்தின் பொருட்டு ஏதாவது ஒரு உடன்படிக்கையைப் பிறனொருவனோடு செய்துகொண்டிருந்தால் அவ்வுடன்படிக்கை சம்பந்தமாயுள்ள வியாச்சியத்தை அவன்மட்டும் கொண்டுவரலாம்.

(3) அவிபக்தகுடும்பத்தின்பேரில் வியாச்சியம்கொண்டுவருகிற அன்னியன் குடும்பத்தின் பிரதிநிதியான குடும்பமானேஜரையாவது அல்லது எல்லா பாகஸ்தர்களையுமாவது கக்ஷியில்சேர்த்துதாவா செய்யலாம். ஆனல், குடும்பசொத்து விஷயமாயுள்ள வியாச்சியங்களில் எல்லாபாகஸ்தர்களும் கக்ஷிக்காரர்களாக சேர்க்கப்படவேண்டும்.

(4) ஹிந்துகுடும்பங்களில் முதலில் அவிபக்த நிலைமையும் அதிலிருந்து பிறகுவிபக்த நிலைமையும் ஏற்பட்டுவருகிறபடியால், ஒரு வியாச்சியத்தில் சம்பந்தப்பட்ட வாதிப்பிரதிவாதிகள் பாகம் பிரிந்தவர்களா அல்லது பிரியாதவர்களா என்றகேள்விபிறந்தால், அவர்கள் பாகம்பிரியாதவர்களென்றே முதலில் பாவிக்கப்படுவார்கள். பாகம்பிரிந்ததாக வாதாடுகிறவனே தன் வாதத்தை முதலில் ருசுப்படுத்தவேண்டும். (9 மூ. இ. அ. 63; 8 பம். 154; 17 கல். 85.)

164. மிதாட்சரப்படி பாகபாத்தியம்.—பொதுக் குடும்பத்திலுள்ள புருஷரெல்லாம் பொதுச்சொத்துக்கு பாகஸ்தர்களல்லவென்று 134-வது பிரிவு (3) உட்பிரிவில் சொல்லியிருக்கிறோம். அவனவன் தகப்பன் தேடிவைத்த சுவயார்ஜித சொத்துக்குமட்டுந்தான் அவனவன்பாத்தியமுடையவன்; மிதாட்சரப்படி பிள்ளையாகப்பிறந்தவுடனே அந்தப்பிள்ளைக்குக் தன்தகப்பன் பிதுரார்ஜித சொத்தில் பாகங்கிடைக்கும். பிதுரார்ஜிதசொத்துக்கு மூலபுருஷனாக ஏற்பட்டவனுக்குக் கீழ்பிண்டப்பிரதானம் உத்தரகிரியைமுதலியது செய்யக்கூடிய பிள்ளை, பேரன், கொள்பேரன் முதலிய மூன்றுதலைமுறைவரையிலுள்ளவர்க்குத்தான் குடும்ப சொத்தில் பாகங்கிடைக்கும். மூன்றுதலைமுறை தாண்டிப் பிறந்தவர்களுக்கு பாகபாத்தியங்கிடையாது. மேலேசொன்னபிள்ளை, பேரன், கொள்பேரன் முதலிய பாத்தியஸ்தர்களைத்தான் பொதுச்சொத்துக்கு பாகஸ்தர்களென்று சொல்லப்படுவார்கள். ஆனால், கொள்பேரனுக்குப் பிள்ளைபிறந்த அவன் பாகம் கேட்கும்வரையில் பிழைத்தவர் கிடையாது.

165. போதுச்சோத்தில் தனிப்பாத்தியம்.—பொதுச்சொத்தை பாகஸ்தர்களெல்லாம் பொதுவாய் அனுபவிக்கலாமேயொழிய தனித்தனியாய் அவனவன்பாகத்தை யனுபவிக்க பாத்தியமில்லை. ஏனென்றால், பொதுச்சொத்துக்கு பாத்தியமுள்ளவர்களில் ஒருவனிறந்தால் அவன்சொத்து மற்றவர்களுக்குச் சேரும். அல்லது ஒருவன் பிறந்தால் பாகஸ்தர்களின் சொத்துகுறையும். ஆகைபால் குடும்பம் பிரிகிற வரையில் ஒவ்வொருவனுக்கு மிவ்வளவுபாகந்தான் கிடைக்குமென்று சொல்வதரிது (150-வது பிரிவைப்பார்க்கவும்)

166. அப்பிரதிடந்த சோத்து.—முதல் மூன்று முன்னோர்களான தகப்பன், பாட்டன், முப்பாட்டன்களுடைய சொத்துக்களுக்கு பிள்ளை, பேரன், கொள்பேரன் ஆகியமுதல்மூன்றுசந்ததியார்கள்நேரான முதல்வார்சுகளாக இருக்கிறார்கள். இச்சந்ததியார்களிருக்கும்போது அச்சொத்தானது வேறு எவனையும் சேரமாட்டாது. அதுகாரணம் பற்றி ஷை மூன்றுமுன்னோர்களிடமிருந்து பிள்ளை, பேரன், கொள்பேரன் என்றமுறைபற்றி அடையப்படும் சொத்து

க்கள் அப்பிரதிபந்தசோத்துக்களெனப்படும். பிரதிபந்தம் - என்றால் தடை; அப்பிரதிபந்தம் என்றால் தடையின்மை; இங்குவேறு எந்த வார்சுகளாலும் தடுக்கப்படாமலிருப்பது என்பது பொருள். பிள்ளை, பேரன், கொள்பேரன் என்றவார்சு பாத்தியத்தால் சொத்தையடைவது அப்பிரதிபந்ததாயம்(நேரானவார்சு)எனப்படும். அப்பிரதிபந்த தாயத்தால் அடையும் சொத்துக்கள் மேற்குறித்தபடி பிதுரார்ஜித மானவைகளாகவே இருக்கின்றன. (20 மது 207.)

167. சப்பிரதிபந்த சோத்து.—மேலே சொன்ன முதல் மூன்று முன்னோர்களல்லாத மற்றெல்லோரிடமிருந்தும் வார்சு பாத்தியப்படி அடையும் சொத்துக்கள் சப்பிரதிபந்த (அநந்தரவார்சு) சோத்துக்களெனப்படும்; (அதாவது தடையோடு கூடிக்கொண்டிருக்கிற தாயசொத்துக்கள் என்பதுபொருள்.) முதல்மூன்று முன்னோரல்லாத மற்றவர்கள் சந்ததியின்றி இறந்துபோனாலொழிய அவர்களுடைய சொத்துக்கள் பிறனொருவனுக்குச் சேரமாட்டாது; மேலும் வார்சுக்கிரமத்தில் முந்தினவர்களிருக்கப் பிந்தினவர்களுக்கு சொத்து கிடைக்கவுமாட்டாது. ஆண்தலைமுறையிற் சேர்ந்தமுதல் மூன்று முன்னோர்களைத் தவிர மற்றவர்களிடமிருந்து சொத்துக்களை வார்சு பாத்தியத்தால் அடைவது இவ்வாறு நிச்சயமற்றதாயும் தடையுடன் கூடினதாயுமிருக்கிறபடியால் அப்படிப்பட்டசொத்து சப்பிரதி பந்ததாயசோத்து (அநந்தரவார்சு சொத்து)என்று சொல்லப்படுகிறது.

168. அநந்தரவார்சாய் கிடைக்கும் சோத்து சுவயார்ஜிதமேன்பது.' அகஸ்மாத்தாய்(எதேச்சையாய்)ஏற்படுகிறசப்பிரதிபந்ததாயமானது மேற்சொன்னபடி நிச்சயமற்றதாயிருப்பதுடன் அச்சொத்தை அடைபவனுக்கு அநந்தரவார்சு பாத்தியம் ஏற்படுகிறவரையில் அச்சொத்தில் யாதொருபாத்தியமும் இல்லாமலிருக்கிறது. அது பற்றி அவனுடையமகன் முதலிய சந்ததியார்களுக்கு பிறந்தமாத்திரத்தினாலேயே அச்சொத்தில் யாதொருவித பாத்தியமும் ஏற்பட நியாயமில்லை என்றும், சப்பிரதிபந்ததாய (அநந்தரவார்சாய்) சொத்தையடைந்தவன் இறந்துபோனபிறகே அவனுடையமகன்முதலான

சந்ததியார்களுக்கு அதில்பாத்தியம் உண்டாகிறதென்றும், அதுகாரணம்பற்றி சப்பிரதிபந்த தாயத்தால் அடையும்சொத்துக்கள் யாவும் அடைபவனுடைய சுவயார்ஜிதமென்றே பாவிக்கப்படவேண்டுமென்றும் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. (1 அல. 651.)

169. மாதாமகர்சோத்து பிதுரார்ஜிதம்.—(1) ஆனாலும் மேற்சொன்ன தீர்ப்பு இப்பால் ஒருவகையான மாறுதலேயடைந்திருக்கிறது. அதாவது, மாதாமகரிடத்திலிருந்து (தாயினுடைய தகப்பன்) தௌகித்திர பாத்தியப்படியடையும் சப்பிரதிபந்த தாயசொத்து தௌகித்திரனுடைய சுவயார்ஜிதமாகமாட்டாவென்று மதராஸ் ஹைகொர்ட்டார் கொஞ்சகாலத்துக்குமுன் தீர்மானிக்க (22 மது. 305.) மேலான ப்ரிவி கௌன்சில்கோர்ட்டார் சமீபத்தில் இன்னமும் அதிகமான மாறுதலேச்செய்து அடியில்வருமாறு தீர்மானித்திருக்கிறார்கள். அதாவது; தகப்பனுடைய தகப்பன் எப்படி முன்னோன் என்று சொல்லப்படுகிறானோ அதுபோலவே தாயினுடைய தகப்பனாமாதாமகரும் முன்னோன் என்ற அந்தஸ்தில் சேர்ந்தவரென்றும், அவரிடமிருந்து தௌகித்திரபாத்தியப்படி யடையும் சொத்தானது தௌகித்திரனுடைய சுயார்ஜித சொத்தாகாமல் பூர்வார்ஜிதமான சொத்தாகவே பாவிக்கப்படவேண்டுமென்றும், அத்தௌகித்திரனுடைய பிள்ளைமுதலான ஆண்சந்ததியாருக்கும் பிறந்தவுடன் அதில் பாத்தியம் ஏர்படுகிறதென்றும் இப்பால் பிரிவிகௌன்சில் கோர்ட்டார் தீர்மானித்திருக்கிறார்கள். (25 மது. 687) இதையனுசரித்து மதுராஸ் ஹைகோர்ட்டாரும் சமீபத்தில் அவ்வாறே இதரகேசுகளிலும் தீர்மானித்திருக்கிறார்கள். (27 மது. 300, 382.)

(2) ஆனால் முன்னோன் முறையிலிருக்கிற மாதாமகர் முதலானோர் நீங்கலாக மற்றெல்லோரிடமிருந்தும் சப்பிரதிபந்த தாயத்தால் (அநந்தரவார்சு பாத்தியத்தால்) அடைகிற சொத்துக்கள் சுயார்ஜிதமென்றே பாவிக்கப்படும். மேலும் தாயார் உள்பட எல்லா ஸ்திரீகளிடமிருந்தும் வார்சுபாத்தியப்படியடையும் சொத்துக்கள் யாவும் சுயார்ஜிதங்களேயாகும். (27 மது, 300.)

**170.** பொதுக்குடும்பத்தில் பாகயோக்கியமுள்ளவர்கள்:—

(1) சேஷய்யர்

(மூலபுருஷன்)

மூலபுருஷன் பிள்ளைகள்.

(4) கிருஷ்ணய்யர். (3) இலட்சுமணய்யர். (2) நாராயணய்யர்.

மூலபுருஷன் பேரன்கள். (5) வேணுகோபாலய்யர்.
(மூலபுருஷன்பேரன்.)

(7) வரதய்யர். (6) ரெங்கய்யர்.

(மூலபுருஷன் கொள்பேரன்கள்.

(8) சுப்பய்யர்.

(9) இராமய்யர்

(10) வேம்பய்யர்.
(கொள்பேரன் பிள்ளை)

மேலே விவரித்திருக்கிற வம்ச விருட்சத்தில் 1, 2, 3, பெயர்கள் மட்டுமிருந்தால் பிதுரார்ஜித சொத்தில் ஒவ்வொருவருக்கும் 3 - ல் ஒரு பாகம் கிடைக்கும் 1, 2, 3, 4, பேர்களிருந்தால் 4 - ல் 1 பாகம் கிடைக்கும்; 1 - வது புருஷன் இறந்துபோனல் 2, 3, 4 இவர்களுக்கு 3 - ல் 1 பாகம் கிடைக்கும். 4 - வது புருஷனு மிறந்துபோய்விட்டால் 2, 3 புருஷர்களுக்குச் சொத்தில் பேர்பாதி கிடைக்கும். குடும்பம் ஏகோபித்திருந்து 1, 2, 3, 4 இவர்களிறந்தபிறகு 5- 6, 7, இவர்கள் பாகம் செய்துகொண்டால் 5 - வதுபுருஷனுக்கு பேர்பாதி ஆஸ்தியுப், 6, 7 பேர்களுக்கு ஒவ்வொருவனுக்கும் 4 - ல் 1 பங்கு ஆஸ்தியும் கிடைக்கும். 8, 9 பேர்வழிகளுக்கு 5 - வது புருஷன் பாகத்தைதான் அவர்கள் சரியாக பாகம் செய்துகொள்ள வேண்டும். 10 - வது புருஷன் மூன்று தலைமுறைக்கு மேலாய்

விட்டதால் அவனுக்கு பாகம் கிடைக்காது. எல்லோருக்கும் முந்தி மூலபுருஷனிறந்தால், 2, 3, 4 பேர்கள் மூலபுருஷர்களாகி பின் 10 - வது பேர்வழி 2 - வது மூலபுருஷனுடைய பாகத்தில் பாகம் கேட்கலாம்; 1, 4, 8, 10 - வது புருஷர்கள்மட்டும் பாககாலத்தில் ஜீவித்திருந்தால், 1, 4, 8 பேர்கள்மட்டும் பிதுரார்ஜித சொத்துக்கு பாகஸ்தர்களேதவிர 3 தலைமுறை தாண்டின 10 - வது புருஷனுக்கு பாகம் கிடையாது.

**171.** மூலபுருஷனைவிட்டு மூன்று தலைமுறை எண்ணவேண்டியது.—இதற்கு முந்தின பாராவில் சொல்லியபடி 3 தலைமுறைக் கணக்கு மூலபுருஷனைவிட்டுப் பிறகு எண்ணவேண்டும்; மூலபுருஷனுக்குப்பிறகு 3 தலைமுறை தாண்டாமலிருந்தால் பிதுரார்ஜிதசொத்தில் பாகங்கிடைக்கும். (10 பம். ஐ 449, 463; 6 ம. 94, 106.)

உதாரணம்.

(1) **ரெங்கய்யர்**
(மூலபுருஷன்)

(2) இராமய்யர்—ஷையான்பிள்ளை.

(3) கிருஷ்ணய்யர்—ஷை மூலபுருஷன்பேரன்.

மூலபுருஷன் கொள்பேரன்கள்,

(4) வாசுவய்யர். (5) சந்திரமய்யர்.

கொள்பேரன் பிள்ளைகள்.

(6) ரெகுநாதய்யர். (7) சுப்பய்யர்.

(8) விசுவநாதய்யர்.
கொள்பேரன் பேரன்.

இந்த வம்சவிருட்சத்திலுள்ள 1, 2, 3, 4, 5 பேர்வழிகள்மட்டும் பிதுரார்ஜித சொத்துக்கு பாகஸ்தர்கள் ஆவார்கள். மூலபுருஷனிற

ந்தபிறகு 2 - வது பேர்வழி மூலபுருஷனுகையால், 6, 7 பேர் வழி கள்கூட சொத்துக்கு பாகஸ்தர்களாகிறுர்கள். 1-வது புருஷன் உயி ரோடிருந்து, 2, 3 பேர்வழிகள் இறந்தபோனுல்கூட 1, 4 5 பேர்வழி கள்மட்டுந்தான் பாகஸ்தர்களாகிறுர்கள். அதன்பிறகு ஆதி மூலபு ருஷனிறந்தால் 4 - வது புருஷனின் பாகத்தில் 6, 7, 8 பேர்வழி களுக்கு பாகம் கிடைக்கும். 1-வது புருஷன் உயிரோடிருக்கையில் 2, 3, 4 பேர்வழிகளிறந்தால் 6, 7, 8 பேர்வழிகளுங்குப் பாகமில் லாமல்போய், எல்லா சொத்தும் 1, 5 - வது பேர்களுக்குச் சேர்ந்து விடும். பிறகு 1 - வது புருஷன் இறந்தால் அவன் சொத்தும் 5-வது புருஷனுக்குச் சேர்ந்துவிடும். ஆகைபால் மூலபுருஷன்முதல் 3 தலைமுறைகள் பின்னமாகாமல் சம்பூர்ணமாக விருந்தாலொழிய அதற்குக் கீழ்ப்பட்டவர்களுக்கு பாகங்கிடைக்காதென்று தெரிந்து கொள்ளவேண்டியது.

**172.** தாயபாகத்தின்படி சொத்துப் பிரிவினை.—மேலே சொன்ன இரண்டு உதாரணத்திலும் மிதாட்சர பாகப்படி சொத்தைப் பிரிக்கும்வகையைச் சொன்னேம். தாயபாகப்பிரகாரம் தகப்பனுடைய பிதுரார்ஜித சொத்தில் பிள்ளை பாகமாவது, மிதமாய்ச் செலவுசெய்யும்படியாவது தகப்பனைக் கேட்கக்கூடாது. ஜீவனும்சமட்டும் கிடைக்கும். ஆனுல் தகப்பனுக்குப் பிறகு பிள்ளைகளுக்குச் சொத்து சேர்ந்தால் அவர்கள் அவிபக்தர்களாயிருந்தாலும் தனித் தனியாய் சொத்துக்கு பாத்தியமுள்ளவர்களாவார்கள். இவர்களில் ஒருவனிறந்தால் மிதாட்சரத்தைப்போல் அவன் சொத்து மற்ற பாகஸ்தர்களுக்குச் சேராமல் அவனுடைய பெண்சாதிக்காவது அல்லது அவனுடைய மற்ற வார்சுகளுக்காவது சொத்துச்சேரும். இது வங்காளதேச சம்பிரதாயம். (6 மூ. இ. அ. 553.)

**173.** ஸ்வயார்ஜித சொத்து.—(1) பிதுரார்ஜித சொத்தையாவது, குடும்ப சொத்தையாவது தொடாமலே தன்னுடைய புத்தியாலும், வல்லமையினுலும் சம்பாதிக்கப்பட்ட சொத்தும், தாயார், பாட்டி (தாயின் தாய்) தாயின் தகப்பன், அண்ணன், தம்பி, பெரிய தகப்பன், சிறிய தகப்பன், இவர்களுடைய பிள்ளை முதலியவர்களிடமிருந்து கிடைத்த சொத்துக்கும் ஸ்வயார்ஜிதம் என்னப் படும். இவ்விதம் சொத்தையடைந்த தகப்பன் அனுமதியில்லாமல்

அவன் பிள்ளைக்கு இந்தச்சொத்து கிடைக்கமாட்டாது. (இ. லா. ரி. 8 க. 131; இ. லா. ரி. 17 க. 38; இ. லா. ரி. 12 பம். 33; இ. லா. ரி. 9 பம் 445.)

(2) மேலும் அவ்வாறு சம்பாதிக்கப்பட்ட சொத்து குடும்பப் பொதுவான பிதுரார்ஜித சொத்தோடு கலக்கப்படாமலும் குடும்பப் பொதுவாக பாவிக்கப்படாமலுமிருந்து சம்பாதித்தவனுடைய சொந்தமாகவே அவனால் பாராட்டப்பட்டு மிருக்கவேண்டும். (27 மது. 228.)

(3) யாதொரு சொத்தானது முன்னோர்களால் கைவிடப்பட்டு குடும்பத்தினின்றும் விலகிப்போய்விட்டதோ அதை ஒரு பாகஸ் தன் மற்ற பாகஸ்தர்களுடைய சம்மதம் பெற்றுக்கொண்டாவது, அல்லது அவர்களும் கைவிட்டு விட்டார்களென்று தெரிந்துகொண் டாவது, நல்ல எண்ணத்தின்பேரில் தன்சொந்த முயற்சியாலும் குடு ம்பசொத்தின் சகாயமன்னியிலும் மீட்டுக்கொள்ளுவானேயானால் அதுவும் அவனுடைய சுயார்ஜிதமாகும். (20 அல. 267.)

(4) ஆனால் மற்ற பாகஸ்தருக்கில்லாமல் தானே அச்சொத்து முழுவதையும் அடைந்துவிடவேண்டுமென்ற கெட்ட எண்ணங் கொண்டு அவர்களுக்குமுன் மோசடியாயாவது அவர்களுடைய சம்மதிபெறாமலாவது அச்சொத்தை மீட்டுக்கொண்டால் அது அவ னுடைய சுயார்ஜிதமாகமாட்டாது. மேலும் மற்ற பாகஸ்தர்களுக் கும் பாத்தியப்பட்ட குடும்பப்பொதுவான சொத்தின் சகாயத்தை க்கொண்டு ஒரு பாகஸ்தன் அதை மீட்டுக்கொண்டிருந்தாலும் அது அவனுடைய சுயார்ஜிதமாய் விடமாட்டாது. (5. மது. ஹை. கோ. ரி. 150; 8. இ. அ. 99.)

(5) பிறரிடமிருந்து தானம் உயில் முதலியவற்றாலும் விவாக காலத்தில் வெகுமதியாகவும் அடையப்படும் சொத்துக்களும் சுயார் ஜிதங்களாகும். (3 மது. ஹை. கோ. ரி. 50.)

**174.** பிதுரார்ஜித சோத்து—தகப்பன், பாட்டன், முப்பாட் டன் முதலியவர்களிடமிருந்து வார்சு பாத்தியமாகவாவது, உயில் மூலமாகவாவது, தானமாகவாவது கிடைத்த சொத்துக்கு பிதுரார் ஜித சொத்தென்று பெயர். இந்த சொத்துக்கு மூன்று தலைமுறை

வரையிலுள்ள பிள்ளைகள் பாகஸ்தர்களென்று முன்சொல்லி யிருக்கிறோம்.

**175.** தகப்பன் தேடினசோத்து பிள்ளைகளுக்கு பிதுரார்ஜிதம்.– தகப்பன் சுவயார்ஜிதமாய்ச் சம்பாதித்த சொத்து பிள்ளைகளுக்கு கிடைத்தவுடன் பிதுரார்ஜித சொத்தாகி இவர்களுடைய பிள்ளைகளுக்கும் பாத்தியமுண்டாகிறது. ஆனால், அந்தச்சொத்து பிள்ளைகளுக்குச் சேருவதற்குமுன் அவர்களில் யாராவது ஒருவன் இறந்துபோனால் அப்படி யிறந்தவனுடைய பெண்சாதிக்காவது பிள்ளைகளுக்காவது அப்படிப்பட்ட சொத்தில் பாத்தியம் கிடையாது. (இ. லா. ரி. 11 அ. 194.)

**176.** தானமாய்க் கிடைத்த சோத்து.—(1)தகப்பனுடைய சொத்து பிள்ளைகளுக்கு வார்சு பாத்தியமாய்க்கிடைக்காமல் தானமாகக்கிடைத்தாலும் அது பிதுரார்ஜித சொத்தாகவே எண்ணப்படும். அப்படிப்பட்ட சொத்தில் பிள்ளைகளின் வம்சஸ்தர்களுக்கு பாகமுண்டு. (6 ஸ 71. 73.)

(2) இவ்விதமாகவே உயில்மூலமாய் தகப்பனிடமிருந்து கிடைத்த சொத்தும் பிதுரார்ஜிதமென்றே எண்ணவேண்டும். (3 ம. ஐ. 50, 55; இ. லா. ரி. 12 பம் 133; 13 இ. அ. 5.) தகப்பனே உயில் செய்யும்போது சொத்தை பிள்ளை சுவயார்ஜிதமாகவே அனுபவிக்க வேணுமென்று பாத்தியத்தை எழுதிவைத்தாலொழிய, சொத்து ஸ்வயார்ஜிதமாகாது. தகப்பனானவன் தன்னுடைய சுயார்ஜிதசொத்தை சர்வ சுதந்திரபாத்தியத்தோடு அடைந்தனுபவித்துக் கொள்ளத் தக்கதென்று தன்மகனுக்கு தானமாயாவது உயில்மூலமாயாவது கொடுத்துவிட்டால் அது அம்மகனுடைய சுயார்ஜிதம்போலாய்விடுகிறதென்றும், அதில்பாகம் கொடுக்கும்படிகேட்க அவனுடைய மகனுக்கு சுதந்தரமில்லையென்றும் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. (12 பம். 528, 24 மத. 429.)

**177.** அடமான சோத்தைத் திருப்புதல்.—அடமானத்திலிருந்த பிதுரார்ஜித சொத்தை ஒருவன்தான் சுவயார்ஜிதமாய் சம்பாதித்த பணத்தைக்கொடுத்துத் திருப்பினால் அப்படித்திருப்பப்பட்ட சொத்து பிதுரார்ஜிதமாகவே எண்ணப்பட்டு அவன் பிள்ளைகளுக்குப்பாத்தியமுண்டு. (5 ம. ஐ. 150; 4 ம. 250; 18 ம. 83.)

**178.** சோத்தின் விருத்தி.—(1)பிதுரார்ஜித சொத்தின் வரும்படியைக் கொண்டு சொத்தை விருத்திசெய்தாலும், வியாபார முதலியவற்றால் ஆதாயமடைந்தாலும் அப்படி விருத்திசெய்யப்பட்ட சொத்தும், ஆதாயமும் பிதுரார்ஜித சொத்தாகும். (8 ம. ஐ. 25; இ. லா. ரி. 8 க. 131; இ. லா. 11 ம. 246; இ. லா. ரி. 7 அ. 402; இ. லா. ரி. 3 க. 508; 10 மூ. இ. அ. 329,)

(2) குடும்பத்தில் ஒருபாகஸ்தன் தன் முயற்சியாலும், மேற்பார்வையாலும் பிதுரார்ச்சிதசொத்தை விருத்திசெய்தால் அந்த விருத்தி பிதுரார்ஜிதமாய் விடும். (6 பம். 225.)

**179.** பிரிக்கக்கூடாத சோத்தின் ஆதாயம்—மிதாட்சரப்படி பிரிக்கக்கூடாத ஜமீன் சொத்து பொதுச்சொத்தாயிருப்பதால் அதைக் குடும்பத்தின் மூத்தவனே அடையவேண்டும். மற்றவர்களுக்கு ஜீவனும்சமட்டும் கிடைக்கும். மூத்தவன் சந்ததியின்றி யிறந்துபோனால் தம்பிகளில் மூத்தவனுக்கு அந்த ஜமீன் கிடைக்கும். (9 மூ. இ. அ. 539, 589; 610 13 மூ. இ. அ. 336.) ஆனால், மூத்வன் இறப்பதற்கு முந்தி ஜமீன் சொத்தின் வரும்படியிலிருந்து ஏதாவது சொத்து சம்பாதித்திருந்தால் அது பொதுச் சொத்தாகாமல் சுவயார்ஜித சொத்தாகி அவன் பெண்சாதி முதலிய அவன் வார்சுக்குச்சேரும். (15 ம. ஐ. 31, 41; 12 மூ. இ. அ. 540) ஆனால் அப்படிச் சம்பாதித்த சொத்து பின்னால் வந்த ஜமீன்தாரைச் சேர்ந்தால் அது பொது சொத்தாய்விடும். ஒரு ஜமீன்தார் ஜமீன்வரும்படியைக்கொண்டு சிலசொத்து சம்பாதித்திருந்தான்; ஜமீனுக்கு அவன் வாங்கினகடனை அந்த சொத்திலிருந்து கொடுக்கக்கூடாதென்று தீர்மானிக்கப்பட்டது. ஏனென்றால் அது சுவயார்ஜிதத்துக்குச்சமானம் (இ. லா. ரி. 3 ம. 145.)

**180.** சுவயார்ஜிதத்தை இஷ்டத்துடன் குடும்பத்தில் சேர்ப்பது.– ஒருவன் தான் சம்பாதித்த சுவயார்ஜிதசொத்தைப் பொதுக்குடும்பத்தில் இஷ்டப்பட்டு சேர்த்துவிட்டால் அது பொதுச் சொத்தாய்விடும். (இ. லா. ரி. 16 க. 397; 10 மூ. இ. அ. 506; இ. லா. ரி. 7 ம. 458; இ லா. ரி. 10 க. 392, 398, 401; இ. லா. ரி. 15 பம். 509; இ. லா ரி. 18 க. 341.)

**181.** படிப்பினுல் சம்பாதித்த பொருள்.-(1) தகப்பன், அண்ணன் தம்பி முதலியவர்களுடைய உதவியில்லாமல் குடும்பத்தை விட்டு நீங்கி தன்னுடைய முயற்சியினுலும் புத்தியினுலும் வித்தை கற்றுக்கொண்டு அதனுல் சம்பாதித்த சொத்தானது பொதுச் சொத்தாகமாட்டாது. குடும்ப சொத்தால் சாதாரணமான வித்தை கற்பிக்கப்பட்டிருந்தாலும், இன்னும் வேறே மேலான படிப்புகளுக்கு அந்தக் குடும்பத்தாருடைய உதவியில்லாமல் கற்று அதனுல் சம்பாதித்த சொத்தும் பொதுச்சொத்தாகமாட்டாதென்று தற்காலத்தில் உறுதிப்பட்டிருக்கிறது. (2 ம. ஐ. 56; 7 ம. ஐ. 47; 11 க. ஐ. 201; இ. லா. ரி 1 ம. 152; இ. லா. ரி. 4 ம. 330; இ. லா. ரி. 6 பம் 225; இ. லா. ரி. 15 பம். 32.)

(2) பிதுரார்ஜிதசொத்தின் சகாயத்தைக்கொண்டு சம்பாதிக்கப்படுவதும் பிதுரார்ஜிதத்தின் தன்மையையடைகிறபடியால், குடும்பப்பொதுவான சொத்தின்செலவினுல் கற்றுக்கொண்ட சாஸ்திரப்பயிர்ச்சி முதலியவற்ருல் சம்பாதிக்கப்படுகிற சொத்துக்களும் குடும்பப்பொதுவானதாகுமேயன்றி சம்பாதிக்கிறவனுடைய சுயார்ஜிதமாய் விடமாட்டாதென்று சாஸ்திரங்களில் சொல்லப். ட்டிருக்கிறது.

(3) மேற்சொன்ன சாஸ்திரவிதியை யனுசரித்து, குடும்பப் பொதுவான சொத்தின் சகாயத்தால் சாமான்யமான படிப்பை யடைந்த ஒருவக்கில் சம்பாதித்த தனியானசொத்துக்களும் பாகார்கமுள்ள குடும்பப்பொதுவானதேயன்றி அவ்வக்கீலுடைய தனியான சுயார்ஜிதமாக மாட்டாதென்று மதராஸ் ஹைகோர்ட்டார் முதலில் தீர்மானித்தார்கள். (7 மது. ஹை. கோ. ரி. 47.)

(4) ஆனுல் அத்தீர்ப்பு சரியானதல்லவென்றும், தேகபோஷணை சாமான்யப்படிப்பு முதலியவற்றை இளம்பிராயத்தில் குடும்பசொத்திலிருந்து அடைய எல்லோரும் உரிமையுள்ளவர்களாக இருக்கிறபடியால், அவைகளின் நிமித்தம் குடும்பசொத்தின் பிரயோஜனத்தை ஒருவன் சிறுவயதில் அடைந்துவிட்டதினுலேயே அவனுல் பின்னிட்டு சம்பாதிக்கப்படும் சொத்துக்கள் யாவும் குடும்பப்பொதுவானதாய் விடுமென்று சொல்லுவது எவ்வளவும் நியாயமல்லவென்றும் பிரிவிகௌன்சில் கோர்ட்டார் அபிப்பிராயப்பட,

அதற்குப்பின் அவ்வபிப்பிராயத்தை யனுசரித்தே தீர்ப்புகள் செய்யப்பட்டு வருகின்றன. (1 மது. 252; 4 இ. அ. 109, 117; 4 மது. 330.)

(5) குடும்ப திரவியசகாயத்தால் சாதாரணப் படிப்பைமட்டும் அடைந்த ஒருவர்தன் சொந்தமுயற்சியாலும் குடும்பதிரவிய சகாயமன்னியிலும் சட்டப்பரீக்ஷைகொடுத்து சப்ஜட்ஜி உத்தியோகம் செய்து தனியாய் சொத்துசம்பாதிக்க, அச்சொத்து அவருடைய சுயார்ஜிதமேயன்றி குடும்பப்பொதுவானதாக மாட்டாதென்று பம்பாய் ஹைகோர்ட்டாரும் தீர்மானித்திருக்கிறார்கள். (6 பம். 225.)

(6) குடும்பசொத்தின் செலவால் பால்யத்தில் தேகபோஷணையையும் சாமான்யப்படிப்பையும் அடைந்த ஒருவன் வயதுவந்த பிறகு பெருத்த வர்த்தகத்தைச்செய்து ஏராளமான பொருளைச் சம்பாதிக்க அப்பொருள் முழுவதும் அவனுடைய சுயார்ஜிதமானதென்று மதராஸ் ஹைகோர்ட்டாரால் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. (4 மதராஸ் ஜூரிஸ்டு 54; 1 மது. 252.)

(7) ஆகையால் குடும்பசொத்திலிருந்து யாவரும் சிறுவயதில் அடைய உரிமைபெற்றிருக்கிற அன்னவஸ்திராதிகளின் பொருட்டும் சாமான்யமான படிப்பின்பொருட்டும் ஒருவன் குடும்பசொத்தின் பிரயோஜனத்தை யடைந்திருந்தபோதிலும் தன்சொந்த முயற்சி அல்லது சாமர்த்தியத்தால் வர்த்தகம், உத்தியோகம் கைத்தொழில் முதலிய வேலைகளைச்செய்து அவன்தனியான சொத்து சம்பாதித்தால் அச்சொத்து முழுவதும் அவனுடைய சுயார்ஜிதமாகுமேயன்றி குடும்பப்பொதுவானதாகமாட்டாது. (4 இ. அ. 117; 6 பம். 225; 15 பம். 32; 20 அல. 435.)

(8) ஆனால் சாமான்யமான படிப்பன்றி விசேஷத் திறமையையும் யோக்கியதையையும் உண்டுபண்ணக்கூடிய விசேஷப்படிப்பை ஒருவன் குடும்பப்பொதுவான சொத்தின்செலவினால் அடைந்திருந்தால், அப்படிப்பினால் ஏற்பட்ட யோக்கியதையைக்கொண்டு சம்பாதிக்கப்படுகிற சொத்து குடும்பப்பொதுவானதாகுமேயன்றி அவனுடையதனியான சுயார்ஜிதசொத்தாய்விடமாட்டாது. (6 மு. இ. அ 539; 1 மது. 252; 4 இ. அ. 117.)

(9) பாரிஸ்டர், ஹைகோர்ட்டு வக்கீல், ப்ளீடர்ஷிப் முதலான சட்டபரீக்ஷைகள், ஸர்ஜன், டாக்டர், அபாதிகிரி முதலான வைத்திய பரீட்க்ஷைகள், சிவில் சர்விஸ் பரீட்க்ஷை, ஓவர்சியர் முதலான இஞ்சினியர் இலாகா பரீக்ஷைகள், எப். எ. பி. எ. எம். எ. முதலான கலாசாலை பரீக்ஷைகள், முதலானவைகளின் பொருட்டுள்ள படிப்புகள் விசேஷபடிப்புகளாகும்.

**182.** குடும்ப சோத்தால் விருத்தியடைந்த சோத்து.—(1) ஒரு குடும்பத்தில் ஒருவன் தன்னுடைய வல்லமையினுல் குடும்பச்சொத்தின் ஒரு பாகத்தைக்கொண்டு வியாபாரம் முதலியவற்றுல் வேறே சொத்து சம்பாதித்தால் அந்தச்சொத்தில் அவனுக்கு இரண்டுபங்கு கிடைக்குமென்று சில ஸ்மிருதிகளில் சொல்லியிருக்கிறது. மிதாட்சரப்படி எல்லாரும் சரிபாகந்தான் எடுத்துக்கொள்ளவேண்டும். ஆனுல், பங்காள தேசத்தில் இரண்டு பாகம் எடுத்துக்கொள்கிற வழக்கமிருக்கிறது (1 பங். ஸ. தீ. 6, 336, 3 பங். ஸ. தீ. 98; 5 பங். ஸ. தீ. 335)

(2) குடும்பப்பொதுவான திரவியத்தைக் கைமுதலாகக்கொண்டு வர்த்தகம் முதலிய தொழில்களைச்செய்து ஒருவன்பொருள் சம்பாதித்தாலும் அது அவனுடையசொந்த சொத்தாகமாட்டாது. எத்தொழிலைச் செய்தாலும் குடும்பதிரவிய சகாயமன்னியில் சொந்த முயற்சியாலும் சாமர்த்தியத்தாலும் ஒருவனுல் தனியாய் சம்பாதிக்கப்படுவதுமட்டுமே அவனுடைய சுயார்ஜிதமாகும். (1 மது. 252; 4 இ. அ. 109.) இல்லாவிடில் அச்சொத்து குடும்பப்பொதுவானதாகவே ஏற்படும். ஆகிலும் இவ்வகையான குடும்பப்பொது சொத்தில் குடும்பசொத்தின் பிரயோஜனத்துடன் சம்பாதித்தவனுடைய சொந்தப்பிரயாசையும் கலந்திருக்கிறபடியால், சம்பாதித்தவனுக்கு மற்ற பாகஸ்தர்களைவிட ஒருபங்கு அதிகம் கிடைக்கவேண்டுமென்று சாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. குடும்ப திரவியசகாயம் மூலகாரண மாயிருப்பதால் அதில்மற்றவர்க்கும் பங்குகிடைக்கிறது சம்பாதித்தவனுடைய விசேஷசாமர்த்தியம் பிரயாசையுங்கலந்திருப்பதினுல் அவனுக்கு இரண்டுபங்கு கிடைக்கிறது, (6 மூ. இ. அ. 526, 539.)

(3) தாயாருடைய திரவிய சகாயத்தின்பேரில் கற்றுக்கொடுக்கப்பட்ட நாட்டியத்தொழிலால் ஒருதாசி சொத்து சம்பாதித்தால் அது அவளுடைய சுயார்ஜிதமாய் விடமாட்டாது. அவளுடைய தாயாருக்கும் அதில் பாத்தியமுண்டு. முன்பிரிவில் சொல்லியபடி அச்சொத்தில் தாசி இரண்டு பங்கையும் தாயார் ஒருபங்கையும் அடையவேண்டும். (2 மது. ஹை. கோ. ரி. 56)

(4) ஆனால் தாசியானவள் வியபசாரித்தனம்செய்து சொத்து சம்பாதித்தால் அது அவளுடைய சுயார்ஜிதமேயாகும். அதில் அவளுடைய தாயாருக்கு யாதொருபங்கும் கிடைக்கமாட்டாது. (4 மது. 330.)

**183.** கைமாறிப்போன சொத்து.—பெரியவர்களால் இழக்கப்பட்டு பாத்தியம் இழந்தபோன பொதுச்சொத்தை குடும்பத்தார் அல்லது குடும்பத்தின் பொது திரவியத்தின் உதவியின்றி ஒருவன் தன் முயற்சியினால் திருப்பினால், அது அவனுடைய ஸ்வயார்ஜித சொத்தென்றே பாவிக்கவேண்டியதென்று மிதாட்சரததில் சொல்லியிருக்கிறது. (5 ம. ஐ. 150) ஆனால், அபபடி திருப்பின சொத்து அசையாப்பொருளாயிருந்தால் திருப்பினவனுக்கு அந்த சொத்தில் 4 - ல் ஒரு பங்கு கொடுத்துவிட்டு மீதியைச் சரிபாகமாக எல்லாரும் எடுத்துக்கொள்ளவேண்டியதென்றும் அந்த மிதாட்சரத்திலேயே சொல்லப்பட்டிருக்கிறது.

**184.** ஸர்க்காரால் இனும்,—கவர்ன்மெண்டாரால் வெகுமதியாக கொடுக்கப்பட்ட நிலம் முதலிய சொத்துக்களும், ஒருவனுக்கு தண்டம் விதித்து அவனிடமிருந்து சொத்தைப் பிடுங்கி வேறொருவனுக்குக் கொடுத்த சொத்தும் சுவயார்ஜித சொத்தாகும். (9 மூ. இ. அ. 606 இ. லா. ரி. 8 க. 769; இ. லா. ரி. 3 பம். 186) ஆனால், இப்படி பிடுங்கப்பட்ட சொத்து அப்பீலில் அல்லது பின்னால் அநியாயமென்று சொத்தைத் திருப்பிக்கொடுத்தால் அது மறுபடி பொதுசொத்தாகும். (இ. லா ரி. 12 க. 1.) சர்க்கார் கிஸ்திக்காக ஒருவனால் மொத்தமாய் ஒரு நிலத்துக்காகப் பணம்கொடுத்துப் பட்டாபெற்றால் அந்த நிலம் சுவயார்ஜித சொத்தாகாது (இ. லா. ரி. 10. ம. 1)

185. ருஜுபாரம்.—(1) குடும்பம்பிரிக்கப்பட்டதென்றாவது, பிரிவினையாகவில்லையென்றாவது, சுவயார்ஜிதமாய்ச் சம்பாதிக்கப் பட்டதென்றாவது, பிதுரார்ஜித சொத்தே இருந்ததில்லையென்றா வது, பொதுச்சொத்தை அக்கிரமமாய் பெண்சாதி முதலியவர்கள் பேரில் எழுதிவைத்திருக்கிறானென்றாவது வாதிப்பவர்களே அந்த அம்சங்களை ருஜுப்படுத்தவேண்டும்.

(2) பொதுக் குடும்பங்களில் ஒருவன்பேரில்மட்டும் சொத் தின் ஸர்க்கார் கணக்குகள் ஏற்பட்டிருந்தால் அப்படிப்பட்ட சொத்து சுவயார்ஜித சொத்தாகமாட்டாது. (இ. லா. ரி. 6 பம் 225; (இ. லா. ரி. 8 பம் 104; இ. லா. ரி. 8 க. 517; இ. லா. ரி. 2 ம. 19; 11 மூ. இ. அ. 639; இ. லா. ரி. 2 ம 214.)

(3) அவிபக்த குடும்பத்தைச்சேர்ந்த ஒரு பாகஸ்தனிட வச த்திலிருக்கும் சொத்துக்களைப்பற்றி வழக்கு உண்டாய் அவைகள் அவனுடைய சுயார்ஜிதமா அல்லது குடும்பப்பொதுவானதா என்ற கேள்விபிறந்தால், மூலாதாரமாயிருக்கக்கூடிய சிலபூர்வீகசொத்துக் களும் அக்குடும்பத்தில் இருக்கிறதாக ஏற்பட்டவிடத்து தாவா சொத்தைத் தன்னுடைய சுயார்ஜிதமென்று சொல்லுகிற பாகஸ் தனே அச்சங்கதியை முதலில் ருசுப்படுத்தவேண்டும். (12 இ. அ. 134; 22 கல் 85; 10 மதா. 251.) மூலாதாரமாயிருக்கக்கூடிய பூர் வீகமான சொத்து யாதொன்றும் இல்லாமலிருக்கும்போது அல் லது குடும்ப சொத்தானது மிகவும் அற்பமாயிருக்கும்போதும் அவன்பேரில் அப்பளுவு சுமத்தப்படமாட்டாது. அப்போது தா வாசொத்து அவனுடைய சுயார்ஜிதமாகவே பாவிக்கப்படும். (10 மூ. இ. அ. 505; 3 பம். 534.)

(4) மேலும் ஒரு குடும்பஸ்தர்களுக்குள் குடியிருப்பு, சாப் பாடு, சடங்குமுதலியவைகள் ஒன்றாயிருப்பதினாலேயே அக்குடும் பத்தைச்சேர்ந்த ஒரு பாகஸ்தன் வசமிருக்கும் சொத்துக்கள் யாவும் குடும்பப் பொதுவானவைகளென்று பாவிக்கப்படவுமாட் டாது. (1 பங்காள லா ரி. 164; 2 மதா. 19.)

---

## 6 வது கடன்கள்.

—∞⊰⊱∞—

186. கடன் விஷயமாய் தர்மசாஸ்திரம்.-(1) கடனைத்தீர்க்காம லிறந்தவன் மறுஜன்மத்தில் கடன்காரன் வீட்டில் ஊழியக்காரனாக வாவது, தொழில் செய்கிறவனாகவாவது, மிருகங்களாகவாவது பிறந்து உழைக்கவேண்டுமென்றும், சன்னியாசி கடனோடிறந்தால் அவன் புண்ணியமெல்லாம் கடன்காரர்களைச் சேருமென்றும், தகப்பன் பாட்டன் இவர்கள் பட்டகடன்களை பிள்ளை பேரன்கள் தீர்க்கக் கடமைப்பட்டவர்களென்றும், அவர்களிடமிருந்து சொத்து கிடைக்க வேண்டுமென்கிற அவசியமில்லையென்றும் தர்ம சாஸ்திரத்தில் சொல்லியிருக்கிறது. தகப்பன்கடனை வட்டியுடன் பிள்ளையும், பாட்டன் கடனை வட்டியில்லாமல் பேரனும் கொடுக்கவேண்டுமென்று பிரகஸ்பதி சொல்லியிருக்கிறார். முற்காலத்தில் அதன்படியே தீர்ப்பு செய்யப்பட்டிருக்கிறது. (2 பம் ஐ. 64.)

(2) ஆனால், தற்காலத்தில் தகப்பன் பாட்டன் இவர்களிடத்தி லிருந்துஎவ்வளவு சொத்து பிள்ளை பேரன்களுக்குக் கிடைத்ததோ அவ்வளவு கடனைமட்டும் தீர்க்கக்கடமைப்பட்டவனென்றும், ஒரு வேளை அப்படிக் கிடைத்த சொத்தைத் தோற்றுவிட்டாலும், விரயஞ்செய்தாலும் அவர்களுடைய கடனைக் கொடுக்கப் பாத்தியப்பட்டவர்களென்றும் தீர்ப்புச் செய்திருக்கிறார்கள் (2 ம. ஐ. 336; 4 ம. ஐ. 1; இ. லா. ரி. 4 ம. 45; இ. லா. ரி. 6 பம். 309, 1866 ௵த்து பம்பாய் 7-வது ஆக்ட்.) தகப்பன் பாட்டன் பட்டகடன்களை பிள்ளை பேரன் அவர்கள் சொத்தையடையாதபோது கொடுக்க கட்டுப்பட்டவர்களல்லர் (22 ம. 166; 27 ம 243.)

187. நியாயமான கடன்கள்.—(1) ஒருவன் தானேயாவது, தன் ஏஜெண்டினாலாவது, தகப்பன் பாட்டன் முதலிய முன்னோர்களாலாவது, ஏஜண்டும் முன்னோருமல்லாத பெண்சாதி, வேலைக்காரன், சிநேகிதன் முதலிய இதரராளாவது, குடும்ப காலக்ஷேபம், பெண், பிள்ளை இவர்களுக்கு விவாகம், உபநயனம், இறந்தவரின் உத்தரகிரியை சிரார்த்தம் முதலிய காரியத்துக்கு வாங்குகிற கடன்

களும், (2) மேற்சொன்னவை தவிர வேறு குடும்ப காரியங்களுக்கு வாங்குகிற கடன்களும் நியாயமான கடன்களாகும்.

188. தகப்பன்பாட்டன் கடன்கள்.—(1) தகப்பன்பாட்டன் களிடமிருந்தாவது அவர்கள் வழியாகவாவது ஏதேனும் சொத்தை யடைந்திருந்தால் என்று 186-வது பிரிவில் சொல்லப்பட்டதினால், பிள்ளை பேரர்கள் அடைந்திருக்கிற சொத்தானது அம்முன்னோருடைய சுயார்ஜிதமாகவே இருக்கவேண்டுமென்ற அவசியமில்லை. அம்முன்னோருடைய பூர்வார்ஜித சொத்தாகவே யிருந்தாலும் அதைக்கொண்டும் பிள்ளைபேரர்கள் அம்முன்னோருடைய கடன்களைத்தீர்க்கக் கடமைப்பட்டிருக்கிறார்கள். அதாவது, குடும்பப் பொதுவானசொத்தில் தகப்பனுடைய பங்கன்றி பிள்ளையினுடைய பங்கு சொத்தும் தகப்பனுடைய கடனுக்கு பாத்தியப்பட்டதாக இருக்கின்றது. சாஸ்திரவிதிகளையனுசரித்து தகப்பனுடைய கடன்களைப் பிள்ளையானவன் தீர்க்கவேண்டியதற்கு அவைகள் குடும்பார்த்தமானசெலவுக்காகவே ஏற்பட்டிருக்கவேண்டுமென்ற அவசியமுமில்லை. குடும்பார்த்தமாயில்லாமல் தகப்பனுடைய சொந்த உபயோகத்துக்காகவே வாங்கப்பட்டதாக இருந்தாலும் அப்படிப் பட்ட கடன்களையும் பிள்ளையானவன் குடும்பசொத்து முழுவதை யுங்கொண்டு தீர்க்கக்கடமைப்பட்டவனாகி இருக்கிறான். (1 இ. அ. 321; 7 கல் 52; 6 இ. அ. 88; 4 மது, 1; 9 இ. அ. 128; 8 அல. 231; 16 மது. 99; 20 கல். 328; 27 மது. 326.)

(2) ஆனால் அக்கிரமமாயும் அனுவசிதமாயும் கடன்வாங்கினால் அந்தக்கடனுக்கு தகப்பன் பாகமட்டும் கட்டுப்படுமேயன்றி பிள்ளை கள்பாகம் கட்டுப்படாது. குடும்பத்தில் தகப்பன் உதாரத்தனமாய் கடன்வாங்கி செலவழித்தால் அக்கடனுக்குபிள்ளைகள் கட்டுப்பட வேண்டியதுதான். (1 இ. அ. 321; 4ம. 1; 17 இ. அ. 11; 17 கல் 584.)

189. துர்விபாபாரக்கடன்.–(1) தாசிகமனம், சூது, குடி துஷ் டகிருத்யம் முதலிய அயோக்கியமான காரியங்களைச் செய்வதற்கா கக்கடன்பட்டிருந்தால் அவைகளைத் தீர்க்கப் பிள்ளை கட்டுப்பட்டவ னல்ல. பிரதிப்பிரயோசனமின்றி தகப்பனால் வாக்குத்தத்தஞ் செய்த

பொருளையும், கன்யாசுல்கத்துக்காக அவன் கொடுக்கவேண்டிய பாக்கியையும் கொடுக்க புத்திரன் கட்டுப்பட்டவனல்லன், (2 பா ரோ. 194) தகப்பன் எவனுக்காவது ஜாமீனாக நின்றாலும் அதையும் பிள்ளை தீர்க்க பாத்தியப்படக்கூடாதென்று தர்மசாஸ்திரத்திலிருந்தபோதிலும், தற்காலத்தில் அதை தீர்க்கவேண்டுமென்றே தீர்ப்புச்செய்யப்பட்டிருக்கின்றது. இ. லா. ரி 11. ம. 83. தகப்பன்பேரில்போடப்பட்ட அபராதமாவது, அபகரிக்கப்பட்ட பொருள்விஷயமாயேற்பட்ட டிகிரியாவது பிள்ளையை பாதிக்காது. (இ. லா. ரி. 6 அ. 234.) தகப்பனிடமிருந்து எவ்வளவு பிதுரார்ஜித சொத்து பிள்ளைக்குக்கிடைத்திருந்தாலும், நியாயமில்லாத அக்கிரமமான கடன்களென்று ஏற்பட்டால் அவைகளைப்பிள்ளை கொஞ்சமேனும் தீர்க்கமாட்டான். ஸ்வயார்ஜிதசொத்து அவனுக்கிருந்தால் அதிலிருந்து அவன்கடனைத் தீர்க்கலாம். அக்கிரமமாய் கடன்கள்வாங்கி துர்வினியோகம் செய்யப்பட்டதென்று வாதிப்பவர்களே அத்துர்வினியோகங்களைப் பூர்த்தியாய் ருஜுப்படுத்தவேண்டும். (இ. லா. ரி. 10 க. 717; இ. லா. ரி. 14 பம். 320.)

(2) ஆனால் துன்மார்க்கமாயும் அக்கிரமமாயுமுள்ள செலவுகளுக்காக தகப்பன் கடன்கள் வாங்கியிருந்தால் அப்படிப்பட்ட கடன்களுக்கு தகப்பனுடைய பங்குமட்டும் பாத்தியப்படுமேயன்றி பிள்ளையினுடைய பங்கு சொத்து எவ்வளவும் பாத்தியப்படமாட்டாது. 20 கல். 258; 11 மது. 64; 27 மது. 326; 6 அல. 234; 24 பம். 343.)

(3) தாசிவேசிகள் விஷயமாயும் கள் சாராயம் குடித்தல் சூதாடுதல் முதலான கெட்டநடத்தை விஷயமாயும் செய்கிற செலவுகள் துன்மார்க்கமான செலவுகளெனப்படும். அயோக்கியமான செய்கைகளையும் சர்க்காரால் தண்டிக்கப்படத்தக்க குற்றங்களையும் செய்வதினால் ஏற்படும் செலவுகளும் தண்டங்களும் அபராதங்களும் அக்கிரமமான செலவுகளாகும். இவ்வகைப்பட்ட காரணங்களால் தகப்பனால் வாங்கப்படும் கடன்களைத் தீர்க்கவேண்டிய கடமை பிள்ளைக்கு ஏற்படுகிறதில்லையென்று தர்மசாஸ்திரங்களில் கூறியிருக்கிறதை யனுசரித்து அப்படிப்பட்ட கடன்களுக்கு பிள்ளை எவ்வள

வும் பாத்தியப்பட வேண்டியதில்லையென்று எல்லா ஹைகோர்ட்டு களாலும் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது.

(4) ஆனாலும் தகப்பன்பட்ட ஒரு கடனானது துன்மார்க்க மான அல்லது அக்கிரமமான செலவுகளுக்காக அவனால் வாங்கப் பட்டதென்றும் அதுகாரணம்பற்றி தான் அதற்குக் கட்டுப்பட்ட வனல்லவென்றும் பிள்ளையானவன் வாதம்செய்தால் அப்படிப்பட்ட வாதத்தை திருப்தியாய் ருசுப்படுத்தும்பளுவு அப்பிள்ளையினுடைய தாகவே இருக்கிறது. அதைத்திருப்தியான சாக்ஷியத்தால் ருசுப் படுத்தாதவரையில் பிள்ளையானவன் அக்கடனுக்கு பாத்தியப்பட் டே தீரவேண்டும். (15 இ. அ. 99; 12 அல. 99; 12 பம். 625; 14 பம். 320.)

(5) கடன்பட்ட தகப்பன் ஊதாரித்தனமாயும் விமரிசையில் லாமலும் தாறுமாறுகச் செலவுகள் செய்துவந்தான் என்பதினுலே யே அவனுடைய கடன்கள் துன்மார்க்கசம்பந்தமாய் அல்லது அக் கிரமமாய் ஏற்பட்டனவென்று எண்ணப்படமாட்டாது. இன்ன கட னானது இன்னகுறிப்பிட்ட துன்மார்க்கமான அல்லது அக்கிரம மான நடத்தையால் ஏற்பட்டது என்று பிரத்தியேகமான சாக்ஷிய த்தால் ருசுப்படுத்தப்படவேண்டும்; இல்லாவிடில் பிள்ளையினுடைய வாதம் பிரயோஜனப்படமாட்டாது.

(6) தகப்பன் வேறு யாருக்காகிலும் ஜாமீனுகநின்று கடன் வாங்கிக்கொடுத்திருந்தால் அச்சாமீன் கடனுக்கும் பிள்ளைகள் பாத் தியப்படவேண்டியவர்களாக இருக்கிறார்கள். ஜாமீன் கொடுப்பதா னது துன்மார்க்க சம்பந்தமானதுமல்ல, அக்கிரமமானதுமல்ல. ஆகையால் அதற்குப்பிள்ளைகளுடையபங்கு சொத்தும் பாத்தியப் பட்டதாக இருக்கிறது. அதாவது கடன்கொடுத்தவன் ஜாமீன்தார னுடைய பிள்ளைகளின்பங்கு சொத்தின்பேரிலும் தொடர்ந்து அக் கடனை வசூல்செய்துகொள்ளலாம். (11 மது, 373; 23 பம் 454.)

(7) ஆனபடியால் தகப்பனுடைய கடன்களுக்கு பிள்ளைகள் எம்மட்டும் பாத்தியப்பட்டிருக்கிறார்களென்பதுகடனின்தன்மையை யனுசரித்ததாக இருக்கிறதேயன்றி தகப்பனிடமிருந்து அடைந்திரு க்கிற சொத்தின் தன்மையைப் பொறுத்தாக இல்லை. அதாவது,

சொத்தானது தகப்பனுடைய சுயார்ஜிதமாக இல்லாமல் பூவார்ஜித மானதாகவே யிருந்தாலும் துன்மார்க்க சம்பந்தமாயும் அக்கிரமமா யுமுள்ள கடன்கள் நீங்கலாக மற்றெவ்வகைப்பட்ட தகப்பனுடைய கடன்களுக்கும் பிள்ளையினுடைய பங்குசொத்து பாத்தியப்பட்ட தாக இருக்கின்றது. (6 மூ. இ. அ. 421; 1 இ. அ. 321; 11 மது. 64; 12 மது. 309; 27 மது. 326.)

(8) ஆனாலும் ஒருவனுடைய எல்லாக்கடன்களுக்கும் அதா வது ஒருவனுடைய துன்மார்க்கமாயும் அக்கிரமமாயுமுள்ள கடன் களுக்குங்கூட அவனும் அவனுடையதனியான சொந்த சொத்துக் களும் பாத்தியப்பட்டதாக இருக்கிறபடியால், தகப்பனிடமிருந்து பிள்ளை அடைந்திருக்கும் சொத்தானது அத்தகப்பனுடைய சுயார் ஜிதமானதாக இருந்தால் அப்போது அவனுடைய துன்மார்க்கமா யும் அக்கிரமமாயுமுள்ள கடன்களையும் பிள்ளையானவன் அச்சொத் தைக்கொண்டு தீர்க்கக்கடமைப்பட்டவனாகிறான். அதாவது:—அவி பக்தகுடும்பத்துக்குரித்தான ஸர்வைவர்ஷிப் பாத்தியப்படிக்கல்லா மல் பிள்ளையானவன் தகப்பனிடமிருந்து வார்சு பாத்தியப்படி சொத்தையடைந்திருந்தால் அப்போது அச்சொத்து முழுவதும் தகப்பனுடைய எவ்வகைப்பட்ட கடன்களுக்கும் பாத்தியப்பட்ட தாக இருக்கின்றது. (6 இ. அ. 88; 17 மது. 144; 7 மது. 586.)

(9) தகப்பன்பட்ட கடன்களுக்கு அவனுடைய ஜீவதசைக் குப் பிறகுதான் பிள்ளைகள் பாத்தியப்பட்டவர்களாவார்கள் என்று சாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. ஆனாலும் குடும்பப் பொதுவான சொத்தில் பிள்ளைகளுடைய பங்கானது தகப்பன் உயி ரோடிருக்கும்போதே அவன் கடன்களுக்கு பாத்தியப்பட்டதாக இருக்கின்றது. (20. கல். 328; 11 மது. 64; 22 மது. 49; 27 மது. 326.)

**190.** உதாரக் கடன்கள் —துர்வினியோகமில்லாமல் அவசியமான செலவுக்காக பிதா கடன்பட்டிருந்தால் அவைகளைப் பிள் ளைகளே தீர்க்கவேண்டும். அக்கடனால் பிதுரார்ஜித சொத்து முழு மையும் போகிறதாயிருந்தால்கூட பிள்ளைகள் தங்கள் பாகத்தை யுஞ் சேர்த்து கடனைக்கொடுத்துவிடவேண்டும். (6 மூ. இ. அ. 421; இ. லா. ரி. 3 ம. 370; 14. க. ஜ. 187; இ. லா. ரி. 5 க. 148; இ.

லா. ரி. 9 க. 389; இ. லா. ரி. 4 ம 1; 1 இ. அ. 321; 17 இ. அ. 11; 17. க. 584.)

**191.** குடும்ப எஜமானன் அதிகாரம்.—(1) குடும்பத்தலைவனு யிருக்கும் குடும்பமானேஜரானவன் குடும்பகாரியங்களை நடத்துவதில் குடும்பத்திலுள்ள மற்றெல்லாப்பங்காளிகளின் ஏஜண்டாக பாவிக்கப்படுவான். குடும்பார்த்தமாயுள்ள செலவுகளுக்காக அவசியமானுல் கடன்வாங்க மானேஜருக்கு சட்டப்படி அதிகாரமுண்டு. அவ்வாறு குடும்பார்த்தமான செலவுகளுக்காக கடன்வாங்கும் விஷயத்தில் அவன் மற்றவர்களின் காரியஸ்தனுக இருக்கிறுன். ஆகையால் அவனுல் வாங்கப்படும் குடும்ப அவசியமாயுள்ள கடன்களுக்கு குடும்பத்திலுள்ள மற்றவர்களெல்லோரும் கட்டுப்பட்டவர்களாகிறுர்கள். மேலும் குடும்பார்த்தமான செலவுகளுக்காக கடன்வாங்கும்படி நேர்ந்தால் மானேஜரானவன் மற்றப்பங்காளிகளுடைய சம்மதியைப் பெற்றுக்கொண்டே கடன்வாங்கவேண்டுமென்ற அவசியமுமில்லை. குடும்ப அவசியமாயுள்ள கடன்களுக்கு மற்றவர்கள் சம்மதிகொடுக்க மறுதளித்தாலும் மானேஜரானவன் தன்னதிகாரத்தை இழக்கவுமாட்டான், ஆகையால் குடும்பமானேஜருடைய கடன்களுக்கு மற்றவர்கள் கட்டுப்பட்டவர்களா அல்லவா என்பது தீர்மானிக்கப்படுவதற்கு அக்கடன்கள் குடும்ப அவசியத்தின்பொருட்டு வாங்கப்பட்டனவா அல்லவாவென்பது குறிப்பேயன்றி அக்கடன்களுக்கு அவர்கள் சம்மதிகொடுத்திருக்கிறுர்களா இல்லையாவென்பதும் அக்கடனின் வசூலுக்காக செய்யப்பட்ட தாவாவில் அவர்கள் கக்ஷிக்காரர்களா அல்லவாவென்பதும் காரணங்களாக மாட்டாது. (20 கல். 453; 23 பம். 372.)

(2) குடும்பார்த்தமாய் ஏற்பட்ட ஒருகடனை காலாவதியாய் போவதற்கு முந்தி ஒப்புக்கொண்டு அதன்காலாவதியை அதிகப்படுத்தவும் மானேஜருக்கதிகாரமுண்டு. ஆனுல் காலாவதியாய்ப்போன ஒருகடனை குடும்பசொத்திலிருந்து தீர்க்கமானேஜருக்கு அதிகாரமில்லை. (5 மது 169; 17 பம் 512.)

(3) குடும்பார்த்தமான செலவுகளுக்காக குடும்பமானேஜரானவன் தன்சொந்த ஐவேசிலிருந்து செலவு செய்திருந்தாலும் அல்லது

தன்சொந்த ஜவாப்தாரித்தனத்தின்பேரில் கடன்வாங்கியிருந்தாலும் அவற்றைக் குடும்பப்பொதுவான சொத்திலிருந்து வாப்சுபெற்றுக் கொள்ள அவன் உரிமையுடையவனாக இருக்கிறான். (20 கல் 18.)

(4) அவிபக்த குடும்பத்திலுள்ள ஒரு பாகஸ்தனால் குடும்பார்த்தமான செலவுகளின்பொருட்டு வாங்கப்பட்டிருந்த கடனின் வசூலுக்காக கடன்கொடுத்தவன் வியாச்சியம் செய்வதாயிருந்தால், கடன்வாங்கின மானேஜரையன்றி மற்றபாகஸ்தர்களையும் பிரதிவாதிகளாகச் சேர்த்து அவன் வழக்கிடலாம். அல்லது கடன்வாங்கின மானேஜரைக்குடும்பப்பிரதி நிதியாகவைத்தும் தாவாசெய்யலாம். அப்படிப்பட்ட தாவாவில் பெரும்தீர்ப்பும் கக்ஷிக்காரர்களாக சேர்க்கப்படாத மற்ற பாகஸ்தர்களுடைய பங்குசொத்தையும் கட்டுப்படுத்தும். அதாவது, குடும்பமானேஜரால் குடும்பார்த்தமாய் வாங்கப்பட்ட கடன்களின்பேரில் பிறக்கும் டிக்ரிகளுக்கு எல்லாபாகஸ்தர்களும் கட்டுப்பட்டவர்களாக இருக்கிறார்கள். அவ்வாறு கட்டுப்படுவதற்கு அவர்களும் வியாச்சியத்தில் கக்ஷிக்காரர்களாக இருந்து அவர்கள்பேரிலும் டிக்ரி பிறந்திருக்கவேண்டுமென்ற அவசியமில்லை. அவர்களுடைய பொறுப்பானது கடனினுடைய சுபாவத்தைப்பற்றியதாக இருக்கிறதேயன்றி வழக்கில் அவர்கள் கக்ஷிக்காரர்களாக சேர்க்கப்பட்டிருக்கிறார்களா இல்லையா என்பதைப்பற்றியதாக இல்லை. (10 கல் 1, 14 பம். 597; 18 பம் 147, 21 பம் 616; 23 பம் 372 )

(5) குடும்ப அவசியமானசெலவுகளுக்காக குடும்பமானேஜரால் வாங்கப்பட்ட நியாயமான கடன்கள்மட்டும் மற்றபாகஸ்தர்களையும் கட்டுப்படுத்துகின்றனவேயன்றி தன் அதிகாரவரம்பைமீறி மானேஜர் வாங்கும்கடன்கள் மற்றபாகஸ்தர்களைக் கட்டுப்படுத்தமாட்டாது. (6 மூ. இ. அ. 393.)

(6) ஆகையால் அவிபக்தகுடும்பத்தின் காரியங்களை நடத்தும் மானேஜருக்குக் கடன்கொடுக்கிறவர்கள் மற்ற பாகஸ்தர்களையும் கட்டுப்படுத்தவேண்டுமென்று விரும்பினால், அக்கடன்வாங்கப்படுகிற அவசியத்தையும் நியாயத்தையும்பற்றி செவ்வையாய் விசாரித்துத் தெரிந்துகொண்டும் நல்ல எண்ணத்தோடும் கடன்கொடுக்கவேண்டும். குடும்பமானேஜரால் வாங்கப்பட்டகடனைப்பற்றி வழக்கு

உண்டானல் அக்கடன் குடும்ப அவசியத்தின்பொருட்டு வாங்கப் பட்டதென்பதை ருசுப்படுத்தும்பளுவும் கடன்கொடுத்தவன் பேரிலேயே சுமந்திருக்கிறது. (6 மூ. இ. அ. 393; 21 அல 83; 21 பம் 808; 26 கல் 820.)

**192.** பெண்சாதிவாங்கும் கடன்.—(1)குடும்பவிஷயமான காரியங்களை நடத்துவதில் பெண்சாதியானவள் சிலசமயங்களில புருஷனுடைய ஏஜண்டாக ஏற்படுகிறாள். அவள் தன்னுடையவும் தன் குடும்பத்தினுடையவும் சம்ரக்ஷணைமுதலிய குடும்பார்த்தமான செலவுகளுக்காக கடன்வாங்கினல் அவைகளுக்கு புருஷன் கட்டுப் பட்டவனுக இருக்கிருன். (1 அல 122; 9 அல 147.)

(2) ஆனல் புருஷனுடைய கட்டினின்றும் விலகி தனியே இருப்பவளுடைய கடன்களுக்கு புருஷன் கட்டுப்பட்டவனுக மாட்டான். (1 மது. ஹை. கோரி. 375.)

(3) புருஷனல் கொடுக்கப்பட்ட அதிகாரத்தின்பேரில்பெண் சாதியானவள் புருஷன்பொருட்டு ஒருகாரியம் அல்லது அலுவலை நடத்தினல் அதுவிஷயமாக தன் அதிகாரவரம்புக்குட்பட்டு பெண் சாதி வாங்கும் கடன்களுக்கு புருஷன்கட்டுப்பட்டவனுகிருன்.

**193.** வியாபாரத்துக்காக குடும்ப பொதுகடன்.—அவிபக்த குடும்பஸ்தர்கள் ஒன்றுசேர்ந்து வியாபாரம்முதலிய காரியங்களைக் கூட்டாகநடத்தினல் அவைகளிலிருந்து ஏற்படுகிற லாபநஷ்டங்கள் குடும்பத்தாரெல் லோருக்கும் பொதுவாய் பாத்தியப்பட்டதாக இருக்கின்றன. ஆகையால் அக்காரியங்களை நடத்துகிற முக்கியஸ்தன் அல்லது முக்கியஸ்தர்கள் அவைகளின்பொருட்டு குடும்பசொத்தின் நாணயத்தின் பேரில் கடன்வாங்க அதிகாரமுள்ளவர்களாக இருக்கிறார்கள். நல்ல எண்ணத்தோடும் யோக்கியமாயும் வாங்கப் படுகிற அப்படிப்பட்டகடன்களுக்கு மற்றவர்களும் கட்டுப்பட்ட வர்களாக இருக்கிறார்கள். (1 கல் 475; 14 இ. அ. 187; 15 கல் 70; 20 கல் 453; 20 பம் 767.)

**194.** ஒரு பாகஸ்தனின் தனிக்கடன்.—அவிபக்த குடும்பத்திலுள்ள ஒருபாகஸ்தன் தன் சொந்தச்செலவுக்காக கடன்வாங்கினல் அதில் மற்ற பாகஸ்தர்களுக்கு யாதொரு சம்பந்தமும் இல்லை.

கடன்வாங்கினவனும் அவனுடைய பங்கு சொத்துமே அதற்குபாத்தியப்படவேண்டும். (1 மது. 354; 10 கல் 316.)

ஆனல் தகப்பன் பாட்டன் ஆகிய முன்னோர் பட்டகடன்கள் இவ்விதிக்கு விலக்காயிருக்கின்றன. இதைப்பற்றி பின்னல் சொல்லுவோம்.

**195.** தகப்பனிருக்கும்போது பிள்ளைபேரில் பிராது.—தகப்பன் உயிருடனிருந்தும் சன்னியாசியாகப்போனுலும், தேசாந்திரம்போய் 20 வருஷ காலமாய் விட்டாலும், தீராத வியாதியுள்ளவனுயிருந்தாலும் குடும்ப சொத்துப்பிள்ளைக்குச்சேர்ந்ததாக எண்ணப்படுவதால் அப்போது தகப்பன் பட்ட கடனைக்கொடுக்கும்படி அவன் பிள்ளை பேரில் கோர்ட்டில் தாவாசெய்யலாம். சொத்துச் சேராமலிருந்தாலும், தகப்பன் உயிருடனிருந்தாலும் மேற்சொன்ன சந்தர்ப்பந்தவிர அவன் கடனுக்கு பிள்ளைகள் ஜவாப்தாரியல்ல. (1851ளுத்து ம தீ. 33.)

**196.** பொது சோத்தை விற்பது—நியாயமான கடன்களுக்காகத் தகப்பன் பொது சொத்தை ஒத்தி பந்தக முதலிய பாத்தியங்களுக்கு உட்படுத்தவும் கூடும். அக்கிரமமான கடன்களுக்கு சுவயார்ஜித சொத்தின் பாகத்தைமட்டும் விற்கலாம் அல்லது பாத்தியப்படுத்தலாம். பிள்ளைகள் பாகத்தை விற்கவும் மற்றப்படி செய்யவும் பாத்தியமில்லை. (14 க. ஐ. 187; 15 க. ஐ. 264; இ. லா. ரி. 3 க. 1; இ. லா. ரி. 5 பம். 622; இ. லா. ரி. 3 அ. 625, 125; இ. லா. ரி. 6 பம். 520; இ. லா. ரி. 8 க. 517; இ. லா. ரி. 5 ம. 61; இ லா. ரி 7 பம் 438; இ. லா. ரி. 8 பம். 481; இ. லா. ரி. 9 ம. 343; இ. லா. ரி. 11 க. 396.) மேலே சொல்லியபடி தகப்பன் கடனுக்காகச் சொத்தை ஒத்தி முதலிய பந்தகம் வைக்கும்போது பிள்ளைகள் மைனராயிருந்தால் செல்லும். இல்லாவிடில் அவர்கள் அனுமதி அவசியம்.

**197.** பொதுசோத்தின்பேரில் டிகிரியை நிறைவேற்றுதல்.—தகப்பன்பட்ட நியாயமான கடனுக்காக குடும்பப் பொதுசொத்தை பாத்தியப்படுத்தி யிருந்தால், கடன்காரன் தகப்பன்பேரில்மட்டும் அடைந்த தீர்ப்பைக்கொண்டு பொதுசொத்து முழுவதையும் ஜப்தி செய்து ஏலம்போடலாம். (இ. லா. ரி. 3. க. 148; இ. லா. ரி. 4 ம. 1; இ. லா. ரி. 9 ம. 343; இ. லா. ரி. 5 ம. 251; இ. லா. ரி. 8 க.

517. இ. லா. ரி. 8 ம. 388; இ. லா. ரி. 6 பம். 520; இ. லா. ரி. 10 க. 626; இ. லா. ரி. 8 அ. 205; இ. லா. ரி.4 ம. 111.) ஆனல், பிள்ளைகள் அந்த பாத்நிபத்தைத் தீர்க்க முன்வந்தால் அவர்களுக் கிடங் கொடுக்கவேண்டும். (இ. லா. ரி. 4 ம. 1, 69; இ. லா. ரி. 8 க. 525; இ. லா. ரி. 8 பம். 481.)

**198.** நியாயமான கடனைப்பற்றியதாவாவில் பிள்ளைகளை கக்ஷிக் காரர்களாக சேர்க்கவேண்டாமென்பது.–(1) நியாயமாய் பிள்ளைகளும் கட்டுப்படக்கூடிய கடன் விஷயமான தாவாவில் பிள்ளைகளை விட்டு விட்டுதகப்பனை மட்டும் கக்ஷிக்காரனுக சேர்த்திருந்தால் தகப்பன் பேரில் பெற்றடிகிரிவைய பிள்ளைகளின் பங்கையும்சேர்த்து முழுசொத் தின்பேரிலும் நிறைவேற்றலாம். (21 அல. 356; 21 பம். 616; 23 பம். 72; 21 ம. 122; 22 ம. 207; 13 இ. அ 1.)

(2) தாவாவில் பிள்ளைகளைச் சேர்க்காமல் டிகிரியை தகப்பன் பேரில் பெற்றபோதிலும் டிக்கிரியை நிறைவேற்றுகையிலும் ஏல நடவடிக்கைகளிலும் பிள்ளைகளையும், அவர்கள் சொத்து பங்கையும் சேர்க்காமல் குடும்ப பொது சொத்தை ஏலம்போட்டால் அந்த ஏலத் தால் பிள்ளைகள் கட்டுப்படமாட்டார்கள். (இ. லா. ரி. 5. க. 148; இ. லா. ரி. 15 க. 717; 14 ச. ஐ. 187; இ.லா.ரி. 12 ம, 142 14 இ. அ. 84; 10 ம. 241; 11 ம. 64; 11 பம். 42. 24 பம். 343.) "தகப்பன் கடனுக்காக சகலசொத்தும் ஏலம் போடப்படும்" என்று கோர்ட்டார் பிறப்பிக்கிற இஸ்தியாரினுல் தகப்பனுக்குண்டான பாத்தியமட்டும் ஏலம்போடப்படுமென்று அர்த்தஞ்செய்யக்கூடாது தகப்பன் பட்டகடனுக்கு குடும்பசொத்தை எவ்வளவு வினியோகஞ் செய்ய பாத்தியமிருக்கிறதோ அவ்வளவென்று எண்ணவேண்டும் (இ. லா. ரி. 13 க. 21) பிராதிலாவது, நிறைவேற்றுகிற மனுவிலாவது, ஏலச்சர்ட்டிபிகேட்டிலாவது, ஏலம் போட்டுவந்ததுகைபானது தகப்பனுடைய பாத்தியமட்டில் நடவடிக்கையில் கொண்டுவரப் பட்டதாக நிச்சயமாய்த் தெரியவந்தால். அந்த ஸ்திதியில் பாக்கிக் கடனுக்குப் பிள்ளைகளின் பாகம் கட்டுப்படாது. (இ. லா. ரி. 11 பம். 42; இ. லா. ரி. 10 ம. 241, இ. லா. ரி. 3 க. 198; இ. லா. ரி. 10 க. 998.) குடும்பத்தாருடைய பாத்தியங்களெல்லாம் மேற்கண்ட நடவடிக்கைகளில் சேர்க்கப்பட்டு ஏலம் போடப்பட்டிருந்தால், அதில் ஏதாவது கொஞ்சம் தவறுதல் ஏற்பட்டிருந்தாலும், ஏலத்தை

ரத்துசெய்யமுடியாது. (14 மூ. இ. அ. 605; இ. லா. ரி. 10 க. 985 இ. லா. ரி; 11 பம். 361; இ. லா. ரி. 14 க. 401; இ. லா. ரி. 16 க. 40.)

ஆகையால் வியாச்சியமுதலிலேயே பிள்ளைகளை கக்ஷிக்காரர்களாக சேர்ப்பது அவசியமானதாகும் (12 அல. 99; 9 ம. 343; 11 ம. 64)

199. பிள்ளைகள் ஏலத்தைப்பற்றிய விவாதம்.—அயோக்கியமான கடன்களுக்காக குடும்ப பொதுசொத்து முழுவதும் ஏலம் போடப்பட்டு கடன்காரனே அந்த சொத்துக்களை ஏலமெடுத்திருந்தால், பிள்ளைகள் அவன்பேரில் பிராதுசெய்து கடன் அயோக்கியமானதென்கிற அம்சத்தை ருசுப்படுத்தித் தங்கள் பாகத்தைத் திருப்பிக்கொள்ளலாம். (இ. லா. 5 க. 855; இ. லா. ரி. 8 க. 522) கடன்காரனைத் தவிர வேறே யாராவது ஏலமெடுத்திருந்தால் அப்படி ஏலமெடுத்தவருக்கு கடன்கள் அயோக்கியமானவையென்று ஏலத்திற்கு முந்தியே தெரிந்திருந்தும் சொத்தை ஏலமெடுத்திருக்கிறானென்கிற அம்சத்தையும் ருஜுப்படுத்தவேண்டும். அப்படி ருஜுச் செய்யாவிட்டால் பிள்ளைகள் தங்கள் பாகத்தையடைய முடியாதென்று பிரிவிகவுன்சிலார் தீர்ப்புச்செய்திருக்கிறார்கள். (14 க. ஐ. 187; 22 ஸ. 56; இ. லா. ரி. 5 க 148; இ. லா. ரி 12 பம். 625; இ. லா. ரி 8 பம். 481) பிராது மனுவிலேயே கடன் துர்வினியோகங்களுக்கு வாங்கப்பட்டதாக ஏற்பட்டு, சொத்து ஏலம் போடப்பட்டிருந்தால், அந்த சங்கதி தெரிந்தே ஏலமெடுத்தவன் ஏலத்திலெடுத்திருப்பதாக எண்ணப்படுவதால், பிள்ளைகள் வேறு ருஜுச் செய்யாமலே தங்கள் பாத்தியதையை அடையலாம். (இ. லா. ரி. 6 அ. 234) வேறு சில கேசுகளில் கடன் அயோக்கியமென்று கொஞ்சங்கூட அறியாமலே ஏலத்தில் எடுத்திருந்தாலும், பிள்ளைகள் ஏலதாரன்பேரில் தாவாசெய்து தங்கள் பாகத்தைத் திருப்பியடையலாமென்று ஏற்பட்டிருக்கின்றன. (இ. லா. ரி. 12 ம. 142; 13 க 121; 15 க 717; இ. லா. ரி. 17 க. 584)

200. தகப்பன்பேரில் ஏற்பட்ட டிகிரியை பிள்ளைபேரில் நிறைவேற்றக் கூடாதென்பது.—கடனுக்காக தகப்பன்பேரில் பெற்ற டிகிரியை நிறைவேற்றுவதற்கு நடவடிக்கைகள் நடத்தி ஜப்திசெய்வத

ற்கு முன் அவனிறந்தால் அந்த டிகிரியை பிள்ளைகளிடஞ்சேர்ந்த தகப்பன் சுவயார்ஜித சொத்துத்தவிற பிதுரார்ஜித சொத்தின்பேரில் நிறைவேற்றக்கூடாது. பிதுரார்ஜித சொத்தைக் கட்டுப்படுத்த இஷ்டமிருந்தால் தகப்பனிறந்த 6-வருஷத்துக்குள் பிள்ளைகள் பேரில் தாவா செய்யவேண்டும். (இ. லா. ரி. 5 ம. 232; 3 ம. 42; 13 ம. 265.) மேற்சொன்ன கடன் அயோக்கியமானவை யென்று ஏற்பட்டால், பிள்ளைக்குக் கிடைத்த பிதுரார்ஜித தகப்பன் பாகங்கூடக் கட்டுப்படமாட்டாது. தகப்பனுயிருடனிருக்கும்போது பிள்ளை பாகத்தை ஜப்திசெய்திருந்தால் செல்லும். (இ. லா. ரி. 5 க. 148.)

201. சொத்தையும் கடனையும் பாகஞ்செய்துகொள்வது.—தகப்பனிறந்த பிறகு பிள்ளைகள் கடன்காரர்களுக்குக் கொடுக்கவேண்டிய கடன்களைத் தீர்க்காமல், சொத்தையும் கடன்களையும் அவர்களெல்லோரும் பிரித்துக்கொண்டால் அந்த பாகத்துக்குக் கடன்காரன் சம்மதித்தாலொழிய அவர்களுடைய பாகங்களையெல்லாம் கடன்காரன் கட்டுப்படுத்தலாம். தகப்பன்பட்ட கடனுக்கு ஏற்பாடு செய்யாமல் சொத்தை பிள்ளைகள் பிரித்துக்கொள்ளக்கூடாது. (6 ம. ஐ 177, 181.)

202. பிள்ளைகளுடன் பாகஞ்செய்து கொண்ட பிறகு தகப்பன் கடன்கள்.—தகப்பனும் பிள்ளைகளும் சொத்துக்களைப் பிரித்துக் கொண்டபிறகு தகப் ன் கடன் வாங்கினுல் அதை அவன் பாகத்திலிருக்கும் சொத்தைக்கொண்டே தீர்க்கவேண்டியதே யொழிய பிள்ளைகளுடைய சொத்தை பாத்தியப்படுத்தக்கூடாது. பாகத்துக்குப் பிறகு தகப்பனுக்கு வேறு பிள்ளைபிறந்தால் அந்தப்பிள்ளையின் பாகமட்டும் அதற்குக்கட்டுப்படும். ஆனுல், கடன்காரனை மோசஞ்செய்வதற்காக பாகஞ் செய்துகொண்டால் தகப்பன் கடனுக்குப் பிள்ளைகளின் பாகசொத்தும் கட்டுப்படவேண்டியது. (22 ம. 519.) கடனை துரோசஞ்செய்வது பாவமானதால் காலாவதியாய்ப்போய்விட்ட கடன்களை யொப்புக்கொண்டு அவைகளையுயிருண்டாக்கிக்கொடுக்கவும், அக்கடனுக்காக பாகஞ் செய்துகொண்டபிள்ளைகள் சொத்துள்பட தன்சொத்தையும் பாத்தியப்படுத்தலாம். (6 ம. 293 )

**203** கடனுக்குப் பேரன் கொள்பேரன் கட்டுப்படுவது — இது வரையில் தகப்பன் வாங்கின கடன்களைப் பிள்ளைகள் தீர்ப்பதைப் பற்றிச் சொன்னோம். பாட்டன், முப்பாட்டன் பட்டகடன்களையும் பேரன் கொள்பேரன்கள் கொடுக்கக் கடமைப்பட்டிருக்கிறார்கள். தகப்பன், பாட்டன், முப்பாட்டன் இவர்களைத் தவிர, பொதுக்குடும்பத்திலுள்ள மற்றவர்கள் வாங்குகிற கடன்களுக்குப் பிள்ளை கட்டுப்படமாட்டான். (19 அல. 26.)

**204.** பொது குடும்பத்தில் பாகஸ்தர்களுடைய கடன்கள்.— பொது குடும்பத்தில் தகப்பனைத் தவிர வேறு பிள்ளைகள், அண்ணன் தம்பி, முதலியவர்கள் கடன்வாங்கி அந்தக்கடனுக்காக தங்கள் பாகத்தை விற்கலாம் அல்லது வேறேவிதமாய் பாத்தியப்படுத்தலாம். அதை வாங்கினவன் அல்லது பாத்தியதாரன் அந்த பாகஸ்தன் உயிரோடிருக்கையிலேயே சொத்தைச் சுவாதீனப்படுத்த தாவா செய்து அமுல் நடத்தியிருக்கவேண்டும். இல்லாவிடில் அவன் பாகம் மற்ற பாகஸ்தர்களுக்குச் சேர்ந்துவிடும். (11 பம். ஐ. 76; இ. லா. ரி. 2 பம். 479; இ. லா. ரி. 8 அ. 495; இ. லா. ரி. 11 அ. 302; 3 க. ஐ. 343, 37; இ. லா. ரி. 7 க. 52. 54; 1 ம. லா. ரி 63, 4 அ. ஐ. 127; இ. லா. ரி. 3 க. 198; இ. லா. ரி. 5 க. 148; இ. லா. ரி. 7 அ. 731; இ. லா. ரி. 4 ம. 302; 6 இ. அ. 88.)

**205.** சொத்தை யடைந்தவன் கடனுக்கு ஜவாப்தாரி.—ஒருவன் பட்டகடனைத் தீர்க்க அவனுடைய பிள்ளை, பேரன், கொள்பேரன் இவர்களைத்தவிர, அவனுடைய பெண்சாதி, தகப்பன் முதலியவர்கள் கட்டுப்பட்டவர்களல்ல. ஒருவன் தன் தகப்பன் முதலிய முன்னோர்களும் ஏஜெண்டுகளும் பட்டகடன்கள் தவிற மற்றவர்கள் வாங்கின கடன்களை கொடுக்கக்கடமைப்பட்டவனல்ல. [(இ. லா. ரி. 10 ம. 316; 1855ஆு ம. தீ, 183; 12-ம. 325.) ஆனால், ஒருவனுடைய ஆஸ்தி வார்சுபாத்தியமாகச் சேர்ந்தால், அந்த ஆஸ்தி எவ்வளவு பெறுமோ அவ்வளவு கடனைமட்டும் அவன் தீர்க்கவேண்டும். (இ. லா. ரி. 3 ம. 359; 7 ம. 586)

**206.** சேத்துப்போய்விட்டாலும் கடனைத்தீர்க்கும் பொறுப்பு விலகாது.—இறந்தவனுடைய சொத்தையடைந்த ஒருவன் அச்சொத்தைத்தன் சொந்த செலவுகளுக்காக விநியோகப்படுத்திவிட்

டாலும் சொத்துதாரனுடைய கடனைத்தீர்க்கவேண்டிய கடமை அவனைவிட்டு விலகிப்போகமாட்டாது. அச்சொத்தினளவுக்கு அவன் சுதாவிலும் பாத்தியப்பட்டவனாக இருக்கிறான். (8 பம். 220.)

**207.** தகப்பன் முதலிய முன்னோர்தவிர மற்றவர்கடனை யடைக்க பாத்தியமில்லை யென்பது.—தகப்பன் முதலிய முன்னோர்பட்ட கடனைத் தவிர மற்ற தாயாருடைய சொந்தக்கடனுக்கு மகனாவது மகனுடைய சொந்தக்கடனுக்கு தாய் தகப்பனாவது பாத்தியப்பட்டவர்களல்ல. அண்ணன் தம்பி முதலிய தாயாதிகளில் ஒருவனுடைய கடனுக்கு மற்றவன் பாத்தியப்படவேண்டியதில்லை. புருஷனுடைய சொந்தக்கடனுக்கு பெண்சாதியாவது பெண்சாதியினுடைய சொந்தக்கடனுக்கு புருஷனாவது பாத்தியப்பட்டவர்களாக மாட்டார்கள். 206-வது பிரிவிற்கூறியபடி மேற்சொல்லியவர்களில் ஒருவன் மற்றொருவனுடையசொத்தை வார்சுபாத்தியப்படி அடைந்திருந்தால் மட்டும் அச்சொத்தினளவுக்குள்ள கடன்களுக்கு அவன் பாத்தியப்பட்டவனாவான்.

**208.** பொது குடும்பத்தின் ஒருபாகஸ்தனின் சொந்தகடன்.—(1) அவிபக்த குடும்பத்தில் தகப்பன் முதலிய முன்னோர் தவிர வேறு பாகஸ்தன் எவனாவது தன் சொந்தத்தில் கடன்வாங்கினால் அவன் குடும்பசொத்தில் தனக்குள்ள பங்கைக்கொண்டும் தன் சுயார்ஜிதத்தைக்கொண்டும்அக்கடனைத்தீர்த்துக்கொள்ளவேண்டுமேயன்றி மற்றபாகஸ்தர்களுடைய பங்கு சொத்து அக்கடனுக்கு எவ்வளவும் பாத்தியப்படமாட்டாது.

(2) அவிபக்த குடும்பத்திலுள்ள ஒரு பாகஸ்தனுடையசொந்தக் கடன்களுக்கு அவனுடைய பங்குசொத்து பாத்தியப்படவேண்டுமானால் அது அச்கடனுக்காக அப்பாகஸ்தனால் பந்தகபராதீனம் செய்யப்பட்டாவது அல்லது அவன் உயிரோடிருக்கும்போதே கோர்ட்டாரால் ஜப்திசெய்யப்பட்டாவது இருக்கவேண்டும். இல்லாவிடில் அப்பங்கானது அவன் இறந்தபிறகு அவனுடைய கடனுக்கு பாத்தியப்படமாட்டாது. அவன் இறந்தவுடன் அப்பங்கு அவனுடன் மறைந்துபோய் ஸர்வைவர்ஷிப்பு என்னும் பாத்தியப்படி மற்றபங்காளிகளைச்சேர்ந்துவிடுகிறபடியால் அது கடன்காரர்களுக்கு பாத்தியப்படத்தகாததாய் விடுகிறது. உயிரோடிருக்கும்

பாகஸ்தர்கள் இறந்தவனுடைய கடனைத்தீர்க்கக் கடமைப்படாத வர்களாக இருக்கிறபடியால் கடன்வாங்கினவனுக்கு தனியான சொத்து ஏதேனுமிருந்தால் அதன் பேரில்மட்டும் கடன் கொடுத்த வன் தொடரலாமேயன்றி குடும்பப்பொதுவான சொத்தின்பேரில் தொடர நியாயமில்லை. (6 இ. அ. 88; 5 கல். 148; 4 மது. 302; 5 மது. 223; 17 மது. 144. 23 அல. 126.)

209.—வார்சு சர்டிபிகேட்.—(1) கடன்கொடுத்தவன் இறந்து போனபிறகு அக்கடனை அவனுடைய வார்சு அல்லது வார்சுகள் கோர்ட்டு மூலமாய் வசூல்செய்யவேண்டியதாயிருந்தால், அதற்காக அவ்வார்சு அல்லது வார்சுகள் ஜில்லாகோர்ட்டில் மனுசெய்து கொண்டு வார்சு பாத்திய சர்டிபிகேட்டு வாங்கி ஒப்புவிக்கவேண்டும்.

(2) இறந்துபோனவனுக்கு பலவார்சுகளிருந்தால் அவர்கள் ஒவ்வொருவரும் கடன்தொகையில் தன்தன் பங்குக்குள்ளது கிடைக்கவேண்டுமென்று தனித்தனியாய் பலதாவாக்கள் கொண்டுவரக்கூடாது. ஒரு கடன்விஷயமாய் எல்லோருஞ்சேர்ந்து ஒரே தாவாவைக் கொண்டுவரவேண்டும். அவர்களில் யாராவது வாதியாகச் சேர சம்மதிக்காமலிருந்தால் அவன் பிரதிவாதியாக சேர்க்கப்படவேண்டும். (7 அல. 313.)

(3) இறந்துபோனவன் சொத்தொன்றையும் வைக்காமல் கடனை மட்டும் வைத்துப்போனால், அவனுடைய வார்சுகள் அவன் பட்ட கடனைத் தீர்க்கவேண்டியதில்லை. இறந்தவன்சொத்து அவன் வார்சுக்குக்கிடைக்காமல் அயலார் கொண்டுபோய்விட்டாலும், கடன்காரன் இறந்தவன் சொத்தின்பேரில் தாவா செய்யவேண்டுமே யொழிய அவன் வார்சின்பேரில் தாவாசெய்ய நியாயமில்லை. (2—டப்ளியூமேக்னடன் 286.)

(4) இறந்தவனுடைய வார்சில்லாத ஒருவன் அவன்சொத்தை அக்கிரமமாய் அடைந்து அவன் கடனுக்குத் தான்வார்சில்லையென்று வாதாடினாலும் கடன்கொடுத்தவர்கள் அப்படி அக்கிரமமாய் அடைந்தசொத்தின்பேரில் தாவாசெய்யலாம். இறந்தவனுடைய உத்தரகிரியை சிரார்த்தம் முதலியவைகளுக்கு சொத்தை விரயம் செய்ததாக ருஜுச்செய்தால் செல்லும்.

**210.** கடன்காரனை மோசஞ்செய்வது.-(1) கடன்காரனுக்குச் சொத்துசேராமல் செய்யவேணுமென்கிற கெட்ட எண்ணத்தோடு எவனாவது தன்னுடையசொத்தை ஒன்றுசேர்த்து மோசமாய் மிக வும்குறைந்த பிரதி பிரயோஜனத்துக்காவது, அல்லது பிரதிபிரயோ சனமில்லாமலாவது விநியோகஞ்செய்தால் அந்த விநியோகம் செல் லமாட்டாது கடன்காரர்கள் அந்த விநியோகசொத்தின்பேரில் தீர்ப்பை நிறைவேற்றலாம். கெட்டஎண்ணமில்லாமலே தகுந்த பிர திப்பிரயோஜனத்துக்குக்காகவாவது தானமூலமாகவாவது உயில் மூலமாகவாவது சொத்தை விநியோகம்செய்தால் செல்லும். (4 ம, ஐ. 84; இ. லா. ரி. 6 அ. 560; 21 ஸ. 155.)

(2) ஒருவர்சு நல்ல எண்ணத்தோடு தகுந்தபிரதிப்பிரயோ சனத்துக்கு இறந்தவன் சொத்தைப் பராதீனம் செய்தால். இறந்த வனுடையகடன்காரன் அந்தசொத்தின்பேரில் தன்கடனுக்காக தாவா செய்யக்கூடாது. ஆனால், அதைவிற்றவர்சு அதன்மதிப்புக்குச்சரி யானதொகைவரையில் கடனைதீர்க்க பாத்தியப்பட்டவனாவான்.

**211.** சொத்தை யடையாதவர்கள் கடனைத்தீர்ப்பது-(1) இது வரையில் ஒருவன்பட்டகடனை அவன்சொத்தை யடைகிறவன் கொ டுக்கவேண்டுமென்று சொன்னோம். இனிச்சொத்துக்குப் பாத்திய மில்லாதவர்கள் கடனைத்தீர்க்கக் கடமைப்பட்டிருக்கிறார்களென் பதை அடியில்தெரிவிக்கப்பட்டிருக்கிறது. அதாவது (1) குடும்பத் தின்நியாயமான பொதுச்செலவுக்காக வாங்கினகடன் குடும்பத்தி லுள்ள எவனால் வாங்கப்பட்டாலும் எல்லா பாகஸ்தர்களும் கொ டுக்கவேண்டியது. (2) அவசியமான வீட்டுச்செலவுக்காக பெண்சாதி, வேலைக்காரன், சிஷன்முதலியவர்களால்பட்ட கடன்களையும், அதி காரத்தைமீறாமல் ஏஜண்டுகள்செய்த நியாயமான கடன்களையும் எஜ மானன்தீர்க்கக் கடமைப்பட்டவன். (3) பொதுகுடும்பத்தில் கூட் டாகச்செய்த வியாபாரத்துக்காக அவர்களில் ஒருவன்மட்டும் கடன் வாங்கியிருந்தால் அதைக் குடும்பத்தார் எல்லாரும் தீர்க்கவேண்டும். (இ. லா. ரி. 1 க. 475) மேலேகண்ட வியாபாரவிஷயமாய் வாங்கின கடனுக்காக ஒருவன்பேரில்மட்டும் தீர்ப்புப்பெற்றாலும் அந்தத்தீர்ப் பை நிறைவேற்றகுடும்பச்சொத்து முழுவதையும் ஏலம்போட்டால், மற்றபாகஸ்தர்கள் ஆட்சேபிக்க நியாயமில்லை. (இ. லா. ரி. 15 க. 70.)

(2) குடும்பத்தலைவன் சொத்தை பாத்தியப்படுத்தாமல் ரொக்கக் கடன் வாங்கினதற்காக டிக்கிரி பெற்றிருந்தால், அந்தக்கடன் குடும்பச்சிலவுச்கு வாங்கப்பட்டிருந்தாலும், டிக்கிரிபெற்றவன் அந்தக்குடும்பத்தலைவனுடைய பாகத்தைமட்டும் ஜப்திசெய்து விற்கலாமேயொழிய மற்றவர்கள்பாகத்தை ஜப்திசெய்யக்கூடாதென்று பம்பாய்ஹைகோர்ட்டார் தீர்மானித்திருக்கிறார்கள். (இ. லா. ரி. 6 பம். 564; இ. லா. ரி. 11 பம். 700.)

---

## 7-வது சொத்து வினியோகம்.

212. சோத்துக்களின் வினியோகங்கள்.–(a) சொத்துக்களின் வினியோகங்கள் அடியிற்கண்டபடி பலவகைப்படும்.

(1) சரியான பிரதிப் பிரயோஜனத்தின்பேரில் செய்யப்படும் அடமானம், போக்கியம், குத்தகை முதலியபந்தங்கள்.

(2) சரியானபிரதிப் பிரயோஜனத்தின்பேரில் செய்யப்படும் பராதீனமாகிய கிரயம். இதுசொத்துதாரனாலேயே செய்யப்படுகிற சாதாரணகிரயமென்றும் அவனுடையகடன்காரர்களால் கோர்ட்டு மூலமாய் செய்விக்கப்படும் ஏலக்கிரயமென்றும் இருவகைப்படும்.

(3) யாதொரு பிரதிப் பிரயோஜனமுமின்றி இஷ்டததின்பேரில் இனாமாகக் கொடுக்கப்படும் தானம்.

(4) பொதுஜனநன்மையின் பொருட்டும் பரலோகஸார்த்தகமாயும் மதவிஷயமாயும் செய்யப்படும் தர்மங்கள்.

(5) தன்ஜீவதசைக்குப் பிறகு தன்சொத்துக்களை இன்னினார் அடைந்துகொள்ளத்தக்கதென்று ஏற்படுத்திவைக்கும் உயில்.

B பிரதிப் பிரயோஜனத்தின்பேரில் ஏற்படுகிற பந்தக பராதீனங்களைப்பற்றியும் பிரதிப்பிரயோஜனமின்றி செய்யப்படும் தான தர்மங்களைப்பற்றியும் உயில்களைப்பற்றியும் பின்னால் விவரித்துக் காட்டியிருக்கிறது.

C மேலும், சொத்துக்களை விநியோகம் செய்வதில் ஒருவனுக்குள்ள சுதந்திரமானது அச்சொத்துக்களின் பிதுரார்ஜிதம் சுயார்ஜிதமென்ற பிரிவுக்குத்தக்கபடி இருப்பதோடு, சொத்துதாரன் மற்ற பாகஸ்தர்களுடன் சேர்ந்து அவிபக்த குடும்பமாயிருக்கிறனு அல்லது விபக்தனுயிருக்கிறனு என்றதையும் அனுசரித்ததாக இருக்கிறது. இவைகளைப்பற்றி அடியில் வருமாறு தனித்தனியாய் கவனிப்போமாக.

(1) மிதாட்சரப்படி சொத்து வினியோகம்.

**213.** புத்திரசந்ததி யற்றவர்களால் வினியோகம்:—புத்திரசந்ததி அதாவது பிள்ளைபேரன் கொள்பேரன் முதலியவர்கள் இல்லாத ஒருவன் அண்ணன்தம்பி முதலியவர்களுக்குப் பொதுவாயில்லாமல் பிரிந்துபோய் தன்வசமிருக்கிற சுவயார்ஜித பிதுரார்ஜிதமான ஸ்தாவர ஜங்கம சொத்துக்கள் முழுவதையும் அவனிஷ்டப்படி பராதீனம் முதலிய வினியோகஞ்செய்யலாம். (2 மூ. இ. அ. 54; 6 மூ. இ. அ. 309; 3 பம். ஐ. 6; 4. அ. ஐ. 31; 1 ம. ஐ. 51.)

**214.** புத்திரசந்ததியுள்ளவர்களால் வினியோகம்:—புத்திரசந்ததியுள்ள ஒருவன் தன்வசத்திலிருக்கிற சுவயார்ஜிதமான ஸ்தாவர ஜங்கம சொத்துக்களை மட்டும் தன்னிஷ்டப்படி வினியோகஞ்செய்யலாம். (12 க. ஐ. 430; 10 ஸ. 287; 9 மூ. இ. அ. 96, 121; 3 பம். ஐ. 318. இ. லா. ரி. 10 பம் 528; 6 மூ. இ. அ. 77; 4 மூ. இ. அ. 103; 6 ஸ. 71. 77; 7 ஸ. 57; 8 ஸ. 15; 11 ஸ. 436 ) புத்திரன் முதலிய ஆண்சந்ததியாரிடமிருந்து பாகஞ்செய்துகொண்டவனும் தன்னிஷ்டப்படி தன்சொத்தை வினியோகஞ் செய்யலாம். (11 ம. 246 )

**215.** பிதுரார்ஜிதமான தன் பாகத்தைமட்டும் வினியோகம் செய்வது.—தகப்பனும், பிள்ளையும் பாகஞ்செய்துகொண்ட பிறகு அவரவர் தன் தன் பாகசொத்தையும், அதன் பிறகு அவனவன், சம்பாதித்த சொத்தையும் இஷ்டப்படி அவனவன் வினியோகஞ் செய்யலாம். (1862ளூ ம தீ 1. 216.)

**216.** பிதுரார்ஜித பொதுச்சொத்தின்பேரில் தகப்பனுக்குப் பாத்தியம்.—பிதுரார்ஜிதமான ஸ்தாவர ஜங்கம சொத்துக்களைக்கூட

பிள்ளைகளிஷ்டமின்றி தகப்பன் வினியோகஞ்செய்யக்கூடாது. ஆனல் குடும்பத்தில் சாஸ்திரப்படி தானம் முதலிய சத்கர்மங்களுக்காக தன் சக்திக்குத் தக்கபடி ஜங்கம சொத்துக்களைத் தகப்பன் வினியோகஞ் செய்யலாம். மேவேஷிதமாய் வினியோகஞ் செய்யவாவது பிள்ளைகளுக்கு தன்னிஷ்டப்படி பிரித்துக்கொடுக்கவாவது அதிகாரமில்லை. இ. லா. ரி. 1 பம். 561; இ லா. ரி. 10 பம். 545; இ. லா. ரி. 7. ம 357.)

**217.** பிதுரார்ஜிதசோத்தில் பிள்ளைகளுக்கும் தகப்பனுக்கும் சமமானபாத்தியம்.—பிதுரார்ஜிதமான சொத்து விஷயமாய் பிள்ளைகளைக்காட்டிலும் தகப்பனுக்கு அதிகபாத்தியமில்லாமல் சமமாயிருக்கிறது. ஆனல், தகப்பன் மானேஜராக இருந்து கிரமமாய் சொத்துக்களைப் பாதுகாத்து வரவேண்டியது. அனுவசியமாய் சொத்தை வினியோகஞ் செய்தால் செல்லாது. (2 ம. ஐ. 417; 4 ம. ஐ. 61; 6 ஸ. 256; 7 அ. ஐ. 279; 1 அ. 77; இ. லா. ரி. 5 ம. 337; இ. லா. ரி. 8 ம. 75; இ. லா. ரி. 13. ம, 51; 2 பம். ஸ. தீ 75; 6 பம். ஸ. தீ. 71; 8 ஸ. 15; இ. லா. ரி. 2 அ. 635; 3 க. ஐ. 21; 11 ஸ. 343; 1860ளு ம. தீ. 227.)

**218.** தகப்பன்செய்த வினியோகங்களைப் பிள்ளைகள் ஆட்சேபிப்பது அல்லது சம்மதிப்பது.—(1) அனியாயமாக தகப்பன்செய்த பிதுரார்ஜித சொத்து வினியோகங்களைப் பராதீனகாலத்திற் பிறந்த பிள்ளையும், கர்ப்பத்திலிருக்கிற பிள்ளையும் ஆட்சேபித்து ரத்து செய்யலாம். அப்படிப்பட்ட வினியோகத்தைப் பிறந்திருக்கிற பிள்ளை சம்மதித்திருந்தால் அதை அதற்குப்பிறகு பிறக்கிறபிள்ளை ரத்துசெய்யமுடியாது. (5 அ. ஐ. 113; 8 ஸ. 16, 21; 15 க. ஐ. 187; 22 ஸ. 56) வினியோகத்துக்குப்பிறகு கர்பம்தரித்துப் பிள்ளை பிறந்தாலும் அந்தப் பிள்ளை வினியோகத்தை ரத்துசெய்யமுடியாது. (இ. லா. ரி. 4 ம. 307; இ. லா. ரி. 8 ம. 89.) வினியோககாலத்தில் பிறந்திருந்தபிள்ளை அதைரத்துசெய்ய முயலாவிட்டாலும் கர்பத்திலிருந்து பிறந்தபிள்ளை அவனுக்குமுன் தாவாசெய்து வினியோகத்தை ரத்துசெய்யலாம். (11 ஸ. 480.)

(2) தகப்பனல் செய்யப்பட்ட பிதுரார்ஜித சொத்தின்வினியோக விஷயமாய்ப் பிள்ளைகளுக்கு எவ்வளவுபாத்தியங்களுண்டோ

அவ்வளவுபாத்தியங்கள் பிள்ளைகளில்லாதபோது பேரன்களுக்கும், பேரன்களில்லாதபோது, கொள்பேரன்களுக்கும் உண்டு.

219. சுவீகாரப்பிள்ளையின் பாத்தியம்.—தகப்பன்செய்த பிதுரார்ஜிதசொத்தின் துர்விநியோகவிஷயமாய்ப்பெற்றபிள்ளைக்குஆட்சேபித்து ரத்துசெய்ய எவ்வளவுபாத்திய மிருக்கிறதோ அவ்வளவு பாத்தியம் சுவீகாரப்பிள்ளைக்குமுண்டு. ஆனால், சுவீகாரம் எடுப்பதற்குமுந்தி செய்யப்பட்ட துர்விநியோகங்களை ஆட்சேபிக்க சுவீகாரப்பிள்ளைக்கு அதிகாரமில்லை. (11ல. 436; இ. லா. ரி. 5 பம். 630.)

220. விநியோகத்தைச் சம்மதித்தல்.—தகப்பன்செய்த பிதுரார்ஜிதசொத்தின் விநியோகங்களை யுடனேயாவது, பிறகாவது பிள்ளைகள் ஒப்புக்கொண்டால் அந்த விநியோகம்செல்லும். (1860 ஹூ ம. தீ. 258; 1861 ஹூ ம. தீ. 37. 146; இ. லா. ரி. 12 க. 389) பிதுரார்ஜிதசொத்தைவிற்று, பிதாவிற்ற பணத்தைக்கொண்டு வேறு சொத்துவாங்கி பிள்ளைகள் சுவாதீனத்தில்விட்டால் அந்த விற்பனையைப் பிள்ளைகள் ஒப்புக்கொண்டதாகவே எண்ணப்படும். (2 பம். ஐ. 318; 9 ல 511.) சொத்தைவிநியோகஞ்செய்ய சிலபாகஸ்தர்கள் மட்டும் அனுமதிகொடுத்து சிலர்கொடாமலிருந்தால், கொடாதவர்கள் பாகங்கட்டுப்படமாட்டாது. பிதுரார்ஜிதசொத்தை விநியோகஞ்செய்யத் தகப்பனுக்குப் பிள்ளைகள் அனுமதிதந்தகாலத்தில் பேரன்களாவது கொள்பேரன்களாவதிருந்தால் அவர்கள்பாகம் கட்டுப்படாது. (9 ல 367) விநியோகத்துக்குப்பிறகு பேரன் கொள்பேரன்கள் பிறந்தால் அவன்செய்த விநியோகத்தை அவர்கள் ஆட்சேபிக்கக்கூடாது. குடும்ப எஜமானன் பிதுரார்ஜிதசொத்தை வியாபாரவிஷயத்தில் பராதீனஞ்செய்ய அதிகாரமில்லாமற்போனாலும், மற்றபாகஸ்தர்கள் அதற்குச் சம்மதித்திருந்ததாகவே எண்ணப்படும். (இ. லா. ரி. 5 க. 792; இ. லா. ரி. 5 பம். 38; இ. லா. ரி. 14 பம். 194.) பிள்ளைகள் மைனராயிருந்து தக்கவயது வராதவர்களாயிருந்தால்மட்டும் அவர்களனுமதியின்றி பிதுரார்ஜிதசொத்தை மானேஜராயிருக்கிற தகப்பன் அவசியமான குடும்பக்காரியங்களுக்குப்பராதீனஞ் செய்யலாமென்றும் பிள்ளைகள் மேஜராயிருந்தால் அவர்களனுமதி யவசியமென்றும் மிதாட்சர கிரந்தத்தின் அபிப்பிராயப்படிகல்கத்தா ஹைகோர்ட்டில் ஒரு,கேஸ் தீர்மானிக்கப்பட்டிருக்

கிறது. (13 ஸ. 30) ஆனுல், குடும்ப எஜமானன் மேஜரானமற்ற பாகஸ்தர்களுடைய அனுமதியின்பேரில்தான் குடும்பப்பொதுக் காரியங்களுக்கு சொத்தைப் பாதீனஞ்செய்வதாக நம்பப்படுவதால், அவர்கள் அனுமதிகொடுக்காமலிருந்தாலும் மானேஜர் அவர்கள் அனுமதியைக்கேட்காமல் தானே பாதீனஞ்செய்தாலும் செல்லும். (14 ஸ. 80; 1 ஸ. 96; இ. லா. ரி. 4 ம. 18; 6 மூ. இ. அ. 393; 1859௵ பம். ஸ. தீ. 1643; 1 ம ஐ 398; 21 ஸ. 196; இ. லா. ரி. 11 பம். 605.)

**221.** குடும்ப எஜமானன் அதிகாரம்.—பொதுக் குடும்பத்தில் நியாயமானதும் அவசியமானதுமான காரியங்களைச் செய்வதற்காக ஏற்பட்ட கடன்களைத்தீர்க்ககுடும்ப எஜமானன் மற்றபாகஸ்தர்களைக் கேட்காமலே சொத்துக்களைப் பாத்தியப்படுத்தவும் விற்கவும அதிகாரமுண்டு. (6 மு. இ. அ. 393; 3 க. ஐ 423; 12 ஸ. 397; 12 ஸ. 30; 18 க. 311; 9 ம. 266.) ஆனுல், அப்படிப்பட்ட சமயங்களில்தக்க யோசனைசெய்து காரியங்களை நடத்தவேண்டும். சொத்தை விற்றுத்தான் கடனைத் திர்க்கவேணுமென்று அத்தியாவசியமாயிருந்தாலொழிய விற்கக்கூடாது. (1 ஸ. 96; 6 ம. ஐ. 371; இ. லா. ரி. 2 பம். 666; 14 ஸ. 72.) காரணமின்றி அனுவசியமாய்ச் சொத்தின் வினியோகஞ் செல்லமாட்டாது. (1858௵ பம். ஸ தீ. 802.)

(1) ஆகிலும் மேற்சொல்லியவாறுன குடும்பார்த்தமான அவசியம் யாதொன்றுமில்லாமல் மானேஜரானவன் குடும்பப்பொதுவான சொத்தை விநியோகம் செய்யக்கூடாது. அப்படிச்செய்தால் அவனுடைய பங்குமட்டுமே அவ்விநியோகத்துக்கு பாத்தியப்படும். மற்றபாகஸ்தர்களுடைய பங்கு உட்படமாட்டாது. மானேஜருடையவிசேஷ அதிகாரமானது இவ்வாறுகுடும்ப அவசியத்தைப் பொருத்ததாக இருக்கிறபடியால், மற்றபாகஸ்தர்களையும் கட்டுப்படுத்த வேணுமென்ற எண்ணத்துடன் அவனுக்குக்கடன் கொடுக்கிறவர்களும் குடும்பப்பொதுவான சொத்தை அவனிடமிருந்து விநியோகம் பெறுகிறவர்களும் அவைகளினுடைய அவசியத்தையும் நியாயத்தையும் செவ்வையாய் விசாரித்துத் தெரிந்துகொண்டும் நல்ல எண்ணத்துடனும் நடவடிக்கை நடத்வேண்டும். (6 மூ. இ. அ, 393; 19 இ. அ. 33; 26 கல். 820; 21 அல. 83.)

(2) தகப்பனானவன் கடன்பட்டு நரகத்துக்கு ஆளாக்காமல் அதினின்றும் அவனைவிடுவிப்பது பிள்ளைகளுடைய முதற்கடமையாக இருக்கிறதென்று தர்மசாஸ்திரங்களில்சொல்லப்பட்டிருக்கிறது. துன்மார்க்கமாயும் அக்கிரமமாயுமுள்ள செலவுகளுக்காக தகப்பன் கடன்பட்டிருந்தால் அக்கடன்களுக்குமட்டும் பிள்ளைகள் கட்டுப்பட்டவர்களல்லவே தவிர அது நீங்கலாக மற்றெவ்வகைப்பட்ட கடன்களையும் பிள்ளைகள் பிதுரார்ஜிதமாயாவது பூர்வார்ஜிதமாயாவது உள்ள எல்லாசொத்தைக்கொண்டும் தீர்க்கக் கடமைப்பட்டிருக்கிறார்கள். பிள்ளைகள் தீர்க்கக் கடமைப்பட்டிருக்கிற கடனை தகப்பனானவன் தானேயும்தீர்த்துக்கொள்ள அதிகாரமுடையவனாக இருக்கிறான். ஆகையால் அப்படிப்பட்ட கடன்களைத் தீர்ப்பதற்காக தகப்பனால்செய்யப்படுகிற குடும்பசொத்தின் பந்தகபராதீனங்களை பிள்ளைகள் ஆக்ஷேபிக்கக் கூடாதவர்களாக இருப்பதும் தவிர அவைகளுக்கு அவர்கள் முற்றிலும் கட்டுப்பட்டவர்களாகவுமிருக்கிறார்கள். (1 இ. அ. 321; 11 மது. 64; 13 அல. 216; 12 மது. 309; 17 கல். 584; 13 இ. அ. 1; 21 மது. 222; 22 மது. 207; 28 கல். 517; 27 மது. 326.)

**222.** தகப்பன்செய்த துர்வினியோகத்தை ருசுப்படுத்துங்கடமை பிள்ளைகளுடையது.—குடும்பசொத்தில் தங்கள் பாகத்தையுஞ் சேர்த்து தகப்பனால்செய்யப்பட்ட பந்தகபராதீனங்கள் தங்களைக் கட்டுப்படுத்த மாட்டாதென்று ஆக்ஷேபிக்கிறபிள்ளைகள் அவ்விநியோகங்கள் தகப்பனுடைய துன்மார்க்கமாயும் அக்கிரமமாயுமுள்ள செலவுகள் அல்லது கடன்களின்பொருட்டு செய்யப்பட்டனவென்று ருசுப்படுத்தவேண்டும். அதைத்திருப்தியாய் ருசுப்படுத்தும் பளுவும் பிள்ளைகள் பேரிலேயே இருக்கிறது. அவ்வாறு அவர்கள் ருசுப்படுத்தாதவரையில் கடன்களின்பொருட்டு தகப்பனால் செய்யப்பட்ட குடும்பப்பொதுவான எல்லா சொத்தின் விநியோகங்களுக்கும் அவர்கள் கட்டுப்பட்டவர்களாகவேயிருக்கிறார்கள். தகப்பனால்செய்யப்பட்ட குடும்பசொத்தின் விநியோகங்கள் குடும்பார்த்தமாயுள்ள செலவுகளுக்காகவும் கடன்களுக்காகவும் ஏற்படவில்லையென்றாவது பிள்ளைகள் செய்யும் ஆக்ஷேபணைகள் எவ்வளவும் செல்லமாட்டாது. (1 இ. அ. 321; 21 மது. 222; 22 மது. 207; 28 கல். 517; 24 அல. 459; 27 மது. 326.)

**223.** தகப்பன்செய்த சோத்து விநியோகத்துக்கு பிள்ளை கட்டுப் படுவது.—தகப்பனுடைய சொந்தக் கடனுக்காக அவனால் செய்யப் படும் குடும்ப சொத்தின் பந்தக பறுதீனங்கள் அவ்விநியோககாலத் திற்கு முன் ஏற்பட்டபழைய கடன்களின் பொருட்டே செய்யப் பட்டிருக்க வேண்டுமென்று முன் தீர்மானிக்கப்பட்டிருந்தது. இப் போது அதுவும் மாறிப்போய்விட்டது. தற்காலத்தில் வாங்கப் பட்ட ஒரு கடனுக்காகவே குடும்பசொத்து தகப்பனால் விநியோ யோகப்படுத்தப்பட்டாலும் அதற்கும் பிள்ளைகள் கட்டுப்பட்டவர் களாகவே யிருக்கிறார்கள் என்றும், முன்னாடியே ஏற்பட்டதாயிருக் கிற பழைய கடன்களின் பொருட்டு செய்யப்படும் விநியோகத்துக் கும் தற்காலத்தில் வாங்கப்பட்ட கடன்களின்பொருட்டு செய்யப் படும் விநியோகத்துக்கும் யாதொரு பேதமுமில்லையென்றும் இர ண்டுக்கும் பிள்ளைகள் சமமாகவே கட்டுப்பட்டிருக்கிறார்கள் என்றும் சென்ற 1904-ஞூத்தில் மதுராஸ் ஹைகோர்ட்டாரால் தீர்மானிக் கப்பட்டிருக்கிறது. அதாவது தகப்பன் கடனுக்கு பிள்ளை கட்டுப் பட்டவனா அல்லவா என்பதை நிச்சயப்படுத்துவதற்கு ஷை கடனா னது எத்தன்மையதானது என்பது குறிப்பேயன்றி அது எப் போது வாங்கப்பட்டது என்பது காரணமாகமாட்டாது. தகப்ப னால் செய்யப்பட்டகுடும்ப சொத்தின் விநியோகமானது புதிதாய் வாங்கப்பட்ட கடனின்பொருட்டு ஏற்பட்டதாக விருந்தாலும் அத ற்கும் பிள்ளை கட்டுப்பட்டவனாகவே இருக்கிறான். (27 மது. 326.)

**224.** தகப்பன் கடனைத்தீர்க்க பிள்ளைகள்சோத்தும் கட்டுப்படு வது.—தகப்பனுடைய சொந்தக் கடன்களைத் தீர்க்கும் கடமையா னது அவன் இறந்தபிறகே பிள்ளைகளுக்கு ஏற்படுகிறதென்றாகிலும் பிள்ளைகளுடைய பங்கு சொத்தானது தகப்பனுடைய கடன்களுக்கு அவனிட ஜீவகாலத்திலேயே பாத்தியப்பட்டதாக இருக்கிறது, ஆனபடியால் அக்கடன்களைத் தீர்க்கும்பொருட்டு பிள்ளையினுடைய பங்குஞ் சேர்ந்த பூராகுடும்பப்பொதுவான சொத்தை தானே பந் தகபறுதீனம் செய்யவும் தகப்பனுக்கு அதிகாரமுண்டு. (27 மது. 326.)

**225.** தகப்பன்கோடுத்த ஜாமீனுக்கு பிள்ளைசோத்து கட்டுப்படு வது.—தகப்பனானவன் தன் சொந்த உபயோகத்துக்காக வல்லாமல் பிறனொருவனுக்கு ஜாமீன் நின்று கடன் வாங்கிக்கொடுத்திரு ந்

தால் அக்கடனுக்கும் பிள்ளைகளுடைய பங்குசொத்து பாத்தியப் பட்டதாக இருக்கிறது. ஆகையால் அப்படிப்பட்ட கடனுக்காக குடும்பசொத்து விநியோகமானால் அதற்கும் பிள்ளைகள் கட்டுப்பட்டவர்களாகவே யிருக்கிறார்கள். (11 மத. 373; 53 பம். 454.)

**226.** தகப்பன்செய்த துன்மார்க்ககடன் பிள்ளையை பாதிக்காது.—தகப்பனுடைய துன்மார்க்கமாயும் அக்கிரமமாயுமுள்ள செலவுகளுக்கும் அதன் நிமித்தம் ஏற்பட்ட கடன்களுக்காகவும் குடும்பப்பொதுவான சொத்து விநியோகம்செய்யப்பட்டிருந்தால் அதுமட்டும் பிள்ளைகளைக் கட்டுப்படுத்தமாட்டாது. தகப்பனுடைய பங்கு வீதத்துக்குள்ள சொத்துமட்டும் அவ்விநியோகத்துக்கு உட்பட்டதாகும். (13 மத. 51; 20 கல். 238.)

**227.** தகப்பன்பட்ட துன்மார்க்க கடனையடைக்க பிள்ளை சம்மதியாவிட்டால் தகப்பன்பாகமட்டும் கட்டுப்படுமென்பது.—(1) தகப்பனால் செய்யப்படும் குடும்ப சொத்தின் விநியோகமானது குடும்பார்த்தமானசெலவுகளுக்கும் கடன்களுக்குமாகவாவது, அல்லது துன்மார்க்க சம்பந்தமில்லாத சொந்தக் கடன்களுக்காகவாவது ஏற்படாவிட்டால், தகப்பனனவன் தன்பங்கு வீதத்திற்கு மேற்பட்ட சொத்தை விநியோகம் செய்வதற்கு பிள்ளைகளுடைய அனுமதியைப்பெறவேண்டும். மேற்சொன்ன காரணங்களன்னியிலும் பிள்ளைகளுடைய அனுமதிபெறாமலும் தகப்பனனவன் தன் பங்கு வீதத்திற்கு மேற்பட்ட சொத்தை விநியோகம்செய்தால் அது பிள்ளைகளைக்கட்டுப்படுத்தமாட்டாது. (5 மத. 337; 8 மத. 75; 13 மத. 51; 16 மத. 96; 21 மத. 28.)

(2) தகப்பனால் செய்யப்படுகிற பந்தகபரர்தீனங்களுக்குப் பிள்ளைகள் எவ்வாறு கட்டுப்பட்டிருக்கிறார்களோ அவ்வாறே பாட்டனுடைய விநியோகங்களுக்கும் பேரர்கள் கட்டுப்பட்டவர்களாக இருக்கிறார்கள். (19 அல. 26.)

**228.** பிள்ளைபிறபபதற்குமுந்தி தகப்பன்செய்த சொத்து விநியோகம்.—தகப்பனிடமிருக்கிற பூர்வீகமான சொத்தில் பிள்ளைகளுடைய பாத்தியம் அவர்கள் பிறக்கும்போதுதான் ஏற்படுகிறபடியால் அவர்கள் பிறப்பதற்கு முந்தியே தகப்பனால் செய்யப்பட்டுப்போன விநியோகங்களை ஆக்ஷேபிக்க பிள்ளைகளுக்கு அதிகாரமில்லை. (1 இ. அ. 321.)

**229.** கடன்கோடுப்பவன் விசாரிக்கவேண்டிய சங்கதிகள்.—பிதுரார்ஜித சொத்தின்பேரில் கடன்கொடுக்கிறவனும், டிகிரியின் பேரில் ஜப்திசெய்த சொத்தை ஏலமெடுக்கிறவனும், கடன் என்ன அவசியமான குடும்பப் பொதுச்செலவுக்குக் கொடுக்கப்பட்டதென்றும், குடும்ப லாபத்துக்காகக் கொடுக்கப்பட்டதா, அந்தச்செலவை மற்ற பாகஸ்தர்கள் தடைசெய்யாமல் ஒப்புக்கொள்ளத் தக்கதாவென்றும், எவ்விதமான மோசமில்லாமல் தாவாசெய்து ஏலத்துக்குக் கொண்டுவரப்பட்டிருக்கிறதா, அல்லது நியாயமான கடன்களுக்காக டிகிரி பெறப்பட்டதா, அல்லது அந்த டிகிரியை ரத்து செய்யக்கூடிய பாகஸ்தர்கள் ஏற்பட்டு ஏதாவது ஏலவிஷயம் செல்லாதென்று நோட்டீசு முதலானது கொடுத்திருக்கிறார்களாவென்றும் யோசித்து கடன்கொடுக்கவாவது சொத்தை ஏலமெடுக்கவாவது வேண்டும். (6 ஸ. 193; 1859ஹு டம். ஸ. தீ. 1643; 16 ஸ. 221; 8 க. ஐ. 38; 14. ஸ 72; 14 க ஐ. 187; இ. லா. ரி. 15 க. 317; 5 அ. ஐ. 89; 23 ஸ. 260; 24 ஸ. 231, 281; 25 ஸ. 148, 185, 311; இ. லா. ரி. 2 க. 213. இ. லா. ரி. 4 ம. 96.) தகுந்த கவனத்துடன் விசாரித்து நியாயமானதென்று நம்பி, நல்ல எண்ணத்தோடு தொகை கொடுதது சொத்தை சுவாதீனஞ்செய்துகொண்டவன், அந்தத் தொகை சரியானபடி செலவிடப்படுகிறதாவென்று பார்க்கவேண்டியதில்லை. (இ. லா. ரி. 2. ம. 339; 1861ஹு ம தீ. 1.)

**230.** ருஜுப்பண்ணுவது.—பிதுரார்ஜித சொத்துக்களை வினியோகஞ்செய்த விஷயமாய் தாவா ஏற்பட்டால் சமயத்துக்குத் தக்கபடி இருகட்சிக்காரரும் வினியோகம் நியாயமல்லது அநியாயமென்பதை ருசுச்செய்யவேண்டும். (7 மூ. இ. அ. 418, 420; 1 ம. ஐ. 398; இ லா. ரி. 2 ம. 371; 10 மூ. இ. அ. 454; 3 அ. ஐ. 8; 18 ஸ. 77; இ. லா. ரி. 5 க. 363; இ. லா. ரி. 6 அ. 417; இ. லா. ரி. 8 அ. 279; இ. லா. ரி. 5 ம. 337; இ. லா. ரி. 8 ம. 75; 1882ஹுத்து 4-வது டிரான்ஸ்பர் ஆவ்பிராபர்டி ஆகட் 38 பிரிவு) முக்கியமாய் தகப்பனாவது மற்ற பாகஸ்தர்களாவது பிதுரார்ஜிதசொத்தை அவர்கள் வாங்கின கடனுக்காகப் பராதீனம் முதலிய வினியோகஞ் செய்தால், அந்த வினியோகம் நியாயமானதென்றும் கடன் குடும்பத்தின் அவசியமான சிலவை உத்தேசித்தே வாங்கப்பட்டதென்றும் ருசுச்செய்யவேண்டிய பாரஞ் சொத்தைவாங்கினவனைப் பொ

றுத்தது. (இ. லா. ரி. 16 ம. 76; 6. ம ஐ. 371; 8 ம. ஐ. 157; 2 அ. ஐ. 50; இ. லா. ரி. 1 ம 354, 358; இ. லா. ரி. 5 க. 144; 4 ம. 73.)

**231.** குடும்பத்தில் எல்லாரையும் தாவாவில் சேர்ப்பது.—தகப்பன் அல்லது குடும்பத்துக்கு ஏஜண்டாயிருக்கிற மானேஜர் இவர்கள் தவிர மற்ற பாகஸ்தர்களில் எவராவது வாங்கின கடன் குடும்பததுக்காக வாங்கப்பட்டதென்கிற காரணத்தைக்கொண்டு, குடும்பப் பொதுச் சொத்து முழுவதையும் பாத்தியப்படுத்த எண்ணங் கொண்டால் எல்லா பாகஸ்தர்களையும் பிராதில் பிரதிவாதியாகச் சேர்க்க வேண்டும். அப்படிக்கில்லாமல் ஒருவன்பேரில்மட்டும் தாவாசெய்தால் மற்றவர்கள் கட்டுப்படமாட்டார்கள். இ. லா. ரி. 3 க. 198; இ. லா. ரி. 5 ம 12, 125; இ. லா. ரி. 7 ம. 136; இ. லா. ரி. 8 ம. 208; இ. லா. ரி. 10 ம. 316: இ. லா. ரி. 11 க. 293; இ. லா. ரி. 6 பம். 564; இ. லா. ரி. 7 பம். 9; இ. லா. ரி. 10 க. 996, 1001; இ. லா. ரி. 5 ம. 201. 205.)

(2) பொதுவாய் தகப்பன் அயோக்கியமான காரியங்களுக்காக வாங்கின கடன்கள் தவிற, மற்ற உதாரிச் சிலவுக்காகவும், சக்திக்கு மிஞ்சின சிலவுக்காகவும் வாங்கின கடன்களை பிள்ளைகள் பிதுரார்ஜித சொத்திலிருந்தே கொடுக்கவேண்டும். தகப்பன் தன்னிஷ்டப்படி உதாரிச்சிலவுக்காகக் கடன்வாங்கி, அதைக் தீர்ப்பதற்காக பிதுரார்ஜிதசொத்து முழுவதையும் பராதீனம் செய்யலாம்.

**232.** குடும்பத்தில் மற்ற பாகஸ்தர்கள் பாத்தியம்.-தகப்பனைப் போல மற்றபாகஸ்தர்களும் பொதுச்சொத்தில் தங்களுடைய பாகங்களைமட்டும் தடையன்னியில் பிரதிபிரயோஜனத்துக்காக விற்கவும் பாத்தியப்படுத்தவும் கூடும் ஆனல், தானமாகவாவது, உயில்மூலமாகவாவது பராதீனம் செய்யக்கூடாது. கடன்கொடுத்திருந்தால் ஜப்திசெய்து விற்றிருந்தால் செல்லும். (1 ம. ஐ. 471; 2 ம. ஐ. 270, 416; 4. ஐ. 60; இ. லா. ரி. 11 ம. 406; 5 ம. ஐ 166; 10 பம் ஐ. 139, 162; 8 ம ஐ. 6; இ லா. ரி. 7 ம; 357; இ லா ரி. 9 ம. 273, இ. லா. ரி. 11 ம. 246; 3 பம் ஐ 66; 6 பம். ஐ. 249; 11 பம். ஐ 229; இ. லா. ரி. 5 பம். 48.)

**233.** சொத்தைவாங்கினவனுக்குள்ள பாத்தியம்.— பொதுக் குடும்பத்திலுள்ள யாதொரு பாகஸ்தனுக்கு எவ்வளவு பாத்திய

முண்டோ அவ்வளவு பாத்தியமும், அவன் பாகத்தைக் கோர்ட்டு ஏலத்தில் எடுத்தவனுக்கும், அவனிடமிருந்து டிரான்ஸ்பர் அல்லது விலைக்குவாங்கினவனுக்கும் உண்டு. (1 ம. ஐ. 471) கிரயதாரனாவது டிரான்சுபர்தாரனாவது எல்லாசொத்தைப்பிரிக்கும்படி கேட்கலாம். 2 ம. ஐ. 417) ஆனால், தாவாசெய்தால் குடும்பத்தார் எல்லாரையும் சேர்த்துச்செய்யவேண்டும். 11 பம் ஐ. 72, 76; 22 ஸ.116; இ.லா.ரி. 4. க 723; இ. லா. ரி. 6 பம். 564, இ. லா. ரி. 13 ம. 275) இன்ன பாகந்தான் தனக்கு வேண்டுமென்று கிரயதாரனாவது, டிரான்ஸ்பர் தாரனாவதுபொது சொத்தில் கேட்கக்கூடாது. 22 ஸ. 214; இ. லா. ரி. 2 பம் 476; 14 மூ. இ. அ. 50; 5 ம. ஐ. 166; 10 பம். ஐ. 156) சில சொத்துக்கள்மட்டும் தனியாய் ஒரு பாகஸ்தன் வசமிருந்து அது டிரான்ஸ்பர் அல்லது ஏலம் போடப்பட்டால் அந்த சொத்துக்களைமட்டும் ஏலதாரன் அல்லது டிரான்ஸ்பர்தாரன் அனுபவிக்கலாம். ஏலம் அல்லது டிரான்ஸ்பர் பெற்றவன் அப்படி அனுபவிப்பது மற்ற பாகஸ்தர்களுக்கு இஷ்டமில்லாதிருந்தால் எல்லா சொத்தையும் சேர்த்து பாகஞ் செய்துகொள்ள தாவாசெய்யலாம். (12 பம். ஐ. 138; இ. லா. ரி. 1 பம் 95; இ. லா. ரி. 2 பம். 676; இ. லா. ரி. 10 பம் 673; இ. லா. ரி 1 பம் 95; இ. லா. ரி. 10 பம் 673) 1882ளூத்து டிரான்ஸ்பர் ஆவ்பிராபர்டி ஆக்ட். 44 - வது பிரிவுப்படி பொதுவீட்டிலுள்ள ஒருவனுடைய பாத்தியதையை டிரான்ஸ்பர் பெற்றவன் அந்தவீட்டை மற்ற பாகஸ்தர்களோடுகூட அனுபவிக்க பாத்தியமில்லை.

(2) பொதுக்குடும்பத்திலுள்ள ஒருபாகஸ்தனுடைய பாத்தியதையை டிரார்ஸ்பர் பெற்றவன், அவனுக்குக் கிடைக்கவேண்டிய பாகம் டிரான்ஸ்பரான தேதியிலிருந்தபடியல்ல; ஆனால், வியாச்சியம் செய்கிறகாலத்தில் குடும்பம் எந்த நிலைமையிலிருக்கிறதோ அவ்விதமே கணக்கிட்டு பாகம் கொடுக்கவேண்டும் அதாவது.— ஒரு குடும்பத்தில் தகப்பனும் இரண்டு பிள்ளைகளுமிருந்தார்கள். அவர்களில் ஒரு பிள்ளை தன் பாத்தியத்தை விற்றான்; டிரான்ஸ்பர்தாரன் பிராதுசெய்தபோது இரண்டுபிள்ளைகள் அதிகமாகப்பிறந்து பிறகு தகப்பனிறந்தான். தற்கால நிலமைப்படி 4-ல் ஒரு பாகந்தான் டிரான்ஸ்பர்தாரனுக்குக்கிடைக்கும். (இ லா. ரி. 14 ம. 408.)

(3) மிதாட்சர சம்பிரதாயத்தை யநுஷ்டிக்கிறவர்களுக்கு, கல்கத்தா ஹைகோர்ட்டாரும் அலகாபாத் ஹைகோர்ட்டாரும், மதருஸ் பம்பாய் தீர்ப்புகளுக்கு விரோதமாகத் தீர்மானித்திருக்கிறார்கள். அதன்படி பொதுக்குடும்பத்தில் ஒருபாகஸ்தன் தன் சுவயப் பிரயோசனத்துக்காக தன் பாகத்தை பிரதி பிரயோசனத்திற்கு சாசனம், ஒத்தி, பந்தகம் முதலியவைகளாகவாவது, தானம், உயில் மூலமாகவாவது பாராதினஞ்செய்ய பாத்தியமில்லை. அந்தப் பராதீனங்களை மற்ற பாகஸ்தர் தாவாசெய்து ரத்துசெய்யலாம். (3 பம். ஸ. தீ 231; 6 பம். ஸ தீ. 176; 7 பம். ஸ. தீ. 105; 5 பம் ஸ. தீ. 158; 3 ஸ. 210; 7 அ. ஐ. 277; இ. லா. ரி. 2 அ. 267; இ. லா. ரி. 5 அ. 384; 3 க. ஐ. 31; 4 க. ஐ. 15; 8 க. ஐ. 358; இ. லா, ரி. 1 க. 226; 22 ஸ. 552; இ. லா. ரி. 16 க. 137; இ. லா. ரி 18 க. 157) ஒரு பாகஸ்தன் உயிரோடிருக்கும்போதே தாவா செய்தால் இவனுக்குச் சேரவேண்டிய பாகபாத்தியதையை டிரான்ஸ்பர் பெற்றவனுக்குச் சேரும்படி கோர்ட்டார் தீர்ப்புசெய்வார்கள். (12 க. ஐ 90; இ. லா. ரி. 3. க. 198; இ. லா. ரி. 18 க. 157.)

234. வினியோகசொத்தின் பிரதி பிரயோசனத்தைக்குடும்பத்துக்கு உபயோகித்தல்.—யாதொரு பாகஸ்தனால் துர்வினியோகம் செய்த சொத்தின் பிரதிபலனின் சில பாகத்தைக்கொண்டு அவசியமான குடும்பச் செலவில் உபயோகப்படுத்தியிருந்தால், டிரான்ஸ்பர் ரத்தானாலும், அந்த டிரான்ஸ்பர் விஷயமாய் கிடைத்த தொகையால் குடும்பத்துக்கு உபயோகப்படுத்தின பணத்தையும், டிரான்ஸ்பர் ரத்தாவதற்கு முந்தி டிரான்ஸ்பர்தாரனால் மராமத்துச்செய்த தொகையையும் குடும்பத்தார் கொடுக்கவேண்டும். ஆனால், டிரான்ஸ்பர் அக்கிரமமென்று தெரிந்திருந்தும் மராமத்துச்செய்தால் அந்தப் பணம் கிடைக்கமாட்டாது. (க. ஐ. ஸப்ளிமெண்டல் வாலியம் 1018; 8 க ஐ. 358; இ. லா. ரி. 6 அ. 417; 2 பம். ஐ. 318; 4 க. ஐ. 118, 125; 15 க. ஐ. 350; 4. க. ஐ. 15; 11 க. ஐ. அபெண்டிக்ஸ் 29; இ. லா. ரி. 5 பம். 450.)

235. பிரிக்கக்கூடாத ஜமீன் அதிகாரம்.— சாதாரணமாய் ஜமீன்களில் அங்கங்கே எந்த ஆசாரத்தை அனுஷ்டிக்கிறார்களோ அதன்படியே பாத்தியங்களும் ஏற்பட்டிருக்கின்றன. ஜமீன் சொத்து

பிள்ளைகளுக்கெல்லாம் பாத்தியமில்லாமல் ஜேஷ்டபுத்திரனுக்குமட்டும் சேரும்பட்சத்தில், மற்றப்பிள்ளைகள் பாகங்கேட்க அதிகாரம் எப்போது ஏற்படவில்லையோ அப்போதே அவர்கள் தகப்பன் சொத்தை வினியோகம் செய்தால் அதைக்கேட்க பிள்ளைகளுக்கு அதிகாரமில்லை. ஆகையால் பிரிக்கக்கூடாத ஜமீனில் தகப்பன் தானினைத்தபடி சொத்தை வினியோகம்செய்யலாம். பிரிக்கக்கூடிய ஜமீனுயிருந்தால் மிதாட்சர நியாயத்தை அனுசரித்து நடக்க வேண்டியது.

236. அநந்தரவார்சால் கிடைத்தசோத்து.—(1) சந்ததியில்லாமல் இறந்துபோன ஒரு தாயாதியினுடைய சொத்து ஒருவனுக்கு அநந்தரவார்சு பாத்தியமாய்கிடைத்தால் அதை சுவயார்ஜித சொத்துப்போல் தன்னிஷ்டப்படி விநியோகஞ்செய்யலாமென்றும், அதில் பிள்ளைகள் பாகங்கேட்கக்கூடாதென்றும் ஏற்பட்டிருக்கிறது ஆனல், மாதாமகர் (தாயின் தகப்பனின்) ஆஸ்திகிடைக்கும்போது அது ஸ்வயார்ஜிதமாகாதென்றும், அந்த சொத்தில் பிள்ளைகளுக்கும் பாத்தியமுண்டென்றும் மதராஸ் ஹைகோர்ட்டார் தீர்மானித்திருக்கிறார்கள். (5 ம. 370; 9 ம. 188.)

(2) தாய்வழியைச் சேர்ந்த முன்னேரிடமிருந்து அடைந்த சொத்து பிதுரார்ஜிதம்போல பாவிக்கவேண்டுமென்றும், தௌகித்திர பாத்தியத்தால் சொத்தையடைந்தவனுக்கு பிள்ளையாய் பிறந்த தினலேயே அவர்களுக்கும் அந்தசொத்து பிதுரார்ஜிதமென்றும், ஆகையால் பிள்ளைகள் பாகங்கேட்க பாத்தியமுண்டென்றும், தகப்பன், பாட்டன் சொத்துவிஷயத்தில் ஒருவனுக்கு எவ்வளவு சுதந்திரமுண்டோ அவ்வளவு சுதந்தரந்தான் தௌகித்திர பாத்தியமாய் அடைந்த சொத்து விஷயத்திலுண்டென்றும் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. (25 ம. 687; 27 ம. 300, 382.)

237. ஸ்திரீகளின் அல்லதுவேறொருவன் சொத்தையடைவது - ஸ்திரீகளிடமிருந்தும் முன்னேன் முறையில் இல்லாதவர்களிடமிருந்தும் அநந்தரவார்சுபாத்தியத்தால் அடையும் சொத்துக்கள் யாவும் சுயார்ஜித சொத்துக்களாகவே பாவிக்கப்படும். ஆகையால் அவற்றை யடைந்திருப்பவனுக்கு அவைகளில் பூர்ண சுதந்திர

முண்டு. அவைகளை அவன் தன்னிஷ்டப்படி விநியோகம்செய்து கொள்ளலாம். (27 மது. 300.)

238. சுவயார்ஜித சொத்துக்களைப்பற்றி.—(1) பிள்ளை முதலிய சந்ததியாரையுடைய ஒருவன் தன்னுடைய சுவயார்ஜிதமான சொத்துக்களில் ஜங்கமங்களை மட்டும் பூருவாக தன்னிஷ்டப்படி விநியோகம் செய்துகொள்ளலாமேயன்றி ஸ்தாவர சொத்து விஷயத்தில் அவனுக்குப்பூர்ண அதிகாரமில்லையென்றும். பிள்ளைகளுக்கு ஒன்றும் வைக்காமல் எல்லா ஸ்தாவர சொத்தையும் அவன் தன்னிஷ்டப்படி வினியோகம் செய்து விடக்கூடாதென்றும் மதுராஸ் ஹைகோர்ட்டால் முன் தீர்மானிக்கப்பட்டிருந்தது. (3 மது. ஹை. கோ. ரி. 50.) ஆனால் அத்தீர்ப்பு இப்போது மாறிப்போய்விட்டது. மற்ற ஹைகோர்ட்டுகளால் தீர்மானிக்கப்பட்டிருப்பதுபோலவே நமது மதுராஸ் ஹைகோர்ட்டாரும் அடியிற்கண்டபடி இப்பால் தீர்மானித்திருக்கிறார்கள். அதாவது ஒருசொத்தானது ஒருவனுடைய சுபார்ஜிதமானதாக இருந்தால் அது ஜங்கம மாயிருந்தாலும் அல்லது ஸ்தாவரமாகவே இருந்தாலும் அதில் அவனுக்கு பூர்ண சுதந்திரமிருக்கிறது. அதை அவன் தன்பிள்ளைகளுக்கு விரோதமாயும் தன்னிஷ்டம்போலும் பந்தகபருதீனம் செய்யவும் தானம் அல்லது உயில்மூலமாய் அன்னியருக்குக் கொடுத்துவிடவும் முழு சுதந்திரமுடையவனாக இருக்கிறான். (10 மது. 251; 20 அல. 267; 24 மது. 429.)

(2) ஆகையால் ஒருவன் விபக்த நிலைமையிலிருந்தாலும் அல்லது அவிபக்த குடும்பத்தைச் சேர்ந்தவனாகவேயிருந்தாலும் அவன் தன்னுடைய சுயார்ஜிதமாயிருக்கிற ஸ்தாவரஜங்கம சொத்துக்களெல்லாவற்றையும் தன்னிஷ்டம்போல் வினியோகம்செய்ய பூர்ண அதிகாரமுடையவனாக இருக்கிறான்.

239. ஜீவனாம்சத்துக்கு கட்டுப்பட்டே வினியோகிக்க வேண்டும்.—பிதுரார்ஜிதவகையிலாவது. சுயார்ஜித வகையிலாவது பாத்தியப்பட்டிருக்கிற சொத்தில் பூர்ணசுதந்தரவாளியாக இருப்பவன் அச்சொத்துமுழுவதையும் தன்னிஷ்டம்போல் விநியோகம் செய்துவிடலாமென்று மேலே சொல்லப்பட்டபோதிலும், அவனால் எவர்கள்கட்டாயமாய் சம்ரக்ஷிக்கப்படவேண்டுமோ அவர்களுடைய ஜீவ

னுச்சத்துக்காக யாதொன்றும் வைக்காமல் சொத்து முழுவதையும் அவன் தன்னிஷ்டம்போல் விநியோகம் செய்துவிடக்கூடாது. ஒரு சமயம் எல்லாவற்றையும் தன்ஷ்டப்படி கிரயம், தானம், உயில் முதலியனவற்றால் அன்னியர்களுக்கு விநியோகப்படுத்திவிட்டாலும் ஜீவனும்சக்காரர்களுடைய பாத்தியம் சம்பந்தப்பட்டமட்டில் அவ்விநியோகங்கள் செல்லுபடியுள்ளதாகமாட்டாது. (12 மது. 267; 2 அல 315; 23 அல 86; 10 கல். 638; 5 பம். 99; 18 பம். 452; 22 கல். 410; 23 பம். 342.)

**240.** சொத்துக்களை ஒருவர்பேரில் நம்பிக்கையாக எழுதிவைப்பது.-(1) சொத்துக்களை உடையவர்களும் புதிதாய்க்கிரயம் பெறுகிறவர்களும் அச்சொத்துக்களுக்கு தாங்கள் உடையாளிகளென்னதை உலகத்துக்குக் காட்டிக்கொள்ள சிலசமயங்களில் பிரியப்படாமல், நம்பிக்கையும் விசுவாசமுமுள்ள தங்கள் உறவினர்சிநேகிதர் முதலியோர்பேரில் அவற்றை நிபந்துக்கு எழுதிவைக்கிறார்கள். இவ்வழக்கம்நம் நாட்டில் வெகுகாலமாக நடந்துவருகிறது. யாதொரு பிரதிப்பிரயோஜனமுமில்லாமல் இவ்வாறு நம்பிக்கையின்பேரில் சொத்தைப் பிறர்பேருக்குநிபமாக எழுதிவைப்பதற்கு பினமி என்றும் யார்பேருக்கு அவ்வாறுசாசனம் எழுதிவைக்கப்படுகிறதோ அவன் பினமிதார் என்றும் இங்கிலீஷில் சொல்லப்படும்.

(2) இஷ்டப்பட்ட நடவடிக்கை கூடாதென்று ஒருகுறிப்பிட்ட சட்டவிதியால்தடுக்கப்பட்டிருக்கிற சந்தர்ப்பமும்கடன்காரர்முதலிய பிறரை மோசம்பண்ணவேணுமென்றகெட்ட எண்ணங்கொண்டு செய்யப்படுகிற சந்தர்ப்பமும் நீங்கலாகமற்ற சமயங்களில் இவ்விதமான பினமிநடவடிக்கை சரியென்றும் அதுசட்டப்படி செல்லத்தக்கது தான் என்றும் மேலான நியாயஸ்தலத்தாரால் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. (5 பம். 154; 14 மூ.இ.அ. 12; 2 இ.அ. 154.)

**241.** பணங்கொடுத்தவனுக்கே சொத்து சித்திக்கும்.–(1) ஒரு சொத்தின் நிஜமான சொந்தக்காரனுக்கும் போலிச் சொந்தக்காரனாகிய பினமிதாரனுக்கும் அசசொத்தைக்குறித்து வழக்கு உண்டானால், தஸ்தாவேஜு எவன்பேருக்கு ஏற்பட்டிருக்கிறதென்பதே முடிவாக எண்ணப்படமாட்டாது. ஷை சொத்துயாரால் அதாவது

யாருடைய பணத்தைக்கொண்டு வாங்கப்பட்டதோ அவனே அச்சொத்தின்சொந்தக்காரனென்று தீர்மானிக்கப்படுவான். (6 மூ இ. அ. 53; 6 இ. அ. 23; 9 பம். 115; 10 கல் 686.)

(2) ஆனால் தஸ்தாவேஜில் கண்டிருப்பதற்கு மாறாக எவன் தன்னை நிஜமான சொந்தக்காரனென்று சொல்லிக்கொள்ளுகிறானோ அதாவது எவனொருவன் யாதொரு நடவடிக்கையை பினாமியென்றும் தானே நிஜமான சொந்தக்காரனென்றும் சொல்லுகிறானோ அவனே அச்சங்கதியை திருப்தியான சாக்ஷியத்தால் முதலில் ருசுப்படுத்தவேண்டியவனாக இருக்கிறான். (11 மூ.இ.அ. 28; 11 மூ. இ. அ. 234.)

## (2). தாயபாகப்படி சொத்துவினியோகம்.

**242** தாயபாக சம்பிரதாயம்.—தாயபாகப்படி, பங்காள தேசங்களில் பொதுக்குடும்பத்தில், தகப்பன் தன்னுடைய ஸ்தாவர ஜங்கம, சுவயார்ஜித, பிதுரார்ஜித சொத்துக்களை யெல்லாம் தன் னிஷ்டப்படி விற்கவாவது, ஒத்திபந்தகமாவது, தானமாயாவது உயில்மூலமாயாவது வினியோகஞ்செய்ய அதிகாரமுண்டென்றும்; தன்னுடைய சொத்துக்களையெல்லாம், பெரியபிள்ளைக்காவது மற்ற வேறொருபிள்ளைக்காவது கொடுக்கலாமென்றும் தீர்மானங்கள் செய்யப்பட்டிருக்கின்றன. (1 பம். ஸ் தி. 2; 2 பம் ஸ. தி. 42; 4 பம். ஸ. தி. 322; 6 பம். ஸ. தி. 73; இ.லா.ரி. 5 க. 113; இ.லா.ரி. 7 க. 461; இ.லா.ரி.17 க. 886; 3 பம் ஸ.தி. 234, 397) ஆனால், எல்லாப் பிள்ளைகளுக்கும் பாகஞ்செய்து கொடுத்தால் அதில் மட்டும் ஏற்றத் தாழ்ச்சியின்றி சமமாக பாகஞ்செய்து கொடுக்கவேண்டும். (2 பம். ஸ தி. 202; எப். மெக்னடன் 283, 284.)

**243.** பிள்ளைகளால் வினியோகம்.—பங்காளதேசத்தில் தகப்பன்ஜீவித்திருக்கையில் பிள்ளைகளுக்கு யாதொரு பாத்தியமுமில்லை. பிள்ளைகள் செய்யும் வினியோகங்கள் செல்லமாட்டாது தகப்பனுக்குப் பிற்காலத்தில் பிள்ளைகளுக்குச் சொத்துபாத்தியம் உண்டான பிறகுகூட பிள்ளைகள் முந்திச்செய்த வினியோகங்களை ரத்து செய்து சொத்தை மறுபடி யடையலாம். ஆனால், சொத்தை வினியோகம்

செய்தபோது பணம்பெற்றிருந்தால் அதைமட்டும் திருப்பிக்கொடுக்கவேண்டும். (2 மூர். வீ. டைஜஸ்ட் 152)

**244.** சேர்ந்திருக்கிற சகோதரர்களின் அதிகாரம்.—தகப்பனிறந்தபிறகு பிள்ளைகள் ஒரேகுடும்பமாயிருந்தாலும் அவர்கள் ஒவ்வொருவரும் சொத்துக்கு தனிபாத்தியமுள்ளவர்களாகி தங்கள் தங்கள் பாகங்களைமட்டும் வினியோகஞ்செய்ய பாத்தியமுள்ளவர்களாயிருக்கிறார்கள். (1 பம். ஸ. தீ 44, 45, 115; 3 பம். ஸ. தீ. 196; 5 பம். ஸ. தீ. 388; 2 டப்ளியூமெக்னாடன் 291, 294, 296, 306, 313; 17 ஸ. 420; 21 ஸ. 17)

**245,** வினியோகவிஷயமாய் பாகஸ்தர்களுடைய உடன்படிக்கை.—சேர்ந்த குடும்பத்தின் பாகஸ்தர்களில் ஒருவன் தன் பாகத்தை வேறு பாகஸ்தனைத் தவிற மற்றவர்களுக்கு வினியோகம் செய்வதில்லையென்று உடன்படிக்கை செய்திருந்தால், அந்த உடன்படிக்கையின்படியே வேறெவனுக்காவது சொத்தை வினியோகஞ் செய்தால் செல்லாது. (இ. லா. ரி. 1 அ. 618; இ. லா. ரி. 2 அ. 826) ஆனால் மேற்படி உடன் படிக்கையின் சங்கதி தெரியாமல் பணங்கொடுத்து சொத்தை வாங்கியிருந்தால் அந்த வினியோகம் செல்லும். (இ. லா. ரி, 8 ம. 381; இ. லா. ரி. 4 அ. 518)

(3) தானம் முதலியவைகளால் சோத்துவினியோகம்.

**246.** தானங்கள்.—ஒருவன் தன் சொத்தைத் தானஞ்செய்யும்போது தானம் வாங்கினவன் தன்னை சம்ரட்சிக்க வேண்டுமென்றுவது, தனக்குப் பிறகு தன்னுடைய உத்தாகிரியைகளைச் செய்ய வேண்டுமென்றுவது, தான் ஒருவேளை வியாதியிலிருந்து பிழைத்துக்கொண்டால் அந்தச்சொத்து மறுபடி தன்னைச் சேரவேண்டுமென்றுவது தான் கொடுக்கவேண்டிய பாக்கியைத் தள்ளவேண்டுமென்றுவது, இன்னும் தனக்கு இஷ்டமான ஷரத்துகளையாவது ஏற்படுத்தி தானஞ்செய்யலாம். (6 ம. ஐ. 270; 3 பம். ஸ. தீ. 377; 1853ளு பம். ஸ. தீ. 103. இ. லா. ரி. 14 க. 292; 9 மூ. இ. அ. 123, 135; 4 க. ஐ. 192.) அந்த ஷரத்துகளின்படி நடத்தத் தவறினால் தானஞ் செல்லாது. தானத்திற்கு முந்தியே ஷரத்துகள் ஏற்படவேண்டுமேயொழிய அதற்குப்பிறகு ஏற்படுத்தக்கூடாது. தானம் வாங்கின

வனுக்கு சொத்து விஷயமாய் சகல பாத்தியமும் (தான விக்கிரயம் முதலானபாத்தியம்) கொடாமல் தானஞ்செய்தால் தானம் ரத்தாய் விடும். (இ. லா. ரி. 6 அ. 313; டிரான்ஸ்பர் ஆப் பிராபர்டி ஆக்ட் 18. 25 பிரிவுகள்.)

**247.** சுவயார்ஜித சோத்தை எவரும் தானஞ்செய்பலாம்.—(1) ஒருவன் அவிபக்த நிலைமையிலிருந்தாலும் விபக்தநிலைமையிலிருந்தாலும் தன்னுடைய சுயார்ஜிதமான சொத்துக்களில் அவன்பூர்ண சுதந்திரமுடையவனாக இருக்கிறபடியால், அவற்றை அவன் தன் இஷ்டமானவர்களுக்கு தானமாகக் கொடுத்துவிட அதிகாரமுடையவனாக இருக்கிறான்.

(2) அவிபக்த குடும்பத்தைச் சேர்ந்த ஒருபாகஸ்தன்குடும்பப் பொதுசொத்தில் தனக்குள்ள பங்கைதானமாகக் கொடுக்கக்கூடாது. கொடுத்தாலும் அதுசெல்லாகமாட்டாது. (7 மது. 357; 9 மது 273; 11 மது. 246; 16 மது. 84; 19 பம். 803; 27 மது. 162.)

**248.** தானம் எழுத்துமுலமாய் ஏற்படுவேது —ஸ்தாவரசொத்தானது தானம்செய்யப்படவேண்டுமானால் அதற்கு எழுத்துமூலமான தஸ்தாவேசு ஏற்படவேண்டும். மேலும் அத்தஸ்தாவேசுகுறைந்தது இரண்டுசாக்ஷிகளால் கையெழுத்து செய்யப்படவும் ரிஜிஸ்தர் செய்யப்படவும்வேண்டும். ஜங்கமசொத்தானது மேற் சொன்னபடியான ரிஜிஸ்டர் தஸ்தாவேஜு மூலமாயாவது தானம் வாங்குகிறவனிடம் ஒப்புவிக்கப்படுவதினாலாவது தானம்செய்யப்படலாம். (1882-ம் ளுத்திய 4-வது ஆக்ட்டு 123-வது பிரிவைப்பார்க்க)

தானப்பூர்த்தியாவதற்கு சொத்தானது தானம்வாங்குகிறவனிடம் சுவாதீனப்படுத்தப்பட வேண்டுமென்று ஹிந்துதர்மசாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. ஆனாலும் அவ்வாறு சுவாதீனம் செய்யப்படவேண்டுமென்பது இப்போது அவசியமில்லை என்று ஷை 1882-ம் ளுத்திய 4-வது ஆக்ட்டின்படி ஏற்படுகிறது. (14 கல். 446; 23 பம். 234; 16 அல. 185; 11 இ. அ. 218; 24 கல். 446; 27 கல். 243.)

249. செல்லுகிறதானம்.—தானம் செல்லுபடியுள்ளதாவதற்கு அடியிற்கண்ட விதிகள் அவசியமாய் அனுசரிக்கப்பட்டிருக்க வேண்டும்.

(1) தானம்செய்யப்படும் சொத்தானது இன்னதென்று குறிப்பானதாக இருக்கவேண்டும். அதாவது தானகாலத்தில் இல்லாமல் பிற்பாடு உண்டாகக்கூடும் சொத்துக்கள் தானத்துக்குத்தகுதியுள்ளதாகமாட்டாது.

(2) தானம் செய்கிறவனுக்கு தானசொத்தானது முழுசுதந்திரத்தோடு பாத்திபப்பட்ட தனியான சொத்தாக இருக்கவேண்டும் ஆகையால் அவிபக்தகுடும்ப பாகஸ்தனொருவன் தன் பங்குக்குள்ள சொத்தை தானமூலமாய் விநியோகம் செய்யக்கூடாது. (16 மது. 84; 8 மது. 357.)

(3) தானம்செய்கிறவன் யுக்தாயுக்தமறிந்த பகுத்தறிவுடையவனாகவும் மனப்பூர்த்தியான சம்மதமுள்ளவனாகவு மிருக்கவேண்டும். அதாவது யுக்தவயதையடையாத மைனர்களும் சித்த சுவாதீனமில்லாத பைத்தியக்காரர் முதலியோரும் தானம்கொடுக்கக் கூடாது.

(4) தானம் யாருக்குக் கொடுக்கப்படுகிறதோ அவன் தான காலத்தில் ஜீவித்திருப்பவனாக இருக்கவேண்டும். (2 கல். 265; 4 கல். 455; 15 பம். 443; 30 கல். 521.)

250. தானம் ரத்தாவது.—(1) தான சொத்தானது தானம் வாங்குகிறவனுக்கு உடையாளியினால் வாய்மொழியாயாவது எழுத்துமூலமான தஸ்தாவேஜினாலாவது கொடுக்கப்படுவதோடு உடையாளியானவன் அச்சொத்தில் தனக்குள்ள சுதந்திரங்கள் எல்லாவற்றையும் கைவிட்டுவிடவும் வேண்டும். சுதந்திரங்கள் அவ்வாறு கைவிடப்படாமல் தஸ்தாவேஜுமட்டும் எழுதி ரிஜிஸ்டர் செய்து கொடுக்கப்படுவதினாலேயே தானம் பூர்த்தியானதாக மாட்டாது (24 இ. அ. 1; 19 அல. 267; 20 கல் 464.)

(2) ஒரு குறிப்பிட்ட சம்பவம்நேரிட்டால் தானம் ஸ்திரமாகுமென்றும் இல்லாவிடில் தானம் ஊர்ஜிதத்தை யடையாதென்றும் உள்ள ஒரு நிபந்தனையை எற்படுத்திவைத்தும் ஒருவன் தானத்தைச்

செய்யலாம். ஆனால் நிபந்தனையாக ஏற்படுத்தப்படுகிற அச்சப்பவம் அக்கிரமமானதாகவும் சட்டவிரோத மானதாகவும் இருக்கக் கூடாது. (6 மது. ஹை. கோ ரி. 270; 9 மு. இ. அ. 123.)

உதாரணம்.— வியாதியா யிருக்கும்போது தானம் செய்கிறவன் தான் இறந்துபோய் விட்டால் தானம் ஸ்திரப்படாமல் சொத்தானது தன்னையே சேரத்தக்கதென்பதும் உள்ள நிபந்தனையை ஏற்படுத்தி தானத்தைச் செய்கிறான். இது சரியான நிபந்தனையாகும்.

251. தானம்செய்கிறவன் ஏற்படுத்தும் ஷராக்கள்.—(1) ஒரு சொத்தைப் பிறனுக்கு தானம்செய்கிறவன் தன்னுடைய கடன்களையும் அச்சொத்தின்பேரிலுள்ள பொருப்புகளையும் தானம்பெற்றவனே தீர்த்துக்கொள்ளதக்கதென்றும் ஏற்படுத்தலாம். அப்படிப்பட்ட தானத்தை ஒப்புக்கொண்டு அதன்படி சொத்தையடைகிறவன் அக்கடன்களையும் பொறுப்புகளையும் தீர்க்கக்கடமைப்பட்டவனாகிறான். (1882-ஞ 4-வது சட்டமாகிய டிரான்ஸ்பர் ஆப்பிராபர்டி ஆக்ட்டின் 127, 128-வது பிரிவுகளைப்பார்க்க.)

(2) முன் இரண்டு பிரிவுகளில் சொல்லப்பட்டிருப்பதைத் தவிர வேறுஎவ்விதமான நிபந்தனைகளையும் நிர்பந்தங்களையும் தானம்வாங்குகிறவன் தானம்பெற்றவன்பேரில் சுமத்தக்கூடாது. உதாரணம்—தானம்பெற்றவன் தானசொத்தை பந்தகபராதீனங்களுக்குட்படுத்தாமல் அநுபவித்து வரவேணுமென்றும், தானம்பெற்றவன் இறந்த பிறகு தானசொத்தானது சட்டப்படியுள்ள அவனுடைய கிரமமானவார்சுகளுக்குப்போகாமல் வேறுநபர்களைச் சேரவேண்டுமென்றும் உள்ள இவ்வாறுநிபந்தனைகள் செல்லமாட்டாது. (4 மது; ஹை. கோ. ரி. 345; 4 மது, 200, 6 மது. ஹை. கோ. ரி. 356. 7 மது. 315; 4 அல 518, 14 கல் 222; (1882-ம் ஞுத்திய 4-வது ஆக்ட்டு 10, 12-வது பிரிவுகளையும் பார்க்க.)

(3) சட்டவிரோதமாகவும் துன்மார்க்கமாகவுமுள்ளகாரியங்களை உத்தேசித்து செய்யப்படுகிற தானமும், கடன்காரர்களை மோசஞ்செய்யவேணுமென்ற கெட்ட எண்ணத்தின்பேரில் செய்யப்படுகிற தானமும் செல்லமாட்டாது. (4 மது. ஹை. கோ. ரி. 84.)

(4) ஜீவனும்சக்காரர்களுடைய பாத்தியத்துக்கு விரோதமாக ஒருசொத்தானது தானம்கொடுக்கப்பட்டாலும்ஜீவனும்சபாத்தியத்தினளவுக்கு அத்தானம்செல்லமாட்டாது. அதாவது தானம்பெற்றவன் அச்சொத்திலிருந்து ஜீவனும்சம்பெறவேண்டியவருடையஜீவனும்சத்தைக் கொடுத்துவரக் கடமைப்பட்டவனுகிறுன். (12மது. 267; 23 அல. 86; 23 பம். 342)

(5) சொத்துக்களில் ஸ்திரீகளுக்கு சாதாரணமாய் முழுசுதந்திரம் கிடையாதென்றிருந்தாலும், தானமாகப்பெறும் சொத்துக்களிலும் அவர்களுக்கு முழுசுதந்திரம் இல்லையென்று சொல்ல சாஸ்திரங்களில் ஆதாரமில்லை. ஆதலால் ஒருசொத்தானது ஒருஸ்திரீக்கு முழுசுதந்திரத்தோடும் தானமாகக் கொடுக்கப்படலாம். (23இ. அ. 37; 23 கல். 670.)

(6) முழு சுதந்திரத்தோடல்லாமல் ஸ்திரீயானவள் தன் ஆயிசுகாலம் வரையில் மட்டுமே தானசொத்தை அனுபவித்துக்கொள்ளத்தக்கதென்றும் பிறகு அச்சொத்து வேறொருவனைச் சேரத்தக்கதென்றும் கண்டு ஸதிரீக்கு ஒரு சொத்துதானம் செய்யப்படலாம் அப்போது அதில்அவளுக்கு பூர்ண சுதந்திரம் ஏற்படமாட்டாது. ஆயிசுகாலம் வரையில் அதை அனுபவிக்கமட்டுமே அவளுக்கு சுதந்திரமுண்டு.

(7) மேலும் ஒரு சொத்தானது சர்வ சுதந்திரத்தோடு ஸதிரீக்கு தானம் செய்யப்பட்டதென்று வியக்தமாய்க்காணப்படாமலிருந்தால்,அதில் அவளுக்கு ஆயிசுகாலம் உள்ள வரையில் அனுபவிக்கும் பாத்தியம் மட்டுமே இருக்கிறதாக எண்ணப்படும் ( 2இ. அ. 7; 17 பம், 503; 21 பம். 376; 22 மது. 357.)

(8) புருஷனுல் பெண்சாதிக்குக் கொடுக்கப்பட்ட தானமானது சர்வ சுதந்திரத்தோடு கொடுக்கப்பட்டதாக விருந்தாலொழிய அத்தான சொத்தைத் தன்னிஷ்டப்படி வினியோகம் செய்ய அவளுக்கு அதிகாரம் இல்லை (5 கல். 684; 7 மது. 387; 17 பம். 503.)

252. தானமடைந்தவன் பிறந்தாவது கர்ப்பத்திலாவது இருக்கவேண்டுமேன்பது.—ஒருவன் தன் சொத்தை உயில்மூலமாகவாவது வேறு எவ்விதமாகவாவது தானஞ்செய்தால் அந்தக்காலத்தில் அந்த

தானத்தைப்பெற்றவன் பிறந்தாவது கர்ப்பத்திலாவ திருக்கவேண்டும். தானத்திற்குப் பிறகு கர்ப்பமுண்டாகி அதில் பிறந்தவனுக்குச்செய்த தானஞ்செல்லாது. (9 க. ஐ. 399; இ. லா. ரி. 2 க. 265; இ. லா. ரி. 4 க. 455; இ. லா. ரி. 15 பம். 443.) ஆனால், சுவீகாரப்பிள்ளை தானத்திற்குப் பிறகு கர்ப்பத்திலுண்டாகிப் பிறந்திருந்தாலும் அவன் விஷயமாய் செய்த தானஞ் செல்லும். அதாவது ஒருவன் தன் ஆஸ்தியெல்லாம் சுவீகாரப்பிள்ளையைச் சேரவேண்டியதென்றும் தன் பெண்சாதி தக்கபிள்ளையை சுவீகாரஞ்செய்து கொள்ளவேண்டியதென்றும் உயில் எழுதிவைத்து இறந்துபோனான். பிறகு வெகுகாலங்கழித்துப் பிறந்தபிள்ளையை சுவீகாரமெடுத்தாலும் அந்தப்பிள்ளைக்குச்செய்த தானஞ்செல்லும். (4 க ஐ. 103; 9 க. ஐ. 377, 397, 400, 404)

**253.** போதுவில்தானம்.—ஒருசொத்தைப் பொதுவாகப்பலருக்கு தானஞ்செய்தால், அவர்களில்சிலர்மட்டும் தானகாலத்திலிருந்து மற்றவர் தானஞ்செய்தவனிறப்பதற்குள் பிறக்காமலிருந்தால் அவர்கள் விஷயத்திற்தானஞ் செல்லாமற்போனபோதிலும், தானகாலத்திலிருந்தவர்களுக்குச் சொத்துமுழுவதுஞ் சேர்ந்துவிடுமென்று முன் ஏற்பட்டிருந்தது. இப்போது தானம்பெறக்கூடியவர் எல்லோருக்குமே சொத்துசித்திக்குமென்று தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. (இ. லா. ரி. 6 அ. 573, 560; இ. லா. ரி. 12 க. 663; இ. லா. ரி. 12 ம. 393; இ. லா. ரி. 15 பம். 562; 11 இ. அ. 164; 13 ம. 393; 12 க. 685; 24 க. 646; 21 பம். 71; 22 பம். 533; 26 பம். 449.)

தானம்வாங்குகிறவன் நேரில் இருக்கவேண்டிய அவசியமில்லை. அவன் எங்கேயிருந்தாலும் அவனுக்குக் கொடுத்ததானஞ் செல்லும். (4 க. ஐ. 291.)

**254.** தானசோத்தை வசப்படுத்துவது.—தானசொத்து அசையும்பொருளாயிருந்தால் தானம்வாங்கினவுடன் அதைத்தன் வசப்படுத்திக்கொள்ளவேண்டும். அசையாப்பொருளாயிருந்தால் அதையும் உடனேதன் சுவாதீனப்படுத்தி தன் அநுபோகத்தில் வைத்துக்கொள்ளவேண்டும். மற்றவர்களால்குத்தகை வாடகைமுதலான விஷயத்துக்கு வாங்கப்பட்டிருந்தால் அந்தக்குத்தகை அல்லது

வாடகைப் பத்திரத்தை தன்பேரிலெழுதிக்கொண்டால் சொத்தை சுவாதீனப்படுத்திக் கொண்டதாகவே எண்ணப்படும். (5 பம். ஐ. 83; 6 ம. ஐ. 194; 4 பம். ஐ. 31; இ. லா. ரி. 12 அ. 40; இ. லா. ரி. 9 ம. 267; இ. லா. ரி. 7 ம. 23; இ. லா. ரி. 12 பம். 523; இ லா. ரி. 7 பம். 452, 22; 4 ம. ஐ. 460) மைனர்களுக்காவது, பித்தர்களுக்காவது கொடுத்ததானத்தை தானங்கொடுத்தவன் தன் வசத்திலேயே வைத்துக்கொள்ளலாம். தானஞ்செய்த அசையாப் பொருளை தானங்கொடுத்தவன் தன்சுவாதீனத்தில் வைத்துக் கொண்டு தானம்வாங்கினவனுக்கு அதற்காக குத்தகை அல்லது வாடகைச்சீட்டெழுதிக் கொடுத்தால் அதுசுவாதீனஞ் செய்யப்பட்டதாக பாவிக்கப்படும். (3 பம். ஸ. தீ. 234) தானம்வாங்கினவனுக்கு தானசொத்தைச்சேரவிடாமல் அயலார்யாராவது அதை சுவாதீனப்படுத்திக்கொண்டால், அவர்கள்பேரில் தானம்பெற்றவன் தாவாசெய்து தன்வசப்படுத்த பாத்தியமுண்டு. (இ. லா. ரி. 11 க. 721.)

தனக்கு முந்தி அகப்படாத அல்லது சம்பாதிக்கப்படாத சொத்தை தானஞ்செய்தால் அந்த தானஞ் செல்லமாட்டாது. (டிரான்ஸ்பர் ஆவ் பிராபர்டி ஆக்ட்.)

**255. மோசமான தானங்கள்.**—ஒருவன் கடன்காரர்களையாவது, வார்சுகளையாவது மோசஞ்செய்யவேணுமென்கிற எண்ணங்கொண்டு தானஞ்செய்தால் அந்ததானஞ் செல்லாமல் சொத்தை கடன்காரர் ஜப்திசெய்து ஏலம்போட்டுவிடுவார்கள். 1858௵ ம. தீ. 61; 1 ம. ஐ. 393; 4 ம. ஐ. 84; இ. லா. ரி. 2 அ. 891; இ. லா. ரி. 6 அ. 560; 11 இ. அ. 164; 22 இ. அ. 153; 23 பம். 131.) தானம்கொடுப்பவனை மோசஞ்செய்து தானம்வாங்கினாலும் செல்லமாட்டாது. (இ. லா. ரி. 15 பம். 549) பிரதிப் பிரயோஜனத்துக்காக சொத்தை டிரான்ஸ்பர் செய்கிற விஷயத்தில் அதை ஸ்வாதீனஞ்செய்வது அவசியமென்றும், ஸ்வாதீனப்படுத்தாத டிரான்ஸ்பரை பிந்தி வேறொருவனுக்கு ஸ்வாதீனத்துடன் சொத்தை டிரான்ஸ்பர் செய்தால் முதல் டிரான்ஸ்பருக்குக் கெடுதியில்லையென்றும். அவன் இரண்டாவது டிரான்ஸ்பர்தாரனை நீக்க தாவாசெய்யலாமென்றும், சொத்தின். சொந்தக்காரன் அதைத் தன்வசத்தில் வைத்

துக்கொள்ளாமலிருந்தாலும் அதை டிரான்ஸ்பர் செய்யலாமென்றும், கல்கத்தா மதராஸ் ஹைகோர்ட்டுகளிலும், பிரிவிகவுன்சிலர்களாலும் தீர்மானிக்கப்பட்டிருக்கின்றன. (இ. லா. ரி. 13 க. 297; 14 க. ஐ. 307; இ. லா. ரி. 5 ம 6 இ. லா. ரி. 6 ம. 404; 9 மூ. இ. அ. 303) பம்பாய் ஹைகோர்ட்டார் எந்த டிரான்ஸ்பரிலும் சொத்து ஸ்வாதீனஞ் செய்யப்படாவிட்டால் அது தெரியாமல் அதை பிந்தி கிரயம், ஒத்தி, பந்தகம் முதலியவைகளுக்கு வாங்கினவனே முதல் டிரான்ஸ்பர் பாதிக்காதென்று தீர்மானஞ்செய்திருக்கிறார்கள். (7 பம். ஐ. 4; 10 பம். ஐ. 491; இ லா. ரி. 2 பம். 299; இ. லா. ரி. 6 பம். 490) ஆனால், சொத்து ஸ்வாதீனமில்லாத முதல் டிரான்ஸ்பர் சங்கதி தெரிந்திருந்தும் இரண்டாவது டிரான்ஸ்பர்பெற்றாலும், முதல் டிரான்ஸ்பர் ரெஜிஸ்டராயிருந்தபோது இரண்டாவது டிரான்ஸ்பர் சாதாரணமாகவாவது, கோர்ட்டு ஏலத்திலாவது பெற்றாலும் செல்லாது. (இ. லா. ரி. 6 பம். 168, 515; இ. லா. ரி. 9 பம். 427; 7 பம். ஐ. 69; 8 பம். ஐ. 50; 11 பம். ஐ. 37) இரண்டாவது டிரான்ஸ்பர் கோர்ட்டு ஏலத்தில் கிடைத்திருந்தால் பிரதிவாதியின் பாத்தியமட்டும் அந்த ஏலத்தில் விற்கப்பட்டதேயொழிய, அவனால் ஸ்வாதீனஞ் செய்யாமல் டிரான்ஸ்பர்மட்டும் செய்த விஷயத்தில் இந்த ஏலம்பாதிக்காது. (3 பம். ஐ. 304; இ. லா. ரி. 6 பம். 93) சொத்து ஸ்வாதீனமாகவில்லையென்கிற காரணத்தால் டிரான்ஸ்பர் செல்லாமற் போகாது. (7 பம். ஐ. 45; இ. லா. ரி. 6 பம் 168) கோர்ட்டு ஏலத்தில் எடுத்தசொத்தை ஸ்வாதீனஞ்செய்யாமலே விற்றால் செல்லும்.

256. பத்திரங்களை ரேஜிஸ்டர்செய்வது—சில தஸ்தாவேஜுகளை ரெஜிஸ்டர் செய்யவேண்டாமென்றிருந்தபோதிலும் ஒருசொத்துவிஷயமாய் முதலில்தஸ்தாவேஜு ஏற்பட்டு ரெஜிஸ்டர் செய்யாமலிருந்து, பிறகு அதேசொத்தின்பேரில் வேறுதஸ்தாவேஜு ஏற்பட்டு ரெஜிஸ்டராயிருந்தால் ரெஜிஸ்டரான தஸ்தாவேஜேசெல்லும் (ரெஜிஸ்ட்ரேஷன் ஆக்ட் 50-வது பிரிவு) ஆனால், முதலில் ஏற்பட்ட பத்திரத்துக்கே யாதொரு சொத்துங் கிடைக்கவில்லையென்று தெரிந்திருந்தும் அந்தசொத்து விஷயமாய் வேறுபத்திரம் எழுதிபின்னால் ரெஜிஸ்டர் செய்தாலும் சொத்துக்கிடைக்கமாட்டாது. (இ. லா. ரி. 8 அ. 540; இ. லா. ரி. 13 க. 70; இ. லா. ரி. 12 பம். 569; இ. லா. ரி. 16 ம. 449; இ. லா. ரி. 16 க. 22.)

257. ரேஜிஸ்டர் அவசியம்.—ஹிந்து தர்மசாஸ்திரங்களின் படி தானம், விக்கிரயம், ஒத்தி பந்தக முதலியவைகளுக்கு தஸ்தாவேஜுங் கிடையாது ரெஜிஸ்டருங் கிடையாது. தற்காலத்தில் டிரான்ஸ்பர் ஆப்பிராபர்டி சட்டப்படி ரெஜிஸ்டர் முதலியது செய்ய வேண்டியதாயிருக்கிறது. அதாவது:—யாதொரு அசையாப் பொருளை விற்கும்போது அதன் மதிப்பாவது கிரயமாவது, ஒத்தி பந்தகத்தின் தொகையாவது, 100 ரூபாய் அல்லது அதற்கு மேற்பட்டதாயிருந்தால், ரெஜிஸ்டர்செய்த பத்திரமூலமாகவே அந்தக் கிரயம் முதலானதைச்செய்ய வேண்டும். மேலேசொன்ன விஷயங்களின்தொகை 100 ரூபாய்க்கு உட்பட்டிருந்தால் ரெஜிஸ்டர் வேண்டியதில்லை (டிரான்ஸ்பர் ஆப்பிராபர்டி ஆக்ட். 54, 59 பிரிவுகள்.) ஸ்தாவரசொத்தை குத்தகைவிடுகிற விஷயத்தில் ஒருவருஷ கெடுவுக்கு மேற்பட்டாவது, அல்லது வருஷம் ஒன்றுக்கு இவ்வளவு தொகைகொடுக்க வேண்டுமென்று கரார்செய்துகொண்டு விட்டால் அந்தக்குத்தகை எழுத்து மூலியமாயும் ரெஜிஸ்டர் செய்யப்பட்டுமிருக்கவேண்டும். மற்ற விஷயங்களில் சாதாரணப் பத்திரங்களினாலாவது, வாய்மொழியாகவாவது குத்தகை விடலாம்.

258. தானங் கோடுப்பது.—தானங்கொடுத்த சொத்து அசையும் பொருளாயிருந்தால் தானம் வாங்குகிறவனுக்கு உடனேயாவது ரிஜிஸ்டர்செய்த தஸ்தாவேஜு மூலியமாயாவது கொடுக்கவேண்டும். ஸ்தாவர சொத்தாயிருந்தால் தஸ்தாவேஜுயேற்படுத்தி ரெஜிஸ்டர் அவசியம் செய்யவேண்டும். தஸ்தாவேஜுகள் மேலேகண்ட சங்கதிகளுக்கு ஏற்பட்டுவிட்டால் சொத்தை சுவாதீனஞ் செய்ததாகவே எண்ணப்படும். (இ. லா. ரி. 14 க. 446)

---

## 8-வது உயில்கள்.



259. உயிலென்பது.—ஒருவன் தானிறந்தபிறகு தன்னுடைய சொத்துக்களை இன்னின்னார் இன்னவிதமாய் அனுபவிக்கவேணுமென்றும் தானினைத்தபடி தன்னிஷ்டத்தைக்காட்டுகிற தஸ்தாவேஜுக்கு உயில் என்று பெயர். இந்த ஏற்பாடு முற்காலத்திலில்லாதிரு

ந்தபோதிலும் இக்காலத்தில் அநேகர் உயில்மூலமாகவே தங்களுடைய சொத்துக்களைத் தன் வார்சுகளுக்குக் கொடுக்கிறார்கள்.

260. மிதாட்சராப்படி உயில்கள்.—மிதாட்சர வழக்கப்படி ஒருவன் தன் சுவயார்ஜித சொத்தையாவது, குடும்பத்தில் சேராத தன்னுடைய சொத்தையாவது, குடும்பப் பொதுசொத்தில் தானஞ் செய்ய தனக்கு எவ்வளவு பாத்தியமுண்டோ அந்த சொத்தையாவது தன்னிஷ்டப்படி உயில்மூலமாய் விநியோகஞ்செய்யலாம். மேலும் புத்திரன் பேரன், கொள்பேரன் முதலிய சந்ததியில்லாத காலத்திலும் தனக்குவேறே தம்பி தமயன் முதலிய பாகஸ்தர்களில்லாத போதும் பிதுரார்ஜித சொத்துக்களெல்லாவற்றையும் தன்னிஷ்டப்படி விநியோகஞ்செய்ய உயில் எழுதிவைக்கலாம். (1 ம. ஐ. 326, 339; 6 மூ. இ. அ. 309, 344; 10 மூ. இ. அ. 308; 12 மூ. இ. அ. 38; 3 பம். ஐ. 6; இ. லா. ரி. 12 ம. 126) ஆனால், பொதுக்குடும்பத்தில் சேர்ந்திருக்கிற ஒருவன் தன் பாகத்தை தானஞ்செய்ய பாத்தியமில்லை, ஏனென்றால், அவனிறந்தபிறகு அவனுடைய சொத்தைமற்ற பாகஸ்தர்கள் அடைந்து அவர்கள் பாத்தியம் உயிலைக்காட்டிலும் மேலாகி விடுகிறது. (8 ம. ஐ. 6, 13; 3 பம். ஐ. 66; 11 பம். ஐ. 66; இ. லா. ரி. 5 பம் 48; இ. லா. ரி. 12 பம். 105; 7 ம. 357; 14 ம. 459; 16 ம. 353; 19 பம். 803; 7 இ. அ. 181; 1881ளு 5-வது சட்டம் 4-வது பிரிவு.)

(2) ஆனதுபற்றி பிள்ளைமுதலிய சந்ததியாரோடு அவிபக்தமாயிருக்கும் தகப்பனும் குடும்பசொத்தில் எந்தபாகத்தையாவது உயில் மூலமாய் விநியோகம்செய்ய அதிகாரமில்லாதவனாக இருக்கிறான். (5 பம். 48; 7 இ. அ. 181; 8 மதா. 89; 16 மதா. 84; 16 மதா. 353.)

(3) உயில்செய்யப்படுகிறசொத்தில் உயில்செய்பவனுக்குபூர்ண சுதந்திரமிருக்கவேண்டியிருக்கிறபடியால், அவிபக்தகுடும்ப நிலைமையிலிருந்தும் விலகியாவது ஒரு பங்காளியுடனுஞ் சேர்ந்திராமல் தனித்திருப்பவனும், சுயார்ஜித சொத்தை யுடையவனுந்தான் உயில் மூலமாய் சொத்தைவிநியோகம் செய்யலாம். (2 மூ. இ. அ. 54; 6 மூ. இ. அ. 309; 10 மதா. 251. 24 மதா. 429.)

**261.** தாயபாகப்படி உயில்கள்.—(1) தாயபாகப்படி பொது குடும்பத்தின் தகப்பன் தன்னுடைய சுவயார்ஜித, பிதுரார்ஜித ஸ்தாவர ஜங்கம சொத்துக்களை தன்னிஷ்டப்படி செலவு செய்யலாமென்று முன்னமே சொல்லியிருக்கிறோம். சேர்ந்த குடும்பத்திலுள்ள பாகஸ்தன் எல்லாரும் குடும்ப சொத்தில் தனித்தனி பாத்தியமுள்ளவர்களாயிருப்பதால் அவர்கள் தங்கள் தங்கள் பாகங்களை உயில்மூலமாய்கொடுக்கலாம். (6 மூ. இ. அ. 344; 4 க. ஐ. 159; 9 க. ஐ.396)

(2) உயில்மூலமாய் விநியோகிக்கப்படும் சொத்தானது உயில் செய்பவனுக்கு சர்வசுதந்திரமாய் பாத்தியப்பட்ட அவனுடைய தனியானசொத்தாக இருக்கவேண்டும். சொத்தில் முழுசுதந்திரமில்லாதவன் அதை உயில்செய்யக்கூடாது. (12 மூ. இ. அ. 88; 12 மது. 126; 22 மது. 9.)

**262.** ஸ்திரீகள், மைனர்கள் உயிலெழுதுவது –(1) ஸ்திரீதனமாக வந்த சொத்தைமட்டும் ஸ்திரீகள் உயில்மூலமாய் விநியோகஞ் செய்யலாம். (இ. லா. ரி. 2 ம. 333) வார்சு பாத்தியமாகக் கிடைத்த சொத்தையாவது, இரண்டல்லது பலபேர் விதவைகளுடன் கூட்டாய்க் கிடைத்த சொத்தையாவது உயில்செய்யக்கூடாது. (இ. லா. ரி. 10 பம். 372; 3 ஸ. 49; 1 பாரே. 55, 67; 17 பம் 690; 21 பம். 190.) மைனர்கள் உயில்செய்ய அர்கர்களல்ல.

(2) வார்சுபாத்தியத்தாலடைந்திருக்கிற தாயாசொத்துக்களில் ஸ்திரீகளுக்குபூர்ண சுதந்திரமில்லையாகையால் அவைகள்விஷயமாய் அவர்கள் உயில்செய்யக்கூடாது. (10 பம். 372, 17 பம். 690; 21பம். 190; 7 மது. 93.)

**263.** ஜமீன்தாரர் உயிலெழுதுவது.—பாகிக்கத்தகாத ஜமீன் சொத்துக்களில் ஜமீன்தாரர்களுக்கு முழுசுதந்திரம் இருப்பதாக இப்பால் தீர்மானிக்கப்பட்டிருக்கிறபடியால் அவற்றை அவர்கள் தங்களிஷ்டப்படி உயில்செய்யலாம். (15 இ. அ. 51; 22 மது 383; 26 இ. அ. 83.) பிட்டாபூர் ஜமீன்கேசு.)

**264.** உயில்விஷயமாய் மற்ற நிபந்தனைகள்.—(1)உயில்மூலமாய் சொத்தை விநியோகிக்கிறவன் மனப்பூர்வமான சம்மதமுள்ள

னுகவும் யுக்தா யுக்தத்தெரிந்த பகுத்தறிவுடையவனுகவு மிருக்க வேண்டும். ஆகையால் யுக்தவயதை அடையாதவர்களான மைனர் களும் சித்தசுவாதீனமில்லாத பைத்தியகாரர் முதலியோர்களும் உயில் செய்யக்கூடாது. (25. இ. அ. 109; 25 கல். 824; 22 இ. அ. 171; 23 கல். 1.)

(2) உயிலானது எழுத்துமூலமாகவே ஏற்படவேண்டுமென்ற கட்டாயமில்லே. வாய்மொழியாகவும் ஏற்படலாம். (2 மது ஹை.கோ ரி. 37; 1பம். 641; 12 மூ.இ.அ. 2.)

(3) ஆனுலும் உயில்செய்பவன் அதை எழுத்து மூலமாய் ஏற் படுத்திவைப்பதே உசிதமானதாகும். அப்படிப்பட்டதஸ்தாவேசு ஒன்று இருந்தால் உயிலே ருசுப்படுத்துவது மிக்கசுலபமாயிருக்கும் மேலும வீண்விவசாரங்களுக்கும் தொல்லேகளுக்கும் இடமிராது.

(4) எழுத்துமூலமாக ஏற்படும் உயிலானது இன்னமாதிரியா கத்தான் எழுதப்படவேண்டுமென்ற அவசியமில்லே. அது எழுதி வைக்கிறவனுல் கையெழுத்து செய்யப்பட்டிருக்கவேண்டுமென்ற அவசியமுமில்லே (3 பம். 7.) உயில்செய்கிறவனுடைய எண்ணம் இன் னதென்று சந்தேகமன்னியிலும் தெளிவாயும் தெரியக்கூடியதாக இருந்தலே போதுமானதாகும். (2 இ. அ. 7; 17 இ. அ. 82, 18 கல். 1; 26 இ. அ. 194.)

(5) உயில் தஸ்தாவேஜில் கண்டிருக்கும் வாசகங்கள் தெளிவா யிராமல் சந்தேகமாயும் சங்கதி அல்லது உயில் செய்தவனுடைய எண் ணம் இன்னதென்று வியக்தமாய் அறியமுடியாததாயுமிருந்தால் அப் படிப்பட்ட உயில் செல்லமாட்டாது. (14 பம். 482: 17 பம் 351; 18 பம். 136; 21 பம். 646; 22 பம் 774; 14 கல். 222; 23 பம், 725.)

(6) உயில் தஸ்தாவேசுக்கு ஸ்டாம்புவேண்டியதில்லே. மேலும் உயில் தஸ்தாவேஜானது கட்டாயமாய் ரிஜிஸ்டர் செய்யப்பட வேண்டுமென்ற அவசியமுமில்லே. ஆனுலும் உயில்தஸ்தாவேஜானது கெட்டுப்போகாமலும்பிறரால் அபகரிக்கப்பட்டுப்போகாமலும் இருக் கும் பொருட்டு அதைரிஜிஸ்டர் செய்வித்துக்கொள்ளுவதே நலமா கும். மேலும் உயில்தஸ்தாவேஜானது எழுதிவைத்தவனுல் டிஸ்தி ரிக்ட் ரிஜிஸ்திரார் ஆபிசில் பந்தோபஸ்துக்காக வைத்து வைக்கவும் படலாம்.

(7) உயில்மூலமாய் சொத்தைப் பிறனுக்குக் கொடுக்கும் விஷயத்தில் அவன் அதை இன்னவிதமாகத்தான் அடைந்தனுபவிக்க வேண்டுமென்றும் அவனுக்குப்பின் அச்சொத்து அவனுடைய கிரமமான வார்சுகளுக்குப்போகாமல் இன்னாருக்குத்தான் சேரவேண்டுமென்றும் உள்ள சட்ட விரோதமான நிபந்தனைகளை உயிலில் ஏற்படுத்தக்கூடாது. மேலும் சொத்தையடைகிறவர்கள் அதை விநியோகிக்காமல் அனுபவித்து வரவேணுமென்றும், அவர்கள் அதைத் தங்களுக்குள் பாகம் செய்துகொள்ளக்கூடாதென்றும், சொத்தின் வரும்படியை செலவழிக்காமல் சேர்த்து வைத்து வரவேண்டுமென்றும் உள்ள இவ்வாறான நிபந்தனைகளும் சட்டவிரோதமானதாக இருக்கிறபடியால் இப்படிப்பட்ட நிபந்தனைகளை உயிலில் ஏற்படுத்தியிருந்தால் அவ்வித ஷரத்துக்கள் இல்லாததுபோலவே உயில் பாவிக்கப்படும். அதாவது உயிலின்படி சொத்தையடைகிறவன் அவ்வித நிபந்தனைகளுக்கு கட்டுப்படாமலே சொத்தையடைந்து அநுபவிக்கலாம் (10 மூ.இ.அ. 51, 6 கல். 106; 11 கல். 684; 14 கல். 22; 25 கல். 662; 9 மது. 499; 18 மது. 252; 19 மது. 501; 6 இ.அ. 182 12 இ.அ. 103, 16 இ.அ 29. (1882வருஷத்திய 4-வது ஆக்டின் 10, 11-வது பிரிவுகளையும் பார்க்க.)

(8) மேலும் துன்மார்க்கமானதாயும் நியாய விரோதமானதென்று சட்டத்தால் தடுக்கப்பட்டிருக்கிற செலவுகளின் பொருட்டு சொத்தை உபயோகப்படுத்தும்படி ஏற்படுத்திவைக்கும் உயில்களும் செல்லமாட்டாது. (6 மூ.அ.இ. 526 19 கல். 418; 23 மது 643.)

(9) ஸ்திரிகளுக்கு சொத்துக்களில் சாதாரணமாய்முழுசுதந்திரமில்லையாகையால் அவர்களுக்கு உயில்மூலமாய் சொத்தைக்கொடுப்பவன் அவர்கள் அச்சொத்தை விநியோகம் செய்யாமல் தங்கள் ஆயிசு காலம்வரையில் அநுபவித்துக்கொள்ளத் தக்கதென்றும் பிறகு அச்சொத்து வேறொருவருக்கு சேரத்தக்கதென்றும் உயிலில் ஏற்படுத்திவைத்தால் அதுசெல்லுபடியுள்ளதாகும். (2 இ.அ. 14; 22 பம். 409; 24 கல். 646. 26 இ.அ. 96; 26 கல் 707. 31 ம. 310.)

(10) உயிலின்படி சொத்தை யடையவேண்டியவன் உயில்செய்தவனுடைய மரணகாலத்திற் பிறந்திருக்கவேண்டும். அல்லது

தாயின் கர்ப்பத்திலாவது இருக்கவேண்டும். தாயின் கர்ப்பத்திலிருப்பதும் பிறந்திருப்பதற்குச் சமானமாகவே பாவிக்கப்படும் அவ்வாறுமில்லாமல் உயில்செய்தவனுடைய மரணகாலத்திற்குப்பிறகு தாயின் கர்ப்பத்திலுண்டாகிப் பிறக்கும்பிள்ளை உயிலின் பிரயோஜனத்தை யடையமாட்டான். (8 கல். 637; 16 பம். 492; 19 பம். 647; 15 இ.அ. 149; 25 கல். 405; 30 கல். 521.)

(11) உயிலின்படிசொத்து கிடைக்கவேண்டுமென்று நாவாசெய்கிறவன் உயிலின்படி சொத்துகிடைக்க வேண்டியகாலம் முதல் பன்னிரண்டு வருஷங்களுக்குள்ளாக தாவாசெய்யவேண்டும். லிமிடேஷன் ஆக்ட்டு 2-வது ஷிடியூல் 123 வது பிரிவு.)

**265.** உயில் சோத்தை யடைவது.—உயில் செய்தவன் இறந்தபிறகுதான் அவனுல்கொடுக்கப்பட்ட சொத்து அவரவர்களுக்குக் கிடைக்கும்; மைனர்கள் பித்தர்கள் மகாகோரமான ரோகிகள் முதலானவர்களுக்கும் உயிலால் கொடுத்த சொத்து [கிடைக்கத் தடையில்லை.

**266.** உயில் செய்தவன் கடன்கள்.—ஒருவன் தான் கொடுக்கவேண்டிய ஜீவனும்சம், கடன்கள் முதலியவைகளைக்கொடாமல் சொத்தைமட்டும் உயில்மூலமாய் வேருெருவருக்கு வினியோகஞ் செய்தால் அவருக்கு, ஜீவனும்சம் கடன்காரர் இவர்களுக்குக் கொடுக்கவேண்டியது போக பாக்கி சொத்துத்தான் கிடைக்கும் (3 ம. லாஜர்னல், 174) ஒருவன் தன் கடனுக்காவது, ஜீவனும்சக்காரனுக்காவது கொடுக்கவேண்டிய கடன், ஜீவனும்சம் இவைகளைக் கொடாமல் அவர்களுக்குத் தன் சொத்தில் கொஞ்சம் உயில்மூலமாய் கொடுத்தால் அவர்கள் அந்த சொத்தைப்பெற்றுக்கொண்டு சும்மாவிருக்க வேண்டியதுதான். இல்லாவிடில் உயில்மூலமாய் கிடைத்தசொத்தை தள்ளிவிட்டு, தங்கள் கடன்களேயும் ஜீவனும்சத்தையும் அவன் முழு சொத்திலிருந்தும் வரப்பற்ற தாவாசெய்ய வேண்டும். (இ. லா. ரி. 14 பம் 438; 3 ம. ஐ. 8; 2 மூ. இ. அ. 54; 10 க. 638; 12 ம. 267.)

**267.** உயிலின் ஏற்பாடுகள்.—சொத்தை ஒருவர் பின்னெருவர் அனுபவிக்கவேண்டுமென்று உயில் செய்தால் முதலில் சொத்தை

யடைந்து யனுபவிப்பவன் அதை விற்பனை தானம் முதலிய பராதீனஞ்செய்யக்கூடாது. செய்தால் சட்டப்படி செல்லாது. ஆனால், உயில் செய்தவனிறந்தபிறகு கர்ப்பமுண்டாகிப் பிறந்தவனுக்கு அந்த உயிலால் கொடுத்த சொத்து பிரயோசனமில்லை. ஆனால், சுவீகாரப் பிள்ளை அவனிறந்தபிறகு பிறந்தாலும் அவன் விஷயத்தில் மட்டும் உயில் செல்லும் (4 க. ஐ. 103, 166; 9 க. ஐ. 377, 397, 405.)

**உதாரணம்.**—(1)ஒருவன் தன் குமாரத்தி மீனாட்சியும், அவளுடைய பிள்ளைகளும் சொத்தையடைகிறதென்று உயில் செய்தான். உயில் செய்தவன் இறக்கும்போது மீனாட்சிக்கு பிள்ளைகளிருந்தால் சொத்தை விநியோகஞ்செய்ய அவளுக்கதிகாரமில்லை. ஆனால் அவனிறந்தபிறகு கர்ப்பந்தரித்து பிள்ளைகள் பிறந்திருந்தால் அந்தப்பிள்ளைகளுக்கு உயில்படி சொத்துக்கிடைக்கவேண்டியதா யிருந்தாலும் மீனாட்சியம்மாள் செய்தவிநியோகத்தை ரத்து செய்ய பாத்தியமில்லை.

(2) சுவீகாராதிகாரம்பெற்ற விதவை வெகுகாலத்திற்குபிறகு பிறந்த பிள்ளையை சுவீகாரஞ்செய்தாலும் உயில்படிபுருஷன் கொடுத்தசொத்தெல்லாம் சுவீகாரப்பிள்ளையைச் சேரத்தடையில்லை.

268. உயில்செல்லாவிட்டால் சொத்துயாருக்குச் சேருமென்பது.—(1)சட்டத்துக்கு விரோதமான ஷரத்துகளை ஏற்படுத்தியாவது சரியானவிதமாப் அர்த்தமாகாமலும், மேல்நடக்த வழியில்லாதிருக்கும் விதமாயாவது உயில் எழுதினால் அந்த உயில்ரத்தாகி சொத்து உயில்செய்தவன் வார்சுகளுக்குச்சேரும். உயில்செய்பவன் இறப்பதற்குள் உயிலின்படிசொத்தை யடையவேண்டியவன் முன்னடி இறந்துபோனால் உயில்ரத்தாகிச்சொத்து உயில்செய்தவனையே சேர்ந்துவிடும். உயில் வாய்மொழியாகவாவது, எழுத்துமூலமாகவாவதிருக்கலாம். எழுத்துமூலமாயிருந்தால் இலகுவாக ருசுச்செய்யலாம். (12 மூ. இ. அ. 2; இ. லா. ரி. 11·பம். 89) எழுத்துமூலமான உயிலுக்கு ஸ்டாம்பு, ரெஜிஸ்ட்ரேஷன் அனவசிபம். ஆனால், இவைகளிருந்தால் ருசுச்செய்ய சாதகமாயிருக்கும். ஒருவன்வாய் மொழிபாக தன் ஆஸ்திகளை இன்னவிதஞ்செய்கிறதென்று சொன்னாலுஞ்செல்லும். எழுத்துமூலமாய் எழுதிகையெழுத்திடுவதற்குள் ளிறந்துபோனாலும் அந்தஉயில் செல்லும். (3 ஸ. 138; இ. லா. ரி. 3 பம். 7) ஒரு

வன் தன்னுஸ்திகளை இன்னவிதஞ் செய்கிறதென்கிற மார்க்கங்களை சர்க்காருக்குமனுமூலமாய்த்தெரிவித்துப் பிறகிறந்தாலும் அந்தமனுவே உயிலாகபாவிக்கப்படும். (14 க. ஐ. 226; 26 ஸ. 55; இ. லா. ரி. 7 அ. 163; இ. லா. ரி. 18 க. 1.)

(2) ஒருவன்தான்செய்த உயிலின்சங்கதி ஒருவருக்குந் தெரியக்கூடாதென்று எண்ணினல் அதை ஒரு உறைக்குள்போட்டு முத்திரைசெய்து ரெஜிஸ்ட்ராராபீசில்கொடுத்தால், அவர் அந்த உறையை ரெஜிஸ்ட்ரேஷன் ஆக்ட் 40-வது பிரிவுப்படி பந்தோபஸ்தாக காப்பாற்றிவைத்து, உயில்செய்தவனிறந்தபிறகு அதையாபீஸ்புத்தகத்தில் பதிந்துகொண்டு கேட்பவர்களுக்கு நகல்கொடுப்பார். இஷ்டப்பட்டால் உயில்செய்தவனே அந்தலக்கோட்டாவை தானேதிருப்பி வாங்கிக்கொள்ளலாம். (ரெஜிஸ்ட்ரேஜன் ஆக்ட் 44-வதுபிரிவு.

(3) ஒருவன் இரண்டுமூன்று உயில்செய்திருந்தால் அவைகளுக்குள் வித்தியாசமேற்படும்பட்சத்தில் கடைசி உயில் அமுலுக்குக்கொண்டுவரப்படும். உயில் எழுதியவன் தன்னிஷ்டப்படி உயிலை மாற்றலாம், ரத்துசெய்யலாம். (இ. லா. ரி. 3 க. 526) எழுதி ரெஜிஸ்டர்செய்த உயிலைக்கூட வாய்மொழியாய் ரத்துசெய்யலாம். ஆனல், அதற்கு ருசுவிருக்கவேண்டும். (4 இ. அ. 228.)

(4) உயில் ரத்தாய்விட்டது என்பதற்கு தஸ்தாஜு ஏற்படவேண்டியதில்லை. சங்கதிக்குத் தக்கபடி வாய்மொழியாகக்கூட ரத்து செய்யலாம். அதாவது ஒருவன் தன் சொத்தெல்லாம் வேறொருவனுக்குச் சேரவேண்டுமென்று உயிலெழுதி சொல்பகாலத்திற்குப் பின் சுவீகாரஞ் செய்துகொண்டான் இந்த ஸ்திதியில் உயில்ரத்தாய் விட்டதென்று எண்ணவேண்டியது.

269. உயிலைத் திருத்துவது.—உயிலைதன் பத்திரத்தில் வைத்திருப்பவன் அதில் ஏதாவது தித்துபாடுசெய்து மாற்றினலும் புதிதாகச் சங்கதியைச் சேர்த்தாலும் உயில் ரத்தாகாது. ஆனல், தித்துபாடுசெய்த புதுசங்கதிகள் மட்டும் செல்லாது. செய்தவன்போர்ஜரி குற்றத்துக்குள்ளாவான். (இந்தியன் ஜூரிஸ்ட் 190)

———

## 9-வது தர்ம வினியோகம்.



**270.** ஸத்வினியோகங்கள்.—தேவாலயங்களுக்கும், சத்திரங்களுக்கும் இன்னும் அனேகவிதமான தர்மங்களுக்காக ஒருவன் தன்னுடைய பிதுரார்ஜித சொத்துக்களைக்கூடக் கொடுத்தாலும் செல்லுமென்று முற்காலத்திலும் இக்காலத்திலும் ஏற்பட்டிருக்கிறது. தானஞ் செய்தபோதே சொத்தை விடவேண்டுமென்கிற அவசியமில்லை. அவன் வார்சுகள் சொத்தைவிட கட்டுப்பட்டவர்கள். (5 பம் ஸ. தீ. 24; இ. லா. ரி. 8 அ. 76; 3 பாரோ. 314; 1 பாரோ. 394, 505) உயில்மூலமாக தர்ம காரியங்களுக்கு சொத்தை விடுவது மங்கிகரிக்கப்பட்டிருக்கிறது. (2 மூ. இ. அ. 390; 8 மூ. இ அ. 66; 14 மூ. இ. அ. 289)

**271.** குடும்பசொத்தில் தர்மம்.—(1) அவிபக்த குடும்பத்திலுள்ள ஒருவன் குடும்பப்பொதுவான சொத்தில் தனக்குள்ளபங்கை தானமாக வினியோகம்செய்யக்கூடாதென்று முன்சொல்லப்பட்டது. ஆனாலும்தருமத்தின்பொருட்டு நல்ல எண்ணத்தின்பேரில் குடும்பப்பொதுவான சொத்தில்தனக்குள்ள பங்கிலிருந்து கொஞ்சபாகத்தை ஒருவன்வினியோகம்செய்யலாம். குலதேவதையின் பூஜைக்காக குடும்பப்பொதுவானசொத்திலிருந்து கொஞ்சபாகத்தை வினியோகம்செய்ய தகப்பனுக்கு சுதந்திரமுண்டென்றும், நல்ல எண்ணத்தோடு செய்யப்படுகிற அப்படிப்பட்ட தர்மத்தைப் பிள்ளைகள் ஆக்ஷேபிக்கக்கூடாதென்றும் அலஹாபாத்து ஹைகோர்ட்டார் தீர்மானித்திருக்கிறார்கள். (8 அல. 76.)

(2) மேலும்தேவதையின் பூஜையின்பொருட்டு செய்யப்படுகிறதருமத்துக்கும் பொதுஜனங்களுடைய நன்மையின்பொருட்டு செய்யப்படுகிற தருமத்துக்கும் வித்தியாசமில்லையென்று பம்பாய் ஹைகோர்ட்டார் தீர்மானித்திருக்கிறார்கள். (9 பம். 169.)

**272.** தர்மங்களின் மாதிரிகள்.—(*a*)தர்மங்கள் அடியிற்கண்டபடி மூவகைப்படும்.

(1) ஒருகுறிப்பிட்ட சொத்தில்தனக்குள்ள சகலசுதந்திரங்களையும் கைவிட்டுவிட்டு அதைத் தருமத்துக்கென்றே சாசுவதமாய் முற்றிலும் கொடுத்துவிடுவது.

(2) ஒருகுறிப்பிட்டசொத்தை மேற்சொல்லியவாறு சாசுவதமாய்க் கொடுத்துவிடாமல் அதன்வரும்படியின் ஒருபாகத்தைமட்டும் கொண்டு தர்மத்தை சாசுவதமாய் நடத்திவருவதென்று ஏற்படுத்திவைப்பது.

(3) ஒரு குறிப்பிட்டசொத்தையாவது அதன்வரும்படியின் ஒருபாகத்தையாவது தர்மத்துக்காக சாசுவதமாய்க் கொடுத்துவிடாமல், தர்மத்தை தன்சொந்தத்திலேயே நடத்திவருவது.

(*b*) (1)மேற்சொன்னமூவகை தர்மங்களில் முதலாவது இரண்டாவது வகுப்புகளைச்சேர்ந்த தர்மங்களே சாசுவதமானதாக இருக்கின்றன. மூன்றுவதுவகுப்பைச்சேர்ந்த தருமத்தை நடத்திவருவதானது அதைச்செய்பவனுடைய இஷ்டத்தைப் பொறுத்ததாக இருக்கிறது. அதைக்கொஞ்சகாலம்வரையில் அவன்நடத்திவந்து பிறகுநிறுத்திவிட்டாலும் நெடுகிலும்தொடர்ச்சியாய் அதைநடத்திக்கொண்டு வரவேண்டுமென்று தானம்செய்தவனையாவது அவனுடைய வார்சுகளையாவது பிறர்கட்டாயப்படுத்த இடமில்லை. (18 கல். 10; 17 இ. அ. 110.)

(2) முதலாவது இரண்டாவது வகுப்புதர்மங்கள் ஏற்படுத்தப்பட்டபின்பு ரத்தாகமாட்டாது. அவ்விததருமத்தை ஏற்படுத்தினவனுக்காவது அவனுடைய வார்சுகளுக்காவது அதைநிறுத்திவிட அதிகாரமில்லை.

**273.** தர்மசொத்தை எடுத்துக்கொள்வது.—(1)ஆதியில் ஏற்படுத்தப்பட்ட ஒருதர்மம் நெடுகிலும் நடந்துவர முடியாமல்தர்மகாரியமானது தவறியாவது அழிந்தாவது போய்விட்டாலும் அந்ததர்மத்துக்காக விடப்பட்டசொத்து உடையாளியையாவது அவனுடைய வார்சுகளையாவது திரும்பவும்சேரமாட்டாது. அத்தர்மம் போலொத்த வேறு தர்மத்தின்பொருட்டு அச்சொத்து உபயோகப்படுத்தப்படவேண்டும் (4 மூ. இ. அ. 190. 3 இ. அ. 32.)

(2) இரண்டாவதுவகுப்பு தர்மமானது ஒருசொத்தின் வரும்படியின் ஒருபாகத்தைக்கொண்டு நடத்தப்படுவதால் உடையாளியும் அவனுடைய வார்சுகளும் அச்சொத்தை இதரகுடும்ப சொத்துக்களொப்பந்தம் பந்தகபருதினம்செய்ய அதிகாரமுள்ளவர்களாக இருக்கிறார்கள். ஆனால் அச்சொத்து அவ்வாறு விநியோகப்படுத்தப்பட்டுப்போனால் தர்மத்தைநடத்திவரும் கடமையானது விநியோகம் பெற்றவனைச் சேர்ந்ததாய்விடுகிறது. (15 பங்காள லா ரிபோர்ட்டு 178.)

(3) மேலும் இவ்வகுப்பு தர்மசொத்தை உடையாளியினுடைய வார்சுகள் இதரகுடும்ப சொத்துக்களொப்பந்தம் பாகித்துக்கொள்ளவும் உரிமையுள்ளவர்களாக இருக்கிறார்கள். அப்போது அவர்கள் தங்கள் பங்குவீதத்துக்குத்தக்கபடி தர்மத்தை நடத்திவரவேண்டும். (4 கல். 56.)

**274.** திருப்பியடைய முடியாததர்மசோத்துக்கள்.-முதலாவது வகுப்பு தர்மத்துக்காக விடப்பட்டசொத்தில் உடையாளி உடைத்தாயிருந்த எல்லாபாத்தியங்களும் அவனைவிட்டு முற்றிலும்விலகிப் போய்விடுகிறபடியால் அவனாவது அவனுடையவார்சுகளாவது பிறகு அச்சொத்தை எவ்வளவும் சொந்தத்துக்கு உபயோகப்படுத்திக் கொள்ளக்கூடாது. அச்சொத்தானது தர்மத்தை நடத்துவதற்காக நியமிக்கப்பட்டவர்களைச்சேர்ந்ததாய்விடுகிறது. தர்மத்துக்காகவிடப்பட்டசொத்தைக்கொண்டு தர்மத்தை நடத்திவரும்படி நியமிக்கப்பட்டவர்கள் தர்மகர்த்தாக்களென்று (இங்கிலீஷில் டிரஸ்டிகளென்று) சொல்லப்படுவார்கள்.

**275.** தர்மத்துக்குசோத்தை விடுகிறவன்தானே ட்ரஸ்டியாகவிருக்கலாம்.—(1)தர்மத்தை ஏற்படுத்துகிறவன் தன்னையும் தன் வார்சுகளையுமே டிரஸ்டியாகவாவது அல்லதுடிரஸ்டிகளிலொருவராகவாவது ஏற்படுத்திவைத்துக்கொள்ளலாம்.

(2) டிரஸ்டிகளுக்கு தர்மசொத்தில் தர்மவிசாரணை பாத்தியத்தைத்தவிரவேறு எவ்விதசுதந்திரமும் இல்லை. அவர்கள் தங்களுடைய சொந்தவிஷயத்துக்காகவாவது குறிப்பிட்ட தர்மத்தைத் தவிர வேறு தர்மத்துக்காகவாவது தர்மசொத்தை எவ்வளவும் உப

யோகப்படுத்தக்கூடாது (1882-ம் ஞூலத்திய 2-வது ஆக்ட்டின் 51-வதுபிரிவையும் பார்க்க.)

(3) ஒருசொத்தானது எந்ததர்மத்துக்காக விடப்பட்டதோ அந்ததர்மத்தை டிரஸ்டிகள் அச்சொத்தைக்கொண்டு சரியாய்நடத்தி வரவேண்டும். தர்மபரிபாலனத்தின் பொருட்டு தர்மசொத்தைச் செலவிடுவதிலும் பந்தகபருதீனங்கள் செய்வதிலும் டிரஸ்டிக்குள்ள அதிகாரமானது ஒருமைனருடைய கார்டியனுக்குள்ள அதிகாரத்தைப்போன்றதாயிருக்கிறது. (2 கல். 341; 2 இ. அ. 43; 21 அல. 145; 25 அல. 296; 24 கல். 77.)

(4) ஆனாலும் தர்மசொத்தின் வரும்படிகளைமட்டும் டிரஸ்டிகள் செலவுசெய்யலாமேதவிர மூலசொத்தையே விநியோகப்படுத்த அவர்களுக்கு எவ்வளவும் அதிகாரமில்லையென்று பம்பாய் ஹைகோர்ட்டார் தீர்மானித்திருக்கிறார்கள். (5 பம். 393; 15 பம். 625.)

(5) டிரஸ்டியானவன் தர்மவிசாரணையை தானே நேரில் நடத்திவரவேண்டுமேயன்றி அவ்வதிகாரத்தை வேறொருவனிடம் ஒப்புவிக்கவாவது பிறனொருவனுக்கு விற்கவாவதுகூடாது (5 மது. 89; 4 அல 81; 23 பம். 131. (1882-ஞூலத்திய 2-வது ஆக்ட்டின் 47-வது பிரிவையும் பார்க்க)

**276.** தேவாலய ஊழியத்தை பராதீனஞ் செய்யக்கூடாது.—ஒரு தேவாலயத்தின் ஊழியனும் தன் ஊழிய பாத்தியத்தை அன்னியனுக்கு பருதினம் செய்யக்கூடாது. (6 மது. 76.) ஆகிலும் தன் குடும்பத்திலுள்ள தாயாதிகளிலொருவனுக்கு அச்சுதந்திரத்தை விநியோகப்படுத்தலாம். (15 மது. 183.)

**277.** தர்மத்தை சரியாய் நடத்தகோர்ட்டில் தாவா செய்வது.—ஒரு தேவாலயத்தின் பூஜையாவது அல்லது வேறெந்தப்பொது தர்மமாவது தர்மகர்த்தாக்கள் அல்லது ஊழியர்களால் சரியாய் நடத்தப்படாமலிருந்தால் அந்த தருமத்தில் அக்கறையுள்ள இரண்டு அல்லது மேற்பட்ட அபிமானிகள் அதைப்பற்றி அட்வோகேட் ஜெனரல் அல்லது ஜில்லா கலெக்டருடைய முன்னுடி அனுமதி பெற்றுக்கொண்டு அத்தர்மம் சரியாய் நடத்தப்பட்டு வரவேண்டு

மென்று ஜில்லாகோர்ட்டில் வழக்கிடலாம். (6 பம். 202; 21 பம். 556. (புதிய சிவில் புரோஸீஜர் கோடு 92, 93-வது பிரிவையும் பார்க்க.) வழக்கமாய் நடந்துகொண்டிருந்த தர்மங்களை சரிவர நடத்தாமல் தர்மசொத்துக்களை யபஹரித்து வருகிற தர்மகர்த்தாக்களை நீக்கவும், நஷ்டங்களை அவரிடமிருந்து வசூல்செய்து வேறொருவரை நியமிக்கவும் தாவா செய்யலாம்.) (22 ம. 223; 17 அல. 227; 10 ம. 376; 31 ம 212.)

278. தர்மகர்த்தாவை தர்மசாசனப்படியாவது, வழக்கத்தின் படியாவது நேமிப்பது.—(1) ஒரு டிரஸ்டி இறந்துபோனால் அடுத்து வர வேண்டிய டிரஸ்டியின் நியமனமானது தர்மத்தைப்பற்றிய சாசனத்தில் சொல்லப்பட்டிருக்கும் ஏற்பாட்டின்படி செய்யப்பட வேண்டும். தர்மசாசனத்தில் அப்படிப்பட்ட ஏற்பாடு யாதொன்றுமில்லாமலிருந்தால் அத்தர்மபரிபாலன விஷயமாய் நடந்துவரும் வழக்கத்தை யனுசரித்து புது டிரஸ்டி நியமிக்கப்படவேண்டும். (10 இ. அ. 32; 9 சல் 766.) யாதொரு வழக்கமுமில்லாமலிருந்தால் இறந்துபோன டிரஸ்டியினுடைய அதிகாரம் அவனுடைய வார்சைச்சேரும். (7 மது. 499; 17 சல். 3; 16 இ. அ. 137; 23 மது. 271; 27 இ. அ. 69; 25 கல் 112.)

(2) தர்மபரிபாலனத்துக்காக நியமிக்கப்பட்ட ஒரு டிரஸ்டி அல்லது தர்மகர்த்தா இறக்தாவது வேலையிலிருந்து நீக்கப்பட்டாவது போனதின்பேரில் புது டிரஸ்டி அல்லது தர்மகர்த்தா ஏற்படாமல் அவ்வுத்தியோகமானது காலியாயிருந்தால் அத்தருமத்தில் அக்கரையுள்ள இரண்டு அல்லது மேற்பட்ட அபிமானிகள் ஜில்லா கலெக்டர் அல்லது அட்வோகேட் ஜெனரலுடைய முன்னுடி அனுமதி பெற்றுக்கொண்டு தகுந்த ஒரு டிரஸ்டி அல்லது தர்மகர்த்தா நியமனமாகவேண்டுமென்று ஜில்லா கோர்ட்டில் வழக்கிடலாம். (14 மது. 56)

(3) டிரஸ்டி அல்லது தர்மகர்த்தா தர்மவிசாரணையை சரியாய் நடத்தி வராவிட்டாலும் அல்லதுஅயோக்கியமாய் நடந்துகொண்டாலும். அவன் தன் உத்தியோகத்தினின்றும் நீக்கப்படுவான். (6 கல். 11; 20 கல் 397; 24 கல். 418; 21 அல. 200; 22 மது 481.)

**279.** மடத்துசோத்து மடாதிபதியின் பரிபாலனத்திலடங்கி யிருப்பது.—ஒரு மடத்துக்குச் சம்பந்தப்பட்ட சொத்துக்கள் மடாதிபதியைச் சேர்ந்ததாயிருக்கிறது. அச்சொத்துக்களில் மடாதிபதிக்குள்ள அதிகாரமானது அவிபக்த குடும்ப மானேஜருடைய அதிகாரத்தை ஒத்திருக்கிறது. மடத்தின் பொருட்டாயுள்ள சகல வரவு செலவு விஷயங்களிலும் மடாதிபதியானவர் பூர்ண அதிகாரமுள்ளவராக இருக்கிறார். மேலும் மடத்துக்குரிய சொத்தின் வரும்படிகள் முழுவதிலும் அவருக்குப் பூர்ண அதிகாரமிருக்கிறது. (2 மது. 175; 16 மது. 490; 20 இ. அ. 150; 18 மது. 359; 27 மது 435)

**280.** புதுமடாதிபதியை நியமிப்பது.–ஒரு மடாதிபதியானவர் காலஞ்சென்று போனால் அவருக்குப்பின் வரவேண்டிய புதுமடாதிபதியின் நியமனத்தைப்பற்றி அந்தந்த மடங்களில் ஏற்பட்டுவரும் வழக்கங்களே அந்தந்த மடங்களின் விதியாகும். மடாதிபதிகள் தங்களுக்கடுத்தாப்போல் வரவேண்டிய மடாதிபதியை தங்கள்காலஞ்செல்லுவதற்கு முந்தியே நியமித்து வைத்துக்கொள்ளுவது அநேகமடங்களின் வழக்கமாக இருக்கிறது. (11 பம். 514; 16 மது. 490; 20 இ. அ 150) மடாதிபதிகளை கோர்டில் ஆஜராகும்படி செய்யலாம். (31. ம. 60.)

**281.** விதவைசோத்தை தர்மத்துக்கு விடுவது —(1)சொத்துக்களில் பூர்ணசுதந்திரமில்லாத விதவைகளுங்கூட புருஷனிடமிருந்து வார்சுபாத்தியப்படி யடைந்தசொத்தில் சொல்பபாகத்தை தர்மங்களின்பொருட்டு செலவிடலாமென்று தீர்மானிக்கப்பட்டிருக்கிறது.

(2) பூர்ணசுதந்திரத்தோடு பாத்தியப்பட்டதாயிருக்கிற ஒரு சொத்தை ஸ்திரீயானவள் தன்னிஷ்டப்படி தர்மவிஷயத்துக்காகவும் விநியோகம்செய்துவிட அதிகாரமுள்ளவளாக இருக்கிறாள். (2 மது. 333)

(3) ஹிந்துலாப்படிக்கு தர்மவிசாரணை செய்யும் அதிகாரத்தை ஸ்திரீகள் சாதாரணமாய் பெறத்தக்கவர்களல்ல. ஆகிலும் அவ்வதிகாரத்தை ஸ்திரீகளும் அடையும் வழக்கமுண்டென்று எந்தகேசிலாவது ருஜுக்கப்பட்டால் அப்போது அந்தகேசில் ஸ்திரீகளுக்கும் அப்பாத்தியம் ஏற்படும். (9 மு இ. அ. 446; 9 கல் 796.

**282.** தேவாலயத்துக்கு தர்மஞ்செய்யும்போது விக்கிரகம்பிரதிஷ்டையாயிருக்கவேண்டுமேன்பது—தேவாலயத்தின் பொருட்டு ஒரு சொத்தைதானம் செய்வதாயிருந்தால் அத்தேவாலயத்துக்குறிய சிலை அல்லது விக்கிரகம் தானகாலத்திலாவது அதற்குமுந்தியாவது பிரதிஷ்டை செய்யப்பட்டிருக்கவேண்டும். பிற்பாடு பிரதிஷ்டை செய்யப்படப்போகிற ஒரு தேவாலயத்தின் பொருட்டு செய்யப்படும் தானம் செல்லமாட்டாது. உயில் மூலமாக சொத்து கொடுக்கப்பட்டாலும் உயில்செய்தவனுடைய மரணகாலத்தில் அத்தேவாலயத்துக்குறிய விக்கிரகம் பிரதிஷ்டையாயிருக்கவேண்டும். (25 கல். 405; 30 கல். 521. 252-வது பிரிவைபார்க்க.)

**283.** நிரந்தரமாய் சொத்தைவிடுவது—தர்மகாரியங்களுக்கு சாசுவதமாக சொத்தைக்கொடுத்தால் செல்லும். (4 க. ஐ. 103; 9 க. ஐ. 377; 15 க. ஐ. 176) தர்மகாரியங்களுக்காக சொத்தைவிட்டாலும் தகுந்த காரிய நிர்வாக ஏற்பாடு செய்யாமல் அந்தச்சொத்தை தாங்களே வார்சு பாத்தியமாக அனுபவித்தால் அந்த சொத்து வார்சுதாரர்களுக்கே பாத்தியமாய்விடும். (இ. லா. ரி. 4 ம. 200.)

**284.** தர்மபரிபாலர்களை ஏற்படுத்துவது.—தர்ம காரியங்களைப் பார்த்து வருவதற்காக தர்மகர்த்தாக்களை நேமித்து காரியத்தை நடத்தலாம். அல்லது தானங்கொடுத்தவன் தானேநேரில்தர்மகாரியங்களை நடத்தலாம். ஒருவேளை தர்மஞ்செய்தவனே தர்மத்தை நிறுத்திவிட்டால் அவனைக்கட்டாயப்படுத்தி நடத்தும்படி செய்ய சட்டமில்லை (15 க. ஐ 176, 167; இ. லா. ரி. 3 க. 324; இ. லா. ரி. 11 அ. 22, 37) ஆனால், தர்மகாரியங்களுக்காக சிலசொத்தை பிரத்தியேகமாய் ஏற்படுத்தி, அவைகளைக்கிரமமாய் நடத்த தர்மகர்த்தாக்களை ஏற்படுத்தாமல் தானாவது தன்வார்சுகளாவது பார்த்து வந்தால், அப்படிப்பட்ட தர்மகாரியத்தை நிறுத்தவழியில்லை. (இ. லா. ரி. 4 க. 56; இ. லா. ரி. 12 ம 391; 5 பா. ஸ. தீ. 268; 15 க. ஐ. 178; 10 ஸ. 299; 13 ஸ. 200; 8 மூ. இ. அ. 66; இ. லா. ரி 17 க. 498)

**285.** தர்மகர்த்தாக்களின் அதிகாரம்.—தேவஸ்தானம் முதலிய தர்மங்களை நடத்துவதற்காக ஏற்படுத்தப்பட்ட ஒருவன் தன்

சுயநன்மைக்காக சொத்துக்களைத்தொடாமல் தர்மவிஷயமாய் எவ்வளவு அதிகாரங்களையும் செலுத்தலாம். வீண்செலவுகளாவது, துர்வினியோகமாவது செய்யக்கூடாது. மைனர்களின் சொத்துவிஷயத்தில் கார்டியனுக்கு எவ்வளவுபாத்தியமோ தர்மகர்த்தாக்களுக்கு தர்மசொத்தில் அவ்வளவுபாத்தியந்தானுண்டு. (14 க. ஐ. 450; இ. லா. ரி. 2 க. 341; இ. லா. ரி. 15 க. 339; இ. லா. ரி. 15 பம். 625; 13 மு. இ. அ. 270; 20 ம. 471; 21 ம. 41; இ லா. ரி. 13 ம. 402.) தர்மசொத்துக்களை நீண்டகாலம் குத்தகைக்குவிட டிஸ்டிரிக்ட் கோர்ட்டாரிடம் அனுமதி பெறவேண்டும் அதிகவரும்படியை உத்தேசித்தும் நீண்டகாலத்துக்கு தர்மசொத்துக்களை குத்தகைக்குவிடலாம். (31 கல் 21.)

**286** தர்ம பரிபாலனர்மீது தாவா.—1863ளுத்து 23-வது ஆக்டாகிய தேவஸ்தானம் ஆக்ட் 23-வது பிரிவுப்படி யாதொரு தர்மகர்த்தா கெட்ட நடவடிக்கையுள்ளவனுயிருந்தாலும் அயோக்கியமான காரியங்களைச் செய்கிறவனுயிருந்தாலும் அவனைத்தள்ளிவிட தாவா செய்யலாம். (இ. லா. ரி. 6 க. 11) தேவஸ்தான முதலிய தர்மகாரியங்களுக்குவிடப்பட்ட சொத்தை துர்வினியோகஞ்செய்து தர்மகாரியங்களைச் சரிவரநடத்தாமல் அக்கிரமஞ்செய்தாலும் அப்படிப்பட்ட தர்மகர்த்தாவை நீக்கக்கோர்ட்டில் அந்த தேவஸ்தான முதலிய தர்மவிஷயமாய் சம்பந்தப்பட்டவர் பிராது செய்யலாம். (26 ம. 1; 4 மு. இ. அ. 190; இ. லா. ரி. 8 க 788; இ.லா.ரி. 3 பம். 27; இ.லா.ரி. 6 பம் 122; புது ஸிவில்புரோசிடர் கோட் 92, 93 பிரிவு.)

கோவில் ட்ரஸ்டிகள் தர்மசொத்தை வசப்படுத்த மூன்றுவது நபர்பேரில் தாவாசெய்தால், பக்தர்களும் வாதிகளாகச்சேர பாத்தியமுண்டு. (29. ம. 106.)

---

## 10-வது ஜீவனாம்சம்.

287. ஜீவனாம்சமென்பது --பொதுக்குடும்பத்தில் சாஸ்திரப்படி பாகங்கிடைக்காதவர்களா யிருக்கிறவர்களுக்கு ஜீவனாம்சம் அதாவது போஜனம், வஸ்திரம், கல்யாணம், சடங்கு முதலியவைகளுக்கு வேண்டிய திரவியங்கிடைக்கும்.

288. சேர்ந்தகுடும்பத்தில் ஜீவனாம்சத்துக்கு போக்கியமுள்ளவர்கள்.—பொதுக்குடும்பங்களின் குடும்பத்தின் எஜமானன் மற்ற பாகஸ்தர்களுக்கும், அவர்களின் பெண்ஜாதி குழந்தைகளுக்கும் அன்னபானுதிவஸ்திரம் கல்யாணம் முதலானவைகளுக்காக வேண்டிய செலவுகளைக்கொடுக்கவேண்டும். மேலும் குஷ்டரோகி, பிறவிக்குருடு செவிடு பைத்தியம் ஊமைமுதான விபாதியுள்ளவர்களுக்கும் இவர்களால் எடுத்துக்கொண்ட சுத்துபிள்ளைகளுக்கும் பாகஸ்தர்ளாயில்லாத விதவைகள், குழந்தைகள், விவாகமாகாத சகோதரிகள் முதலானவர்களுக்கும் பொதுக்குடும்பதில் ஜீவனாம்ச பாத்தியமுண்டு. (8 ம. 325.)

289. பிரிக்கக்கூடாதஜமீனில்ஜீவனாம்சபாத்தியமுள்ளவர்கள். பிரிக்கக்கூடாதஜமீனில் ஜேஷ்டசகோதரன் ஜமீன்தாரனுகி குடும்பத்தைச்சேர்ந்ததம்பிகள், சிற்றப்பன்முதலிய மற்றதாயாதிகள், அவர்கள்பத்தினிகள் குழந்தைகள் முதலியவர்களுக்கு ஜமீன்சொத்திலிருந்து ஜீவனாம்சம் கொடுக்கவேண்டும். (7 மு. இ. அ. 18; 9 மு இ. அ 66; 12 மு. இ. அ. 203)

290. விதவைகளுக்கு ஜீவனாம்சம்.—பொதுக் குடும்பத்தில் ஒருவனிறந்தால் அவன்பெண்சாதி மைனராயிருந்தாலும் பெரியவளாயிருந்தாலும் அவளுக்குக் குடும்பத்தலைவன் ஜீவனாம்சம்கொடுக்கவேண்டும். ஜீவனாம்சம்வாங்கிக்கொண்ட விதவை தனியாக விருக்கலாம் (12 க. ஐ. 238; 5 ம ஐ. 150; இ. லா. ரி. 3 பம். 372; இ. லா. ரி. 6 ம. 85; இ. லா. ரி. 14 பம். 490; 7 பம். 198) ஆனல், பொதுசொத்தின்வரும்படி மிகச்சொல்பமாய் பிரித்துக்கொடுக்கக்கூடாத ஸ்திதியிலிருந்தாலும், புருஷன் இறந்துபோகும்போது ஜீவனாம்சத்துக்காகச் சொத்து ஏற்படுத்தி பொதுக்குடும்பத்திலேயே வசிக்க

வேண்டுமென்று உயில்செய்துவிட்டுப் போயிருந்தாலும், அப்படிப் பட்ட ஸ்திதியில் விதவைகுடும்பத்தைவிட்டுத் தனியாகப்போயிருந் தால் ஜீவனுஞ்சங்கிடைக்காது. (இ. லா. ரி. 3 பம். 44; இ. லா. ரி. 4 பம். 261; 1869வூ ம. தீ. 59; 1859வூ பம். தீ. 457; எப். மெச். 62; 12 க. ஐ. 247; இ.லா.ரி 13 பம். 218; இ.லா.ரி. 15 பம். 236.) அவளுக்காக பொதுக்குடும்பத்தில் ஏற்படுத்திவிட்ட இடத்தில் வாசஞ்செய்யவேண்டியதேதவிர இன்ன இடம் அல்லது இன்னவீடு தான் வேண்டுமென்று கேட்கவிதவைக்கு பாத்தியமில்லை. (4. அ. ஐ. 103.)

**291.** விபசாரியான விதவைக்கு ஜீவனும்சமில்லை.—விதவை கள் விபசாரியாயிருந்தாலும் ஜீவனும்சங்கிடையாது. (1 ம. ஐ. 373; 2ம ஐ. 337; 5ம. ஐ. 160: 4 ம. ஐ. 185; 13க. ஐ. 72; 9பம். ஐ. 108.) கோர்ட்டுமூலியமாய் ஜீவனுச்சம் கிடைத்தபிறகு விபசாரியா யிருந்தாலும் அந்தஜீவனும்சத்தீர்ப்பைரத்துசெய்பலாம், நிறைவேற் றக்கூடாதென்று ஆட்சேபனைசெய்பலாம். (இ. லா. ரி. 9 பம். 108; 7 பம். 84; 5 க. 776; 7 இ. அ. 151; 17ம. 392; 19 ம. 6; 15 அல 382.) ஆனால், மகா அல்பமான ஜீவனுச்சத்தைக் கோர்ட்டார் ரத்து செய்யமாட்டார்கள். (இ. லா. ரி. 1 பம். 559; இ. லா. ரி. 17 க. 674.)

**292.** மைத்துனன்மாமனுர் இவர்களை ஜீவனும்சம்கேட்பது.— பிதுரார்ஜித சொத்தாவது, சுவயார்ஜித சொத்தாவது கொஞ்சங்கூட இல்லாமலிருந்தால் இறந்துபோனவனுடைய விதவைக்கும் பிரிந்துக் கொண்டு தனியாயிருந்தவனுடைய விதவைக்கும் ஜீவனும்சங்கொ டுக்க மைத்துனன்மாமனுர் முதலியவர்கள் கட்டுப்பட்டவர்களல்ல. (இ. லா. ரி. 11 ம. 191; 9 பம். ஐ. 283; 24 ஸ. 274; இ லா. ரி. 6 க. 36; இ. லா. ரி. 2 பம். 573, 632; இ. லா. ரி. 7 பம். 127; இ. லா. ரி. 8பம். 15; இ. லா. ரி. 11 பம். 199; 17 க. 373; 1 அல. 170.)

**293.** மாமனுர்சொத்தில் ஜீவனும்சம்.—ஆனால், அவளுடைய மாமனுர் சுவயார்ஜித சொத்திலிருந்து அவருபிரோதிருக்கும்போது விதவைக்கு ஜீவனும்சங்கேட்க பாத்தியமில்லாமற்போனபோதிலும், அவரிறந்தபிறகு அவருடைய மற்றப்பிள்ளைகள் அவர் சொத்தை

பாகஞ் செய்துகொள்வதுபோல இவளும் ஜீவனம்சங்கேட்க பாத்தியமுண்டு. (இ. லா. ரி. 11 அ. 294; இ. லா. ரி. 17 க 373; 22 ம. 305; 22 க. 410; 23 பம், 608.)

**294.** பெற்றோர்கள் குழந்தைகள் இவர்களைப் பாதுகாப்பது.—சொத்திருந்தாலுமில்லாவிட்டாலும் விருத்தாப்பியமான பெற்றோர்களையும், பெண்சாதியையும், குழந்தைகளான பெண்களையும் பிள்ளைகளையும் காப்பாற்ற ஒவ்வொருவனுங் கடமைப்பட்டிருக்கிறான். அப்படி காப்பாற்றாவிடில் பெற்றோரும் பெண்டாட்டியும் பிராதுசெய்து ஜீவனாம்சம்பெறலாம். (2 க. ஐ. 15; 1855ஞு ம. தீ. 238; இ. லா. ரி 11 ம. 89; 8 ம. 361; இ லா. ரி. 2 பம். 597; 23 பம். 608.) தக்க வயதுவந்த பிள்ளைகளைத் தகப்பன் இரட்சிக்கக்கடமைப்பட்டவனல்ல. ஆனால் பிதுரார்ஜித சொத்தில் அவர்களுக்கு பாத்தியமிருப்பதால் பிள்ளைகளுடைய அவசியமான செலவுகளைக் குடும்பத்தின் சக்திக்குத்தக்கபடி கொடுக்கவேண்டும். விவாகம்வரையில் பெண்களைத் தகப்பனும், அதற்குப் பிறகு புருஷனுமிரட்சிக்கவேண்டும். ஆனால், ரஜஸ்வலையாகும்வரையில் தாய்வீட்டிலிருப்பது சில விடங்களில் வழக்கமாயிருப்பதால் அந்த வழக்கப்படி பெற்றோர்வீட்டிலிருக்கிற பெண்சாதிக்கு புருஷன் ஜீவனம்சம் கொடுக்கவேண்டும். (1858ஞு ம. தீ. 154) பிரிக்கக்கூடாத ஜமீன்களில் குடும்ப எஜமானனைத்தவிர மற்றவர்களுக்கு ஜீவனம்ச பாத்தியமட்டுமுண்டு. (12 பம். ஐ. 94; இ. லா. ரி. 2 பம். 346; 12 மூ. இ. அ. 203, 495.)

**295.** சகோதரிகளை யிரட்சிப்பது.—(1) பெண்களைக் காப்பாற்றவும் விவாகஞ்செய்து கொடுக்கவும் கிரகப்பிரவேசம், சாந்திமுதலியவைகளுக்கு செய்யவேண்டிய செலவுகளையும் குடும்பத்திலிருந்து கொடுக்கவேண்டும் (23 ம. 512; 26 ம. 497) சாந்திக்குப்பிறகு புருஷனும் புருஷன் குடும்பத்தாரும் பெண்ணை ரட்சிக்கவேண்டும். (28 க. 279; 23 பம். 291.) பிறகு புருஷன் வீட்டில் ஜீவனத்துக்கு வழியில்லாமலிருந்தால் காப்பாற்றவும்வேண்டியது சகோதரனுடைய கடமையென்று தர்ம சாஸ்திரங்களிலிருந்தபோதிலும், பிதுரார்ஜித சொத்து யாதொன்றுமில்லாதிருந்தால் அப்படிப்பட்டவன் சகோதரிகளைக் காப்பாற்றக் கடமைப்பட்டவனென்று யாரும் சொல்லார்கள். (2 டப்ளியூ. மெக். 118; வெ. பூ. 245, 447)

(2) சகோதரர்கள் பாகஞ்செய்துகொண்டு தனியாய் சம்சாரஞ் செய்தாலும் தாய்க்கு ஜீவனத்துக்குவேண்டியதை வைப்பதுடன், சகோதரியினுடைய விவாகாதி சுபசோபனங்களுக்கு வேண்டியசெலவையும் கொடுக்க ஏற்பாடு செய்யவேண்டும்.

296. ஸபத்னி மாதாவை யிரட்சிப்பது.—பிதுரார்ஜித சொத்தில்லாதவன் ஸபத்னி மாதாவையும் அவளுடைய குழந்தைகளையுமிரட்சிக்கக் கடமைப்பட்டவனல்ல. (இ. லா. ரி. 9 பம். 279, 13 கல். 336) தர்ம சாஸ்திரத்தில் ஸபத்னி மாதாவையும், மாமியாரையும் சொந்தத்தாயாருக்குச் சமானமாகக் காப்பாற்றச்சொல்லியிருக்கிறது. (2 டப்ளியு மெக். 113, 118; வெ, பு. 234, 235, 437)

297. வைப்பாட்டிக்கு ஜீவனும்சம்.—வியபசாரியாயில்லாத ஒருவளை வெகுகாலமாக ஒருவனே வைப்பாக வைத்துக்கொண்டிருந்தால் அவன் அவளுக்கும், அவள் சந்ததிகளுக்கும் ஜீவனும்சங் கொடுக்கவேண்டியவனாகிறான். (11 பம் ஐ. 381; 8 ம. ஐ. கோ. ரி. 144; 23 ம. 282.) ஆனால், விபசாரத்தொழிலை அவனிடம் வந்த பிறகும் அவனிறந்தபிறகும் ஒழித்துவிட்டவளா யிருக்கவேண்டும். அவனிறந்த பிறகு அவன் சொத்தையடைந்தவர்கள் அவ்வைப்பாட்டிக்கு ஜீவனும்சம் கொடுத்து ரக்ஷிக்கவேண்டும். (26 பம் 163;) அவ்வைப்பாட்டியிடமாகப் பிறந்த பிள்ளையையும் தக்கவயது வருகிறவரையில் அவன் காப்பாற்றவேண்டும். ஆனால் அவன் ஹிந்து மதஸ்தனும், வேறுகிறிஸ்துமுதலிய அன்னிய மதஸ்தனுயிருக்கக் கூடாது. (27 ம. 13; 12 பம். ஐ. 229; 8 ம. ஐ. 144; 2 ம. ஐ. 293; 12 மூ. இ. அ. 203; 2 க. ஐ. 15; 7 மூ. இ. அ. 18; இ. லா. ரி. 1 பம். 97; இ. லா. ரி. 8 ம. 325; இ. லா. ரி. 6 அ. 329; இ. லா. ரி. 12 பம். 26.)

298. பெண்சாதியை யிரட்சிப்பது.—விவாகத்துக்குப் பிறகு பெண்டாட்டியையிரட்சிப்பது புருஷன்கடமை. அவள் பெரியவளாகிற வரையில் தகப்பன் வீட்டிலிருந்தாலும் அவளுக்குப்புருஷன் ஜீவனும்சங்கொடுக்கவேண்டும். (1858ஹு ம. தீ. 154) ருதுவானபின் அவள் புருஷனுடன்சேர்ந்து ஸம்ஸாரஞ்செய்யவேண்டும். தகுந்தகாரணமில்லாமல் புருஷன் வீட்டைவிட்டு நீங்கியிருந்தாலும்,

புருஷன்வைதானென்றாவது, அடித்தானென்றாவது, புனர்விவாகஞ் செய்துகொண்டானென்றாவது, தாஸியை வைத்துக்கொண்டானென்றாவது, வேறுமற்ற காரணங்களினாலாவது பெண்சாதி புருஷன் அனுமதியின்றி தனியாய் வீட்டைவிட்டிருந்தால் ஜீவனும்சங்கிடைக்காது. (இ. லா. ரி. 2 பம். 634; இ. லா. ரி. 4 அ. 374; 1 ம ஐ. 375.) ஆனால் துர்நடவடிக்கையில்லாமல் புருஷனைவிட்டு பக்கத்திலிருந்து வீட்டில் வசித்துவருகிறவளுக்கு புருஷன் ஜீவனும்சங்கொடாமலிருந்த போதிலும், அவனிறந்த பிறகு அவன் சொத்தையடைந்த மாமனாரிடம் ஜீவனும்சம் பெறலாம். (31 ம. 338.) விபசாரியாயிருந்தாலும் ஜீவனும்சங் கொடுக்கப்படமாட்டாது. (1 ம. ஐ. 372) ஆனால் பிறகு விபசாரத்தொழிலை விட்டவளுக்குப் புருஷன் ஏதாவதுசொல்பம்கஞ்சிக்குக் கொடுக்கவேண்டுமென்று தர்மசாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கின்றன. (7 பம். ஸ தீ. 144; 2 ம. ஐ. 337; 1 பம். ஐ. 560; இ. லா. ரி. 7 பம். 84; இ லா. ரி. 17 க. 679.)

299. ஜீவனும்சப்பிராது —(1) பெண்சாதிகளையும் குழந்தைகளையும் காப்பாற்றாமல் விட்டிருந்தால் அப்படியிருப்பவன்பேரில் முதல் வகுப்பு மாஜிஸ்ட்ரேட்டார் அவர்களிடம் மனுக்கொடுத்து அவரவர்கள் ஸ்திதிக்குத் தகுந்தபடி மாசம் 1-க்கு ரூபா 50-க்கு மேற்படாமல் ஜீவனும்சம் பெற்றுக்கொள்ளலாம். ஆனால், புருஷனிடம் காரணமன்னியில் இருக்கமாட்டேனென்ற பெண்சாதிக்கு ஜீவனும்சங் கிடைக்காது. மாஜிஸ்ட்ரேட்டார் உத்திரவு என்னமாயிருந்தபோதிலும் சிவில்கோர்ட்டில் தாவாசெய்துஜீவனும்சத்தை உறுதிப்படுத்திக் கொள்ளவேண்டும். மேலேகண்டதாவாவுக்குப் பிறகு விபசாரியா யிருப்பவளுடைய ஜீவனும்சத்தை ரத்துசெய்யலாம். (கிரிமினல் புரோசிஜர்கோட் 488, 489 பிரிவுகள்.) சொத்துள்ள விதந்துகள் ஜீவனும்சபிராது செய்யக்கூடாது. (33 பம். 50.)

(2) வெகுநாளாக வைப்பாக வைத்திருந்த தாஸிகள்கூடமாஜிஸ்ட்ரேட்டாரிடம் மனுக்கொடுத்து ஜீவனும்சம் அடையலாம். ஆனால், அவள் விபசாரியாயிருக்கக்கூடாது.

300. சொத்தை ஜீவனும்சத்துக்கு வைக்காமல் தானஞ்செய்வது.—புருஷன்பெண்சாதிக்கு ஜீவனும்சத்துக்குக்கூட வழியில்லா

மல் எல்லாசொத்தையும் தானஞ்செய்தாலும், உயில்செய்தாலும் வேறேவிதமாய் பாராதீனஞ்செய்தாலும் அவனுடைய ஜீவனும்ச பாத்தியத்துக்கு உட்பட்டே அந்தசொத்துப் பாராதீனமாகும். (8. க. ஐ. 225; 8 மூ. இ அ. 66. இ. லா. ரி. 8 டம். 98; இ. லா. ரி. 12 ம. 267, இ. லா. ரி. 10 க. 638; எப். மேக். 92; 2 அ. 315; 5 பம். 991; 18 பம். 452.)

301. குடும்பசொத்து விஷயமாய் ஜீவனும்சம்.—(1) ஜீவனும்சம் குடும்பசொத்தைப் பொருத்ததாயிருந்தாலும் உடம்படிக்கை, தீர்ப்பு இதுகளினால் அந்தபாத்தியம் குடும்பசொத்தின்பேரில் ஏற்படுத்தாவிட்டால், அதைக்கிரயம் ஒத்திமுதலிய யாதிரியாக விநியோகஞ்செய்தாலும் அப்படிப்பட்டசொததைப் பெற்றவர்கள் ஜீவனும்சங்கொடுக்க பாத்தியப்பட்டவர்களல்ல. (8. க. ஐ. 225; இ. லா. ரி. 1 க. 365 12 பம். ஐ. 69; இ. லா. ரி. 2 பம். 494, 524; இ. லா. ரி. 12 ம. 285; இ. லா. ரி. 11 க, 102; இ. லா. ரி. 4 அ. 296) மேலே சொன்னபடி உடம்படிக்கை தீர்ப்புமுதலியவைகளால் குடும்பத்தின்பேரில் ஜீவனும்சபாத்தியம் ஏற்பட்டிருந்தால் அந்த சொத்து ஜீவனும்சத்துக்குக் கட்டுப்பட்டதாயிருக்கும். (6 ஸ. 253; இ. லா. ரி. 2 அ. 162; 4 பம். ஐ. 73.)

(2) ஜீவனும்சத்துக்குமுந்தி குடும்பக்கடன்களைத் தீர்ப்பது அவசியமாதலால் அவைகளுக்காக விற்கப்பட்டக் குடும்பசொத்து ஜீவனும்சத்துக்குக் கட்டுப்படமாட்டாது. (இ. லா. ரி. 4 அ. 296; இ. லா. ரி. 5 அ. 367; 11 க. 102; 2 பம். 494; 2 ம. 126; 12 ம. 260; 27 ம. 45.)

302. ஜீவனும்சத்தை மோசஞ்செய்ய ஏற்பாடுசெய்வது—ஜீவனும்சத்தைக் கொடுக்காமல் மோசஞ்செய்ய நினைத்து குடும்பசொத்தை விற்றாலும் தானமாகக்கொடுத்தாலும் அதுதெரிந்திருந்து அந்த சொத்தை வாங்குகிறவன் ஜீவனும்சத்தைக் கொடுக்கும்படியாகும். தெரியாமல் விற்பனையில்வாங்கினால் கொடுக்கவேண்டியதில்லை. (இ. லா. ரி. 2 பம். 494; இ. லா. ரி. 3 ம. 184; இ லா. ரி. 6 ம. 83; 8 க. ஐ. 298; 1882ளுடத்து 4-வது டிரான்ஸ்பர் ஆப்பிராபர்டி ஆக்ட் 39-வது பிரிவு.)

303. ஜீவனும்ச விதவைக்கு இடங்கொடுப்பது.—(1) இறந்து போனபாகஸ்தனுடைய விதவைக்கு ஜீவனும்சம் கொடுப்பது போலவே குடியிருக்க இடமுங்கொடுக்கவேண்டியது. குடும்பப் பொதுக்கடனுக்கல்லாமல் வேறுகடன்களுக்கு வீடுவிற்கப்பட்டாலும் ஏலம்போடப்பட்டாலும் அதைவாங்கினவன் அதில்குடியிருக்கும் விதவையை வெளியேபோகச்சொல்ல அதிகாரமில்லை. (இ. லா. ரி. 12 பம். 101; இ. லா. ரி. 1 அ 268; இ. லா. ரி 3 அ 353; இ. லா. ரி. 6 ம. 130; இ. லா. ரி. 12 ம. 260; 7 பம். 282.)

(2) ஆனல் குடும்பார்த்தமான கடன்களுக்காவது அவைகளின் பேரில் ஏற்பட்ட டிக்ரிகளுக்காவது குடும்பவீடானது பராதீனப்பட்டுப்போனல் விதவையானவள் குடியிருப்பு பாத்தியத்தைக் கொண்டாடமுடியாது. (12 மது. 260; 17 பம் 398.

(3) விதவையினுடைய புருஷனல் வாங்கப்பட்டிருந்த கடன்களுக்காக குடும்பவீடானது பராதீனப்பட்டுப்போனல் அக்கடன்கள் எவ்விதமாய் ஏற்பட்டனவாக இருந்தாலும் விதவை அப்பராதீனங்களுக்கு முற்றிலும் கட்டுப்பட்டவளாகிறுள்.

(4) ஆனல்மகனல் வாங்கப்பட்ட குடும்பார்த்தமில்லாத கடன்களுக்கு தாயார் கட்டுப்படவேண்டிய அவசியமில்லை. குடும்பார்த்தமான செலவுகளுக்கல்லாமல் மகனானவன் தன்சொந்தத்தில் கடன்பட அக்கடன்களின் நிமித்தம் குடும்பவீடு கிரயஞ்செய்யப்பட்டால், கிரயம்பெற்றவன் கடன்பட்டவனுடைய தாயாரை அவ்வீட்டிலிருந்தும் அப்புறப்படுத்த முடியாது. (6 மது. 130; 7 பம். 282)

304. சிறுவயதில்விதவை பெற்றோர் வீட்டிலிருப்பது.—ஜீவனும்சபாத்தியத்தையுடைய ஒருவிதவை தன்புருஷன்வீட்டிலேயே அக்குடும்பத்தாரோடு சேர்ந்து வசிக்கவேண்டுமென்ற கட்டாயமில்லை. பால்யத்தில் புருஷனையிழக்கிற இளம்விதவைகளுக்கு புருஷன்வீட்டிலிருப்பதைவிட பிறந்த வீட்டிலிருப்பதே மிக்கசௌகரியமாக இருக்கும் புருஷன் இறந்தபின் அவனுடையபாகஸ்தர்களுடன் வசிப்பது சங்கோஜமாயும் நிர்பந்தமாயுமிருக்கும். ஆனது பற்றி அவ்விதவைகள் புருஷன்வீட்டிலேயே வசிக்காமல் பெற்றோர் முதலியவேறு இடங்களில் வசித்தாலும், ஜீவனும்சம்பெறும் பாத்தியத்தை அவர்கள் அதனல் இழக்கமாட்டார்கள்.

**305.** விபசாரித்தனத்துக்காக வேறிடத்தில் வசிப்பது.—ஆனால் விபசாரித்தனம் முதலியகெட்ட நடத்தைகளின்பொருட்டு புருஷனுடைய குடும்பவீட்டைவிட்டு தன்னிஷ்டம்போல் அன்னிய இடங்களில் குடியிருக்கிற விதவைக்கு யாதொரு ஜீவனாம்சமும் கிடைக்கமாட்டாது (14 பம். 490.)

**306.** புருஷனிறந்துபோகும்போது பெண்சாதிதன் வீட்டிலேயே வசிக்கவேண்டுமென்று சொல்லிப்போவது—மேலும் தன் பெண்சாதியானவள் குடும்பவீட்டில் வசித்தால்மட்டும் ஜீவனாம்சத்தைப் பெறுவாளென்ற நிபந்தனையை ஒருபுருஷன் இறந்துபோவதற்கு முன் உயில் முதலிய சாசனங்களில் ஏற்படுத்திவைத்திருந்தால், அப்போது அவனுடைய விதவை அந்நிபந்தனைப்படி நடக்கவேண்டியவளாகிறாள். அதைமீறிவேறு இடங்களில் குடியிருந்தால் அவளுக்கு யாதொரு ஜீவனாம்சமும் கொடுக்கவேண்டிய நியாயமில்லை. (15 பம். 236.)

**307.** ஜீவனாம்சதாவா.—(1) ஜீவனாம்சம் கொடாதவர்கள் பேரில் காலாவதியால் பாதிக்கப்படாத ஜீவனாம்ச பாக்கித் தொகையைக்கூடச் சேர்த்து தாவாசெய்து தீர்ப்புப்பெறலாம். (1 பம். ஐ. 191; 2 ம. ஐ. 36; 12 க ஐ. 238; இ. லா. ரி. 5 பம். 99; இ. லா. ரி. 3 பம். 44) அவனுடைய சுவாதீனத்திலிருக்கிற எல்லா அசையாப்பொருளையும் ஜீவனாம்சபாத்தியத்திற்கு உட்படுத்தலாம். தீர்ப்பின்பிறகு அந்தசொத்துக்கள் விற்கப்பட்டாலும் அவைகளின்பேரிலுள்ள ஜீவனாம்சபாத்தியம் போகமாட்டாது. (இ லா. ரி 2 பம். 524; இ. லா. ரி. 1 க. 365; இ. லா. ரி. 12 ம. 285; இ. லா. ரி. 10 ம. 283)

(2) மாதம் அல்லது வருஷம் 1-க்கு இவ்வளவுதொகை கொடுக்கவேண்டுமென்று ஜீவனாம்சத்துக்கு தாவாசெய்து தீர்ப்புப்பெற்றால் பிறகு அசையாப்பொருளைக் கட்டுப்படுத்துவதற்காகக் கொடுக்கும் தாவாசெல்லாது. (இ. லா. ரி. 10 ம. 347.)

(3) விதவை ஜீவனாம்சத்திற்கு பிராதுசெய்யும்போது குழந்தைகளுடைய ஜீவனத்திற்கும் அவர்களுடைய கல்யாணங்களுக்கும் வேண்டிய தொகைகளுக்குஞ் சேர்த்து தாவா செய்யலாம். (6 அ. 243)

(4) தீர்ப்புப் பெற்றபிறகு ஜீவனுப்சத்துகை அப்போதைக் கப்போது பாக்கி நின்றால் கோர்ட்டு மூலமாய் வசூல் செய்யலாம்.

**308.** மருமகள், சகோதரன் பெண்சாதி முதலியவருக்கு ஜீவனும்சம்.—யாதொரு ஆதாவுமின்றி நிர்க்கதியாய் இருக்கும் பிள்ளைகளுடைய விதவைகளான மருமகள், சகோதரர்களுடைய விதவைகளையும், ஒருவன்தன் சுபார்ஜித சொத்தைக் கொண்டும் சம்ரக்ஷிக்க வேண்டுமென்று வெகு வருஷங்களுக்கு முன் பம்பாய் ஹைகோர்ட்டார் தீர்மானித்திருந்தார்கள். ஆனால் அத்தீர்ப்பு சட்டப்படி சரியான தல்லவென்று ஷை கோர்ட்டார் பின்னிட்டு ஆலோசனை செய்து அதை மாற்றி, பிதுரார்ஜிதமான சொத்திருந்தாலொழிய அப்படிப்பட்ட விதவைகளை ஒருவன்சம்ரட்சிக்க சட்டப்படி கடமைப் பட்டவனல்லவென்றே மற்ற ஹைகோர்ட்டுகளுடைய தீர்மானம் போல் தீர்மானித்திருக்கிறார்கள். (2 பம். 573; 7 பம் 127; 8 பம். 15; 11 பம்: 199.)

**309.** சுவயார்ஜிதத்தால் மீட்ட பிதுரார்ஜித சொத்தில் ஜீவனும்சம்.—முன்னோர்களால் செய்யப்பட்ட அடமானம் போக்கியம் முதலான வில்லங்கங்களுக்கு உட்பட்டிருந்த பிதுரார்ஜிதமான சொத்தை ஒருவன் தன் சுயார்ஜிதத்தைக் கொண்டு மீட்டுக்கொண்டிருந்தால் அதுவும் சட்டப்படி பிதுரார்ஜித சொத்தாகவே பாவிக்கப்படுமாகையால் அப்படிப்பட்ட சொத்தை யடைந்திருக்கும் ஒரு மாமனார் தன் மருமகளுக்கு அதிலிருந்தும் ஜீவனும்சம் கொடுக்க வேண்டியவனாகிறானென்று மதராஸ் ஹைகோர்ட்டார் தீர்மானித்திருக்கிறார்கள். (5 ம. ஹை கோ. ரி. 150.)

**310** ஜீவனும்சங் கொடுக்க வேண்டிய சொத்து.—ஜீவனும்சம் சமபத்துக்குத் தக்கபடி கிடைக்கிறது. அதாவது:—ஒருவனிறந்து போகும்போது அவனுடைய இரண்டு பெண்சாதிகளும் ஆளுக்கொரு பிள்ளையைப் பெற்றிருந்தார்கள்; பிறகு பிள்ளைகள் பாகஞ் செய்துகொண்டார்கள். இந்தஸ்திதியில் அவர்களின் தாய்களுக்கு அவளவளுடைய பிள்ளையின் ஆஸ்திக்குத் தக்கபடி ஜீவனும்சம் கிடைக்குமேயொழிய புருஷன் சொத்தின்பேரில் ஜீவனும்சம் கணக்கிடக்கூடாது. (இ. லா. ரி. 16 க 758.)

**311.** சுவயார்ஜித சோத்தில் ஜீவனும்சம்.—மிதாட்சரப்படி ஒருவன் வைத்துவிட்டுப்போன சுவயார்ஜித சொத்து அவன் விதவையின் ஜீவனும்சத்துக்குப் போதுமானதா யிருந்தால் அதை வைத்துக்கொண்டு பிதுரார்ஜித சொத்தில் ஜீவனும்சங் கேட்டால் செல்லாது. (4. அ. ஐ. 63.)

**312.** ஜீவனும்சத்துகையைநிஷ்கரிஷைசெய்வது -(1)ஜீவனும்சத்துக்கு இவ்வளவு துகைகொடுப்பதென்று நிச்சயிக்க, அவரவர் யோக்கியதை சொத்தின் வரும்படி, குடும்பத்தின் செலவு இன்னும் மற்ற விஷயங்கள் இவைகளை யெல்லாம் யோசிக்கவேண்டும். காரணமின்றி தள்ளப்பட்ட குற்றமற்ற பெண்சாதிக்கு புருஷன் சொத்தில் மூன்றி லொருபாகமும், அதுவும் போதாத பட்சத்தில் அதிகமும் கொடுக்க வேண்டுமென்று விவகார மயூகத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. (1 பாரோ. 63; 9 பம். ஐ. 283) ஜீவனும்ச பாத்தியம் புருஷனின் பாகபாத்தியத் துக்குட்பட் டிருப்பதால், அதை யனுசரித்து விதவையின் அந்தஸ்து முதலியதுக்குத் தக்கபடி ஜீவனும்சம் கொடுக்கவேண்டும். (12 அல. 558; 21 அல. 232; 22 கல். 410.) எவ்விதத்திலும் குடும்பத்தில் அவள் புருஷனுயிரோடிருந்தால் அவனுக்கு சொத்தில் என்ன ஆதாயம் கிடைக்கக் கூடியதோ அதற்கு மேற்படக்கூடாது. (இ. லா. ரி. 2 பம். 639; இ. லா. ரி. 11 பம். 199) மேலும் அவள் செய்கிற வைதீகசடங்குகளை உத்தேசித்தும் ஜீவனும்சத்தொகை ஏற்பட வேண்டும். (12 அல. 558; 5 இ. அ. 55.)

(2) ஆகையால் ஒருவிதவையின் ஜீவனும்சத்துக்காக வருஷத்துக்கு அல்லது மாதத்துக்கு இவ்வளவென்று ஏற்படுத்தப்படும் தொகையானது அவளுடைய புருஷன் உயிரோடிருந்தால் அவனுக்கு என்ன பாகம் கிடைத்திருக்குமோ அப்பாக சொத்தின் வருஷம் அல்லது மாசவரும்படிக்கு மேற்பட முடியாதென்றும், அவ்விதம் தீர்மானிக்கப்படும் தொகையானது அவளிடகாலக்ஷேபாதிகளுக்குப் போதாததாயிருந்தாலும் அதற்குமேல் அவளுக்கு யாதொன்றும் கிடைக்க சட்டப்படி நியாயமில்லை யென்றும், தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. (2 பம். 639; 11 பம். 199.)

(3) மேலும் ஜீவனும்சங் கொடுக்க வேண்டியவனுடைய குடும்ப சொத்தானது சொல்பமாயும் அச்சொத்தின் வரும்படி

நிரம்ப அல்பமாயு மிருந்தால், விதவைக்கு தனியான ஜீவனும்சம் கொடுப்பிக்க சாத்தியப்பட மாட்டாதென்றும், அப்படிப்பட்ட சந்தர்ப்பத்தில் விதவையானவள் குடும்பத்தாரோடு சேர்ந்திருந்தே கால க்ஷேபத்தை நடத்திக்கொள்ள வேண்டுமென்றும் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது (2 பம். 573; 4 பம். 261; 22 பம். 52.)

(4) வரும்படியைக் கொடுக்காத ஆடையாபரணச் ஸ்திரீதனம் முதலியவைகளை கவனிக்கக்கூடாது; வரும்படி வரக்கூடிய நிலம் முதலிய ஸ்திரீதன சொத்துக்களிருந்தால் அந்த நிலங்களின் வரும்படியைக் கழித்துத்தான் ஜீவனும்சம் கிடைக்கும். (4 அ. ஐ. 63; 2 பம். ஐ. 341; 2 பம் ஐ. 584; 2 பம். 573; இ. லா. ரி. 14. பம். 490) ஜீவனத்துக்கு வேண்டிய பென்ஷன் சர்க்காரால் ஒருவிதவைக்குக் கிடைத்தால் அவள் ஜீவனும்சம் கேட்க பாத்தியமில்லை. (1857ஞு ம. தீ. 69) ஜீவனும்சத்துகை ஏற்படுத்தினபிறகு சொத்தின் வரும்படி அதிகமானாலும் சொந்தக்காரனுடைய பிசகினாலல்லாமல் குறைந்தாலும் கோர்ட்டில் மனுக்கொடுத்து ஜீவனும்சத்தை சமயத்துக்குத் தக்கபடி அதிகப் படுத்தலாம் அல்லது குறைக்கலாம். (இ. லா. ரி. 1 அ. 594; இ. லா. ரி. 8 ம. 94. 2 பம். 630; 7 பம். 151; 22 ம. 175; 24 பம். 392.) அக்கிரமமாய் சொத்தை யழித்தால் ஜீவனும்சத் தொகை குறையாது. (24 பம். 386)

313. ஒரேதடவையில் மொத்தமாய் ஜீவனும்சம் பெறுதல்.—பிரதிவருஷ்மும் ஜீவனும்சங் கொடுப்பதற்குப் பதிலாக மொத்தமாய் கொஞ்சம் துகையைக் கொடுத்து அதற்குமேல் ஜீவனும்சம் கேட்காதிருக்கும்படியாய் ஜீவனும்சக் காரியிடம் உடன்படிக்கை செய்து கொள்ளலாம் (இ. லா. ரி. 2 பம். 573.) அல்லது ஜீவனும்சத்துக்கு வரும்படியை மட்டும் எடுத்துக் கொள்ளும்படி யாதொரு சொத்தை விட்டால், அவளுக்குப்பிறகந்த சொத்து விட்டவனையாவது அவன் வார்சுகளையாவது சேரும். (22 ஸ. 225; இ. லா. ரி. 4 ம 193; இ. லா. ரி. 5 க. 113; இ. லா. ரி. 10 அ. 462; 1850ஞு ம. தீ. 160; 10 மூ. இ. அ. 490.) ஆனால், சகல பாத்தியதையுடன் யாதொரு சொத்தை ஜீவனும்சத்துக் காகவிட்டால் அதை அந்த ஜீவனும்சக்காரி சுவயேச்சையாய் விற்கவும் மற்றபடி வினியோகஞ்

செய்யவும் பாத்தியமுண்டு. (9 மூ. இ. அ. 55; 4 ம. 371; 14. ம. 462; 26. இ. அ. 216; 27. க. 156.)

**314.** குறிப்பிட்டசோத்தை ஜீவனும்சத்துக்கு பொறுப்புக்கட்ட கேட்கலாம்—(1)ஜீவனும்சமானது குடும்ப சொத்தின் பேரிலுள்ள ஒரு பொறுப்பாக இருக்கிறபடியால், ஜீவனும்சக் காரியானவள் தனக்கு நெடுகிலும் கிடைத்துவரவேண்டிய ஜீவனும்சத்தின் ஆதரவுக்காக ஒரு குறிப்பிட்ட சொத்தை பொறுப்பாக ஏற்படுத்திக் கொடுக்கும்படி கேட்கலாம். (12 ம. 260; 17 ம. 268.)

(2) ஆனால் ஜீவனும்சத்துக்காக அவ்வாறு யாதொரு சொத்தும் குறிப்பிட்டு பொறுப்பாக ஏற்படுத்தப்படாமலிருக்கும்போது ஒரு குடும்ப சொத்தை அன்னியனொருவன் நல்ல எண்ணத்தோடு கிரயம் பெற்றால், அது ஜீவனும்சத்துக்கு உட்படமாட்டாது. (6 ம. 83; 2 பம். 494; 22 அல. 326; 24 அல. 160.)

**315.** ஜீவனும்ச தாவாவுக்குக் காலமும், ஸ்டாம்பும்.—(1)ஜீவனும்சத்துக்குப் பிராது அந்த ஜீவனும்சங்கொடுக்கவேண்டியவன் மறுத்துவிட்டநாள் முதல் 12வருஷத்துக்குள்கொண்டுவரவேண்டும். 1908ளுஷத்து கால நிர்ணய சட்டம்முதல்ஷிடியூல் 129-வது ஆர்டிகள்.)

(2) ஜீவனும்சத்துக்குப் பிராதுசெய்தால் 12ளுஷத்துக் குட்பட்ட காலத்தில் கிடைக்கவேண்டிய ஜீவனும்சத் தொகையைமட்டும் சேர்க்கலாம். (ஷை ஆக்டின் ஷிடியூல் 128-வது ஆர்டிகள் (27 ம. 32; 17 ம. 268.) ஆனல் கோர்ட்டார் சமயத்துக்குத்தக்கபடியும் நியாயமாயும் ஜீவனும்சபாக்கியில் ஒருபாகத்தையாவது, பூறுவையுமாவது மறுதளிக்கலாம். (21 அல. 183; 18 ம. 403; 3பம். 44; 17 பம்.45.) ஜீவனும்ச விஷயமாய்ச்செய்யும் தாவாவுக்குப்பத்திரம், 10 வருஷத்து ஜீவனும்சத்தொகையின்பேரில் கட்டவேண்டியது. (கோர்ட்டுக்கட்டணச்சட்டம் 72-வது பிரிவு.)

**316.** ஜீவனும்ச பாத்தியத்தை வினியோகிக்கக்கூடாது.—ஜீவனும்சம் சரீரசம்ரட்சணார்த்தம் ஏற்பட்டபடியால் அதை விற்பனை, ஒத்திபந்தகமுதலிய பாத்தியங்களுக்கு விடக்கூடாது. மேலும் தீர்ப்புப்பெற்று நிறைவேற்றும் சமயத்தில் ஜீவனும்சபாத்தியத்தை ஜப்தி

செய்யக்கூடாது. (5 ஸ. 111; 8 ஸ. 41) கோர்ட்மூலமாய் ஜீவனும் சத்துக்காக கிடைக்கத்தக்க சொத்தை கடன்காரன் ஜப்திசெய்யக் கூடாது. சிவில் புரோசிடர் கோட் 266-வது பிரிவு.) ஆனுல், பாக்கியாய் நின்றிருக்கும் ஜீவனும்சத்துகையை ஜப்திசெய்யலாம். (3 வைமஸ், ரிப்போர்ட்டுகள் 207.)

---

## 11-வது பாகம்.

### (a) பாகத்துக்கு யோக்கியமான சொத்துக்கள்.

317. பாகத்துக்குயோக்கியமான சொத்துக்கள்.—(1) தகப்பன் பாட்டன் முப்பாட்டன் இவர்களிடமிருந்து வார்சுபாத்தியத்தாலாவது, உயில்மூலமாயாவது, தானமாகவாவது கிடைத்தசொத்தும், பொதுக்குடும்பத்தில் எல்லா பாகஸ்தர்களுக்கும் சமமாய் பாத்தியப்பட்ட மற்ற ஸ்தாவரஜங்கம சொத்துக்களும் பிரிக்கத்தக்கவைகள். (10 பம். ஐ. கோ. ரி. 444.)

(2) சில சொத்துக்கள் பிதுரார்ஜிதமானதாக இருந்தாலும் அவைகள் தங்கள் தன்மையினுலாவது வழக்கத்தினுலாவது பாகிக்கத்தகாதவைகளாக இருக்கின்றன. அப்படிப்பட்ட சொத்துக்கள் குடும்பத்தில் ஜேஷ்டனுயிருப்பவனுக்கே சேர்ந்ததாயிருக்கின்றன. இச்சொத்துக்களைப்பற்றி பின்னுல் விரிவாய் கூறப்பட்டிருக்கிறதைப்பார்க்க.

### (b) பாகார்கமில்லாத சொத்துக்கள்.

318. பாகிக்கக்கூடாத சொத்துக்கள்.—(1) தானே சுவயமாய் சம்பாதித்த சொத்தும், பிதுரார்ஜித சொத்தில்லாமல் தாயார், தாயின் தாய், தாயின் தகப்பன், அண்ணந்தம்பிகள், சிற்றப்பன், பெரியப்பன், இவர்கள் பிள்ளைகள் முதலியவர்களிடமிருந்து கிடைத்த சொத்துக்களும் பிரிக்கக்கூடாதவைகள். ஜமீன்கள் பிரிக்கப்படாமல் குடும்பத்தின் மூத்தபிள்ளையைச் சேரும். ஆனுல் ஜமீன் ஆதாயத்தைக் கொண்டு ஜமீன்தார் சேர்த்துவைத்த சொத்து

அவனுக்குப்பிறகு அவனுடைய வார்சுகள் பிதுரார்ஜித சொத்துப் போலப் பிரித்துக்கொள்ளவேண்டியது. (5 ம. ஐ. 31; 7 மூ. இ. அ. 476.)

(2) பாகிக்க முடியாததாயும் விலைமதிப்புக்கடங்காததாயுமிருக்கிற பூஜார்கமான குடும்ப விக்கிரகங்களும் அவைகளைச்சேர்ந்த பூஜை சாமான்களும் குடும்பத்தில் மூத்தவனாக இருப்பவனுடைய சுவாதீனத்திலேயே இருக்கத்தக்கதென்றும், விக்கிரகங்களை வைத்துப் பூஜை செய்யுமிடத்துக்கு மற்றவர்கள் பூஜாகாலங்களில் சேவிக்கப்போகலாமென்றும் பம்பாய் ஹைகோர்ட்டார் தீர்மானித்திருக்கிறார்கள். (17 பம். 271.)

(3) பாகிக்க முயல்வதில் எவைகள் சேதத்தையடைந்து உபயோகமற்றதாய் விடுகிறதோ அப்படிப்பட்ட சொத்துக்களை ஒரு பாகஸ்தனுடைய பங்குக்கே தள்ளிவிட்டு மற்ற பாகஸ்தர்கள் அச்சொத்துக்களின் விலைமதிப்பில் தங்கள் தங்களுக்குள்ள பங்கை அவனிடமிருந்து அடையவேண்டும். (10 கல். 675.)

(4) சர்க்காரால், கர்ணம் முதலிய கிராம உத்தியோகஸ்தர்களுக்குக் கொடுக்கப்பட்ட உத்தியோக விஷயமான மானியம் முதலியவைகள் பிரிக்கக்கூடாதவைகள். (6 பம். ஸ. தீ. 169; 6 மூ இ. அ. 125; 2 ம. தீ. 85; இ. லா. ரி. 7 ம. 236) ஆனால், பம்பாயிராச்சியத்தில் பாடில், தசமுக் தேசபாண்டிய முதலிய கிராம உத்தியோகஸ்தருக்கு சர்க்காரால் கொடுக்கப்பட்ட மானியங்கள் பிரிக்கத்தக்கவையென்று தீர்ப்பு செய்யப்பட்டிருக்கிறது. (10 பம். ஐ. 228; இ. லா. ரி. 4 பம். 494; இ. லா. ரி. 10 பம் 327, 598.)

(5) சர்க்கார் அல்லது இராஜாக்களால் சம்மானமாகக் கொடுக்கப்பட்ட பிருதுகள் முதலியவைகளைப் பிரிக்கக்கூடாது. (6 மூ. இ. அ. 426; இ. லா. ரி. 7 ம 191.)

(6) அசுந்தரவார்சு பாத்தியமாய் கிடைத்தசொத்து சுவயார்ஜிதமாக பாவிக்கப்படுவதால் அந்த சொத்தையும் தகப்பனுள்ளவரையில் பாகங்கேட்க கூடாது. (1 அல, 651; 22 ம. 305.) ஆனால் தௌகித்திரபாத்தியமாயடையும் சொத்துமட்டும் பிதுரார்ஜிதமாகு

மென்றும் அதில் பிள்ளைகளுக்கு பாகமுண்டென்றும் தீர்மானிக்கப் பட்டிருக்கிறது. (25 ம. 687; பிரிவிகவுன்சில் தீர்ப்பு; 27 ம. 300, 382.)

319. பாகஸ்தர்கள் பாகங்கேட்க பாத்தியம்.—(1) தகப்பனுடைய சுவயார்ஜிதசொத்தைப் பாகங்கேட்க பிள்ளைகளுக்குப் பாத்தியமில்லாமற் போனபோதிலும், பிதுரார்ஜித சொத்தைப் பிரித்துக் கொடுக்கவேண்டுமென்று பிள்ளைகள் கேட்டால் தகப்பன் உடனே பிரித்துக்கொடுக்கவேண்டும். (1 அல. 431; 17 பம். 271; 18 ம. 179.) பிள்ளைகளில்லாவிட்டால் பேரன்களும், பேரனுமில்லாவிட்டால் கொள்பேரன்களும் பிதுரார்ஜித சொத்தில் பாகம்கேட்கலாம் (1 ம. ஐ. 77; 12 க. ஐ. 373; இ.லா.ரி. 1 அ. 159; இ.லா.ரி. 5 அ. 430; வெ.பூ. 365, 370, 373; 10 பம் ஐ. 463; இ.லா.ரி. 10 பம். 529, 578; இ.லா.ரி. 12 பம். 280, 294; 1 ம. 76; 5 க. 148; 6 இ.அ. 88; 5 அல. 430; 6 அல. 514.)

(2) பிதுரார்ஜித சொத்தைபாகஞ்செய்கிற விஷயத்தில் பிள்ளைகளுக்கிஷ்டமிருந்தாலு மில்லாவிட்டாலும் சொத்தை பாகஞ்செய்யத் தகப்பன் அவர்களைக் கட்டாயப்படுத்தலாம், அல்லது பாகஞ் செய்து வைக்கலாம். (இ.லா.ரி. 2ம. 317, 321.) ஒருவன் தனியாயிருந்ததினலே பாகம் பிரிந்ததாக பாவிக்கக்கூடாது (5 க. 474.)

(3) பாகபாத்தியம் பிள்ளை பேரன், கொள்பேரன் இவர்கள் வரையில் மட்டும் செல்லும். மூன்று தலைமுறை தாண்டினகொள் பேரன் மகனுக்கு அந்தப்பாத்தியமில்லை. மேலும் பிள்ளை ஜீவத்திருக்கிறவரையில் பேரனுவது போன் ஜீவித்திருக்கையில் கொள்பேரனுவது அவன் தகப்பனிஷ்டத்திற்கு விரோதமாக பாகங்கேட்க அல்லது அவனை பாகவிஷயமாய் பலவந்தப் படுத்த பாத்தியமில்லை. (இ.லா.ரி. 6. அ. 574; இ.லா.ரி. 16 பம். 29; இ.லா.ரி. 5 அ. 430.)

320. பங்காளதேச சம்பிரதாயம்,—தாயபாகப்படி பங்காளதேசத்தில் தகப்பன் உயிரோடிருக்கையில் அவனுடைய சுவயார்ஜித பிதுரார்ஜித சொத்துவிஷயமாய் பாகங்கேட்கப் பிள்ளைகளுக்கு எவ்வளவும் பாத்தியமில்லை. ஆனல், தகப்பனிறந்தபிறகு பிள்ளை சிற்றப்பன் பெரியப்பன் இவர்களை பாகங் கேட்கலாம்.

**321.** ஸ்வீகாரப்பிள்ளையின் பாகம்.—இதைப்பற்றி முன்னே 83, 84, 85, 86-வது பிரிவுகளில் விவரமாய் சொல்லப்பட்டிருக்கின்றன.

**322.** தாசிமகன்களின் பாத்தியம்.-(1)பிராமண, க்ஷத்திரிய வைசியஜாதிகளில் வைப்பாட்டிக்குப் பிறந்த பிள்ளைகளுக்கு பாக பாத்தியமே கிடையாது. (7 மு. இ, அ. 18; 8 ம. ஐ. 369; 13 மு. இ. அ. 47) ஆனால், சூத்திரஜாதிகளில் வைப்பாட்டி மகன் தன் தகப்பனையாவது, சிறியதகப்பன், பெரியதகப்பன் அவர்கள் பிள்ளைகள் இவர்களையாவது பாகங்கேட்க அதிகாரமில்லையானாலும், ஔரஸசகோதரனை மட்டும் பாகங்கேட்கலாம் (இ.லா. ரி. 4 பம் 44, 45; இ. லா. ரி. 11 க. 714; இ. லா. ரி. 12 ம. 401; இ. லா. ரி. 7 ம. 407; இ. லா. ரி. 8 ம. 557; 22 ம. 16.) தகப்பன் சம்மதித்து பாகஞ்செய்து கொடுத்தால் வைப்பாட்டி பிள்ளைக்கு தன்னிஷ்டம் வந்தபடி பாகங்கொடுக்கலாம். ஆனால், அந்தபாகம் ஔரஸபுத்திரன் பாகத்தைக்காட்டிலும் அதிகமாக இருக்கக்கூடாது.

(2) தகப்பனிறந்தபிறகு வைப்பாட்டி பிள்ளைக்கு ஔரஸபுத்திரன் பாகத்தில் பாதியும், ஔரஸனில்லாவிட்டால் சரியான பாகமும் கிடைக்குமென்று தர்மசாஸ்திரத்தில் சொல்லியிருக்கிறது. (14 பம். 282.) ஔரஸன்பேரில் வைப்பாட்டி மகன் பாகத்துக்கு வியாச்சியம் செய்யலாம். (12 ம. 401; 17 இ. அ. 128; 18 கல். 151.)

(3) தகப்பனுடைய சொந்தபிள்ளைகளுடன் மட்டும் வைப்பாட்டிபிள்ளை பங்காளியாக இருக்கிறானேயல்லாது, தகப்பனுடைய தகப்பன், தகப்பனுடைய சகோதரர், அர்சகோதரர்களின்பிள்ளை முதலான மற்றதாயாதிகளோடு அவன்பங்காளியாகமாட்டான். ஆனால் வைப்பாட்டிபிள்ளையின் தகப்பன் அவிபக்தகுடும்ப நிலைமையிலேயே இறந்துபோயிருந்தால் வைப்பாட்டிபிள்ளைக்கு குடும்பசொத்தில்யாதொருபாகமுங்கிடைக்கமாட்டாது. இறந்துபோன அக்தகப்பனுக்கு சொந்தபிள்ளை இருந்தாலும் அச்சொந்தப்பிள்ளையே பாகத்தில்பிரதிநிதியாக நின்று தன்தகப்பன் பங்குமுழுவதையும் அடைவானேயன்றி வைப்பாட்டிபிள்ளைக்கு யாதொருபாகமும் கிடைக்கமாட்டாது. ஜீவனாம்சமட்டுமே அவனுக்குக் கிடைப்பதா

கும். (7 ம. 407; 8 ம. 557; 10 ம. 334; 21 அல. 99; 25 ம. 429 )

(4) தகப்பனுக்கு ஏதேனும் தனியானசொத்து இருந்தால் அதில்மட்டும்வைப்பாட்டிபிள்ளை சொந்தப்பிள்ளையோடு பாகபாத்தியஸ்தனாகஏற்படுகிறான். (27 ம 32; 17 இ. அ. 128; 18 கல். 151; 25 ம. 429.)

(5) ஒருஹிந்துபுருஷன் வைத்துக்கொண்டிருந்த வைப்பாட்டியானவள் ஹிந்துமதத்தைச்சேர்ந்தஸ்திரியாகவே யிருந்தால்மட்டும் அவளிடமாகப்பிறந்த பிள்ளைகளுக்கு அந்ததகப்பனுடையசொத்தில் பாத்தியம் ஏற்படும். ஹிந்துவல்லாத மகம்மதிய கிறிஸ்தவ முதலான அன்னிய மதத்தைச்சேர்ந்த ஒருவைப்பாட்டியிடமாகப்பிறந்தபிள்ளைக்கு ஹிந்துதகப்பனுடைய சொத்தில் பாகபாத்தியமாவது ஜீவனாம்சபாத்தியமாவது ஏற்படமாட்டாது. (27 ம. 13.)

**323.** ஜாதி பிரஷ்டனுக்கு பாகம்.—ஜாதிபிரஷ்டனாகப் போனவன் இறந்தவனுக்குச் சமானமாதலால் அவனுக்கு பாகங் கிடையாதென்று தர்மசாஸ்திரம் முறையிடுகிறது. ஆனால், 1850-ஹு த்து 21-வது ஆக்ட்படி மதப்பிரஷ்டனுக்கு சொத்து பாத்திய மிருப்பதால் அவன் பாகங் கேட்கலாம்.

**324.** பாகமானபிறகு பிள்ளைபிறந்தால் அவன் பாகம்.—(1) தகப்பனும் பிள்ளைகளும் பாகஞ்செய்யுங்காலத்தில் தாய் கர்ப்பமாயிருந்தால் அவள் பிரசவிக்கிறவரையில் பாகஞ்செய்யக்கூடாது. கர்ப்பமாயிருப்பது தெரியாமலிருந்து பாகஞ்செய்துகொண்ட பிறகு ஆண்பிள்ளைபிறந்தால் மறுபடியும் புதிதாய் பாகஞ்செய்து கொள்ள வேண்டும். (4 ம. ஐ. 307; 2 க. ஐ. 118, 121) தகப்பனும் பிள்ளைகளும் பாகஞ்செய்துகொண்ட பிறகு கர்ப்பமுண்டாகி பிள்ளை பிறந்தால், அந்தப்பிள்ளை தகப்பன் பாகத்தையும் தகப்பன்சுயார்ஜிதத்தையு மடையவேண்டும் (பி. லா. ரி. 4 அ. 427) தகப்பன் பாகம் வைத்துக்கொள்ளாமல் சொத்தெல்லாவற்றையும் பிள்ளைகளுக்கே கொடுத்திருந்தால் அவர்களெல்லோரும் தங்கள் பாகத்தில் கொஞ்சங் கொஞ்சம்கொடுத்து அந்தப்பிள்ளைக்கு சரியான பாகம் ஏற்படுத்தவேண்டும். (1. W. மேக் 47; 20 ம. 75.)

(2) அவிபக்தகுடும்ப பாகஸ்தன் ஒருவனிறந்துபோகும்போது அவன் பெண்சாதி கெர்ப்பமாயிருக்கையில் மற்ற சகோதரர்கள் பாகஞ்செய்துகொண்டாலும் இறந்தசகோதரன்விதவைக்கு பிள்ளை பிறந்தால் அந்த பிள்ளைக்கு தகப்பனுக்கு கிடைக்கவேண்டிய பாக முண்டு. பெண்பிறந்தால் பாகங்கிடைக்காது.

325. மைனர்கள் பாகங்கேட்பது.—யாதொரு மைனராவது, மைனருக்காக வேறொருவராவது பாகங்கேட்க நியாயமில்லை. ஆனால் மைனருக்கு பொதுசொத்தில்கிடைக்கவேண்டிய பாகத்துக்குக்கெடு திநேரிடக் கூடியதாயிருந்தால், அந்த மைனருக்குக் கார்டியனாக இருப்பவர்கள் பாகங்கேட்கலாம். தகப்பனே சொத்தை துர்விநி யோகஞ் செய்துகொண்டிருந்தாலும் மைனரின் தாயாவது அல்லது அடுத்த பந்துவாவது சிநேகிதனாவது பாகவியாச்சியம் செய்யலாம். (1 ம. ஐ. 105; 3 ம. ஐ. 69, 94; 5 ம. ஐ. 193; இ. லா. ரி. 8 க. 537; இ. லா. ரி. 12 ம. 401; 19 பம். 99.) யாதொரு குடும்பத்தில் மைனர் இருக்கும்போது மற்றவர்கள் சரியான மைனர்பாகத்தை ஒதுக்கிவிட்டு மற்றதை பாகஞ்செய்துகொள்ளத் தடையில்லை. (2 ம. ஐ. 182) ஆனால் பாகஞ்செய்யும்போது மோசமாகவாவது, அநியாயமாகவாவது பாகஞ்செய்தாலும், அதைப்பற்றிய கணக்கு கள் யாதொன்றுமில்லாவிட்டாலும், மைனர் மெஜாரிடியானவுடன் பாகத்தை ரத்துசெய்து மறுபடி பாகஞ்செய்துகொள்ளலாம். (2 ம. ஐ. 182; 4 பம் ஐ. 159; 8 க. ஐ. 363: 23 ஸ 68) பாகம் சரியாயும் நியாயமாயு மிருப்பதாகத்தெரிந்தால் பாகத்தை ரத்து செய்ய முடியாது. (2 ம. ஐ. கோ. 847.)

326. தேசாந்திரம் போனவன் பாகம்.—பொதுக்குடும்பத்தில் ஒருவன் தேசாந்திரம் போய்விட்டால் அவனுடைய பாத்தியம் அவ னுடைய சந்ததிகளில் ஏழுதலைமுலறவரையில் செல்லுமென்று தர்ம சாஸ்திரங்களி லிருக்கின்றன. ஆனால். லிமிடேஷன் ஆக்ட்படி பாகஞ் செய்த 12-வருஷத்துக்குள் தேசாந்திரம் போனவனாவது, அவனு டைய நியாயமான ஆண்சந்ததியாவது திரும்பிவந்து பாகங்கேட்கா விட்டால் அவனுக்காக வைத்திருந்த அவன்பாகத்தை மற்றவர்கள் சரியாகபாகஞ் செய்துகொள்ளவேண்டும். பாகஞ்செய்த 12-வருஷத் துக்குள் தேசாந்திரம் போனவன் அல்லது அவன் ஆண்வார்சு

பாகம் கேட்டு மறுத்தால் உடனே பிராது செய்யவேண்டும். (இ. லா. ரி. 3 க. 228; லிமிடேஷன் ஆக்ட் 2-வது ஷிடியூல் 123, 127, 144. ஆர்டிகல்கள்.)

**327.** ரோகிகளுக்கு பாகம்.—குஷ்டரோகி, நபும்ஸகர்கள், பித்தர்கள், பிறவிக்குருடு, செவிடு, ஊமைகள், அங்கவீனர்கள், இகலோக வியாபாரத்தைவிட்ட சன்னியாசிகள் இவர்களுக்கு பாகமே கிடையாது. ஆனல், ஜீவனும்ச பாத்தியமட்டும் உண்டு; (இ. லா. ரி. 8 க. 149) மேலே சொன்ன வியாதியஸ்தர்களுக்கு பிள்ளை பேரன் கொள்பேரன்களிருந்தால் அந்தப் பிள்ளைகளுக்கும், பேரன்களுக்கும், கொள்பேரன்களுக்கும் பாக பாத்தியமுண்டு. (13 மூ. இ. அ. 519; 2 க. ஐ. 113; 9 ம. 64.) ஆனல் அப்படிப்பட்ட வியாதியஸ்தர்கள் பிள்ளை யில்லாமல் தத்தெடுத்துக்கொண்டால் அந்த தத்துப் பிள்ளைக்கு தகப்பனுக்குக் கிடைத்த ஜீவனும்சமட்டும் கிடைக்குமேயொழிய ஔரஸ புத்திரனைப்போல் பாகங்கிடைக்காது. (1857 ஞ ம. தீ. 270.) சுவீகாரமெடுத்துக் கொண்டபிறகு தகப்பன் குஷ்டரோகியானல் அவன் பாகத்துக்குக் கெடுதியுண்டாகமாட்டாது. (1857 ஞ ம. தீ. 270.)

**328.** பாகத்துக்குப்பிறகு வியாதி நீங்கினவனுக்கு பாகம்.—பாகஞ் செய்துகொண்டபிறகு வியாதியாயிருப்பவன் அதிலிருந்து சொஸ்தப்பட்டால் இதனடியில் கண்டவிதமாக சொத்தை யடையவேண்டும்.

(1) தகப்பன் பிள்ளைகள் பாகஞ்செய்துகொண்டபோது வியாதியாயிருந்த பிள்ளையை நீக்கியிருந்தார்கள். பிறகு அவனுக்கு வியாதி நீங்கினல் தகப்பன் பாகத்தை அவன் அடையவேண்டும்.

(2) வியாதியா யிருந்தவனுக்குப் பாகங்கொடாமல் மற்ற சகோதரர்கள் பாகஞ்செய்து கொண்டார்கள். பிறகு அவனுக்கு வியாதி நீங்கினல் முன்செய்த பாகம் ரத்தாகி மறுபடி ரோகம் நீங்கினவனையுஞ் சேர்த்து எல்லாரும் பாகஞ்செய்துகொள்ளவேண்டும்.

(3) பிள்ளைகளும் தகப்பனும் பாகஞ்செய்து கொண்டபோது வியாதியாயிருந்த பிள்ளைக்கு பாகங் கொடுக்கவில்லை. பிறகு அவனுக்குப் பிள்ளைபிறந்தால் அந்தப் பிள்ளைக்கு பாட்டன் பாகங்கிடைக்கும். குறிப்பு:—பாகத்துக்குப்பிறகு மேற்கண்ட வியாதிகள் ஒருவ

னுக்குண்டானலும் அவனுக்குக்கிடைத்த சொத்து அவனை விட்டு நீங்காது.

(4) அண்ணன் தம்பிகள் பாகஞ்செய்துகொள்ளும்போது வியாதியாயிருந்த சகோதரனுக்கு பாகங்கொடுக்கவில்லை. பிறகு அவனுக்குப் பிள்ளை பிறந்தது. அந்தப்பிள்ளைக்கு பாகங்கிடைக்காது. (2 க. ஐ. 118, 121; இ. லா. ரி. 9 ம. 64)

329. பாகங்களை அன்னியர் கேட்பது.—பொதுக் குடும்பத்தின் பாகஸ்தனிலொருவனால் அவன் பாகத்தை சாசனம் அடமானம் முதலியவைகளாலாவது கோர்ட்டு ஏலத்திலாவது டிரான்ஸ்பர் பெற்றவன் பாகத்தைக் கேட்கலாம், அல்லது அதற்கு தாவாசெய்யலாம். ஆனல், அந்த தாவா குடும்பசொத்து முழுவதையும் பிரித்துத்தனக்கு வரத்தகுந்த பாகத்தைக் கொடுக்கும்படி செய்யலாமேயொழிய, தனக்குவரக்கூடிய பாகத்தைமட்டில் பிரித்துக்கொடுக்கும்படி தாவா செய்யக்கூடாது. (6 மூ. இ. அ. 539; இ. லா. ரி. 3 க. 198; 3 க. ஐ. 14; 18. ஸ. 23; 21 ஸ. 190; 22. ஸ. 116, 294; இ, லா. ரி. 7 ம. 588; 13 ம. 275; 20 ம. 243; இ. லா. ரி. 9 க. 580; இ. லா. ரி. 10 க. 244; இ. லா. ரி. 12 க. 209)

ஆனல், அவிபக்தகுடும்பத்தில் ஒரு பாகஸ்தன் தனக்கு வரவேண்டிய பாகத்தில் சிலதை விற்றால், வாங்கியவன் அந்த பாகத்தில்மட்டும் தனக்குச் சேரவேண்டியதை வசப்படுத்த தாவா செய்தால் செல்லும். (28 அல. 39.) அதுபோலவே அவிபக்த குடும்ப சொத்தில் சிலதை ஒரு பாகஸ்தன் விற்றுவிட்டால் அந்த சொத்தைப்பற்றியமட்டில் தன் பாகத்தை பிரித்துவிட தாவா செய்ய மற்றொரு பாகஸ்தனுக்கு பாத்தியமுண்டு. குடும்ப சொத்து முழுவதையும் தாவாவில் சேர்க்கவேண்டியதில்லை. (28. அல. 50.)

பொதுக்குடும்பத்திலுள்ள ஒரு பாகஸ்தனுடைய பாத்தியதையை உயில்மூலமாகவாவது அல்லது இனமாகவாவது பெற்றுக்கொண்டால் அப்படிப் பெற்றுக்கொண்டவன் பாகத்துக்காகக் கொண்டுவரும் தாவா செல்லாது.

330. ஸ்திரீகளுக்கு பாகம்.—(1) மிதாட்சர சம்பிரதாயப்படி ஸ்திரீகளுக்கு ஜீவனம்சபாத்தியமேயொழிய பாகபாத்தியம் என்னி

லமையிலுங் கிடையாது. தகப்பனிறந்த பிறகு பிள்ளைகள் பாகஞ் செய்துகொண்ட காலத்தில் கல்யாணமாகாத பெண்களிருந்தால் அவர்களுக்கு ஜீவனும்சங்கொடுப்பதோடு கல்யாணச் செலவுக்காக வேண்டிய பணமும் வைக்கவேண்டும். பாககாலத்தில் சகோதரனின் விதவையாவது, வெகுகாலம் தேசாந்திரம்போனவன், சன்னியாசியானவன் இவர்களின் பெண்சாதிகளாவதிருந்தால் இவர்களுக்கெல்லாம் ஜீவனும்சமட்டுங்கிடைக்கும்.

(2) தாயபாக சம்பிரதாயப்படி பிள்ளைகள் பிரித்துக்கொள்ளும்போது தாயின் ஜீவனும்சத்திற்காக ஒரு பாகங் கொடுக்கவேண்டியதென்றும், பேரன்கள் பிரித்துக்கொள்ளுகிறதாயிருந்தால் தகப்பனைப் பெற்ற பாட்டிக்குத் தங்களைப்போல ஒருபாகங்கொடுக்க வேண்டுமென்று மேற்பட்டிருக்கிறது.

(3) பங்காளதேசத்தில் பொதுக்குடும்பத்தின் பாகஸ்தன் பிள்ளையில்லாமலிறந்தால் அவன் விதவை அவனுடைய பாகத்துக்கு பாத்யமுள்ளவளாகி அவள் பாகங் கேட்கலாம். மேலும் அவளால் அந்த பாகத்தை டிரான்சுபர் பெற்றவனும் பாகங்கேட்கலாம்.

331. பாகிக்கக்கூடாதென்று ஏற்பாடு செய்வது—பிள்ளைகள் எப்போதுமாவது கொஞ்சகாலத்திற்காவது பாகஞ்செய்து கொள்ளக்கூடாதென்று தகப்பன் உயில் முதலியவைகளால் ஏற்பாடுசெய்துபோனுல் அதற்குப் பிள்ளைகள் கட்டுப்பட்டவர்களல்ல. (இ. லா. ரி. 1 க. 104; 23. ம. 297; டிரான்ஸ்பர் ஆப் பிராபர்டி ஆக்ட் 10, 11 பிரிவுகள்) பொதுக்குடும்பத்தின் பாகஸ்தர்கள் தங்களுக்குள் அப்படிப்பட்ட யேற்பாடு செய்துகொண்டால் அந்த ஏற்பாடு செல்லும். ஆனல், அவர்கள் செய்துகொண்ட ஏற்பாட்டுக்கு அவர்களுடைய வார்சுதாரர்கள் அல்லது ட்ரான்சுபர்தாரர்கள் கட்டுப்பட்டவர்களல்ல. (4 ம. ஐ. 345)

332. பிதுரார்ஜித சொத்தை சமமாகபங்கிடுவது.—(1) தகப்பன் பிள்ளைகள் பிதுரார்ஜித சொத்தை பாகஞ் செய்துகொண்டால் சமமாக பாகித்துக்கொள்ளவேண்டும். (1 பம். ஸ. தீ. 28, 58; 3 பம். ஸ. தீ. 301; இ. லா. ரி. 1 பம். 561; 5 அல. 430; 5 கல். 148.) தர்மசாஸ்திரங்களில் தகப்பனுக்கும், மூத்தகுமாரனுக்கும்

அதிக பாகங்கொடுக்கும்படியாய் ஏற்பட்டிருந்தாலும் இக்காலத்தில் அப்படிப்பட்ட வழக்கம் அனுஷ்டானத்திலிருக்கிற விடங்களில் மட்டும் அந்த ஏற்பாடு செல்லும். மற்றவிடங்களில்செல்லாது. (2 பம். ஸ. தீ. 266) அப்படி ஜேஷ்ட பாகங்கொடுக்கிறவிடங்களில்கூட பாகத்திற்குமுந்தி ஜேஷ்டகுமாரனிறந்தால் அவன் சந்ததியாருக்கு அதிகபாகங்கிடைக்காது.

(2) தகப்பனுக்கு இரண்டு அல்லது அதற்குமேற்பட்ட பெண்சாதிகளிருக்கும்போதுகூட அவர்களின் பிள்ளைகள் எல்லாரும் சமமாக பாகஞ்செய்து கொள்ளவேண்டுமேயொழிய தாயைக் கணக்கிட்டு பாகஞ்செய்து கொள்ளக்கூடாது. ஆனால், அயோத்திநாட்டில் தாயத்தின் கணக்கின்பேரில் பாகம் ஏற்படுகிறபடியால் அவளவள் பாகத்தை பிள்ளைகள் சமமாக பாகித்துக்கொள்ளவேண்டியது. (2 பம். ஸ. தீ. 116)

(3) ஒரு பாகத்தில் தகப்பனும் பிள்ளைகளுமன்றி பேரன்களும் கொள்பேரன்களும் சம்பந்தப்பட்டிருந்தால் அவர்கள் தங்கள் தங்கள் தகப்பனுக்குக்கிடைத்தபங்கை சரிபாசமாக தகப்பனுடன் பங்கிட்டுக்கொள்ளவேண்டும். தகப்பனில்லாவிட்டால் தகப்பன் பாகத்தை சகோதரர்கள் சமமாக பங்கிட்டுக்கொள்ளலாம். (15 அல. 430.)

(4) குடும்பத்தலைவன் தன்முயற்சியாலும் புத்தியாலும் உழைப்பினாலும் குடும்பசொத்தை விருத்திசெய்தாலும் அதற்காக அவனுக்கு அதிகமாக பாகம் யாதொன்றும் கிடைக்காது; (18 ம. 73.) ஆனால், குடும்ப திரவியத்தைக்கொண்டு மேலானபடிப்பு படித்து அதனால் விசேஷதிரவியம் தனியாய் சம்பாதித்திருந்தாலும், குடும்ப உதவியால் வியாபாரம் செய்து தனியாக ஏராளமான சொத்து சேர்த்திருந்தாலும் அப்படி சம்பாதித்த அல்லது சேர்த்தவனுக்கு ஒரு பங்கு அதிகம் கிடைக்குமென்று தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. (6 மூ. இ. அ. 526.)

333. மிதாட்சரப்படி ஸ்வயார்ஜித சொத்தை பாகித்தல்.—தகப்பன் சுவயார்ஜிதமாக சம்பாதித்த சொத்தை தன்னிஷ்டப்படி பிள்ளைகளுக்காவது மற்றவருக்காவது இனமாகக் கொடுக்கலாம். ஆனால், இனங்கொடுக்கும் விஷயத்தில் சொத்தை சுவாதீனப்படுத்த வேண்டியதவசியம். இனம் விஷயத்தில் தகப்பனுக்கு ஸ்வயா

ர்ஜித சொத்தில் ஸகல அதிகாரமிருந்தபோதிலும், பாகவிஷயத்தில் தன்னிஷ்டப்படி பாகஞ்செய்ய அதிகாரமில்லை. ஒரு மதராஸ் கேசில் ஒருவன் தன் ஸ்வயார்ஜித சொத்தை 10-பாகம்போட்டு ஒரு பாகத்தைப் பிள்ளைக்கும் மற்றப்பாகங்களைப் பெண்சாதிக்கும் பெண்ணுக்கும் சேருப்படியாய் ஏற்பாடுசெய்தான். அப்படிப்பட்ட பாகம் ஜங்கம சொத்துவிஷயமாய் செல்லுமேயாகிலும் ஸ்தாவர சொத்துவிஷயத்தில் செல்லாதென்று ஸதர்கோர்ட்டு முன்காலத்து ப்பண்டிதர்கள் ஜட்ஜிகளுக்குத் தெரிவித்தார்கள். (1852ஹு ம. தீ. 61.)

334. பங்காளத்தில் அதிக பாகம்.—பங்காளத்தில் தகப்பனுக்கு ஸ்வயார்ஜித பிதுரார்ஜித சொத்துக்களை இஷ்டம் வந்தபடி வினியோகஞ் செய்ய பாத்தியமிருந்தாலும் பாகவிஷயத்தில் பிள்ளைகளுக்கு ஏற்றத்தாழ்ச்சியாய் பாகஞ் செய்துகொடுக்க அதிகாரமில்லை. ஜேஷ்டகுமாரனென்றும், வித்வானென்றும், நற்குணனென்றும், குடும்பியென்றும், குழந்தையென்றும் இப்படிப்பட்ட சாஸ்திரோக்தமான காரணங்களிருந்தாலொழிய பிள்ளைகளில் எவனுக்காவது அதிக பாகங் கொடுக்கக்கூடாது. ஜேஷ்ட குமாரனுக்கு பிதுரார்ஜித சொத்திலும் அதிக பாகங் கொடுக்கலாமே யொழிய மற்ற சொத்துக்களில் கொடுக்கக்கூடாதென்று தாயக்கிரம சங்கிரகத்தில் தெரிவித்திருக்கிறது. (2 பம். ஸ. தீ. 202; 2 W. பேக். 2, 16)

335. பாகஞ் செய்துகொள்ளுகிறவிதம்—(1) பாகஞ் செய்துகொள்ளவேண்டியவர்களையும், பாகத்துக்காக இன்னின்ன பொது சொத்துக்களிருக்கின்றன வென்பதையும் முதலில் கணக்கிடவேண்டியது. ஜீவனும்சக்காரர்களுக்கும், கடன்காரர்களுக்கும், மற்றவர்களுக்கும், குழந்தைகளின் கல்யாணங்களுக்கும் வேண்டிய தொகையைக் கழித்துவிடவேண்டியது. (இ. லா. ரி. 10 பம். 524; இ. லா. ரி. 7 பம், 272) பிறகு நியாயமில்லாமல் எவனெவன் அதிகச்செலவு செய்திருக்கிறானே அதை அவனவன் பாகத்தில் கழித்துவிடவேண்டியது. (இ. லா. ரி. 1 பம். 561; இ. லா. ரி. 5 பம் 589; இ. லா. ரி. 11 ம. 248) குடும்பத்துக்கு எவனெவனுடைய ஸ்வயார்ஜித சொத்து செலவிடப்பட்டிருக்கிறதோ அதை குடும்ப சொத்திலிருந்து

அவனுக்குத் திரும்பக் கொடுக்கவேண்டும் (1 ம, ஐ. 309) இன்னு மற்ற விஷயங்களையும் யோசித்துச் சேர்க்கவேண்டியதைச் சேர்த்தும் கழிக்கவேண்டியதைக் கழித்தபின் பாக்கியை எல்லாப்பிள்ளைகளும் சமமாக பாகித்துக் கொள்ளவேண்டியது. ஆனால், ஒருவனுக்கு அதிகக் குழந்தைகளிருந்த நிமித்தம் அவர்களின் சுப சோபனதிகளுக்கு அதிகச்செலவானால் அதை யவன்பாகத்தில் கழிக்கக் கூடாது. (3 ம. ஐ. கோ. ரி. 177; 23 பம். 144.)

(2) ஹிந்துக்களில் பிள்ளைகளுக்கு உபநயனம் பிரதானமான கர்மம். விவாகம் பிரதானமானதல்லாததால், அதை குடும்ப பொதுவிலிருந்து செய்திருந்தாலும் அதற்கு நேரிட்ட செலவை சம்பந்தப்பட்டபாகஸ்தன் பங்கில்கழிக்கலாம். (4 ம. 1; 27 ம. 206.)

**336.** பிரிக்கக்கூடாததைப் பிரிப்பது. — (1) விக்கிரகங்கள், கிணறு வீடு முதலியவைகளை எல்லோரும் சம்மதித்து ஒருவருக்குக் கொடுக்கலாம். அதற்கு விலை ஏற்படுத்தி அதை யார் வைத்துக் கொள்கிறானோ அவனிடம் கிரயத்தை வாங்கி பங்கிட்டுக்கொள்ளலாம். (இ. லா. ரி. 10 க. 675; இ. லா. ரி. 3. க. 51.)

(2) யாதொரு பொது குடும்பத்தில் சிலர் சேர்ந்தேயிருந்தாலும் சிலர் தனியாகப்போக இஷ்டமிருந்தால் தடையில்லை. (9 கல் 817.) சில சொத்துக்களைமட்டும் பாகஞ்செய்து, மற்றவைகளை பாகஞ்செய்யாமல் பொதுவாய் அனுபவிக்கலாம். (2 ம. 326) அப்படி பொதுவாக அனுபவித்ததாக தாவாநடந்தால் அதைக்கோர்ட்டில் ருசுப்படுத்துவது மேலேகண்ட சங்கதிகளை வாதிப்பவனுடையதாகும். (7 பம். ஐ 153.)

**337.** பாகஸ்தன் பாகத்தை விட்டுவிடுவது.—பொதுக் குடும்பத்தில் ஒருவன் தன் பாகத்தை விட்டுவிடலாம். அதற்கு அவன் வார்சுகளும் கட்டுப்பட்டவர்களாவார்கள். (இ. லா. ரி. 3பம். 54; இ. லா. ரி. 1 ம. 312) பொதுக் குடும்பத்தில் ஒரு பாகஸ்தன் தன்னுடைய பாகத்தை விட்டுவிடுவதாக மற்ற பாகஸ்தர்களுடன் உடன்படிக்கை செய்துகொண்டால், பிரிதி பிரயோசனமில்லாமல் அந்த உடன்படிக்கை செய்தால் அது ரத்தாய்விடும். (இ. லா. ரி. 6 ம. 71.)

**338.** பாகத்தை ரத்துசெய்வது.—பாககாலத்தில் மோசடியாக வாவது சட்டத்துக்கு விரோதமாகவாவது ஒருவனுக்கு நஷ்டம் உண்டாகும்படியாய் பாகஞ் செய்திருந்தால் நஷ்டமடைந்த பாகஸ்தன் கோர்ட்டில் மனுக்கொடுத்து பாகத்தை ரத்துசெய்து மறுபடியும் பாகஞ் செய்துகொள்ளலாம். (1859 ஸூ ம. தீ. 84; 10 பம். ஐ. 444) ஆனால், சில சொத்துக்கள் மட்டும் பாககாலத்தில் விட்டுப் போயிருந்தாலும் அல்லது மோசடியாய் மறைத்துவைக்கப்பட்டிருந்தாலும் அப்படிப்பட்ட சோத்தைமட்டும் பாகஞ் செய்துகொள்ளவேண்டியது. (இ. லா. ரி. 1 அ. 543.)

**339.** சொத்தில்லாதபாகம்.—பாகஞ்செய்துகொள்ள சொத்தில்லாதிருந்தபோதிலும் அவரவர்கள் சுவயார்ஜிதசொத்துக்கு மற்றவர்கள் பாகங்கேட்கக்கூடாதென்று பேருக்குமட்டும் பாகஞ்செய்து கொள்வதுண்டு. (13 மூ. இ. அ. 113.)

**340.** பாகவிஷயமான ருசு.—(1) பாகத்துக்கு பாகபத்திரம் முதல்ான தஸ்தாவேஜுகள் வேண்டியதில்லை. (4 மூ. இ. அ. 168) பாகஸ்தர்கள் தனித்தனியாகப் போகவேண்டுமென்கிற எண்ணத்துடன் பொது சொத்தை பாகித்துக்கொண்டு தனித்தனியாக அனுபோகித்துக்கொண்டுவந்தாலதுவே போதுமானது. (14 ஸ. 31; 8 க. ஐ. 396) பாகங்களை வெவ்வேருக அளந்து கட்டி அடையாளஞ் செய்யவேண்டியதும் அவசியமில்லை. இஷ்டப்பட்டபோது அந்த அடையாளத்தை ஏற்படுத்திக்கொள்ளலாம். (11 மூ. இ. அ. 75; 13 மூ. இ. அ. 113; 3 ம. ஐ. 40, 287; இ. லா. ரி. 4 பம். 157; இ. லா. ரி. 12 க. 96; இ. லா. ரி. 5 அ. 532; இ. லா. ரி. 13 பம். 25) பிரிவினைக்குப் பிறகும் நிலத்துக்கு அடையாளம் ஏற்படுத்துவதற்கு முந்தி ஒரு பாகஸ்தனிறந்தால் அவன் பாகம் அவன் விதவைக்குச் சேருமேயொழிய மற்ற பாகஸ்தர்களுக்குச் சேரமாட்டாது. (13 மூ. இ. அ. 497; 14 ஸ. 33.) சொத்தை துண்டு துண்டாகப் பிரிக்காமல் வரும்படியைமட்டும் பங்கிட்டுக்கொள்ளலாம். (11 மூ. இ. அ. 75; 13 மூ. இ. அ. 113; 3 ம. ஐ. கோ. ரி. 279; 1 இ. அ. 55; 5 அல. 532; 13 பம். 25; 12 கல். 96.)

(2) பிரிவினை எண்ணமில்லாமலே குடும்பத்தின் பாகஸ்தர்கள் தூரதேசங்களில் வியாபாரம், உத்தியோகம் முதலியவை செய்தா

னும், தனியாக வாசஞ்செய்து கொண்டுவந்தாலும், தனித்தனியாக சில சொத்துக்களை அனுபவித்துவந்தாலும், ஒருவருக்கொருவர் லேவாதேவி செய்துக்கொண்டு வந்தாலும், பாகஞ் செய்துகொண்டவர்களாக எண்ணப்படமாட்டார்கள். (4 மூ. இ. அ. 158; 12 மூ. இ. அ. 540; 14 மூ. இ. அ. 412; 3 பம். ஐ. 87; 1857 ஸூ ம. தி. 230; 1861 ஸூ ம. தீ. 101; 8 ம ஐ. 25; 8 மூ. இ. அ. 66; இ. லா. ரி. 1 அ. 437; 22 ஸ. 412; 24 இ. அ. 118; 20 ம. 256.)

(3) சாதாரணமாய் இந்துகுடும்பங்கள் பொதுவானவைகளென்று நம்பப்படுவதால், குடும்பம் பிரிந்ததென்று வாதாடுகிறவர்கள் அவ்விஷயத்தை ருஜுச்செய்யவேண்டும். (9 மூ. இ. அ. 66; 12. மூ. இ. அ. 523) பொதுக்குடும்பத்தில் ஒருவன்மட்டும் பாகம் பிரித்துக்கொண்டுபோன காரணத்தைக்கொண்டு மற்றவர்களும் பாகஞ் செய்து கொண்டதாக எண்ணக்கூடாது. (இ. லா. ரி. 9 க. 817.) பொதுக்குடும்பத்தில் சர்க்கார் கணக்குகள் ஒருவன்பேரில் மட்டும் ஏற்பட்டிருக்கிறதென்பதைக் கொண்டாவது குடும்பம் பிரிவினையாய் விட்டதென்று நினைக்க நியாயமில்லை. (இ. லா. ரி. 1 அ. 347.)

**341.** விபாகதஸ்தாவேஜு.—பாகத்துக்குப் பத்திரம் அவசியமில்லாமற் போனபோதிலும், பத்திரம் எழுதினல் மறுபடி தகரார் ஏற்படாதபடி நிதானித்தெழுதவேண்டும். பாகபத்திரம் பாகிக்கவேண்டிய சொத்தின் மொத்தக்கிரயத்துக்கு ஏற்படும் ஸ்டாம்பில் எழுதவேண்டும். (ஸ்டாம்பாக்ட் 1-வது ஷிடியூல் 45. கிளாஸ்) 100 ரூபா அல்லது அதற்கு மேற்பட்ட விலையுள்ள ஸ்தாவர சொத்து விஷயமாய் ஏற்படும் பாகபத்திரத்தை அவசியம் ரெஜிஸ்டர் செய்யவேண்டும். (ரெஜிஸ்ட்ரேஷன் ஆக்ட் 17 பிரிவு) ரெஜிஸ்டர் செய்யாவிட்டால் அதை சாட்சியமாகக் கோர்ட்டில் தாக்கல் செய்யக்கூடாது. (இ. லா. ரி. 5 பம். 232) பஞ்சாயத்தார்களால் பாகஞ் செய்விக்கப்பட்டால், அதை எல்லா பாகஸ்தர்களும் ஒப்புக்கொண்டு அவர்கள் தீர்ப்பில் கையெழுத்துச்செய்தால் அதே பாகபத்திரமாக எண்ணப்படும். (இ. லா. ரி. 9 பம். 50)

**342.** பாகவிஷயமானதாவா.—(1) பொதுக்குடும்பத்தில் பாகஸ்தர்கள் பாகவிஷயத்தில் ஒத்துமைப்படாமலிருந்தால் தாவா செய்யவேண்டும். தாவாகொண்டுவருகிறவர்கள் மற்றபாகஸ்தர்

களையும் ட்ரான்ஸ்பர்தாரர்களையும், ஜீவனும்சக்காரர்களையும் பிரதிவாதிகளாகச்சேர்க்கவேண்டும். (இ. லா. ரி. 2 க. 149) பாக வியாச்சியத்தில் எல்லாப் பொதுச்சொத்தையும் சேர்க்கவேண்டும். (1861ளு ம. தீ. 86; 22 ஸ. 333; 7 பம். ஐ. 46; 11 பம். ஐ 71; இ. லா. ரி. 12 க. 566; இ. லா. ரி. 14 க. 122) சொத்துக்கள் வெவ்வேறு கோர்ட்டுகளின் அதிகார எல்லைக்குள்ளிருந்தால் வெவ்வேறு பிராது செய்யவேண்டும். (3 ம. ஐ 376; இ லா. ரி. 4 பம். 482; இ. லா. ரி. 5 க. 474; இ. லா. ரி. 14 க. 835) பொது சொத்தின் சில பாகத்தை ஒரு பாகஸ்தன்மட்டும் பராதீனஞ் செய்திருந்தால், மற்ற பாகஸ்தர்கள் அந்தப்பராதீனமான சொத்தில் தங்களுக்கு வரவேண்டிய பாகத்துக்குமட்டும் தாவாசெய்பலாமென்று மதராஸ் ஹைகோர்ட்டாரும், குடும்ப சொத்து முழுவதையும் சேர்த்து தாவா செய்யவேண்டுமென்று கல்கத்தா ஹைகோர்ட்டாருந் தீர்மானித்திருக்கிறார்கள். (இ. லா. ரி. 5 ம. 196; இ. லா. ரி. 11 க. 396) பாகத்தீர்ப்போடு ஜீவனும்சமும் கொடுக்கத் தீர்ப்பாகும். (3 கல். 551; 9 கல். 568.)

(2) சில சொத்துக்கள் பாத்தியம் அல்லது குத்தகை இவைகளுக்குட்பட்டு மற்றவர்களனுபோகத்திலிருந்து அதைப் பிரிவினை செய்வது அசாத்தியமாயிருந்தால் அதைப் பிராதில் சேர்க்கவேண்டியதில்லை. (5 ம. ஐ. 419; 12 பம். ஐ. 148) ஒரு பாகஸ்தன் தன் பாகத்துக்காக தாவாசெய்யும்போது தன் சுவாதீனத்திலிருக்கும் எல்லாப் பொதுசொத்துக்களையும், தன் பிராதில் சொர்க்கவேண்டியது. அவைகள் வேறு கோர்ட்டின் எல்லைக்குட்பட்டிருந்தாலுந் தாவாவில் சேர்ப்பது அவசியம். (15 ஸ. 111; 25 ஸ. 353; இ. லா. ரி. 7 பம். 272; 23 ம. 608; 13 ம. 275; 24 பம். 128; 12 கல். 566; 14 கல் 122.) கோர்ட்டாரால் நேமிக்கப்பட்ட கமீஷனரால் கிரமப்படிபிரித்து கொடுத்த பாகத்தை திருத்த ஜட்ஜிக்கு அதிகாரமில்லை (28 அல. 75.)

(3) பாகவிஷயத்துக்கு காலாவதியே கிடையாது. ஆனால் ஒரு பாகஸ்தனை மற்றவர்கள் பொதுசொத்தில் அவனுக்கு பாத்தியமில்லையென்று அவனை அனுபோகத்திலிருந்து நீக்கிவிட்டால் அப்படி நீக்கின காலமுதல் 12ளுக்கத்திற்குள் தாவாசெய்யவேண்டும். (கால நிர்ணபச்சட்டம் 1 ஷிடியூல் 127 ஆர்டிகள்)

**343.** முன் வரும்படி.—பாகவிஷயத்தில் முந்தின வரும்படியைக் கேட்க நியாயமில்லை. ஆனால், பாகஸ்தன் பொதுசொத்தின் அனுபோகத்திலிருந்து நீக்கப்பட்டாலும். பிரிக்கக்கூடாதென்கிற வியாஜத்தால் பொதுசொத்தை ஒருவனே அனுபவித்துக்கொண்டு வந்தாலும் அப்படிப்பட்ட சந்தர்ப்பங்களில் பாகத்தோடு முந்திய வரும்படியையும் பாகித்துக்கொடுக்க தீர்மானிப்பார்கள். (இ. லா. ரி. 5 பம். 595; இ. லா. ரி. 2 ம. 128; இ. லா. ரி. 5 ம. 236; இ. லா. ரி. 16 க. 397.)

**344.** பாகடிகிரி.—பாகவியாச்சியத்தின் அசல் அல்லது அப்பீலில் தீர்ப்புசெய்வதற்குமுன் பாகஸ்தர்களில் எவராயினும் இறந்தால் அவன் குடும்பம் பிரியாதநிலைமையில் இறந்ததுபோல எண்ணப்படுவான். (6 பம். 113.) தீர்ப்புச்சொன்ன நிமிஷமுதல் குடும்பம் பிரிக்கப்பட்டதாகவே எண்ணப்படும். (இ. லா. ரி. 4 க. 434; இ. லா. ரி. 2 ம. 83; 6 இ. அ. 177.) ஆனால், அசல் தீர்ப்பின்பேரில் தாவா அப்பீலில் இருந்தால் அந்த அப்பீல் தீர்ப்புவரையில் குடும்பம் பிரிபடாததாகவே எண்ணப்படும். (இ. லா ரி. 6 பம். 113) பாகத்தீர்ப்பு ஆனவுடன் வாதிகளாவது, பிரதிவாதிகளாவது நிறைவேற்ற நடவடிக்கை நடத்தி அவரவர்கள் பாகங்களைப் பிரித்துக் கொள்ளலாம் (இ. லா. ரி. 3 க. 551; இ. லா. ரி. 9 க. 568.)

அவிபக்த குடும்பத்திலொருவன் பாகவியாச்சியஞ்செய்து தீர்ப்புப்பெறுவதற்குள் இறந்துபோனால், அவன் பெண்சாதி தாவாவை மேலே நடத்த பாத்தியமில்லை. (28. அல. 108)

**345.** சம்சிருஷ்டி குடும்பம்.—சேர்ந்த குடும்பத்தின்பாகஸ்தர்கள் பிரிவினைசெய்துகொண்ட பிறகு அவர்கள் எல்லோருமாவது, சில பாகஸ்தர்களாவது மறுபடி சேர்ந்துகொள்வது "சம்சிருஷ்டி" என்று பிருகஸ்பதி வாக்கியத்தில் ஆதாரமிருக்கிறது. அதெப்படியெனில் பாகஞ் செய்துகொண்ட தகப்பன், பிள்ளை, சகோதரர்கள், பெரியப்பன், சிற்றப்பன் முதலியவர்கள் யாராவது பிரியத்தால் மறுபடி சேர்ந்து ஒரே குடும்பமாய் வசித்தால் அவனுக்கு சம்சிருஷ்டன் என்று பெயர்.

**346.** சம்சிருஷ்டியை ருசுச்செய்வது.—ஒருதரம் பாகம் செய்துகொண்டபிறகு சம்சிருஷ்டி நடந்ததென்று யார்வாதிக்கிறார்களோ

அவர்களே அதை ருசுச்செய்யவேண்டும். பாகத்திற்குப்பிறகு ஒரு வீட்டிலேயே எல்லாருஞ் சேர்ந்திருப்பது, போசனஞ்செய்வது, சேர்ந்து வியாபாரஞ்செய்வது, பொதுவாய் சொத்தை அனுபவிப்பது முதலிய காரணங்களால் சம்சிருஷ்டி ஏற்பட்டதாக எண்ண முடியாது. (2 ம. ஐ. 235) சம்சிருஷ்டியாக யிருக்கவேணுமென்கிற எண்ணத்தோடு சேர்ந்திருந்ததாக ருசு ஏற்படவேண்டும். (11 மு. அ. 403; 7 க. ஐ. 326.)

347. சம்சிருஷ்டியின்பயன்.—நியாயமான சம்சிருஷ்டி ஏற்பட்டால் அவ்விதஞ் சேர்ந்தவர்களுக்கும் அவர்களுடைய வார்சுகளுக்கும் பாகமாகாத பொதுக்குடும்பத்தில் வசிப்பதுபோலவே எண்ணப்படுவார்கள். ஆனல், சரியான பொது குடும்பத்துக்கும், சம்சிருஷ்டி குடும்பத்துக்கும் பாகவிஷயமாய் சில வித்தியாசமிருக்கிறது. பொதுக்குடும்பத்தில் சேர்ந்தவன் பின்னோதரனுகவும், சேராதவன் சகோதரனுயுமிருந்தால் பொதுகுடும்பத்தில் இறந்தவன் சொத்தை அவர்கள் சமபாகமாய் பங்கிட்டுக்கொள்ளவேண்டும். (16 ம. 440.) அதைப்பின்னல் வார்சுபாத்தியத்தில் விவரிப்போம்.

மிதாட்சர சம்பிரதாயம்.—A B C என்ற மூவரும் முறையே X Y Z என்ற அவிபக்த இந்து சகோதரர்களின் பிள்ளைகள்: இந்த A B C மூவரும் தங்கள் குடும்பசொத்துக்களை பாகப்பிரிவினை செய்து கொண்டு அனுபவித்துவந்தார்கள். B-க்கு D என்ற பிள்ளையும் C-க்கு E என்ற பிள்ளையுமிருந்தார்கள். A-க்கு சந்ததியில்லை B C இருவரும் இறந்தபின் A இறந்தார். A C இருவரும் ஒரே குடும்பமாயிருந்து வந்தபடியால் A யுடைய சொத்துக்களை E கைப்பற்றிவிட்டார். A யுடைய சொத்துக்களில் பாதி வார்சுக்கிரமப்படி தனக்குக் கிடைக்கவேணுமென்று E பேரில் D வழக்கிட்டார். மேற்கண்ட பாகப்பிரிவினைக்குப்பிறகு A C இருவரும் ஒரேகுடும்பமாய் இருந்து சொத்துக்களை யனுபவித்து வந்தார்களென்றும் அதனல் E-க்கு அச்சொத்துக்கள் பாத்தியமேயன்றி D-க்கு எவ்வித பாத்தியமுமில்லை யென்றும் E கக்ஷியாடினர்.

மிதாக்ஷரஸ்மிருதிபடி (1) தகப்பன். பிள்ளைகள் (2) சகோதரர்கள் (3) சகோதரர்கள் சகோதரர்களின் பிள்ளைகள் இந்த மூன்று வகுப்பு பாகஸ்தர்கள் பாகப்பிரிவினை செய்துகொண்டு பிறகு சேர்

ந்து ஒரே குடும்பமா யிருந்தால் அவர்களுக்கு மட்டில் ஒருவருக் கொருவர் சமீபவார்சென்று இந்து லா ஏற்பட்டிருக்கிறதேயன்றி பாகப்பிரிவினை செய்துகொண்ட சகோதரர் பிள்ளைகள் மறுபடியுஞ் சேர்ந்து ஒரே குடும்பமாக இருப்பதைக்கொண்டு ஜாஸ்தியான பாத் தியமில்லையென்றும் D யின் பிராதுப்படி A யுடைய சொத்தில் பாதி கிடைக்கவேண்டியதென்றும் தீர்மானிக்கப்பட்டது. (33 கல். 371)

---

## 12-வது ஸ்திரீதனம்.

348. ஸ்திரீதனமென்பது.—வார்சு பாத்தியமாகவாவது, உயி ல்மூலமாகவாவது, தானமாகவாவது கிடைக்காமல் வேறேவித மாய் ஸ்திரீகளுக்குக் கிடைத்த சொத்துக்களுக்கு ஸ்திரீதனமென்று பெயர். அந்த சொத்தை அவர்கள் தங்களிஷ்டப்படி பராதீனஞ் செய்யலாம். (14 க. ஐ. 226; இ. லா. ரி. 11 பம். 69, 573; இ.லா. ரி. 11 அ. 296; இ. லா. ரி. 14 ம. 274) அவைகளாவன.—

(1) சுல்கம்.—சுல்கம் ஆசுரவிவாகத்தினுலுண்டானது. தகப் பன் கன்னிகைக்காக ஏதாவது பணம் வாங்கிக்கொள்வது மிகவும் நிந்திக்கப்படத்தக்கதானதால் அதைமாற்றி பிராம்ஹவிவாகமாகத் தொடங்கி, பெண்ணுக்குவேண்டியநகை வீட்டுப்பாத்திரம் முதலிய சாமான்களுக்காக வரனிடத்திலிருந்து பணம் நிச்சயஞ்செய்து வாங்கி அந்தப் பணத்தைக்கொண்டு நகைமுதலியவைசெய்து பெண் ணுக்குப்போடுவதும், விவாகச்செலவைசெய்வதும்.

(2) அத்தியக்னிகம்.—வரனுலாவது, வரன் அல்லது கன்னிகை இவர்களுடைய பந்துக்களாலாவது, சிநேகிதர்களாலாவது, மற்ற எவர்களாலாவது விவாகதினத்தில் அக்னி சன்னிதானத்தில் பெண் ணுக்குக் கொடுக்கும் நகை பணம் முதலியவைகள் அத்தியக்னிக மென்னப்படும். (16. ஸ. 115)

(3) அத்தியாவாகநிகம்.—தகப்பன் வீட்டிலிருந்து புருஷன் வீட்டுக்குப்போகும்போது பெண்ணுக்குப் பெற்றோரால் இனுமா மக்கொடுக்கப்படும் நகை, பணம்முதலிய சொத்துக்கு அத்தியாவாக நிக மென்றுபெயர்.

(4) அன்வாதேயகம்.—கல்யாணத்துக்குப் பிறகு பிறந்த வீட்டு பந்துக்களாலாவது, புக்ககத்து வீட்டுபந்துக்களாலாவது, பெண்ணுக்குக்கொடுக்கும்சொத்து அன்வாதேயகமென்னப்படும்.

(5) பிரீதிதத்தம் —புருஷன் பிரீதியாய் பெண்சாதிக்குக் கொடுத்த சொத்துக்கு பிரீதிதத்தம் என்று பெயர்.

(6) அதிவேதனிகம்.—வேறொரு பெண்ணை விவாகஞ் செய்வதற்காக முதல் பெண்சாதிக்கு திருப்தியுண்டாகும்படி புருஷன்கொடுக்கும் சொத்துக்கு அதிவேதனிகம் என்று பெயர்.

மேலே சொல்லப்பட்ட ஆறுவிதமும் இரண்டு பாகமாகப்பிரிக்கப்பட்டிருக்கின்றன (1) ஒரு பெண்ணுக்கு அவளுடைய புருஷனாலாவது, பிறந்தவீடு புக்ககம்வழி பந்துக்களாலாவது, சினேகிதர் மைத்துனர் முதலியவர்களாலாவது விவாககாலத்தில் இனமாகக் கொடுக்கும் சொத்துக்கு யௌதகம் என்றும் (2) மற்றப்படி அவளுக்குக்கிடைத்த சொத்துக்களுக் கெல்லாம் அயௌதகமென்றும் பெயர்.

(7) சௌதாயகம்.—விவாகத்திற்கு முந்தியாவது, விவாககாலத்திலாவது, விவாகத்திற்குப் பிந்தியாவது ஒரு பெண்ணுக்கு அவள் தகப்பன், தாய், புருஷன், சகோதரர்கள், பந்துக்கள் முதலியவர்களால் கொடுத்த ஆடையாபரணங்கள் நிலம் வகைரா முதலியவைகளுக்கு "சௌதாயகம்" என்றுபெயர். (6 பம். ஸ. தீ. 77; 5, ம. ஐ. 111; 1 அ. ஐ. 66; 16 ஸ. 139; 7 அ. ஐ. 279; இ. லா. ரி. 1 க. 275; 3 ம. ஐ. 272) மேலேகண்ட சொத்துக்கள் உயில்மூலமாய்க் கிடைத்தாலும் ஸ்திரீதனமென்றே பாவிக்கப்படும். (11 க. ஐ. 295; 2 மார்லி. 65) விசேஷகாலங்களில்மட்டும் தரித்துக்கொள்வதற்காகப் புருஷன் கொடுக்கிற ஆடையாபரணங்கள் ஸ்திரீதனமாகமாட்டாது. மேலும் புருஷன் தகப்பன் தவிர மற்றவர்களால் தானமாயாவது உயில்மூலமாயாவது ஒரு ஸ்திரீக்கு கொடுத்த சொத்தும் ஸ்திரீதனமாகும். (7 ம. 387; 5 கல். 484)

349. ஜீவனம்சம்.—(1) தானவிக்கிரயம் முதலிய சகல பாத்தியத்தோடு ஜீவனம்சத்துக்காக ஒரு ஸ்திரீக்குக் கிடைத்த சொத்தும் அல்லது கிடைக்கவேண்டிய சொத்தும் ஸ்திரீதனமாகவே

எண்ணப்படும். (இ. லா. ரி. 1 ம. 166; 24 ஸ. 168; 3 க. ஐ. 121; 5 அல 310; 5 க. 222; 11 அல. 296.) ஜீவனும்சத்திற்காகக் கிடைக்கவேண்டிய பாக்கிப்பணமும் ஸ்திரீதனமாக பாவிக்கப்படும். (16. ஸ. 76)

(2) ஸ்திரீதனத்தைக்கொண்டு விருத்திசெய்யப்பட்ட சொத்தும் அதிலிருந்துவரப்பட்ட வரும்படியும் ஸ்திரீதனமாக எண்ணப்படும். (இ. லா. ரி. 1 அ. 762; இ. லா. ரி. 1 ம. 281; 19 ஸ. 292; 2 ம 333.) அசல் ஸ்திரீதனத்தைப்போல அதன் ஆதாயத்தையும் மீதத்தையும் பராதீனஞ்செய்யவும், வார்சுபாத்தியமாய் அடையவும் பாத்தியமுண்டு.

(3) விவாககாலத்தில் தவிர மற்றகாலங்களில் பந்துக்கள் முதலியவர்களால் ஸ்திரீகளுக்குக் கிடைத்தசொத்தும் வேலைசெய்து அவர்கள் சம்பாதித்த சொத்துக்களும் வார்சுபாத்தியமாகக் கிடைத்த சொத்தும் ஸ்திரீதனமாகமாட்டாது.

**350.** ஸ்திரீகளுக்கு ஸ்திரீதனபாத்தியம்.—(1) ஸ்திரீதனங்களிலெல்லாம் ஸ்திரீகளுக்கு ஒரேவிதமான பாத்தியமில்லை. சில சொத்தில் சகல பாத்தியமும், சில சொத்தில் புருஷனுடைய அதிகாரத்துக்குட்பட்டு சகல பாத்தியமும், சில சொத்தில் சாகிறவரையில் அனுபோகபாத்தியமும், இவ்விதமாக பாத்தியம் ஏற்பட்டிருக்கிறது.

(2) புருஷனிடமிருந்து கிடைத்த ஜங்கமசொத்திலும், மற்றபந்துக்களிடமிருந்து கிடைத்த ஸ்தாவரஜங்கம சொத்துக்களிலும், மேற்சொன்ன சொத்துக்களை விருத்திசெய்து அதினால் அடைந்த சொத்துக்களிலும் ஸ்திரீகளுக்கு சகல பாத்தியமுமுண்டு. அவைகளை அவர்கள் தங்களிஷ்டப்படி உயில், தானவிக்கிரயம் முதலிய வினியோகஞ்செய்யலாம். (1 ம. ஐ. 85; 5 ம. ஐ. 111; 19 ஸ. 292; இ. லா. ரி. 7 பம். 155; இ.லா.ரி. 5 அ. 310; இ லா. ரி. 2 ம. 333.) புருஷன் அந்த சொத்துக்களை உபயோகிக்கக்கூடாது. உபயோகித்தால் வட்டியுடன் அவனிடம் வசூல்செய்யலாம். புருஷன் பஞ்சம், வியாதி, அதிகக்கடன் இவைகளால் நிரம்பகஷ்டதிசையிலிருந்தால் சௌதாயக ஸ்திரீதனத்தை உபயோகிக்கலாம். ஆனல், அவன் பிறகு நல்ல ஸ்திதியிலிருந்தால் அதைத் திருப்பிக்கொடுக்கவேண்டு

மென்று தர்மசாஸ்திரத்தில் ஏற்பட்டிருக்கிறது. புருஷன்பட்ட கடனுக்காக ஸ்திரீதன சொத்துக்களை ஜப்திசெய்ய கடன்காரர்களுக்கு அதிகாரமில்லை. (8 பம். ஐ. 129; 6 அ. ஐ. 279.)

351. புருஷன் இனுமாக கொடுத்த சொத்து.—(1) புருஷனால் இனுமாக கொடுக்கப்பட்ட ஸ்தாவரசொத்தின்பேரில், புருஷனுயிரோடிருந்தாலு மில்லாவிட்டாலும் பெண்சாதிக்கு உயிருள்ளவரையில் அனுபவிக்கலாமே யொழிய வேறேவிதமாய் வினியோகஞ் செய்ய அதிகாரமில்லை. புருஷனிடமிருந்து வார்சுபாத்தியமாய்க் கிடைத்த சொத்து விஷயமாய் என்ன நடவடிக்கைசெய்ய பாத்தியமிருக்கிறதோ அதைமட்டும் இந்த ஸ்திரீதனத்தில் செய்யலாம். (இ. லா. ரி. 7 ம. 387; இ. லா. ரி. 1 அ. 734; 11 பம். ஐ. 403; 5 ம. ஐ. 111.) புருஷனால் சர்வபாத்தியமும் கொடுக்கப்பட்டிருந்தால் மட்டும் அதை அவளிஷ்டம்வந்தபடி செலவுசெய்யவும் வினியோகஞ் செய்யவும் கூடும். அவளிறந்தபிறகு அந்த சொத்து அவள் வார்சுக்குச் சேருமேயல்லாமல் புருஷனுடைய வார்சுக்குச் சோாது. (19 அ. 133.)

(2) வார்சு பாத்தியப்படி கிடைக்கவேண்டிய சொத்து தானமாயாவது உயில் மூலமாயாவது கிடைத்தாலும் அந்த சொத்தில் ஸ்திரீகளுக்கு பூர்ணசுதந்தரமில்லை, (2. இ. அ. 7; 14 ம. 474; 16 ம. 201; 26 இ. அ. 66; 22 ம. 431.) பூர்ண சுதந்தரமாய் அனுபவிக்கவேண்டுமென்று தகப்பன் முதலியவர்களால் கொடுக்கப்பட்டால் அப்போது ஸ்திரீ வார்சுகள் அந்த சொத்தை சர்வ சுதந்தரத்துடன் அனுபவிக்கலாம். (23 இ. அ. 37; 23 கல். 670; 26 கல். 406.)

352. ஸ்திரீகள் கஷ்டப்பட்டு சம்பாதித்த சொத்து.—ஸ்திரீகள் திரேக சிரமப்பட்டாவது, சாமர்த்தியத்தாலாவது சம்பாதிக்கப்பட்ட சொத்தும், பந்துகள் முதலியவர்களால் அவர்களுக்குக் கொடுக்கப்பட்ட சொத்தும் முதலில் புருஷனுக்கே சேரும். அவைகளைப் புருஷன் தன்னிஷ்டப்படி செலவு செய்யலாம். ஆனல் புருஷன் அனுமதியின்றி அந்த சொத்துக்களைப் பெண்சாதி செலவு செய்யக் கூடாது. புருஷனுக்குமுன் பெண்சாதியிறந்தால் சொத்து முதலில் புருஷனுக்கும் பிறகு அவன் வார்சுகளுக்குஞ்சேரும். புருஷன் முதலிறந்தால் அந்த சொத்தைப்பெண்சாதி சர்வபாத்தியத்துடன்

அடைந்து, பிறகு அவளுடைய சொந்த வார்சுகளுக்குச் சேர்ந்துவிடும். (இ. லா. ரி. 1 ம. 307.) ஆனால், இவ்விதமான சொத்து ஆண்வார்சுகளுக்குத்தான் சேருமென்று மயூககிரந்தத்தில் ஏற்பட்டிருக்கிறது. (இ. லா. ரி. 12 பம். 505.)

353. ஸ்திரீதன வார்சுகள்.—(1) ஸ்திரீகள் ஸ்திரீதனத்தை முழுசுதந்தரத்தோடு அனுபவித்தாலும் அவர்களுடைய பெண்வார்சுகள் தங்கள் புருஷன் சொத்தை வார்சுபாத்தியத்தால் அடைந்தால் அந்த சொத்துவிஷயமாய் என்ன நிர்ப்பந்தங்கள் ஏற்பட்டிருக்கின்றனவோ அவைகளே, ஒரு ஸ்திரீயிடமிருந்து மற்றொரு ஸ்திரீ வார்சுபாத்தியமாய் அடைகிற சொத்துவிஷயமாய் ஏற்பட்டிருக்கின்றன. இரண்டாந்தரம் சொத்தையடைந்தவள் இறந்தபிறகு அந்த சொத்து மூல ஸ்திரீயின் வார்சுக்குப்போய்ச் சேருகிறது. 358-வது பிரிவை பார்க்கவும். (இ. லா. ரி. 17 க. 911, 917; இ. லா. ரி. 5 க. 222; 19 ம. 107.)

(2) விவாகமாகாதபெண் ஒரு ஸ்திரீதனசொத்தை வார்சுபாத்தியமாயடைந்தால் அவள் அதை சர்வசுதந்திரமாய் அனுபவிக்கலாமென்றும், அவளுக்குப்பிறகு அது அவள் வார்சுக்கேசேருமென்று ந்தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. (19 ம. 107; 21 ம. 100.) ஆண்வார்சுக்கு அந்த சொத்து கிடைத்தால் அவனுக்கு அதில் பூர்ணசுதந்திரமுண்டாகிறது.

354. கன்னியா தனத்தின் வார்சு.—கல்யாணமாகாத பெண் இறந்தால் அவளுடைய தகப்பன், தாய், பந்துக்கள் முதலியவர்களால் கொடுத்த சொத்துக்கள் ஆடையாபரணங்கள் சாதாரணமாய் முதலில் பெண்ணின் அண்ணன்தம்பிகள், பிறகு தாய் தகப்பன், சமீபபந்துக்கள் இவ்விதவரிசையாகச் சேரும்.

355. சுல்கத்துக்குவார்சு.—நிச்சியதார்த்தமாகி விவாகத்திற்கு முந்தி கன்னிகை யிறந்தால், விவாகநிமித்தம் வரனால் கொடுக்கப்பட்ட சுல்கத்தில் செலவுபோக மீதியைத் திரும்ப வரனுக்கேகொடுக்கவேண்டுமென்று தர்மசாஸ்திரத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. விவாகத்திற்குப் பின்னலிறந்தால் அந்த சுல்கம் அவளுடைய பெண் முதலானவர்களுக்குச் சேராமல் முதலில் அவள் அண்ணன் தம்பி,

தாய், இவர்களுக்கு வரிசைக்கிரமமாகச் சேருமென்று மிதாட்சரம், மயூகம், வீரமித்திரோதயம், ஸ்மிருதி சந்திரிகை முதலிய காசிதேச தர்மசாஸ்திரங்கள் முறையிடுகின்றன.

356. யௌதக அயௌதக ஸ்திரீ தனங்களுக்கு வார்சு பாத்தியம்.—மிதாட்சரப்படி இறந்துபோன ஸ்திரீயினுடைய யௌதக அயௌதக சொத்தை இதனடியில் கண்ட வரிசைக்கிரமமாக அவள் வார்சுகள் அனுபவிக்கவேண்டியது. அவர்களாவன:—

(1) பெண்கள்.—இவர்களில் முதலில் கல்யாணமாகாத பெண்கள், பிறகு விவாகமான ஏழைப்பெண், அதன்பிறகு விவாகமான பணக்காரப்பெண். பெண்களுக்குப்பின் பேத்திகள் சொத்தையடையும்போது இந்த நிர்ப்பந்தம் கிடையாது.

(2) பெண்களின் பெண்கள்.—இவர்கள் அவளவள் தாயார் பாகத்தைச் சரியாகப் பங்கிட்டுக்கொள்ளவேண்டியது. மூலஸ்திரீயின் பெண்களில் யாராவது ஒருத்தி உயிரோடிருந்தால் அவளுக்குச் சொத்துமுழுவதும் சேருமேயொழிய இறந்துபோன பெண்ணின் பெண்களுக்குச் சேரமாட்டாது.

(3) பெண்களின் பிள்ளைகள்.—இவர்களும் அவனவன் தாய்களின் பாகத்தைமட்டும் சேர்ந்த சகோதரர்களுக்குள் சரியாக பங்கிட்டுக்கொள்ளவேண்டியது.

(4) பிள்ளைகள்.—தாயின் ஸ்திரீதனசொத்து பிள்ளைகளுக்கு கிடைத்தால் அது ஸ்வயார்ஜிதம்போலாய்விடும். (27 ம. 300.)

(5) பிள்ளைகளின் பிள்ளைகள்.—இவர்களுக்கு தகப்பன் பாகத்தை அனுசரித்தே பாகங் கிடைக்கும். மூலஸ்திரீக்கு முந்தி அவள் பிள்ளைகளில் ஒருவனிறந்தால் இறந்தவனுடைய பிள்ளைக்கு பாகங் கிடைக்கமாட்டாது.

(6) பிள்ளையின் பேரன்.—(கொள்பேரன்.) (21 ம. 58; 27 ம. 300.)

மேலே சொல்லப்பட்ட 6 வரிசைக் கிரமமான வார்சுகளில்லாத பட்சத்தில் இதனடியில்கண்ட வரிசைப்படிக்குள்ளவர்களுக்குக் கிரமமாக சொத்துச் சேருமென்று நிர்ணயசிந்து என்கிற கிரந்தத்தில் விவரமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. அதாவது:—

| (a) கன்னிகாதான விவாகமாயிருந்தால் | (b) கன்னியாவிக்கிரய விவாகமாயிருந்தால் |
|---|---|
| 7 புருஷன். | 7 தாய். |
| 8 ஸபத்நி பிள்ளைகள். (இ. லா. ரி. 13 ம. 348) | 8 தகப்பன். |
| 9 ஸபத்நி பிள்ளைகளின் பிள்ளைகள். | 9 அண்ணன் தம்பிகள். |
| 10 ஸபத்நி. | 10 அண்ணன்தம்பி பிள்ளைகள். |
| 11 ஸபத்நிபெண் | 11 தங்கை தமக்கைகள். |
| 12 ஸபத்நிபெண்ணின்பிள்ளைகள். | 12 தங்கை தமக்கைபிள்ளைகள். |
| 13 புருஷன் தாயார். | 13 தகப்பனின் தாயார். |
| 14 புருஷன் தகப்பன். | 14 தகப்பனின் தகப்பன். |
| 15 புருஷன் அண்ணன் தம்பிகள். | 15 சிறியதகப்பன் பெரியதகப்பன். |
| 16 புருஷன் அண்ணன் தம்பிகளின் பிள்ளைகள். | 16 சிறியதகப்பன் பெரியதகப்பன் பிள்ளைகள். |
| 17 மாமனாரின் தாய். | 17 புருஷன். |
| 18 மாமனாரின் தகப்பன். | 18 புருஷன்வார்சுகளான சபிண்டகள். |
| 19 சிறியமாமனார் பெரியமாமனார். | |
| 20 சிறியமாமனார் பெரியமாமனார் பிள்ளைகள். | |

**357.** மயூககிறந்தப்படி வார்சுபாத்தியம்—அன்வாதேயகம், பிரீதிதத்தம் இந்த இரண்டுவிதமான ஸ்திரீதனங்களுக்கு வார்சுபாத்திய ஸ்தர்களை வரிசையாக இதனடியில் காட்டியிருக்கின்றன. எப்படியெனில்:—

(1) யாதொரு ஸ்தரீயின் பிள்ளைகளும், விவாகமாகாத பெண்களும் சேர்ந்து முதலில் சரிபாகத்துக்கு வார்சாகிறார்கள். பிள்ளையில்லாவிட்டால் விவாகமாகாதபெண்ணுக்கே சொத்தெல்லாம் சேர்ந்துவிடும். விவாகமான பெண்ணுக்கும், பெண்ணின் பெண்ணுக்கும் மரியாதையாக ஏதாவது கொஞ்சம் கொடுக்கவேண்டும். விதவைகளாயிருக்கும் பெண்களுக்குச் சொத்து கொஞ்சமெனும் கிடைக்கமாட்டாது.

(2) விவாகமாகாத பெண்களில்லாவிட்டால், விவாகமாய் சுமங்கலியாயிருக்கிற பெண்களும், பிள்ளைகளும் சேர்ந்து சமமாக பாகித்துக்கொள்ளவேண்டும். (இ. லா. ரி. 9 பம். 115) பிள்ளைகளில்

லாவிட்டால் பெண்களுக்கும், பெண்களில்லாவிட்டால் பிள்ளைகளுக்கும் சொத்து முழுவதும் சேர்ந்துவிடும்.

(3) மேலே சொன்ன வார்சுகளில்லாவிட்டால் பெண்களின் பெண்களும், பெண்களின் பிள்ளைகளும் வார்சாகிறார்கள். இவர்களின் பாகம் தாயாரின் பாகத்தை யனுசரித்ததேயொழிய எல்லாருக்கும் சமபாகமல்ல.

(4) அதற்குமேல் பிள்ளையின் பிள்ளைகளுக்கு வார்சுபாத்தியம் ஏற்படுகிறது. இவர்களுக்கும் அவனவன் தகப்பனுக்குக் கிடைக்க வேண்டிய பாகத்தை தங்கள் சகோதரர்களுக்குள் பிரித்துக்கொள்ள வேண்டுமேயொழிய எல்லாருக்கும் சமபாகமல்ல.

(5) பிறகு இறந்துபோன ஸ்திரீயின் விவாகம் கன்னிகாதானமாயிருந்தால் அவள் புருஷனும் அவன் வார்சும் சொத்தை யடைகிறார்கள். கன்னியா விக்கிரயமானால் அவள் தாயும் தகப்பனும் அவனுடைய வார்சும் வார்சாகிறார்கல்.

(6) மேலேசொன்ன ஸ்திரீதனங்களல்லாமல் மற்ற அத்யக்னிகம் அத்தியாவாகனிக முதலிய ஸ்திரீதனங்களுக்கு மயூககிரந்தத்தில் தெரிவித்திருக்கிறபடி வார்சு யாரென்றால்:—

(1) விவாகமாகாத பெண்கள்.
(2) விவாகமானவர்களில் ஏழைப்பெண்கள்.
(3) விவாகமானவர்களில் பணக்காரப் பெண்கள்.
(4) பெண்ணின் பெண்கள், பெண்ணின் பிள்ளைகள்.
(5) பிள்ளைகள்.
(6) பிள்ளையின் பிள்ளைகள்.
(7) அதன்பிறகு, கன்னியாதானமாயிருந்தால் புருஷனும் அவனுடைய வார்சுகளும், கன்னியா விக்கிரயமாயிருந்தால் தாய் தகப்பனும் அவனுடைய வார்சுகளும்.

மேற்சொன்ன வார்சுகளில்லாவிட்டால், இன்னார் அவளுடைய ஸ்திரீதனத்துக்கு வார்சாவார்களென்று மயூககிரந்தத்தில் விவரமாகக் காணப்படவில்லை. ஆனால், அதில் வரையப்பட்டிருக்கிற பிருகஸ்பதி வாக்கியத்தின் ஆதாரத்தினால், யாதொரு ஸ்திரீ எவர்களுக்கு தாய்க்குச் சமானமாயிருக்கிறாளோ அவர்கள் அவளுடைய ஸ்திரீ

தனத்துக்கு வார்சாகிறார்கள். அவர்கள் யாரென்றால்:—(1) அக்கா தங்கைகளின் பிள்ளைகள், (2) புருஷனுடைய அக்கா தங்கைகளின் பிள்ளைகள், (3) புருஷனுடைய அண்ணன் தம்பிகளின் பிள்ளைகள் (4) தன் சொந்த அண்ணன் தம்பிகளின் பிள்ளைகள், (5) மாப்பிள்ளை, (6) புருஷனுடைய தம்பி, மேற்சொன்னவர்களில், புருஷனுக்குப் பிறகு புருஷன் வழிபந்துக்களும், தகப்பனுக்குப் பிறகு தகப்பன் வழிபந்துக்களும் முதலில் வார்சாவதாகத் தெரிந்துகொள்ளவேண்டும்.

**358.** தாயபாகப்படி யௌதக, அயௌதக ஸ்திரீதனங்களுக்கு வார்சு கிரமங்கள்.—(*a*) தாயக்கிரமம் தாயபாகம் முதலிய தர்ம சாஸ்திரங்களில் சொல்லியபடி யௌதக சொத்துக்கு வார்சுக்கிரமம் எப்படியென்றால்:—(1) நிச்சியதார்த்தமாகாத பெண்கள், (2) நிச்சியதார்த்தமாய் விவாகமாகாத பெண்கள், (3) விவாகமான பெண்களில் புத்திர சந்ததியுள்ள அல்லது பெறத்தக்க பெண்கள், (5) பிள்ளைகள் (6) பெண்ணினுடைய பிள்ளைகள், (7) பிள்ளையுடைய பிள்ளைகள், (8) பிள்ளையுடைய பேரன்கள், (9) சக்களத்தி பிள்ளைகள், (10) சக்களத்தி பேரன்கள், (11) சக்களத்தி கொள்பேரன்கள், இதற்கு மேல் அந்த ஸ்திரீயின் விவாகத்தை அனுசரித்ததாயிருக்கிறது.

| கன்னிகாதானமாயிருந்தால். | | கன்னியாவிக்கிரயமாயிருந்தால். | |
|---|---|---|---|
| 12 | புருஷன். | 12 | தாய், |
| 13 | அண்ணன் தம்பிகள் | 13 | தகப்பன் |
| 14 | தாய். | 14 | அண்ணன் தம்பிகள், |
| 15 | தகப்பன். | 15 | புருஷன். |

பிறகு எட்டின வார்சுகள்.—(16) புருஷனுடைய தம்பிகள், (17) புருஷனுடைய அண்ணன் தம்பிகளின் பிள்ளைகள், (18) ஸ்திரீயின் அக்கா தங்கைகளின் பிள்ளைகள், (19) புருஷனுடைய அக்கா தங்கைகளின் பிள்ளைகள். (20) ஸ்திரீயின் அண்ணன் தம்பிகளின் பிள்ளைகள், (21) மாப்பிள்ளை, (22) மாமனார், (23) புருஷனுடைய தமயன், (24) சகுல்யர்கள், (25) சமானோதகர்கள் இவைகளை பின்னால் வார்சுபாத்தியத்தில் விவரிக்கப்படும்.

(*b*) அயௌதக சொத்துக்கு வார்சுபாத்தியம்.—(1) பிள்ளைகளும் நிச்சியதார்த்தமாகாத பெண்களும்சேர்ந்து சமவார்சாகிறார்கள். (2க.

ஐ. 144) பிள்ளைகள் அல்லது பெண்களில் யாராவதொருவர்மட்டு மிருந்தால் அவர்களுக்கே சொத்துமுழுவதும் சேர்ந்துவிடும். (2) நிச்சியதார்த்தமாய் விவாகமாகாதபெண். (3) புத்திரசந்ததியுள்ள அல்லது பெறத்தக்க விவாகமான பெண். (4) பிள்ளைகளின் பிள்ளைகள். (5) பெண்களின் பிள்ளைகள். (6) கொள்பேரன்கள். (7) சக்களத்தி பிள்ளைகள். (8) சக்களத்தி பேரன்கள். (9) சக்களத்தி கொள்பேரன்கள். (10) விதவை அல்லது மலடிப்பெண்கள்.

அதன்மேல் விவாக விஷயத்தை யனுசரிக்காமல், அவ்வளாதக சொத்துக்கு தாயபாகப்படி வார்சுகள் யாரென்றால் (11) ஸ்திரீயின் அண்ணன் தம்பிகள். (12) தாயார், (13) தகப்பன், (14) புருஷன், (15) மேற்சொல்லிய வரிசையில் புருஷனுடைய தம்பி வகையராப் பேர்கள் தூரவார்சுகள். (11 க. ஐ. 286; இ. லா. ரி. 1 க. 275) ஆனால், தாயக்கிரமசங்கிரகம் விவாகத்தின்படி வார்சேர்ப்படவேண்டு மென்று சொல்லப்பட்டிருந்த போதிலும், தற்காலத்தில் கோர்ட்டு களில் அது ஒப்புக்கொள்ளப்படவில்லை.

உதாரணம்.—A என்ற இந்து ஒருவன் தன்னுடைய சில ஸ்தாவர சொத்துக்களை B என்ற தன்னுடைய விவாகமாகாத தங்கைக்கு இனும்பத்திர மூலமாய்க் கொடுத்துவிட்டான். அதில் அச்சொத்துக்களை அவள் ஆயுள் பரியந்தம் அனுபவித்துக்கொள்ளுகிற தென்றும் அவள் ஜீவதிசைக்குப்பிறகு அச்சொத்துக்களை அவள் புருஷன் பிள்ளை பெண்கள் பேரன் பேத்திகள் அடைகிறதென்றுங் கண்டிருந்தது. அந்தப்படி B அச்சொத்துக்களை யடைந்து அனுபவித்து சிலகாலஞ்சென்று இறந்தாள். அக்காலத்தில் அவளுக்கு C என்ற ஒரே மைனர் பெண்ணிருந்தது. அச்சொத்துக்களை B யின் புருஷன் D அடைந்து அவன் பேரில் பட்டாமுதலானதும் ஆய்விட்டது. பின்பு D யும் இறந்தான். இவனுக்கு இரண்டாவது மனைவி E அச்சொத்துக்களை கைப்பற்றிவிட்டாள். C. தான் மேஜரானவுடன் தன் தாயார் Bக்குகிடைத்த ஷெ சொத்துக்கு தான் நேரான வார்சென்றும் அவைகள் Eஇடமிருந்து தனக்கு ஸ்வாதீனப்படுத்திக் கொடுக்கப்படவேண்டு மென்றும் வழக்கிட்டாள்.

எதிர்வாதம்:—தாவா சொத்துக்களை B யின் ஜீவதிசைக்கும் பிறகு அவள் புருடன் D சர்வசுதந்திரபாத்தியமாயனுபவிக்கும்

படி ஏற்பட்டிருக்கிறபடியால் அந்தப்படி அனுபவித்துவந்ததாகவும் அவருக்குத்தான் நேரான வார்சாகையால் அந்த வார்சு கிரமத்தில் தானனுபவிப்பதாகவும் வாதிக்கு தற்காலம் தாவா சொத்தில் எவ்விதபாத்தியமுமில்லையேன்றும் E கக்ஷியாடினள்.

தீர்ப்பு :—Bக்கு Aயால் கொடுபெட்டதானது இந்துலாப்படி அயௌதக ஸ்திரீதன சொத்தென்றும் பத்திரவாசகத்தில் வரிசைக்கிரமமேற்பட்டிருப்பதைக் கொண்டு Cயின் பாத்தியம் இழந்து போக நியாயமில்லையென்றும் அவ்வித ஸ்திரீதன சொத்துக்கு C தான் நேரான வார்சென்றும் வாதியின் தாவாப்படி பிரவிகவுன் சிலார் தீர்ப்புச் செய்தார்கள். (33. கல். 23).

(c) தாயபாகப்படி பித்ருதத்தத்துக்கு வார்சு—தகப்பனல் பெண்ணுக்குக் கொடுத்த “பித்ருதத்தம்” என்கிற ஸ்திரீதனத்துக்கு வார்சுகளை விவரமாய் அடியில் காட்டியிருக்கிறோம். 1 முதல் 11 வரையில் மேலே சொல்லப்பட்ட பௌதக ஸ்திரீனத்துக்கு ஏற்பட்டது போலவே வார்சு பாத்திபம் ஏற்படும். அதன்பிறகு அயௌதக ஸ்திரீதனம்போல (12) ஸ்திரீயின் சகோதரர்கள், (13) தாய், தகப்பன், (15) புருஷன், (16) புருஷனுடைய தம்பி வகையாரப் பேர்களான தூரவார்சுகள். இந்த தாயபாக கிரந்தத்தான் கோர்ட்டில் அங்கிகரிக்கப்பட்டிருக்கிறது. (11 க. ஐ. 286, 300.)

359. வார்சுக்கிரமம் தப்பினுல் மறுபடி வார்சு.—ஒரு ஸ்திரீதனக்கு பாத்தியமாயுள்ள ஸ்திரீதனத்தை மற்றொருவளுக்கு தானமாகவாவது, உயில்மூலமாகவாவது கொடுத்தால் அந்த சொத்து அதைப் பெற்றுக்கொண்டவளுடைய ஸ்திரீதனமாகவே எண்ணப்பட்டு அவளுடைய வார்சுகளுக்குச் சேரும். (11 க. ஐ. 295) ஆனல் வார்சாக சொத்தையடைந்த ஒரு ஸ்திரீ வார்சில்லாமல் இறந்தால் மூல ஸ்திரீயின் வார்சுக்கே அந்த சொத்து சேர்ந்துவிடும். (இ. லா. ரி. 5 க. 222; இ. லா. ரி.17 க. 911, 917.) ஒருஸ்திரீயினிடமிருந்து மற்றொருஸ்திரீக்கு தானமாகவாவது, உயில்மூலமாகவாவதில்லாமல் வார்சு பாத்தியமாக சொத்துக்கிடைத்தால் அது ஸ்திரீதனமாகமாட்டாது. (2 க. ஐ. 144; 3 ம. ஐ. 314; 6 பம். ஐ. 18; 14 க. ஐ. 237; இ. லா. ரி. 5 க. 225) ஸ்திரீதனம் ஒருதரம் ஆண் வார்சு

களுக்குச் சேர்ந்துவிட்டால் பிறகு மறுபடி மூலஸ்திரீயின் வார்சு களுக்குச் சேரமாட்டாது.

உதாரணம்.—(1) ஒருஸ்திரீக்கு "எ" "பீ" என்கிற இரண்டு பெண்களில் "எ" கல்யாணமானவள். "பீ" விவாகமாகாத பெண்ணாகையால் தாயாரின் ஸ்திரீதனம் அவளுக்குச சேர்ந்தது. பிறகு "பீ" கன்னிகாதானமாக கல்யாணம் செய்யப்பட்டு சந்ததியின்றி யிறந்துபோனாள். "பீ" க்கு வார்சுபாத்தியமாகக் கிடைத்த சொத்து அவள் புருஷனுக்குச் சேராமல் "எ" யின் வார்சாகிய 'ஸி' க்குபோய்ச் சேர்ந்துவிடும். ஸ்திரீதனமாயிருந்தால் புருஷனுக்குக்சேரும்.

(2) பங்காளத்தில் 'க' என்கிற தாயிடமிருந்து 'த' என்கிற பெண்வார்சு பாத்தியமாக சில சொத்தையடைந்து 'ச' என்கிற பெண்ணேயும், 'ந' என்கிற தாயின் சஹோதரனேயும் விட்டிறந்தாள். அவளுக்குத் தாயிடமிருந்து வார்சுபாத்தியத்தால் கிடைத்த சொத்துக்கு, 'ச' என்கிற பெண்ணைக்காட்டிலும் மாமனே தாய்க்கு சமீப வார்சாவான். (1 பம். ஸ. ரி. 3; இ. லா. ரி. 17 க. 611.)

**360.** **துஷ்கிருத்தியங்களால் ஸ்திரீதன சொத்துப் போசாது.**—(1) ஸ்திரீதன சொத்துக்கு வார்சாக ஏற்பட்டவள் வியபசாரியாயிருந்தாலும், ஜாதி பிரஷ்டையானாலும் அவளுடைய பாத்தியத்திற்கு பாதகமுண்டாகமாட்டாது. (இ. லா. ரி. 1 அ. 46; 26 ம. 509.) புனர் விவாகஞ்செய்துகொண்டாற்கூட அவளுக்கு வேறொரு ஸ்திரீயினுடைய ஸ்திரீதன சொத்திலுள்ள வார்சுபாத்தியம் போகமாட்டாது. (1856ளுலத்து 15வது ஆக்ட்.)

(2) அநேகர் தங்களுடைய முதல்தார மிறந்து போனவுடன் அவளுடைய ஆடையாபரணங்களைப் பெண்கள் முதலான வார்சுகளுக்குக் கொடாமல் தங்களுடைய இரண்டாவது தாரத்துக்குப்போட்டு அழகு பார்க்கிறார்கள். இது சட்டப்படி அனியாயமானது. அந்த நகைகளுக்கு வார்சாயுள்ள பெண்கள் தாயாரிறந்த 3 வருஷங்களுக்குள் தகப்பன்பேரிலும், அந்த நகைகளைத் தரித்துக்கொண்டிருக்கிற சிறிய தாயார்பேரிலும் தாவாசெய்து நகைகளையாவது அல்லது அவைகளின் கிரயத்தையாவது வாங்கலாம். பெண்கள் மைனராயிருந்தால் மைனாரிடி நீங்கினது முதல் 3 வருஷத்திற்குள் தாவா செய்யவேண்டும்.

---

# 13-வது வார்சுபாத்தியம்.



## (a) வார்சுபாத்தியத்தின் மாதிரி.

361. அனுமத்தாக சோத்து நிற்காது —யாதொரு சொத்தின் சுவான்தாரன் மரணமடைந்தால் அவனுடைய சமீப வார்சுக்கு அந்த க்ஷணமே சொத்துச் சேர்ந்துவிடும். பிறகு அவனைப்பார்க்க சமீப வார்சு உண்டாகலாம் என்கிற காரணத்தால் அந்த சொத்து அவனைச்சேராமல் அனுமத்தாய் நிற்கமாட்டாது. ஆனால் அவ்விதம் சகல பாத்தியமுள்ள ஆண்வார்சுக்கு ஒருதரம் சொத்துச் சேர்ந்தபிறகு அவனைப்பார்க்கச் சமீபவார்சுகள் பிறந்தாலும் அவர்களுக்கு அந்த சொத்தில் எவ்விதமான பாத்தியமும் உண்டாகமாட்டாது. (2 க. ஐ. 103. 6 பம். ஸ. தீ. 224; 1 ஸ. 353; இ. லா. ரி. 9 ம. 64; 6 பம். 616; 2 கல் 295; 7 கல். 178.) ஆனால், கர்ப்பத்திலிருக்கிற சிசு விஷயத்தில் மட்டும் இந்த ஏற்பாடு செல்லாது. எப்படியென்றால்:—

(1) ஒரு சுவான்தாரனிறந்தபோது அவனுக்கு ஒரு பிறவிக் குருடனான பிள்ளையும், பிரித்துக்கொண்டுபோன சகோதரன் பிள்ளையும் தவிர மற்ற பேரன், கொள்பேரன், பெண்சாதி, பெண், தௌஹித்திரன் முதலிய வார்சுதாரர்கள் ஒருவருமில்லாதிருந்தால் பிறவிக்குருடனுக்கு சொத்துச் சேராமல் பிரிந்துபோன சகோதரன் பிள்ளைக்குச் சொத்தெல்லாம் சேர்ந்துவிடும். குருடனுக்குப்பிள்ளை பிறப்பானென்று சொத்து அனுமத்தாய் நிற்காது. பிறகு அந்தக் குருடனுக்குப்பிள்ளை பிறந்தாலும் அந்தப்பிள்ளைக்குப் பாட்டன் சொத்தையடைய பாத்தியமில்லை. சுவான்தாரனிறக்குஞ்சமயத்தில் குருடன் பெண்சாதி கர்ப்பமாயிருந்து பிள்ளையைப் பெற்றிருந்தால் அந்தப்பிள்ளைக்குச் சொத்துச்சேரும். (9 க. ஐ. 397; 5 பம். ஸ. தீ. 315)

(2) சுவான்தாரன் இறந்தபிறகு அவனுடைய விதவையால் எடுத்துக்கொண்ட சுவீகாரப்பிள்ளைக்குச் சொத்துசேரும் என்கிற விஷயம் முன்னமேயே 89-வது பிரிவில் தெரிவித்திருக்கிறோம்.

(b) வார்சுகளின் சம்பந்தம்.

362. வார்சுகள் மூன்றுவிதம்.—ஒவ்வொரு புருஷனுக்கும் கோத்திரஜாள் அல்லது தாயாதிகளான ஸபிண்டர்கள், சமானோதகர்கள், அன்னிய கோத்திரர்களான பந்துக்களென்று மூன்றுவித வார்சுகளிருக்கிறார்கள். இந்த வார்சுகள் மிதாட்சரப்படி நெருங்கிய ரக்த சம்பந்தத்தைப் பற்றியும், தாயபாகப்படி பிண்டப் பிரதானம் முதலிய கர்மங்களைச் செய்வதைப்பற்றியும் ஏற்படுகிறார்கள். (இ. லா. ரி. 7 க. 119; இ. லா. ரி. 9 க. 318; 2 க. ஐ. 33; இ. லா. ரி. 2 பம். 425; இ. லா. ரி. 5 பம். 110.)

363. சபிண்டர்கள் சமானோதகர்கள்—ஒவ்வொருவனும் (1) தகப்பன், (2) பாட்டன், (3) கொள்பாட்டன் இவர்களுக்குப் பிண்டப்பிரதானம் செய்யவும் (4) கொள்பாட்டன் தகப்பன், (5) கொள்பாட்டன்பாட்டன், (6) கொள்பாட்டன்கொள்பாட்டன் இவர்களுக்கு லேபப்பிரதானம் செய்யவும், கொள்பாட்டன் கொள்பாட்டனுக்கு மேல் 7 தலைமுறைவரையிலுள்ளவர்களுக்கு உதகதானஞ் செய்யவும் கட்டுப்பட்டவனென்று தர்மசாஸ்திரங்கள் சொல்லுகின்றன. இதனால் ஒவ்வொரு மனிதனும் (1) பிள்ளை (2) பேரன், (3) கொள்பேரன் இவர்களால் பிண்டப்பிரதானம் பெற்றுக்கொள்ளவும், (4) கொள்பேரன்மகன் (5) கொள்பேரன்பேரன் (6) கொள்பேரன் கொள்பேரன் இவர்களால் லேபப்பிரதானம் பெற்றுக்கொள்ளவும், கொள்பேரன் கொள்பேரனுக்குக்கீழ் ஏழுதலைமுறை வரையிலுள்ளவர்களால் உதகதான மட்டும் பெற்றுக்கொள்ளவும் அதிகாரமுள்ளவனென்று ஏற்படுகிறது. மேற்சொல்லப்பட்ட தானபரிக்கிரகங்களே சபிண்டசமானோதக சம்பந்தங்களுக்குக் காரணங்களாயிருக்கின்றன. எப்படியெனில்—பிண்டப்பிரதானங் கொடுக்கிறவர்கள் பெற்றுக்கொள்கிற ஒவ்வொருவருக்கும் நெருங்கிய சபிண்டர்களென்றும், லேபப்பிரதானங்கொடுக்கிற ஒவ்வொருவரும் பெற்றுக்கொள்ளுகிறவர்களுக்கு தூரசபிண்டர்களென்றும் சொல்லப்படுவார்கள். தூரசபிண்டர்களுக்கு சகுல்யர்களென்றும் பெயர். உதகதான மட்டுங் கொடுப்பவர்கள் பெற்றுக்கொள்ளுகிற ஒவ்வொருவருக்கும் சமானோதகர்கள் என்று சொல்லப்படுவார்கள்.

இப்படிப்பட்ட பிண்டப்பிரதானங் கொடுக்கிறது பெற்றுக்கொள்ளுகிறது இதனால் மட்டுமில்லாமல், ஒரேபெரியவருக்கு பக்க

தாயாதிகளாயிருப்பவர் பிண்டப்பிரதானஞ் செய்யவேண்டியதாக வேற்பட்டால் இவ்விதஞ் செய்கிறவர்களுக்குஞ் சபிண்ட சம்பந்த முண்டாகிறது. (2 க. ஐ. 34; 5 க. ஐ. 39.)

**364.** சபிண்டர்களின் வம்சவிருக்ஷம்.—இதனடியில் விவரித்திருக்கும் வம்சவிருட்சத்தில் ஒரு கிருஹஸ்தனுக்கு நெருங்கிய சபிண்டர்களைக் காட்டியிருக்கிறது. அவர்களாவன:—

(1) பிள்ளை, பேரன், கொள்பேரன், இம்மூன்று பேர்களும் கிருகஸ்தனுக்கு பிண்டப்பிரதானஞ் செய்வதாலும், தகப்பன், பாட்டன், கொள்பாட்டன், இம்மூவருங் கிருஹஸ்தனுல் பிண்டப்பிரதானம் பெற்றுக்கொள்வதாலும், இவ்வாறுபேர்களும் கிருஹஸ்தனுக்கு நெருங்கிய (சமீப) சபிண்டர்களாகிறுர்கள்.

(2) ஆஸ்திகாரன் பிண்டப்பிரதானஞ் செய்யவேண்டிய தகப்பன், பாட்டன், கொள்பாட்டன், இவர்களில் மூன்றுபேர்களுக்காவது, இருவர்களுக்காவது, ஒருவருக்காவது, பக்கதாயாதிகளான அண்ணன், தம்பி, சிறியதகப்பன், பெரியதகப்பன், சிறியபாட்டன், பெரியபாட்டன், இவர்களின் பிள்ளை பேரன் இவர்கள்கூட பிண்டப்பிரதானஞ் செய்வதால் இவர்களெல்லோருங் கிருஹஸ்தனுக்கு சமீப சபிண்டர்களாகிறுர்கள்.

(3) கொள்பேரனுக்கிழ் மூன்று தலைமுறைவரையிலுள்ளவர்களும், கொள்பாட்டனுக்குமேல் மூன்றுதலைமுறைவரையிலுள்ளவர்களும், அண்ணன் தம்பிகளின் பேரனுக்குக்கிழ் 3 தலைமுறைவரையிலுள்ளவர்களும், சிறியதகப்பன் பெரியதகப்பன் பேரனுக்குக் கீழ் 3 தலைமுறைவரையிலுள்ளவர்களும், சிறியபாட்டன் பெரியபாட்டன் பேரனுக்குக் கீழ் 3 தலைமுறைவரையிலுள்ளவர்களும், இவர்களுக்கும் கிருஹஸ்தனுக்கும் லேபப்பிரதானம் மட்டுங் கொடுக்கவும் வாங்கவும் சம்பந்தமிருப்பதால் இவர்களெல்லோரும் கிருஹஸ்தனுக்கு தூரசபிண்டர்கள் அதாவது சகுல்யர்கள் ஆகிறுர்கள்.

சபிண்டர்களின் வம்சாவளி.

# கொள்பாட்டன்.




# கிருஹஸ்தன்.




**365.** ஸ்திரீசபிண்டர்கள்.—(1) தகப்பன், பாட்டன், கொள் பாட்டன் இவர்களுக்குக் கொடுக்கப்படும் பிண்டங்களை இவர்கள் பெண்சாதிகள்கூட அடைவதால் ஒவ்வொரு புருஷனுக்கு தாய், பாட்டனுடைய பெண்சாதி, கொள்பாட்டனுடைய பெண்சாதி இவர்கள்கூட சபிண்டர்களாகிறார்கள். (இ. லா. ரி. 2 பம். 420, 440, 445) மேலும் புருஷன் தேகத்தில் பாதி பாகமாக யெண்ணப்படுகிற காரணத்தைக்கொண்டும், பிள்ளையன்றியிவிறந்துபோன புருஷனுக்குக் கர்மத்தை நடத்தும் காரணத்தைக்கொண்டும் பெண்சாதி புருஷனுக்கு சபிண்டையாகிறாள்.

(2) கொள்பாட்டன்தகப்பன் கொள்பாட்டன்பாட்டன், கொள் பாட்டன் கொள்பாட்டன் இவர்களுடைய பெண்சாதிகள் மிதாக்ஷ ரத்தின்படி தூரசபிண்டர்களாகிறார்கள்.

(3) பம்பாய் ராச்சியங்களில் வழக்கமாய் அனுஷ்டிக்கப்படுகிற மயூககிரந்தப்படி பெண், தமக்கை, தங்கை, அண்ணன் தம்பிகளின் பெண்சாதிகள் இவர்கள் கூட சகோதரசபிண்டர்களாக எண்ணப் படுகிறார்கள்.

366. பந்துக்களின் விவரம்—சபிண்டர்கள், சமானோதகர்கள் பந்துக்கள் இம்மூன்று வகுப்பினரும் தாயபாகப்படி பிண்டப்பிரதா னம் முதலிய கர்மங்களைச் செய்வதினாலும், மிதாட்சரப்படி ரக்தசம் பந்தத்தினாலும்கிருஹஸ்தனுக்கு பந்துக்களாகிறார்கள். அதில் முதல் 3 தலைமுறைவரையி லுள்ளவர்களுக்கு சமீபசபிண்டர்களென்றும், 4, 5, 6, தலைமுறைவரையில் தூரசபிண்டர்கள் அல்லது சகுல்யர்க ளென்றும், அதற்கு கீழ் ஏழு தலைமுறைவரையிலுள்ளவர்கள் சமா னோதகர்களென்றுஞ் சொல்லப்பட்டிருக்கிறார்கள்.

367. தாயபாக அனுஷ்டானப்படி பந்துக்களின் வம்சாவளி.—(1) யாதொரு கிருஹஸ்தனுக்கு சபிண்டர்கள் சமானோதகர்கள் சகோத்திரர்களாயிருக்கிறார்கள். வேறு கோத்திரத்திலிருப்பவர்கள் கூட சபிண்டர்களாக விருப்பதுண்டு. இவர்களுடைய சபிண்ட சம் பந்தம், பார்வணசிரார்த்தகாலத்தில் தகப்பன் பாட்டன் கொள் பாட்டன் இவர்களுக்குப் பிண்டங்கொடுப்பதுபோல, தாயின் தகப் பன், தாயின் பாட்டன், தாயின் கொள்பாட்டன் இவர்களுக்கும் பிண்டங்கொடுப்பதால் கிருஹஸ்தனுக்கு பந்துத்வமுண்டாகிறது. வெவ்வேறு கோத்திரத்திற் பிறந்தவர்கள் ஒரே பெரியவருக்குப் பிண்டப்பிரதானஞ் செய்தால் அவர்கள் ஒருவருக்கொருவர் சபிண் டர்களாகிறார்கள்.

(3) வேறுகோத்திர சபிண்டர்களுக்கு பந்துக்களென்று பெயர். அவர்கள் இரண்டுவிதம். அதாவது (1) தகப்பன்வழி பந்துக்கள். (2) தாய்வழி பந்துக்கள். இதனடியில் காட்டியிருக்கிற வம்சவிருட் சங்களில் மேலே சொன்ன தகப்பன்வழி, தாய்வழி பந்துக்களை விவரமாய்த் தெரிந்துகொள்ளலாம்.

## (1) தகப்பனைச்சேர்ந்த பந்துக்கள்.



192-வது பக்கத்திற்கண்ட வம்சவிருட்சத்தில் நக்ஷத்திர அடையாளம்போடப்பட்டவர்களெல்லாரும் கிருகஸ்தனுக்குவேறுகோத்திர சபிண்டரான தகப்பனைச்சேர்ந்த பந்துக்களாகிறார்கள். இவர்கள் கிருகஸ்தனுக்காவது, கிருகஸ்தனுடைய தகப்பன், பாட்டன், கொள்பாட்டன் இவர்களில் யாருக்காவது பிண்டங்கொடுக்கத்தக்கவர்கள்.

## (2) தாயைச்சேர்ந்த பந்துக்கள்.

தாயின் கொள்பாட்டன். * *

| | | |
|---|---|---|
| தாயின் பெரியபாட்டன். | தாயின்பாட்டன். * * | தாயின்பாட்டனின்சகோதரிகள். |
| பிள்ளை. * | | பிள்ளை* |
| பேரன். * | | |
| தாயின் பெரிய தகப்பன். | தாயின்தகப்பன். * * | தாயின் அத்தை. |
| பிள்ளை. * | | பிள்ளை.* |
| பேரன் * | | |
| மாமன்.* | தாய் | தாயின் சகோதரி |
| மாமன் பிள்ளைகள்.* | | பிள்ளை.* |
| மாமன் பேரன்.* | | |

# கிருகஸ்தன்.

மேலே காட்டியிருக்கிற வம்சவிருட்சத்திலுள்ள புருஷர்களெல்லாம் கிருகஸ்தனுக்கு வேறு கோத்திர சபிண்டர்களாகிறார்கள். இரண்டு நட்சத்திர அடையாளமுள்ள பெரியோர்கள் கிருகஸ்தனாலாவது ஒரு நட்சத்திர அடையாளமிட்ட புருஷர்களாலாவது கொடுக்கும் பிண்டங்களைப் பெற்றுக்கொள்வதால், கிருகஸ்தனும் ஒரு நக்ஷத்திர அடையாளமிட்ட புருஷர்களும் அன்னியகோத்திர தாய்வழி சபிண்டர்களாகிறார்கள்.

தாய்வழி தகப்பன்வழி பந்துக்களைக் காட்டியிருக்கிறவம்ச விருட்சத்தில் சிலரைமாத்திரம் தாயபாக நாயக்கிரமசங்கிரகம் முதலிய சாஸ்திரங்களிற் சொல்லப்பட்டிருக்கின்றன. இவைகள் உதாரணமாகச் சொல்லப்பட்டிருப்பதால், இதில் சொல்லியிராத மற்ற வேறு கோத்திர சபிண்டர்களும் பந்துக்களென்றே ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிருர்கள். (2 க. ஐ. 28; 5 க. ஐ. 15; 12 மூ. இ. அ. 448.)

368. மிதாட்சரப்படி பந்துக்களின் விவரம்.—மிதாட்சரப்படி (1) ஆத்மபந்துக்கள், (2) தாய்வழி பந்துக்கள் (3) தகப்பன்வழி பந்துக்கள் என்று மூன்றுவிதம். ஒருவனுடைய அத்தை, சிறியதாயார் பெரியதாயார், மாமன் இவர்களுடைய பிள்ளைகளை ஆத்மபந்துக்களென்றும், தகப்பனுடைய அத்தை சிறியதாயார் பெரியதாயார் மாமன் இவர்களுடைய பிள்ளைகளை தாய்வழிபந்துக்களென்றுஞ் சொல்லப்படுகின்றன. தாயபாக அனுஷ்டானப்படி மேற்சொன்ன ஆத்ம பந்துக்களும் தகப்பனுடைய அத்தை பிள்ளைகளும், தாயினுடைய அத்தை பிள்ளைகளும், அத்தை பிள்ளைகளும், பந்துக்களாவார்கள். மேற்சொன்ன மற்றவர்கள் பந்துக்களல்ல. ஏனெனில், அவர்கள் கிருஹஸ்தனுக்காவது அவனுடைய முன்னோர்களுக்காவது பிண்டப்பிரதானங் கொடுக்க யோக்கியதையில்லாதவர்கள். மேற்சொன்னமூன்று வகுப்பு பந்துக்கள் உதாரணத்துக்காகச்சொல்லியிருப்பதால், அதில் சொல்லியிராத ஒருவனுடைய தங்கை தமக்கைபிள்ளைகளும் மிதாட்சரப்படி பந்துக்கள்தானென்று தீர்ப்புகள் செய்யப்பட்டிருக்கின்றன. (2 க. ஐ. 28; 5 க. ஐ. 15; 6 ம. ஐ. 278; 12 மூ. இ. அ. 448.)

பம்பாயிராச்சியத்தில் மயூக கிரந்தப்படி தமக்கை தங்கைகள், சகோதரியின் பெண்கள், சகோதரன் பெண்கள், பெண்ணினுடைய பெண் இவர்கள் முதலிய ஸ்திரீவர்க்கமெல்லாம் பந்துக்களாக ஏற்பட்டிருக்கிருர்கள்.

(c) வார்சுகளின் வரிசைக்கிரமம்.

369. மிதாட்சர தாயபாக சித்தாந்தங்கள்.—(1) மிதாட்சர சித்தாந்தப்படி ரக்த சம்பந்தத்தைக்கொண்டும், தாயபாகப்படி இறந்

தவனுக்குப் பிண்டப்பிரதானங்கொடுக்கிற சம்பந்தத்தைக்கொண்டும் வார்சுக்கிரமம் ஏற்படுவதால், மிதாட்சர தாயபாக சித்தாந்தங்களுக்கு வித்தியாசம் ஏற்படுகிறது.

(2) தாயபாகப்படி பிண்டத்தைப் பெற்றுக்கொள்ளுகிறவனைக் காட்டிலும் கொடுப்பவன் சமீபவார்சாகிறன். உதகதானத்தைக்காட்டிலும் லேபதானமும், லேபதானத்தைக் காட்டிலும் பிண்டப்பிரதானமும் உயர்ந்ததாக எண்ணப்படுவதால், சமானோதகர்களைக்காட்டிலும் சகுல்யர்களும், சகுல்யர்களைக் காட்டிலும் சபிண்டர்களும் நெருங்கின வார்சுகளாகிறர்கள். மேலும், தகப்பன் வழியில்மட்டும் பிண்டப்பிரதானஞ் செய்கிறவர்களைக் காட்டிலும், தாய்தகப்பனிருவர் வழிகளிலும் பிண்டப்பிரதானஞ் செய்கிறவர்கள் நெருங்கின வார்சாகிறர்கள். இந்த நியாயங்களையனுசரித்து தாயபாகத்தில் வார்சுகளின் வரிசை யேற்படுத்தியிருப்பதால், வேறு கோத்திரக்காரர்களாயினும் பிண்டங் கொடுக்கயோக்கியதை யுடைபவர்களாதலால், பந்துவரிசையிலுள்ள எல்லாரும் லேபப்பிரதானம் செய்கிற சகுல்யர்களைக்காட்டிலும், உதகதானஞ்செய்கிற சமானோதகர்களைக்காட்டிலும் நெருங்கிய வார்சாகிறர்கள். மிதாட்சரத்தில் பிண்டங்கொடுப்பது பிரதான மில்லாததால் பந்து வரிசையிலுள்ளவர்கள் வேறுகோத்திரத்தார்களாயிருந்தால் அவர்கள், ஒரு கோத்திரத்தாளுகிய சமானோதகர்கள் சகுல்யர்கள் இவர்களுக்குப்பிற்பாடு வார்சாகிறர்கள்.

(3) பொதுவாய் முதலில் ஆண் சந்ததிகள், பிறகு இறந்தவன் விதவை, பெண், தௌஹித்திரன் (பெண்ணின்பிள்ளை) தாய், தகப்பன் அண்ணன் தம்பி, அண்ணன்தம்பி பிள்ளைகள், இவ்விதம் எல்லா அனுஷ்டானங்களிலும் கொஞ்சதூரவரையில் வரிசையாக வார்சுகளேற்பட்டுப் பிறகு வித்தியாசப்படுகின்றன. அதை போகப்போக பின்னல் விளக்கிக்காட்டுவோம்.

ஒரு கேசில் A என்பவனுக்கு பாட்டன் சகோதரி குமாரனும், அத்தையின் பேரனுமிருந்தார்கள். சமீப பந்துவாகிய அத்தையின் பேரனுகிய சமீப ஆத்ம பெந்துவுக்கு A யின் சொத்துக்கிடைத்தது. (29. ம. 115.)

**370.** புத்திர சந்ததியின் பாத்தியம்.—(1) ஒருவனிறந்தபிறகு அவன் சொத்துக்கு முந்தி பிள்ளைகள், பேரன்கள், கொள்பேரன்கள் வார்சுகளாகிறார்கள். தாயபாகப்படி பாகஸ்தர்களுக்கு தனித்தனி வார்சு பாத்தியமுண்டேயன்றி மிதாட்சரப்படி பொது பாத்தியமில்லே. அதுபோல, மிதாட்சர சம்பிரதாயப்படி பாகஸ்தர்களுக்கு தனித்தனி வார்சுபாத்தியம் கிடையாது, பொதுபாத்தியமட்டுமுண்டு.

(2) தகப்பனும் பிள்ளைகளும் பிரித்துக்கொண்டபிறகு வேறு சில பிள்ளைகள் பிறந்தால், மிதாட்சரப்படி இவர்கள் தகப்பனுடைய கூட்டு பாகஸ்தர்களாகிறார்கள். (4 அல. 427.) ஆகையால் அவனுடைய முழுசொத்தும் இவர்களுக்கே சேரும். அப்படிப் பிரிந்துபோனபின் பிள்ளை பேரன் கொள்பேரன் ஒருவருமில்லாவிட்டால் மிதாட்சரப்படி தகப்பன் சொத்துக்குப் பிரிந்துபோன பிள்ளையும் அவன் வார்சுகளும் பாத்தியஸ்தர்களாகிறார்கள். பிள்ளை, பேரன், கொள்பேரன் இவர்களிருக்கிறவரையில் சுவான்தாரன் பெண்சாதிக்கு ஜீவனும்சமட்டுங் கிடைக்குமேயொழிய சொத்து பாத்தியமில்லே. (2 ம. 182; 3 பம். 54; 21 ம. 425; 25 ம. 385; 23 கல். 670)

(3) ஒருவன் தன்னுடன் பிரிந்து தனியாயிருக்கிற பிள்ளையையும், சேர்ந்திருந்த பெண்சாதியையும் வைத்துவிட்டிறந்தால், அவன் சொத்துபிரிந்த பிள்ளையைச்சேரும். (இ. லா. ரி. 3 பம். 54; இ. லா. ரி. 2 ம. 182.)

(4) பிள்ளைகளுடன் பாகஞ்செய்துகொண்ட ஒருவன் தன் பங்கு தனக்கும் தன்பெண்சாதிக்கும் சர்வசுதந்தரமாயிருக்கவேண்டுமென்று பாகபத்திரத்தில் கண்டிருந்தான். தகப்பனிறந்தபிறகு பிள்ளைகள் தாவா செய்தார்கள். தஸ்தாவேசின் வாசகப்படி சொத்து தகப்பனுக்கும் தாய்க்கும் கூட்டாயிருப்பதால் தகப்பன்பாகம் பிள்ளைக்குச் சேரவேண்டியதென்று தீர்ப்புச்செய்யப்பட்டது. (27 ம. 498)

**371.** ஒரேமாதிரியான வார்சுபாத்தியம்.—வார்சுபாத்திய விஷயத்தில் பிள்ளை, பேரன், கொள்பேரன்கள் இம்மூன்றுபேர்களும்

மூலபுருஷனுக்கு உத்தரக்கிரியை சிரார்த்தம் முதலியவை செய்யபாத்திய முள்ளவர்களாயிருப்பதால் இவர்கள் ஒருவருக்குப்பின் ஒருவர் வார்சாகாமல் சமமான ஒரேவிதமான பாத்தியதையையுடையவர்களாதலால் ஒரேவரிசையிலிருப்பவர்களாக எண்ணப்படுகிறார்கள். கொள்பேரனும் சுவான்தாரனுடைய ஜீவித்திருக்கும் பிள்ளைகளோடு சரியான பாத்தியமுள்ளவனாகிறான். (16 ம. 14.) கொள்பேரன்பிள்ளை வார்சுகிரமத்தில் மிகவும் தாழ்ந்திருக்கிறான்.

உதாரணம்.—(1) ஒரு கிருகஸ்தன் இறந்துபோகையில் "ராமன்" "கிருஷ்ணன்" என்கிற இரண்டு பிள்ளைகளும், இராமனால் "சுந்தரம்" "வாசுதேவன்" என்கிற இரண்டு பேரன்களும், கிருஷ்ணனால் "கல்யாணன்" என்கிற பேரனும் இருந்தார்கள் சொத்துக்கு "இராமன்" கிருஷ்ணன்" என்கிற இருவர்கள்மட்டும் வார்சாகிறார்கள். "சுந்தரம், வாசுதேவன், கல்யாணன்" இவர்கள் தங்களுடைய தகப்பன் பாகத்துக்குமட்டும் வார்சாகி அதை அவரவர்கள் தங்களுக்குள் பாகித்துக்கொள்ளவேண்டும்.

உதாரணம்.—(2) ஒரு கிருஹஸ்தனுக்கு மூன்றுபிள்ளைகளிருந்தார்கள். அவனிறந்து போகும்போது முதல் பிள்ளையும், இரண்டாவது பிள்ளையால் இரண்டு பேரன்களும், மூன்றாவது பிள்ளையால் ஒரு கொள்பேரனு மட்டும் உயிருடனிருந்தார்கள். அந்த கிருஹஸ்த னிறந்தபிறகு சொத்தை மூன்று பாகமாகப் போட்டு முதல் பிள்ளை ஒருபாகமும் இரண்டாவது பிள்ளையின் பிள்ளைகள் ஒரு பாகமும், மூன்றாவது பிள்ளையாலேற்பட்ட கொள்பேரன் ஒரு பாகமும் எடுத்துக்கொள்ளவேண்டியது.

குறிப்பு.—இறந்துபோனவனுடைய சொத்து அவனுடைய புத்திரர்கள் எல்லோருக்கும் சமபாகமாகச் சேருமேயல்லாமல் அவனுடைய பெண்சாதிகளின் எண்ணிக்கைப்படி சேரமாட்டாது.

**372.** பிரிக்கத்தகாத ஜமீனில் வார்சுபாத்தியம்.—(1) பிரிவினையாகக்கூடாத ஜமீன், மிட்டா, அல்லது ஜாகிர் விஷயத்தில், காலஞ்சென்றுபோன ஜமீன்தார், மிட்டாதார் அல்லது ஜாகிர்தாரருடைய மூத்தமகன் மட்டும் வார்சுதாரனாகி மற்றவர்கள் ஜீவனம்சத்திற்குமட்டும் பாத்தியஸ்தர்களாவார்கள். (இ. லா. ரி. 4. ம. 250; 5. அ. 542; 21 அல. 232.) ஜமீன்தாரருக்கு அனேகம் பெண்சாதிகளால் பிள்ளைகள் உண்டாயிருந்தால், எந்தப் பெண்சாதியினாலானாலுஞ்சரி, முதலில் பிறந்தவனே மூத்தபிள்ளையாக எண்ணப்படுவானே யொழிய, முதலில் கல்யாணஞ்செய்துகொண்ட பெண்சாதிக்கு

ப்பிறந்த பிள்ளைகளில் மூத்தவன் ஜமீனுக்கு மூத்த பிள்ளையாக எண்ணப்படமாட்டான். (7 பம். ஸ. தி. 126; 5 பம். ஜ. 161; 14 மூ. இ. அ. 570; 8 இ. அ. 1; இ. லா. ரி. 2 ம. 286.)

(2) ஆனல் சிறியபிள்ளையையுடைய பெண்சாதி தாழ்ந்தவகுப்பைச் சேர்ந்தவளாயிருந்தால் மூத்தபெண்சாதியின்பிள்ளை சிறியவனயிருந்தாலும் அவனுக்கு ஜமீன் கிடைக்கும். (17 ம. 422.) ஜாதியை கவனிக்காமல் மூத்தபெண்சாதியின் ஜேஷ்டமகனுக்குத்தான் பட்ட முறியதென்கிற வழக்கமிருந்தால் செல்லும். (22 ம. 515; 26 இ. அ. 55.) மேலும், தகப்பனுக்கு முதலில் உண்டான ஜேஷ்ட புத்திரனுடைய வம்சமுள்ள வரையில் மற்றப்பிள்ளைகளுக்கு வார்சுபாத்தியம் உண்டாகமாட்டாது. (6. ம. ஜ. 93; இ. லா. ரி. 4 ம. 250) ஜேஷ்டபுத்திரனிறந்தால் அவனுக்குப்பிறகு அவன் ஜேஷ்டபுத்திரனும், அவனுமிறந்தால் அவன் பிள்ளைகளில் பெரியவனும் இம்மாதிரியாகவே மூத்தபிள்ளை பட்டத்துக்கு வருவார்கள். ஒரு ஜமீன்தாருக்கு மூன்று நான்கு பிள்ளைகளிருந்து அவர்களில் மூத்தவனிறந்துபோனல், அப்படி யிறந்துபோன மூத்தவனுடைய ஜேஷ்ட புத்திரனே வார்சாக பட்டத்துக்கு வருவானேயொழிய, ஜமீன்தாருடைய மற்ற குமாரர்களில் பெரியவன் பட்டத்துக்கு வரமாட்டான். குடும்பத்தில் புருஷர்களிருக்கையில் ஸ்திரீகளுக்கு வார்சுபாத்திய முண்டாகாது. மேலும் பிரிவினை செய்யக்கூடாத ஜமீனிலுள்ள ஜமீன்தார்பிள்ளை பேரன் முதலிய ஆண்வார்சில்லாமலிறந்தால் அவன் சகோதரர் முதலிய தாயாதிகளில் அவனுக்கு எவர் நெருங்கினவார்சாக இருக்கிருர்களோ அவர்களில் அதிகவயதானவன் ஜமீனுக்கு பாத்தியஸ்தனுகிருன். (3 க. ஜ 13; 12 மூ. இ. அ. 523, 540; 9 மூ. இ. அ. 263; 1 ம. 312.) ஜமீன்பாத்தியம் ஜேஷ்டவம்சபரம்பராபாத்தியமிருப்பதாக ருசுசெய்தாலொழிய இறந்தவனின் சமீபவார்சைநீக்கி அந்த வம்சஸ்தனுக்கே ஜமீன்கிடைக்காது. (11 இ. அ. 51.) எந்தெந்த வழக்கம் ஒரு ஜமீனில் வெகுகாலமாய் நடந்து வருகிறதோ அந்தந்த வழக்கப்படிக்கும் வார்சுபாத்தியமேற்படும். (11 இ. அ. 135.)

373. பூர்வீகமான ஜமீனை பாகிக்கக்கூடாது.—(1) வெகுகாலமாயிருந்துவந்திருக்கிற ஜமீன் முதலியவைகள் பாகிக்கக்கூடா

தென்று கவர்ன்மெண்டாரால் விதி ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. அதன்படியே தீர்ப்புகளும் செய்யப்பட்டிருக்கின்றன. (9 மூ. இ. அ. 66; 12 மூ. இ. அ. 523.)

(2) பூர்விகமில்லாத ஜமீன் பாகயோக்கியமுள்ளதா யிருந்த போதிலும் வெகுகாலத்துக்குமுன் ஏற்பட்ட ஜமீனைப்போல் மூத்தவனுக்கே பட்டம் சேர்ந்துவந்ததாக வழக்கமாய்விட்டால் அதுவும் பாகிக்கத்தகாத ஜமீனாய்விடுமென்று தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. (5 மூ. இ. அ. 263; 17 இ. அ. 134; 13 ம. 406.) ஆகையால் பாகார்ஹமுள்ளது அல்லது பாகார்ஹமில்லாத ஜமீன் என்பது அந்தந்த ஜமீனின் வழக்கத்தை யனுசரித்ததாயிருக்கிறது. (16 ம. 54.)

(3) பாகிக்கக்கூடாத ஒரு ஜமீனை ஏதோ ஒரு குற்றத்துக்காக ஜமீன்தாரனிடமிருந்து பிடுங்கி வேறொருவனுக்காவது அல்லது அவன் குடும்பத்திலெவனுக்காவது கவர்ன்மெண்டார்கொடுத்தாலும் அது பாகிக்கக்கூடாத ஜமீனாகும். (12 மூ. இ. அ. 1; 8 இ. அ. 99; 3 ம. 290.) ஆனால், கவர்ன்மெண்டாரே பாகிக்கக்கூடாத சுதந்தரத்துடனேயே அனுபவிக்கும்படி நிர்ப்பந்தப்படுத்தாமலிருந்தால் அப்போது பாகிக்கக்கூடியதாகும். (7 இ அ. 38; 2 ம. 128; 18 இ. அ. 45; 14 ம. 237.)

(4) மிதாட்சரப்படி இறந்தவனுக்கு பின்னேதர சகோதரனிருக்கும்போது அவன் பெண்சாதிக்கு ஜீவனம்சபாத்தியத்தை தவிர ஜமீன் கிடைக்காது. (25 கல். 433.) இறந்தவனுக்கு தனியான சொத்திருந்தால் அது அவன் பெண்சாதிக்குச் சேரும். (5 ம ஜ. 41)

**374.** ஊழிய இனுங்கள்.—சர்க்காரால் கிராம ஊழியத்துக்காகவிடப்பட்ட மானியங்கள் சொந்தப்பட்டா ஏற்படாதிருந்தால் அது பாகார்ஹமில்லாத குடும்ப பொதுசொத்தாயிருக்கிறது. (7 ம. 236.) தேவஸ்தான முதலிய தர்மபரிபாலனமும் குடும்ப பொதுவாய் எண்ணப்பட்டு ஜேஷ்டகுமாரனே அதைப் பார்க்கவேண்டும். (1 ம. ஜ. கோ. ரி. 415.)

**375.** ஜமீன்தாரரின் விநியோகம்—ஜமீன்தார் ஜமீன்சொத்தை விநியோகஞ் செய்யக்கூடாதென்கிற வழக்கமிருந்தாலொழிய முழு சுதந்திரமுள்ள ஜமீன்தார் ஜமீன்சொத்தை தன்னிஷ்டப்படி

விநியோகஞ்செய்யலாம். (15 இ. அ. 51; 10 அல. 272.) அந்த விநியோகங்களை பிள்ளைமுதலிய பின் ஜமீன்தார்கள் ஆக்ஷேபிக்க முடியாது. (13 ம. 197; 20 அ. 537; 26 இ. அ. 83; 22 ம. 383; 20 ம. 167.) ஜமீன் வரும்படியை மீதமாக்கி சேர்த்துவைத்த சொத்து ஜமீன்தாரருடைய சொந்த சொத்தாகி அவன் விதவைக்கும், கனிஷ்டபிள்ளைக்கும் பிதுரார்ஜித சொத்தாய்கிடைக்கும். (5 ம. ஐ. கோ. ரி. 41; 12 மூ. இ. அ. 540; 29 க. 433.)

**376.** சமமான இருபாத்தியஸ்தர்கள்.—ஒரு ஜமீனுக்கு இருவர் சமமான வார்சுபாத்திய வரிசையிலிருந்தால் எவன் ஜேஷ்டவம்சத்தைச் சேர்ந்தவனே அவனுக்கு ஜமீன்கிடைக்கும். (20 இ. அ. 77; 20 கல். 649.) அவிபக்தமாயிருந்த குடும்பத்தாருக்கு ஜமீன் பாத்தியம் கிடைத்தபோது ரக்தசம்பந்தத்தில் சமீபமாயிருப்பவனுக்கு ஜமீன் கிடைக்காமல் ஜேஷ்டவம்சத்தில் சமீபவார்சுயாரோ அவனுக்குத்தான் கிடைக்குமென்று தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. (2 ம 250; 24 ம. 562; உடையார்பாளைபம் கேசு.)

**377.** ஜமீனுக்கு பெண்வார்சுகள்.—எந்த ஜமீன்களில் பெண்கள்பட்டத்துக்கு வருகிற வழக்கமில்லையோ அந்த ஜமீன்கள் தவிர மற்றவைகளில் ஸ்திரீகளும் ஜமீனுக்கு வார்சுகளாகிறார்கள். (29 கல். 828.) ஆண்சந்ததியில்லாமல் இறந்துபோன ஜமீன்தாருக்குப் பல பெண்சாதிகளாவது பல பெண்களாவதிருந்தால் அவர்களில் மூத்த பெண்சாதியாவது ஜேஷ்டபெண்ணாவது ஜமீனையடைவாள். அவர்களிறந்தால் அவர்களுக்கடுத்த பெண்சாதியாவது பெண்ணாவது ஜமீனையடைவாள். (6 ம. ஐ. கோ. 310.)

**378.** ஜமீனுக்கு தௌகித்திரன் வார்சாவது.—தௌகித்திரர்களில் எவன் வயதில் மூத்தவனோ அவனே ஜமீன்தாரனுவான். மூத்தபெண்ணின் பிள்ளைகளில் ஜேஷ்டனாயிருக்கவேண்டிய தவசியமில்லை. மேற்பிரிவில்கண்டபடி கடைசியில் பட்டமடைந்த கனிஷ்டபுத்திரியின் ஜேஷ்டபுத்திரனுக்கும் விசேஷபாத்தியமில்லை. (6 ம. ஐ. 310; 8 இ. அ. 99; 3 ம. 290.)

**379.** ஔரஸ புத்திரனுக்கு மேலான பாத்தியம்.—தத்துக்குப் பிறகு ஔரஸன் பிறந்தால் சொந்தப்பிள்ளை ஜமீனுக்கு வார்சாகி

ருன். தத்துப்பிள்ளைக்கு ஜீவனும்சமட்டுங்கிடைக்கும். (17 ம. 435.)

**380.** ஜமீன் கடன்கள்:—ஒரு ஜமீன்தார் அக்கிரமமானதும் துன்மார்க்கமானதுமான கடன்களை வாங்கியிருந்தானென்று அவன் வார்சுகள் சரியான ருசுச்செய்தாலொழிய இறந்துபோன ஜமீன்தார் பட்டகடன்களை பிள்ளை முதலிய வார்சுகள் கொடுக்கக் கடமைப் பட்டவர்கள். கடன்கள் அனுவசியமானதும் உதாரித்தனமான செலவுக்காக எற்பட்டிருந்தாலும் பாதகமில்லை. (6 ம. 1; 9 மூ. இ. அ. 128.) (பிரிவிகவுன்சில் தீர்ப்பு)

**381.** வைப்பாட்டி பிள்ளை.—(1) பிராம்ம, க்ஷத்திரிய, வைசிய ஜாதிகளில் வைப்பாட்டி பிள்ளைகளுக்கு வார்சுபாத்தியங் கிடையாது. (2 ம. ஐ. 369; 7 மூ. இ. அ. 18; 13 மூ. இ. அ. 479; 1 பம். 97; 2 அல. 131; ஆனால், சூத்திர ஜாதிகளில் வைப்பாட்டி மகன்களுக்குக் கொஞ்சம் வார்சுபாத்திய முண்டென்று தர்மசாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கிற அபிப்பிராயங்களின்படி தீர்ப்புகள் செய்யப்பட்டிருக்கின்றன (13 மூ. இ. அ. 159; 1 ம. ஐ. 478; 7 ம 407.) வைப்பாட்டிமகன் தன் தகப்பன் சொத்துக்கு மட்டும் வார்சேயொழிய தகப்பனின் தாயாதிகளுக்கு வார்சல்ல. (21 அல. 99.)

**382.** வைப்பாட்டி என்பவள் யாரேன்பது —தர்மசாஸ்திரங்களில் வைப்பாட்டி என்கிற வார்த்தைக்கு "தாஸி" என்று வடமொழியிலிருக்கிற வார்த்தைக்கு வெவ்வேறு அர்த்தஞ் செய்திருப்பதால் அவளுக்குப் பிறந்த பிள்ளைகளின் வார்சுபாத்தியத்தைப்பற்றியும் வெவ்வேறு அபிப்பிராயப்படுகிறார்கள், விலைக்குவாங்கியாவது, விலைக்கு ஊழியமாகவைத்துக்கொள்ளப்பட்ட ஸ்திரீயுடனாவது சேர்ந்து அதினால் பிறந்த பிள்ளையே தாசிபுத்திரனாவானே யொழிய, தேவதாசியினிடத்தில் பிறந்த பிள்ளை தாசிபுத்திரனாக மாட்டானென்று கல்கத்தா ஹைகோர்ட்டார் தீர்மானித்திருக்கிறார்கள். (இ. லா. ரி. 1 க. 1; இ. லா. ரி. 19 க. 91.) இந்த அபிப்பிராயப்படி இக்காலத்தில் அப்படிப்பட்ட தாசிபுத்திரர்களே கிடையாது. எனென்றால் 1853ஞுத்து 5-வது ஆக்ட்டாகிய அடிமைகளைப்பற்றிய ஆக்டின் தாற்பரியப்படி ஊழியக்காரர்களை விற்பனை கொள்வனை செய்யக்கூடாதென்றும், அப்படிச் செய்பவர்கள்

தண்டனைக்குள்ள வார்களென்றும் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. பம்பாய், மதராஸ், அலகாபாத் ஹைகோர்ட்டுகளில் "தாசிபுத்திரன்" என்கிற சொல்லுக்கு "வைப்பாட்டி மகனென்று" அர்த்தஞ்செய்திருக்கிருர்கள். (இ. லா. ரி. 7 ம. 407; இ. லா. ரி. 12 ம. 86; இ. லா. ரி. 1 பம். 110. இ. லா. ரி. 4 பம். 37; இ. லா. ரி. 2 அ. 134; இ. லா. ரி. 6. அ. 329.) முக்கியமாய் "தாசி" என்கிற சொல் மதருஸ்ராஜதானியில் தேவரடியாள் என்று வழக்கமாய் சொல்வதால் அதன் பிரகாரமே தீர்மானித்திருக்கிருர்கள். (1849ளு ம. தீ. 50; 1 ம. ஐ. 478; 13 மூ. இ. அ. 41; 2 ம. ஐ. 293; 12 மூ. இ. அ. 303; 4 ம. ஐ. 204.) ஆகையால் பம்பாய், மதருஸ், அலகாபாத், இராஜதானிகளில் சூத்திர ஜாதிகளில் எவசாயினும் தேவரடியாள் முதலான ஸ்திரீகளை வைப்பாட்டியாக வைத்துக்கொண்டால், அவர்களுக்குப் பிறந்த பிள்ளைகளுக்கு வார்சுபாத்தியமுண்டென்று அறியவேண்டியது.

383. விபசாரியின்பிள்ளைகள் வைப்பாட்டிபிள்ளையாகார்கள்.—வைப்பாட்டியாக வைத்துக்கொள்ளாமல் அப்போதைக்கப்போது விபசாரஞ்செய்து அப்படி விபசாரஞ்செய்த காரணத்தினுலுண்டாகும் பிள்ளைகள் தாசிபுத்திரர்களாக எண்ணப்படமாட்டார்கள். மேலும் உரவினுல் புணரத்தகாத ஸ்திரீகளை வைப்பாக வைத்துக்கொண்டால், அந்த ஸ்திரீகளிடத்திலுண்டாகும் பிள்ளைகள் தாசீபுத்திரர்களாக எண்ணப்படமாட்டார்கள். ஆகையால், அப்படிப்பட்ட பிள்ளைகளுக்குக்கொஞ்சமேனும் வார்சுபாத்தியம் உண்டாகமாட்டாது.

384. சூத்திரஜாதிகளில் தாசீபுத்திரனுக்கு வார்சு பாத்தியம்.—(1) வைப்பாட்டிபிள்ளைக்கு சூத்திரஜாதியர்களில் மட்டும் வார்சுபாத்தியமுண்டு. அவர்கள் தன் தகப்பனுடைய சொத்துக்கு மாத்திரம்வார்சேயொழிய, அவர்களின் சிறியதகப்பன் பெரியதகப்பன் சொத்துக்களுக்கு வார்சாக பாத்தியமில்லை. (இ. லா. ரி. 7 ம. 407; இ. லா. ரி. 8 ம 557; இ. லா. ரி. 12 ம. 402)

385. தாசீபுத்திரனுக்கு வார்சுவிஷயமானவிதி.—(1) சூத்திரர்களில் வைப்பாட்டி பிள்ளைக்குள்ள வார்சுபாத்திய விஷயமாய் தர்ம சாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கிற தென்னவென்ருல்.—

“ ஔரஸ புத்திரர்களுடைய பாகத்தில் பாதிபாகத்திற்குமட்டும் வைப்பாட்டி பிள்ளை பாத்தியஸ்தனுகிறுன். (14 பம். 282) கிருகஸ்தனுக்கு பிள்ளையாவது பெண்ணுவது பெண்ணினுடைய பிள்ளையாவது இல்லாவிட்டால், அவனுடைய முழுசொத்துக்கும் வைப்பாட்டிபிள்ளை பாத்தியஸ்தனுவான்” என்றிருக்கிறது

(2) இந்த தர்மசாஸ்திர வாக்கியத்தைக்கொண்டு இப்பொழுது ஐகோர்ட்டு தீர்ப்புகளால் ஸ்திரப்பட்டிருக்கிறதென்னவென்ருல்:— கிருஹஸ்தனுக்கு ஒரு ஔரஸபுத்திரனும் ஒருவைப்பாட்டிபிள்ளையுமிருந்தார்கள். இந்த வைப்பாட்டிபிள்ளையே ஔரஸபுத்திரனுயிருந்தால் சொத்தில் பாதிபாகத்திற்குப் பாத்தியஸ்தனுவானுகையால், அதில் பாதிபாகம், அதாவது-முழுசொத்தில் நான்கில் ஒருபாகம் அவனுக்குச்சேரும். ஔரஸ புத்திரனுவது பேரனுவது கொள்பேரனுவது இல்லாமல் கிருஹஸ்தனுடைய பெண்சாதி பெண் அல்லது பெண்ணினுடைய பிள்ளை யிவர்களிருந்தால், ஔரஸபுத்திரன் பேரன் கொள்பேரனிவர்களிருக்கும்போது மேற்படி பெண்சாதி முதலியவர்கள் ஒருவரும்பாத்தியஸ்தர்களாக மாட்டார்களாயினும், வைப்பாட்டிமகன் மட்டுமிருந்தால் பாத்தியஸ்தர்களாவார்கள். இது வெப்படியெனில், வைப்படி புத்திரனே ஔரஸபுத்திரனுயிருந்தால் எல்லாசொத்துக்கும் அவனே பாத்தியஸ்தனுதலால், அதில் பாதி மட்டும் அவனுக்குச்சேர்ந்து மிகுந்தபாதி கிருஹஸ்தனுடைய பெண்சாதிக்கு அல்லது பெண்ணுக்கு அல்லது பெண்ணினுடைய பிள்ளைக்குச்சேரும். (இ. லா. ரி. 14 பம். 282; இ. லா. ரி. 8 ம. 561.)

(3) வைப்பாட்டி மகனுடைய பாத்தியவிஷயமாக மேற்சொல்லப்பட்ட தர்மசாஸ்திரவசனத்தில் கிருஹஸ்தனுடைய பிள்ளை, பெண், பெண்ணினுடைய பிள்ளை இவர்கள் வார்சுவிஷயமட்டுஞ் சொல்லப்பட்டு கிருஹஸ்தனுடைய பெண்சாதி வார்சாக ஏற்படலாமா என்கிற விஷயத்தைப்பற்றி யாதொன்றும் தெளிவாய்ச் சொல்லவில்லை. இக்காரணத்தால் வைப்பாட்டி மகனிருக்கும்போது கிருஹஸ்தனுடைய பெண்சாதிக்கு ஜீவனும்ச பாத்தியமட்டுந்தான் உண்டென்று அர்த்தஞ்செய்து அவ்விதமே இரண்டு கேசுகளில் பம்பாய் ஹைகோர்ட்டார் தீர்மானஞ்செய்திருக்கிருர்கள். (இ. லா. ரி. 1 பம். 97, 104; இ. லா. ரி. 4. பம். 37. 52.) பிறகு வேருெரு

கேசில், கிருகஸ்தனுக்கு பெண்ணின் பிள்ளைவரையில் யாதொரு வார்சுகளுமில்லாதிருந்தால், ஒளரஸன் பாகத்தில் பாதிமட்டும் வைப்பாட்டிமகனுக்குச் சேர்ந்து, மற்றப்பாதி மற்ற வார்சுகளுக்குச் சேருமென்று தீர்மானிக்கப்பட்டது. (இ. லா. ரி. 14 பம். 282.) மதராஸ் ஹைகோர்ட்டார் சூத்திர ஜாதியில் ஒருவைட்பாட்டி பிள்ளையும் சொந்த பெண்ணும் தௌகித்திரனு மிருந்தபோது வைப்பாட்டிபிள்ளைக்கு பாதி ஆஸ்தியும், மற்றபாதிபெண்ணுக்கும் தௌகித்திரனுக்குஞ்சேருமென்று தீர்மானித்திருக்கிருர்கள். ஆனல் அந்த சொத்து பெண்சாதிக்குக்கிடைத்து பிறகு பெண் தௌகித்திரன் இவர்களுக்கு வரிசைக்கிரமமாய் வந்திருக்கவேண்டும். (15 ம. 307.)

ஆனல் பிரிக்கத்தகாத ஜமீன்களில் ஜமீன்தாரனுடைய வைப்பாட்டி மகனுக்கு முந்தியே அவன் விதவை வார்சாவாளென்று மதராஸ் ஐகோர்ட்டார் தீர்மானித்திருக்கிருர்கள். (இ. லா. ரி. 10 ம. 364.)

386. வைப்பாட்டி மகனின் சேர்ந்தபாத்தியம்.—(1) சூத்திர ஜாதிகளில் வைப்பாட்டி மகன் ஒளரஸனுடன் சேர்ந்து ஏககுடும்பமாயிருந்தால், ஒளரஸபுத்திரன் ஆண் சந்ததியில்லாமலிறந்துபோனல் எல்லா சொத்துக்களும் வைப்பாட்டிமகனுக்குச் சேருமேயல்லாமல் முதலில் கிருஹஸ்தனுடைய ஒளரஸபெண் முதலியவர்களுக்குக் கொஞ்சங்கூடச் சேரமாட்டாது. (18 க. 151; 4 பம். 37.) விபக்தநிலைமையிலும் ஒளரஸனும் தாசிபுத்திரனும் ஒருவருக்கொருவர் வார்சாகிருர்கள். (17 இ. அ. 128; 4 பம். 37; 11 கல். 702.)

(2) பம்பாய் இராச்சியத்தில் ஒரு சூத்திரன் இறந்துபோகையில் அவனுக்கு ஒரு ஒளரஸபுத்திரன், ஒரு வைப்பாட்டிமகன், இரண்டு பெண்சாதிகள் ஒரு பெண், ஆக இவ்வைந்து பேர்களிருந்தார்கள். குடும்பத்தின் முழுசொத்துக்கும் ஒளரஸ புத்திரனும் வைப்பாட்டி மகனும் கூட்டாய் பாத்தியஸ்தர்களாகி பொது குடும்பம் ஏற்படுத்தி பெண்சாதிகளுக்கு ஜீவனுசங்கொடுக்கும் பாரமும், பெண்ணுக்கு கல்யாணஞ்செய்யும் பாரமும் சொத்தைப்பொருத்ததாயிருந்தது. பிறகு ஒளரஸபுத்திரன் ஆண்சந்ததியின்றி

பிறந்துபோனபோது எல்லாசொத்தும் வைப்பாட்டிமகனுக்குச் சேர்ந்து. முன்போலவே பெண்சாதிகளுடையவும் பெண்ணினுடையவும் ஜீவனாம்சம் முதலியவை கொடுக்கும் பாரம் அவனையே சேர்ந்ததென்று பம்பாய் ஐகோர்ட்டார் நிர்மானித்திருக்கிறார்கள். (இ. லா. ரி. 4 பம். 37, 42; இ. லா. ரி. 11 க. 702) தகப்பனுயிருடன் இருக்கையில் ஔரஸபுத்திரன் சந்ததி யில்லாமலிறந்தால் வைப்பாட்டி பிள்ளைக்கு முழுசொத்தில் பாதிபாகம் மட்டுஞ்சேர்ந்து மிருந்த பாதி கிருஹஸ்தனுடைய பெண்சாதிக்குச்சேரும்.

387. பெண்சாதிவார்சு.—(1) பிள்ளை, பேரன், கொள்பேரன் இவரொருவருமில்லாதிருந்தால் இறந்துபோன கிருகஸ்தனுடைய பெண்சாதி அவன் சொத்துக்கு வார்சாகிறாள். (2 ஸ. 49; 1 ம. ஐ. 223; இ. லா. ரி. 3 பம். 54; இ. லா. ரி. 2 ம. 182) பெண்சாதியினிடத்தில் பிள்ளையாகப் புருஷன் பிறக்கிறானென்கிற காரணத்தால் புருஷனிறந்தாலும் அவன் பெண்சாதியிருக்கையில் புருஷனுடைய பாதிதேகம் இருக்கிறதென்றே தர்மசாஸ்திரங்கள்சொல்லுகின்றன. இக்காரணத்தாலும், பிள்ளையின்றி யிறந்த புருஷனுக்குக் கர்மம் நடத்துகிற காரணத்தைக்கொண்டும் புருஷனுடைய சபின்டையாக எண்ணப்பட்டு பெண்சாதி ஆண் சந்ததிக்குப் பிறகு வார்சாகிறாள். (இ. லா. ரி. 1 ம. 28; 9 மூ. இ. அ. 610)

(2) மிதாட்சரத்தின்படி பொதுக்குடும்பத்தின் பாகஸ்தன் ஆண் சந்ததியில்லாமலிறந்தால் அவன் பெண்சாதிக்கு ஜீவனாம்சமட்டும் கிடைக்குமேயொழிய அவளுக்குவார்சுபாத்தியமுண்டாகமாட்டாது புருஷனுடைய சுவயார்ஜித சொத்திற்குமட்டும் அவள் வார்சாகிறாள். (இ. லா. ரி. 1 ம. 312; இ. லா. ரி. 4 க. 190; 1 மூ. இ. அ. 490; 9 மூ. இ. அ. 539) தாயபாகப்படி சேர்ந்த குடும்பத்தின் பாகஸ்தர்களுக்குத் தனிபாத்தியம் உண்டாயிருப்பதாக எண்ணப்படுவதால் அவர்களில் ஒருவன் ஆண்சந்ததியில்லாம லிறந்துபோனால் அவன்பாகத்திற்கு அவன்பெண்சாதி வார்சாகிறாள்.

388. அனேகபெண்சாதிகளின்வார்சுபாத்தியம்.—ஒருகிருகஸ்தனுக்கு இரண்டு அல்லது அதற்குமேற்பட்ட பெண்சாதிகளிருக்கும்போது அவனுடையசொத்தெல்லாம் அவர்களுக்குப் பொதுவாய்

ச்சேரும். பிரிக்கக்கூடாத ஜமீன்விஷயத்தில் மூத்தபெண்சாதி பட்டத்துராணியாக ஏற்பட்டு மற்றப்பெண்சாதிகளெல்லாம் ஜீவனும்சத்திற்குமட்டும் பாத்தியமுள்ளவர்களாவார்கள். (1 ம. தீ. 453; 2 ம. தீ. 440) பிரிக்கக்கூடியசொத்துவிஷயத்தில் எல்லாப்பெண்சாதிகளும் சரியானபாத்தியமுள்ளவர்களா யிருப்பதால் அவர்கள் சேர்ந்திருப்பின், மூத்தபெண்சாதி எல்லாசொத்துக்கும் மானேஜராவாள். அவர்களில் ஒருவருக்கொருவர் சரிப்படாமற்போனல் கருர்நாமாமூலமாகவாவது, தீர்ப்புமூலமாகவாவது சொத்துக்களைப்பிரித்துக்கொண்டு அவரவர்கள் தங்கள்பாகங்களைத் தனிமையாக அனுபவிக்கலாம். (3 ம. ஐ. 51; 1 ம. 290; 24 ம. 441; 4. இ. அ. 212; 16 இ. அ. 186.) அப்படிப்பிரித்துக்கொண்டபிறகு அவர்களில் ஒருத்தியிறந்தால் அவளுடைய பாகம்மற்றப்பெண்சாதிகளுக்குச் சேருமேயன்றி அனந்தரவார்சுகளுக்குச் சேரமாட்டாது. (16 ம. 1; 23 ம. 504.) சுவான்தாரன் பெண்சாதிகளெல்லோரு மிறந்த பிறகுதான் அந்தசொத்து அனந்தர வார்சுகளுக்குச் சேருமேயன்றி ஒருபெண்சாதியாவது உயிருடனிருக்குமளவில் சேரமாட்டாது. (இ. லா. ரி. 1 ம. 290; 3 ம. ஐ. 268;1 பம். ஐ. 66; இ. லா. ரி. 6 பம். 85; 11 மூ. இ. அ. 487; இ. லா. ரி. 7 அ. 114.)

389. ஸ்திரீகளுக்கு சொல்ப பாத்தியம்.—பெண்சாதி முதலிய பெண்வார்சுகள் இறந்தவனுக்கு எவ்வளவு சமீபபந்துவாயிருந்தாலும் தூரமான ஆண்வார்சுகளுக்குப்பிறகுதான்வார்சுபாத்தியமுண்டாகிறது. (18 ம. 93.) அவர்களுக்கு வார்சுபாத்தியத்தால் ஆண்களுடையசொத்துக் கிடைக்கும்பொழுது, அதிலவர்களுக்கு சகலசுதந்திரமுமுண்டாகாமல் உயிருடனிருக்கும்வரையில் அனுபவிக்கவும், அவசியமானகாரியங்களுக்காகச் செலவுசெய்யவுமட்டும் பாத்தியமுண்டாகிறது. ஆகையால், மேற்சொல்லியபடி பெண்சாதிகள் எல்லாரும் சொத்தைப்பிரித்துக்கொண்டு அனுபவித்தாலும் அவர்களிலெவராவது தன்னுடையபாகத்தை வினியோகஞ்செய்ய அதிகாரமுள்ளவளல்ல. ஒருசமயம் வினியோகஞ் செய்தாலும் அந்தவினியோகம் அவளுயிரிருக்கும்வரையில் செல்லுமேயொழிய, அவளிறந்தபிறகு அவளுடைய பாகமுழுவதும் சக்களத்திகளுக்குச் சேரும். இறந்துபோனவள் சொத்து அவளுடையபெண் அல்லது பிள்ளைக்குச் சேராமல் உயிருடனிருக்கிற சக்களத்திக்குச் சேர்ந்து கடைசியில்

அவளுமிறந்தபிறகுதான் தௌகித்திரர்களுக்குக் கிடைக்கும் (3 ம. ஐ 424; 1 ம. 290; 2 ம. 194; 7 ம. 92; 12 அ 51.) சொத்தைப் பிரித்துக் கொள்ளாவிட்டாலும் கிருகஸ்தன் பெண்சாதிகளிலெவளாவது தன்பாகத்தை உயிருள்ளவரையில் பராதீனஞ்செய்யலாம். மேலும், அந்தப்பராதீனத்தால் சொத்தை யடைந்தவன் மற்றபெண்சாதிகள்பேரில் பாகத்துக்காக தாவாசெய்யலாம். ஆனால் அப்படி சொத்தை எவள் செலவுசெய்தாளோ அவளிறந்துபோன பிறகு அந்தப்பராதீனஞ்செல்லமாட்டாது. (இ. லா. ரி. 11 ம. 304; இ. லா. ரி. 9 க. 580) ஸ்திரீவார்சுகளின் ஜீவதசைக்குப்பிறகு சொத்துக்கள் மூலபுருஷனின் வார்சுகளைச் சேருகின்றன. (2 ம. ஐ 402; 1 பம். ஐ. 117.)

390. விபசாரிக்கு புருஷன்சோத்துக்கிடைக்காது.—(1) புருஷனுயிரோடிருக்கையில் விபசாரியாக வசித்துவந்தபெண்சாதிக்கு வார்சுபாத்தியத்தால்புருஷன் சொத்துக்கிடைக்கமாட்டாது. (13. க. ஐ. 1; 5 ம. 149). விபசாரியாயிருப்பதாக புருஷனால் தள்ளிவைக்கப்பட்ட பெண்சாதியின்விஷயத்தில்மட்டும் இந்தவிதி யுபயோகப்படுமேயொழிய புருஷன் சம்மதித்து வைத்துவந்த பெண்சாதிக்கு இதுசெல்லமாட்டாதென்று சொல்லத்தக்கதாயிருக்கிறது.

(2) புருஷனிறந்தபிறகு பெண்சாதி விபசாரியாயிருந்தால் அவனுடைய ஆத்மாவின் நன்மைக்குவேண்டிய வைதீககர்மங்களைச் செய்ய அவள்யோக்கியதை யற்றவளாயிருப்பதால் வார்சுபாத்தியத்தால் அவளுக்குக்கிடைத்திருந்த புருஷனுடைய சொத்து அவளை விட்டுப்போய்விடுமென்று முன்காலத்தில் சிலர் அபிப்பிராயப்பட்டார்கள். ஆனால், அதன்பிறகு இவ்விஷயம் செவ்வையாக வாதிக்கப்பட்டு புருஷனிறந்தபிறகு அவன் பெண்சாதி வியபசாரியாயிருந்தாலும் அவளுக்குக்கிடைத்திருந்த புருஷன்சொத்து போகமாட்டாதென்று ஐகோர்ட்டாரும் பிரிவிகௌன்சிலாருங்கூடத் தீர்மானித்திருக்கிறார்கள். (13 க. ஐ. 1; இ. லா. ரி. 5 க. 776; 4 பம். ஐ. 25; இ. லா. ரி. 2 அ. 150, 171; 7 இ. அ. 115; 24 ம. 441; 1858-ளு பம். ஸ. தீ. 1891)

391 புனர்விவாகம் செய்துகோண்டவளுக்கு வார்சுபாத்தியமில்லை.—ஒரு கிருஹஸ்தனிறந்தபிறகு அவன்சொத்துக்கு வார்சாக

ஏற்பட்டபெண்சாதி புனர்விவாகஞ் செய்துகொண்டால், அவளிறந்துபோனதாக எண்ணப்படுவதால், புருஷன்சொத்தில் அவளுக்கிருந்த எல்லா பாத்தியமும்போய் அவளுக்குப்பிறகுவரும் வார்சுகளுக்கு அந்தச்சொத்துச் சேர்ந்துவிடும். (22 க. 589.) மறுபடி விவாகஞ்செய்துகொள்ளும்படி புருஷன் அனுமதிகொடுத்திருந்தால் அந்த சொத்தில் அவள்பாத்தியம் போகமாட்டாது. (1856 வருஷத்து, 15. வது, ஹிந்துவிதவா ஆக்ட் 2-வது பிரிவு, 13 க. ஐ. 75; இ. லா. ரி. 19 க. 289, 292; 1 பாரோ. 431; இ. லா. ரி. 1 ம. 236; இ. லா. ரி. 7 ம. 321; இ. லா. ரி. 11 அ. 330.) புருஷனுவது பெண்சாதியாவது ஜாதிபிரஷ்டர்களாயிருந்து அவர்களின்பரஸ்பர சம்பந்தம் விலக்கப்பட்டிருந்தாலும், கோர்ட்மூலமாய் விவாகபந்தம் ரத்து செய்யப்பட்டிருந்தாலும் புருஷன் சொத்து பெண்சாதிக்குக்கிடைக்காது. (8 ம. 169.)

392. பெண் வார்சு.—யாதொரு கிருகஸ்தனுக்குப் பிள்ளை, பேரன், கொள்பேரன், பெண்சாதிமுதலிய வார்சுகளில்லாவிட்டால் பெண் அவன்சொத்துக்கு வார்சாவாள். மேலும், அந்தகிரகஸ்தனுடைய பெண்சாதி வார்சாக ஏற்பட்டாலும் அவளுக்குத்தன் ஆயிசுவரையிலும் சொத்தையனுபவிக்கும் பாத்தியமட்டுமிருப்பதால் அவளிறந்துபோனல்திரும்பமேற்சொல்லிய சுவான்தாரனுக் குயார்சமீப வார்சோ அவனுக்கே சொத்துச்சேர்ந்துவிடும். ஆகையால், பெண்சாதிக்குப்பிறகு பெண்வார்சாகிறுள். சபிண்டர்கள் வரிசையில் பெண் சோாவிட்டாலும், இப்படி பெண்சாதிக்குப்பிறகு அனேக சபிண்டர்களுக்கு முன்னமே பெண் வார்சாக ஏற்படுத்தப்பட்டிருப்பதற்கு இரண்டு காரணங்கள் ஊகிக்கத்தக்கதாயிருக்கின்றன. முதலாவது தகப்பனுடன் நெருங்கிய ரக்தசம்பந்தம். இரண்டாவது பிண்டப்பிரதானஞ்செய்வதற்கு யோக்கியதையான பிள்ளையை (தௌஹித்திரனைப்) பெறும்படியான சுவபாவம்.

393. பெண் விபசாரியாயிருப்பது.—(1) வார்சுபாத்தியவிஷயத்தில் பெண்சாதியைப்போலவே பெண்ணுக்குங்கூட விபசார தோஷத்தால் பாதகமுண்டென்று கல்கத்தா ஹைகோர்ட்டார் தீர்மானித்திருக்கிருர்கள். அதாவது விபசாரியாயிருந்த பெண்ணுக்கு வார்சுபாத்தியத்தால் சொத்துக் கிடைக்கமாட்டாதேயொழிய, சொ

த்தூக்கு பாத்தியமுண்டானபிறகு அந்தப்பெண் விபசாரியாயிருந்தால் அந்த சொத்துபாத்தியம் போகமாட்டாது. (13 க. ஐ. 48; இ. லா. ரி. 4 க. 550.)

(2) பம்பாய் ஐகோர்ட்டார் விபசாரதோஷத்தைப்பற்றிய ஸ்மிருதிவாக்கியங்களைச் செவ்வையாய்ப் பரிசோதித்து வார்சுபாத்தியத்திற்கு விபசார தோஷத்தாலுண்டாகுங் கெடுதி பெண்சாதியைத்தவிர மற்ற பெண்வார்சுகள் விஷயத்திலில்லையென்றும், விபசாரியாயிருந்தபெண் வார்சாவதற்கு ஆட்சேபனையில்லையென்றும் தீர்மானித்திருக்கிறார்கள். மதராஸ், அலகாபாத் ஐகோர்ட்டார்களும் இந்த அபிப்பிராயப்படியே தீர்ப்புச்செய்திருக்கிறார்கள். (இ. லா. ரி. 4 பம். 104; இ. லா. ரி. 5 ம. 149; 26 ம. 509; 2 அ. ஐ. 363; இ. லா. ரி. 1 அ 46)

(3) யாதொரு விதவையான பெண் புனர்விவாகஞ்செய்துகொண்டால் அவள் தன்னுடைய தகப்பன் சொத்தையடைய, 1856-வருஷத்திய 15-வது ஆக்ட்படி, யாதொரு தடையுமிராது.

**394.** அனேக பெண்கள் வார்சு.—(1) இறந்துபோன யாதொரு கிருகஸ்தனுக்கு ஒரு பெண்சாதியாலாவது பல பெண்சாதிகளாலாவது பல பெண்களிருந்தால் அவர்களில் விவாகமாகாத பெண்களே எல்லா மதங்களின்படிக்கும் முந்திய வார்சுகளாகிறார்கள். விவாகமாகாத பெண்களில்லாவிட்டாலும் அவர்களெல்லோரும் இறந்துபோய் விட்டாலும் மற்ற எந்தப்பெண்கள் வார்சுகளாவார்கள் என்கிற விஷயத்தைப்பற்றி அந்தந்த மதங்களில் கொஞ்சம் கொஞ்சம் வித்தியாசங்களிருக்கின்றன.

(2) தாயபாக சம்பிரதாயப்படி.—(1) விவாகமாகாத பெண்கள் முதலில் வார்சாவார்கள். (2) இவர்களில்லாவிட்டாலும் இவர்களெல்லோரும் இறந்தபிறகும், ஆண்சந்ததியையுடைய விதவையான பெண்கள்கூட வார்சுகளாகிறார்கள். (இ. லா. ரி. 18 க. 327) ஆண்சந்ததிகளில்லாத விதவைப் பெண்களும் மலடான பெண்களும் பெண்சந்ததிமட்டுமுள்ள பெண்களும் இவர்கள் எந்நிலைமையிலும் வார்சுகளாக மாட்டார்களென்று தீர்ப்புகள் செய்யப்பட்டிருக்கின்றன. (3 பம். ஸ. தீ. 362; 2 ஸ. 176) சொத்துக் கிடைத்தபிறகு

மட்டுத்தனம் ஏற்பட்டால் அந்த சொத்திலுள்ள பாத்தியம் போக மாட்டாது. (15 க. ஐ. 10) மேலும், இப்பொழுது 1856-ம் வருஷத்திய 15-வது ஆக்ட்படி விதவைகள் விவாகஞ்செய்துகொண்டு ஆண்சந்ததி பெறலாமாதலால், விதவையாயிருக்கும் காரணத்தைக் கொண்டுமட்டில் பங்காள தேசானுஷ்டானப்படி பெண்ணுக்கு வார்சுபாத்தியமில்லையென்று சொல்ல நியாயமில்லை. (15 ஸ. 189.)

(3) மிதாட்சர சம்பிரதாயப்படி (1) விவாகமாகாத பெண்கள் முதலில் வார்சாகிறார்கள். (2) இவர்களில்லாவிட்டாலும் இவர்களெல்லோரும் இறந்துபோனபிறகும் விவாகமான பெண்களில் ஏழையாயிருப்பவர்கள் எல்லோரும் வார்சாகிறார்கள். இவர்கள் விதவைகளாயிருந்தாலுஞ்சரி, சுமங்கலிகளாயிருந்தாலுஞ்சரி, சமமான பாத்தியமுடையவர்கள். (3) இவர்களில்லாவிட்டாலும் இவர்களுக்குப்பிறகும் விவாகமான பெண்களில் பணமுள்ளவர்கள் வார்சுகளாகிறார்கள். இவர்களிற்கூட விதவை சுமங்கிலி யென்கிற பேதமில்லை. இந்தக் கட்டுப்பாட்டின்படி பெண்களுடைய வார்சுபாத்தியம் அவர்களுக்கு ஆண்சந்ததியிருப்பதைப் பொருத்ததல்ல. காசி தேசத்திலும், பம்பாய்-மதருஸ் பிரஸிடென்ஸிகளிலும் இந்த மிதாட்சர சித்தாந்தம் அனுஷ்டானத்திலிருந்துவருகிறது. (3 ம. 265; 3 க. 587; 2 அல. 561.)

(4) மிதிலதேசத்திய வழக்கத்தின்படி (a) விவாகமாகாத பெண்கள் முதலில்வார்சாகிறார்கள். (b) இவர்களில்லாவிட்டாலும், இவர்களுக்குப் பிறகும் விவாகமானபெண்கள் வார்சாகிறார்கள். இவர்களுக்குள்விதவை சுமங்கிலி என்கிறபேதம்கிடையாது. ஆண்சந்ததியைப்பற்றியாவது, ஏழைத்தனத்தைப் பற்றியாவது பேதம்கிடையாது. (இ. லா. ரி. 5 க. 587; 2 ஸ. 176; 2 பம். ஐ. 5; 6 பம். ஐ. 183; இ. லா. ரி. 14 பம். 4, 12; இ. லா. ரி. 3 ம. 265; இ. லா. ரி. 4 அ. 243; இ. லா. ரி. 2 அ. 561.)

(5) அனேகம் பெண்களிருந்தால், புருஷன்சொத்தை பெண்சாதிகள் பாகஞ்செய்துகொள்வதுபோல பெண்களும் தங்கள் தகப்பன் சொத்தை பிரித்துக்கொண்டனுபவிக்கலாம். அவர்களில் ஒருத்தியிறந்தால் அவள்சொத்தை மற்றபெண்கள் சமமாக பாகித்துக் கொள்ளவேண்டும். இவ்விதம் ஒவ்வொருவராக இறந்துகொண்டு

வந்தால் உயிருடனிருக்கிற சகோதரிக்கு எல்லாசொத்துஞ்சேரும் (3 ம. ஐ. 317; 24 கல். 339; 2 இ. அ. 113.) 389-வது பிரிவைப் பார்க்க.

395. பெண்களுக்குசமமான வார்சுபாத்தியம்.—(1) மேற்பிரிவில் சொல்லப்பட்ட வரிசைகளில் எந்தவரிசைப் பெண்களுக்காவது வார்சுபாத்தியத்தால் தகப்பனுடைய சொத்துக்கிடைத்தால், அவர்களெல்லோரும் அந்தசொத்துக்குச்சேர்ந்த சமபாத்தியமுள்ளவர்களாவார்கள். இதற்கு முந்திபலபெண்சாதிகள் விஷயமாக 389-வது பிரிவில் சொல்லப்பட்ட நிபந்தனைகளெல்லாம் கூட்டாக பாத்தியமுள்ள பெண்கள் விஷயத்திற்கூட செல்லும். ஒருவருக்கொருவர் சரிப்படாவிட்டால் அவரவர்கள் சொத்தைப்பிரித்துக்கொண்டு அனுபவிக்கலாமே யொழிய செலவுசெய்யக்கூடாது. அவர்களிலொருத்தியிறந்தால் அவளுடையபாகம்அந்தவகுப்பிலுள்ள பெண்களில் மற்றவர்களுக்குச் சேருமேயன்றி அவளுடைய பிள்ளைகளுக்குச் சேரமாட்டாது. ஒரு வகுப்பிலுள்ள பெண்களெல்லாருமிறந்துபோனால் பின்னால்வரத்தக்க மற்றொருவகுப்புப் பெண்கள் வார்சாவார்கள். பிரிக்கத்தகாத ஜமீன் விஷயத்தில் எந்தவகுப்புப் பெண்கள் வார்சுகளாயிருக்கிறார்களோ அவர்களில் மூத்தவள் ஜமீனுக்கு பாத்தியமுள்ளவளாகிறாள். (14 க. ஐ. 246; 3 ம. ஐ. 317; 6 ம ஐ. 310).

(2) பம்பாய் இராச்சியத்தில்மட்டும் பெண்களுக்கு வார்சுபாத்தியத்தால் சொத்துக்கிடைத்தால் )அதில் அவர்கள் புருஷர்களைப்போலவே சகல சுதந்திரமுடையவர்களாவார்கள். ஆகையால் அவர்களுக்கு ஆண்சந்ததியில்லாமலிருந்தால் அவர்கள் அதை விக்கிரயம் முதலான வினியோகஞ்செய்ய அட்டியில்லை: (இ. லா. ரி. 6 பம் 85)

396. பெண்ணின் பிள்ளையின் பாத்தியம்—தௌகித்திரன் (பெண்ணின் பிள்ளை) ஒருவன் ஆஸ்திக்கு வார்சாக வரவேண்டியதாயிருந்தால், அந்த ஆஸ்திதாரனுக்குப் பிள்ளை, பேரன், கொள்பேரன், பெண்சாதி, பெண் இவர்களில் ஒருவருமில்லாமல்போனால் கடைசியாக தௌகித்திரன் வார்சாகிறான். தௌகித்திரன் வேறு கோத்திரமுள்ளவனாயினும் பந்து வரிசையில் சேர்ந்தவனாதலால்

பாட்டனுக்குப்பிண்டப்பிரதானஞ்செய்ய யோக்கியமுள்ளவனுயிருக்கிருன். ஆகையால் பிள்ளையில்லாதவன் தன்பெண்ணின் பிள்ளையைத் தன்பிள்ளையாக ஏற்படுத்திக்கொள்ளும் வழக்கம் முற்காலத்திலிருந்ததால் ஒரேகோத்திரமான பிள்ளை, பேரன், கொள்பேரன் இவர்கள் தவிர மற்ற சபிண்டர்களுக்குமுந்தியே தௌகித்திரன் வார்சாகுப்படி ஏற்பட்டதென்று சொல்லத்தக்கதாயிருக்கிறது. (16 ம. 167; 27 ம. 311.) பெண்களுக்குப்பிறகு தௌகித்திரன் வார்சாகிற விஷயத்தில் மிதிலதேச வழக்கப்படி முற்காலத்தில் சந்தேகமிருந்ததேயொழிய இப்போது சந்தேகமறத் தீர்மானிக்கப் பட்டிருக்கிறது. (6 பம் ஸ. தீ. 140.)

பெண்ணினுடைய ஸ்வீகாரப்புத்திரன் கூட ஔரஸபுத்திரன் போலவே மாதாமகன் சொத்துக்கு வார்சுபாத்திய முடையவனுகிருன்.

397. தௌகித்திரர்களுக்கு சமமான பாத்தியம்.—(1) இறந்துபோன யாதொரு கிருகஸ்தனுக்குப் பெண்சாதியாவது, எவ்வகுப்பைச்சேர்ந்த வொருபெண்ணாவது, உயிருடனிருக்கையில் தௌகித்திரர்களுக்கு வார்சுபாத்தியமுண்டாகமாட்டாது. கிருஹஸ்தனுடைய பெண்சாதியும் எல்லாவகுப்புப் பெண்களுமிறந்த பிறகே, தௌகித்திரன் வார்சாவான் (15 க ஐ. 10; 1861ளு ம. தீ. 137; 1 W, மெக் 44; 2 W. மெக் 44, 57; இ. லா. ரி. 1 அ. 608; 5 பம். ஐ. 139: இ. லா. ரி. 8 அ. 365) மேலும் தௌகித்திரர்களுடைய வார்சுபாத்தியம் தங்களுடைய தாயாருடைய சம்பந்தத்தாலுண்டாகாமல் தாயைப்பெற்ற பாட்டனுடைய சம்பந்தத்தாலுண்டாவதால், பலபெண்களால் பலதௌகித்திரர்களிருக்குப்பொழுது அவர்களெல்லோருக்கும் சொத்து சரிபாகமாகச் சேருமேயன்றி தாய்களுடைய எண்ணிக்கையைப் பொருத்ததல்ல. அதாவது:—ஒருபெண்ணினல் இரண்டுபேரன்களும் மற்றொருபெண்ணினல் மூன்றுபேரன்களும், வேறொருபெண்ணினல் ஒருபேரனுமிருந்தால் பாட்டன்சொத்தை ஆறு பாகமாகப்பிரித்து அந்த தௌகித்திரர்கள் ஒவ்வொருவரும் ஒவ்வொருபாகத்தை யடையவேண்டியது. (8 பம். ஸ. தீ. 100; 6 ம. ஐ. 310; 1 அ. 608; 2 இ. அ. 113.)

(2) பிரிவினை செய்யக்கூடாத ஜமீன்சொத்துக்கு தௌகித்திரர்கள் வார்சுகளாக ஏற்பட்டால் அவர்களில் மூத்தவன்பட்டத்துக்கு பாத்தியஸ்தனுகிறுன். ஆனல், அந்த ஜமீனைக் கடைசியாக அனுபவித்த பெண்ணின்பிள்ளை சிறியவனுயிருந்தால் அவனுக்குச் சேரமாட்டாது. (6 ம. ஐ. 310; இ. லா. ரி. 3 ம. 290) 378-வது பிரிவைப் பார்க்கவும்.

**398.** தௌகித்திரனுக்கு முழுவார்சுபாத்தியம்.—தௌகித்திரனைக்காட்டிலும்நெருங்கிய வார்சுகாளாகிய பெண்சாதி பெண் இவர்களிறந்தகாலத்தில், ஆதிமூலபுருஷனே இறந்ததுபோல நினைக்கப்பட்டு அவன் சொத்து தௌகித்திரர்களுக்குச் சரிபாகமாகச் சேருகிறது. ஆகையால் தௌகித்திரர்களுக்கு வார்சுபாத்தியமுண்டாவதற்கு முந்தியாவது அல்லது அவிபக்தமாயிருந்தபோதாவது அவர்களிலொருவனிறந்தால் சொத்து முழுவதும் உயிருடனிருக்கிற தௌகித்திரர்களுக்குச் சேருமேயன்றி யிறந்துபோன தௌகித்திரனுடைய பிள்ளைகளுக்குக் கொஞ்சங்கூடச் சேரமாட்டாது (11 ம. 287.) தௌகித்திரிபந்துக்களுக்குக் கீழ்தூரவார்சாகிறுள். (17 ம. 182.) தௌகித்திரர்களுக்கு வார்சுபாத்தியமுண்டானபிறகும் விபக்தமான பிறகும் அவர்களிலெவனுவதிறந்தால் சொத்திலவனுடைய பாகம் அவனுடைய பிள்ளைகள் முதலிய வார்சுகளுக்குச் சேருமேயன்றி மற்ற தௌகித்திரர்களுக்குச் சேரமாட்டாது. (இ. லா. ரி. 7 ம. 458; இ. லா. ரி. 17. க. 33) பெண்சாதியைப்போலும் பெண்ணைப்போலு மில்லாமல் தௌகித்திரன் சர்வசுதந்திரமுள்ளவார்சாயிருப்பதால் அவனுக்குப் பிறகு அவன் வார்சுகளுக்கேமாதாமகர் சொத்துச்சேருமேயல்லாமல், பெண்சாதிக்குப் பிறகும்பெண்ணுக்குப்பிறகும்போலமூலபுருஷனுடையவார்சுகளுக்குச்சேரமாட்டாது. (இ. லா. ரி. 3 அ. 134) அவிபக்த குடும்ப சகோதரர்கள் மாதாமகர் ஆஸ்தியை, பிதுரார்ஜித சொத்தைப்போல் அடைகிறுர்கள். (25 ம. 687; 27 ம. 300.)

**399.** தாய்தகப்பன் வார்சாவது. — தௌகித்திரனில்லாவிட்டால் கிருகஸ்தனுடைய தாய் தகப்பன் வார்சாவார்களேயன்றி தௌகித்திரனுடைய பிள்ளை வார்சாகமாட்டான். மிதாட்சரசம்பிரதாயப்படி முதலில் தாயும்பிறகு தகப்பனும் வார்சாகிறுர்கள். இவ்

வழக்கம் மிதிலே, காசி இந்த தேசங்களிலும், மதிராஸ், பம்பாய் இந்த இராச்சியங்களிலும் அனுஷ்டிக்கப்படுகிறது. (இ. லா. ரி. 14 பம். 405; வே. பூ. 110, 448; 2 W. மேக். 55) மயூகசாஸ்திர அனுஷ்டானமுள்ளபெங்காளம், குஜராத்திதேசங்களில் முதலில் தகப்பனும், பிறகு தாயும் வார்சாகிறார்கள். (இ. லா. ரி. 6 பம். 541; 2 W. மெக் 54: 7 பம். ஸ. தீ, 108) தாய் என்பதுபெற்றதாயைக் குறிக்கிறது. ஸ்வீகாரவிஷயத்தில் புருஷனுடன்கூடவிருந்து ஸ்வீகாரம்வாங்கிக்கொண்ட தாய் என்னப்படுவாள் (18 ம. 286.)

**400.** தாயின் சுதந்திரமின்மை.—(1) பிள்ளையின்சொத்து தாயாருக்கு வார்சுபாத்தியத்தால் கிடைத்தபோது அவளுக்கு அந்த சொத்தில் சர்வபாத்திய முண்டாகாமல் உயிருள்ளவரையில் அனுபவிக்கலாமே யொழிய வேறேவிதமாய் வினியோகம் முதலிவைசெய்ய பாத்தியமில்லை. (2 ம. ஐ. 402; 8 ம. ஐ. 91; 8 மூ. இ. அ. 500.)

(2) பெண்சாதியைப்போலவே தாயும் விபசாரியாயிருந்தால் பிள்ளையின் சொத்து அவளுக்குக் கிடைக்காதென்று கல்கத்தா ஹைகோர்ட்டார் தீர்மானித்திருக்கிறார்கள். அதாவது விபசாரியாயிருக்கிற தாய்க்கு பிள்ளையின்சொத்தில் வார்சுபாத்தியமில்லை. ஆனால், வார்சுபாத்திய முண்டானபிறகு விபபசாரியாயிருந்தால் பாதகமில்லை. (இ. லா. ரி. 4 க. 550) பம்பாய், மதராஸ், அலகாபாத், இந்த ஐகோர்ட்டார்களுடைய அபிப்பிராயப்படி விபசாரதோஷமானது பெண்சாதியின் வார்சுபாத்தியத்தைமட்டும் கெடுக்குமே யொழிய, பெண், தாய் முதலிய பெண்வார்சுகளின் பாத்தியத்தைக் கெடுக்கமாட்டாது. (இ. லா. ரி. 5 ம. 149; 2 அ ஐ. 363; இ. லா. ரி. 1 அ. 46; இ. லா. ரி. 4 பம். 104. 31. ம. 100.)

(3) வார்சுபாத்தியமடைந்த தாயானவள் புனர்விவாகஞ்செய்து கொண்டாலும் அவளுக்குப்பிள்ளையின் சொத்துக்கிடைக்காமல் போகமாட்டாதென்று 1856ளுடத்து 15-வது ஆக்டினால் ஊர்ஜிதப்பட்டிருக்கிறது. (2 க. ஐ. 199.)

உதாரணம்.—யாதொருவிதவை புனர்விவாகஞ்செய்துகொண்ட பிறகு அவளுடைய முதல் புருஷனால் பிறந்த 'த' என்னும்பிள்ளை, ஆண்சந்ததியாவது பெண்சந்ததியாவது தௌகித்திரனாவது இல்லாமலிறந்தால் 'த' என்பவன் சொத்துக்கு மேற்படிவிதவை வார்சாவதற்கு யாதொரு தடையுமில்லை.

**401.** சகோதரி முதலியவர்களின் வார்சுபாத்தியம்.—தர்மசாஸ்திரத்தில் சகோதரிகளின் வார்சுபாத்தியம் சொல்லப்படவில்லை. சமீப இரக்த சம்பந்தத்தையுத்தேசித்து அவர்களுக்கு வார்பாத்தியமுண்டென்று மதராஸ் ஹைகோர்ட்டார் தீர்மானித்திருக்கிறார்கள். (8 ம. ஐ. 88; 5 ம. 241.) சொந்தசகோதரிதவிர தகப்பன்சகோதரி, பிள்ளையின்பெண், பெண்ணின்பெண், சகோதரிபெண் இவர்களும் வார்சுகளென்று தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. (13 ம. 10; 14 ம. 149; 15 ம. 421; 17 ம. 182; 18 ம. 198; 21 ம. 263.) ஆனால் தாயாதிகளின்விதவைக்கு வார்சுபாத்தியமில்லை. (4 ம. ஐ. 180; 18 ம 168.) மேலும் ஒரேதாய்வயிற்று சகோதரிதவிரதாயின் சக்களத்திமகளான சகோதரிக்கு வார்சுபாத்தியமில்லை. (5 ம. 29.)

**402.** சபத்னிமாதாவின் பாத்தியம்—(1) தாயபாகமிதாட்சர இந்த சாஸ்திரங்களின்படிக்கு சபத்னிமாதாவுக்கு வார்சுபாத்தியங் கிடையாது. (இ. லா. ரி: 5 ம. 29; இ. லா. ரி 8 ம. 107; 5 பம். ஸ. தீ. 315; 6 பம். ஸ. தீ. 53; 1852ஆ பா. ஸ. தீ. 563; இ. லா. ரி. 4 பம். 208; 16. அல. 221; க. ஐ. சப்ளிமெண்டல் வாலியம் 67.)

(2) பம்பாய் இராச்சியத்தில்மட்டும் சபத்னீமாதாவுக்கு வார்சுபாத்தியமுண்டென்று தீர்மானிக்கப்பட்டிருக்கின்றது. ஆனால், இன்னொருக்குப்பிறகு அவள்வார்சாகிறாளென்பது நிச்சயஞ் செய்யப்படவில்லை. அப்பொழுதுகூட தாயென்கிற காரணத்தால் வார்சாகாமல் ஒரே கோத்திரமான சபிண்டனுடைய பெண்சாதி என்கிற காரணத்தால் வார்சாகிறாள் (இ. லா. ரி. 4 பம். 188)

**403.** அண்ணன்தம்பிகளின் வார்சுபாத்தியம்.—(2) தாய்தகப்பனுக்குப்பிறகு யாதொரு கிருகஸ்தனின் சொத்துக்கு அண்ணன் தம்பிகள் வார்சாகிறார்கள். ஒரு தாய்வயிற்றிற் பிறந்தவர்களும் மற்றொருதாய் வயிற்றிற்பிறந்த பிள்ளைகளுமிருந்தால் ஒரே தாயிடத்தில் பிறந்தவர்கள் மட்டும் ஒருவருக்கொருவர் வார்சாகிறார்கள். (1 க. 27; 19. அல 215.) வேறுதாய்வயிற்றிற் பிறந்தவர்களுக்கு சொத்தில் யாதொரு பாகமுங் கிடையாது. ஒரேவயிற்றிற்பிறந்த அண்ணன் தம்பிகள் ஒருவருமில்லாவிட்டால், சொத்துக்கு வேறுதாய் வயிற்றிற்பிறந்த அண்ணன் தம்பிகள் வார்சா

வார்கள். குஜராத்தி தேசத்திலும் பம்பாய் பட்டணத்திலும், அங்கே முக்கியமாய் மயூக கிரந்தத்தின் அபிப்பிராயத்தை அனுஷ்டிப்பதால் அவ்விடங்களில் ஒரேதாய் வயிற்றிற்பிறந்த அண்ணன் தம்பிகள் ஒருவருமில்லாவிட்டாலும் அவர்கள் பிள்ளைகளிருந்தால் எல்லாசொத்தும் அவர்களுக்கே சேருமேயன்றி வேறுதாய்வயிற்றிற் பிறந்த அண்ணன் தம்பிகளுக்குச் சேரமாட்டாது. (12 மூ. இ. அ. 523; 3 க. ஐ. 13; 12 பம். ஐ. 65.)

அண்ணன் தம்பிகளிற் சிலர் சேர்ந்தவர்களாயும், சிலர் பிரிந்தவர்களாயுமிருக்கையில், சேர்ந்தவர்களிலொருவனிறந்தால் அவனுடைய சொத்து முழுவதும் சேர்ந்திருந்த சகோதரர்களுக்குச்சேருமேயன்றி, பிரிந்த சகோதரர்களுக்குச் சேரமாட்டாது. (3 க. ஐ. 7)

(3) மரணமடைந்த கிரகஸ்தனும் அவனுடைய சபத்னீக மாதாவயிற்று அண்ணன் தம்பிகளும் பிரிந்திருந்தால், தாயபாகத்தின்படி இவ்விரண்டுபேர்களும் சொத்துக்கு சமபாகஸ்தர்களாகிருர்கள். (இ. லா. ரி. 1 க. 27) இந்த ஸ்திதியில் மிதாட்சரத்தின்படி முழு சொத்துக்கும் வேறு தாய்வயிற்று அண்ணன் தம்பிகளே பாத்தியஸ்தர்களாகிருர்கள்.

(4) ஒரே தாய்வயிற்றிற் பிறந்தவர்கள் வேறு தாய்வயிற்றிற் பிறந்தவர்களென்கிற வித்தியாசம் அண்ணன் தம்பிகளுக்கும் அவர்கள் பிள்ளைகளுக்குமட்டும் உபயோகப்படுமேயொழிய, சிறிய தகப்பன் பெரிய தகப்பன் முதலிய முந்திய வரிசை வார்சுகள் விஷயத்திற் பிரயோசனப்படமாட்டாது. (இ. லா. ரி. 6 பம். 394)

404. அண்ணன் தம்பிகளின் பிள்ளைகள் வார்சாவது.—(1) ஒரே தாய்வயிற்று அண்ணன் தம்பிகளாவது வேறு தாய்வயிற்று அண்ணன் தம்பிகளாவதில்லாமற்போனல் அண்ணன் தம்பிகளின் பிள்ளைகள் வார்சாவார்கள். இவர்களிலும் சகோதரனுடைய பிள்ளைகள் முதலிலும் பின்ஞேதரனுடைய பிள்ளைகள் பிந்தியும் வார்சாகிருர்கள். கிருகஸ்தனிறந்துபோகும்பொழுது அவனுக்குச்சொந்த அல்லது வேறு தாய் வயிற்று அண்ணன் தம்பிகளிலொருவராவது உயிருடனிருந்தால் எல்லா சொத்து மவனுக்குச் சேருமேயொழிய அண்ணன் தம்பி பிள்ளைகளுக்குச்சேரமாட்டாது. (3 பம். ஸ. தீ. 106, 289; 23 ஸ. 272.)

(2) குஜராத்தி தேசத்திலும் பம்பாய் பட்டணத்திலும் அங்கு அனுஷ்டிக்கப்படுகிற மயூககிரந்தத்தின்படி சொந்த அண்ணன் தம்பிகளின் பிள்ளைகளிருந்தால் அவர்களே வார்சாவார்களேயன்றி, வேறு தாய்வயிற்றிற் பிறந்த அண்ணைத்தம்பிகள் வார்சாகமாட்டார்கள், (12 மு. இ. அ. 523, 3 க. ஐ. 13; 12 பம். ஐ. 65) மேலும், அந்த மயூககிரந்தத்தின்படி கிருகஸ்தனிறந்து போகுங்காலத்தில் அண்ணன் தம்பிகள் சிலரும், அவனுக்கு முன்னிறந்துபோன அண்ணன் தம்பிகளின் பிள்ளைகள் சிலருமிருந்தால், அந்தப்பிள்ளைகள் அண்ணன் தம்பிளோடுகூட சமபாகத்திற்கு பாத்தியஸ்தர்களாகிறார்கள்.

(2) கிருஸ்தனிறந்த காலத்தில் சொத்துக்கு வார்சுகளாயிருந்த அண்ணன் தம்பிகளிலொருவன் சொத்தைப் பிரித்துகொள்ளுவதற்கு முந்தியே யிறந்துபோனல், அவனுடைய பாகம் அவனுடைய பிள்ளைகளுக்குச் சேருமேயல்லாமல் அண்ணன் தம்பிகளுக்குச் சேரமாட்டாது. (2 ஸ. 123.)

(4) இறந்துபோன கிருகஸ்தனுடைய சொந்த அண்ணன் தம்பிகளுடைய பிள்ளைகளும் வேறுதாய்வயிற்று அண்ணன் தம்பிகளும் இருந்தால், சொந்த அண்ணன் தம்பி பிள்ளைகளே வார்சாவார்கள். மேலும், அண்ணன் தம்பிகள் பிள்ளைகளிற் சிலர் இறந்துபோன கிருகஸ்தனோடு கூடவிருந்தும், சிலர் பிரிந்துமிருந்தால் சொத்து முழுவதும் சேர்ந்திருந்தவர்களுக்கே சேரும். சொந்த அண்ணன் தம்பிகள் பிள்ளைகள் பிரிந்திருந்தும், வேறுதாய்வயிற்று அண்ணன் தம்பி பிள்ளைகள் கிருகஸ்தனோடு சேர்ந்துமிருந்தால் தாயபாகப்படி அவ்விருவர்களும் சமபாகஸ்தர்களாவார்கள். (3 ஸ. 43; 6 ஸ. 93; 3 க. ஐ 7; இ. லா. ரி. 1 க. 27.)

(5) அண்ணன்தம்பிகள் குமாரர்கள் தௌகித்திரனைப்போலவே சமபாகஸ்தராவார்களே யொழிய தகப்பன்களுடைய எண்ணிக்கையைக்குறித்து பாகத்தையடையமாட்டார்கள். அதாவது:—ஒரு கிருகஸ்தனிறந்துபோகுங்காலத்தில் "க" என்னும் அண்ணனுடைய மூன்று குமாரர்களும் 'த' என்னும் அண்ணனுடைய இரண்டு குமாரர்களும் வார்சுகளாக ஏற்பட்டார்கள். இந்த ஐந்துபேர்களும் அவர்களுடைய சிறிய தகப்பன் சொத்தில் சமபாகங்களையடைவார்கள். (6 ஸ. 93; 9 ஸ. 463; 15 ஸ. 70; 17 பம். 303.)

(6) அண்ணன் தம்பிகளுடைய சுவீகாரப்பிள்ளைகளும் ஔரஸ புத்திரர்களைப்போலவே வார்சுபாத்தியமுடையவர்கள். (2 மெக் 74.)

**405.** அண்ணன் தம்பிகளின் பேரன்களுடைய வார்சுபாத்தியம்.—தாயபாகப்படி அண்ணன் தம்பிகள் பிள்ளைகளுக்குப்பிறகு அண்ணன் தம்பிகள் பேரன்கள் வார்சாகிறார்கள். இவர்களில் ஒரே வயிற்று அண்ணன் தம்பிகளுடைய பேரன்களிருக்கையில் வேறுவயிற்று அண்ணன் தம்பிகள் பேரன்கள் வார்சாகமாட்டார்கள். (இ. லா. ரி. 9 க. 563.) மிதாட்சர சம்பிரதாயப்படிக்குக்கூட அண்ணன் தம்பி பிள்ளைகளுக்குப்பிறகு அண்ணன் தம்பிகள் பேரன்கள் வார்சாகிறார்களென்று மிதிலதேசத்திலிருந்து வந்த ஒரு கேசில் பங்காளா சதர்கோர்ட்டார் தீர்மானித்தார்கள். (1855ஆ பங். ஸ. தீ. 382.) ஆனால் மதராஸ் ஐகோர்ட்டார் இந்த விஷயத்தைச் செவ்வையாக வாதித்து மிதாட்சரப்படி அண்ணன் தம்பிகள் பேரன்கள் வார்சாகச் சொல்லவில்லையென்று முன்தீர்மானித்தார்கள். (9 ம. 291.) தர்மசாஸ்திரத்தில் அண்ணன் தம்பிபிள்ளையைச் சொன்னபோதே பேரனுமென்று அர்த்தம் பண்ணிசகோதரர்களுடையபேரன்களுக்குப் வார்சுபத்திய முண்டென்று அலகாபாத் ஐகோர்ட்டார் தீர்மானித்தார்கன். (24 அல. 128.)

**406.** பிதாமகிமுதலியவர்கள் வார்சாவது.—(1) இறந்தவனுக்கு மேலேசொன்ன அண்ணன் தம்பிகளின் பேரனீறுகவுள்ள தகப்பன் வார்சுவர்க்கத்தார் யாருமில்லாவிட்டால், தகப்பனின் தாயும் (பிதாமகி) அவளுக்குப்பின் பாட்டன் (பிதாமகனும்) வார்சாவார்கள். பாட்டனுமில்லாவிட்டால், பெரியப்பன் சிற்றப்பன்களும், அவர்களுக்குப்பின் அவர்களுடைய பிள்ளைகளும், அதன் பிறகு அவர்களுடைய பேரன்களும் வார்சாகிறார்கள்.

குறிப்பு.—தகப்பனுடைய சொந்த சகோதரவர்க்கத்துக்கும் பின்னேகாவர்க்கத்துக்கும் எவ்வித வித்தியாசமுமில்லை.

(2) பாட்டன்வர்க்கத்தார் அற்றுப்போயிருந்தால் பாட்டனுடையதாய், பாட்டனுடைய தகப்பன் (கொள்பாட்டன்) அவன் பிள்ளைகள் பேரன்கள் இவர்கள் ஒருவருக்குப்பின்னொருவர் வார்சாவார்கள்.

(3) இவர்களுக்குப்பிறகு சகுல்யர்களும் சமானோதகர்களும் வார்சாகிறார்கள். சமானோதகர்களுக்குப்பிறகு பந்துவர்க்கத்தார் வார்சுகளாகிறார்கள்.

407. மிதாக்ஷர தாயபாகங்களின்படி வார்சுகளின் வித்தியாசம்.—வார்சுவரிசையில் அண்ணன்தம்பிகள் பேரன்களுக்குப் பிறகு வார்சுபாத்தியம் மிதாட்சர தாயபாகங்களின்படி அதிக வித்தியாசமேற்படுகிறது. தாயபாகத்தில் பிண்டப்பிரதானஞ்செய்கிற பாத்தியத்தின்பேரில் வார்சுபாத்தியம் நிர்ணயிக்கப்படுவதால், ஒரே கோத்திர சபிண்டர்களோடு சேர்ந்து வேறு கோத்திர சபிண்டர்கள் அதாவது பந்துக்கள் வார்சுகளாக ஏற்பட்டு, பிறகு சகுல்யர்களும் சமானோதகர்களும் வார்சாகிறார்கள். மிதாட்சரத்தில் நெருங்கிய ரக்த சம்பந்தத்தைக்கொண்டு வார்சுபாத்தியம் நிர்ணயிக்கப்படுவதால், ஒரே கோத்திர தாயாதிகள் எல்லாரும், அதாவது, சபிண்டர்கள், சகுல்யர்கள், சமானோதகர்களெல்லாரையும் தாண்டினாலொழிய வேறு கோத்திர தாயாதிகள், அதாவது, பந்துக்கள் வார்சுகளாகஏற்படமாட்டார்கள். மிதாட்சரதாயபாக சித்தாந்தங்களின்படி வார்சுகளின் வரிசைகளை 411-413 இந்தபிரிவுகளில் விவரமாய் தெரிவித்திருக்கிறோம்.

408. பந்துக்களின் வார்சுபாத்தியம்.—முதலில் சமீபபந்துக்களும் பிறகு தூரபந்துக்களும் வார்சாகிறார்கள். அவர்களிலும் தன் வழி பந்துக்கள் முதலிலும், தகப்பன் வழி பந்துக்கள் பிந்தியும், தாய்வழிபந்துக்கள் அதன்பிறகும் வார்சாகிறார்கள். (16 ம. 30.) தாயபாகத்திலும் மிதாட்சரத்திலும் விவரமாகச் சொல்லப்பட்டிருக்கிற பந்துக்களைத்தவிர இன்னும் அனேகம் பெயர்கள் பந்துவர்க்கத்தில் சேருவார்களென்று மேலே சொல்லியிருக்கிறோம். அவர்களில் தமக்கை, தங்கை, இவர்கள் குமாரர்கள் முதலியவர்களுடைய பாத்தியம் அனேகந் தடவைகளில் விவாதப்பட்டு, இதன்கீழ் வரும் 409-வதுபிரிவில் வார்சுகளாக வருபவர்களைச் சொல்லியிருக்கின்றன.

409. அக்காதங்கைகளின் வார்சுபாத்தியம்.—பங்காள அனுஷ்டானப்படி தமக்கை தங்கைகளுக்கு வார்சுபாத்தியங்கிடையாது. தாயபாகத்தில் அவர்கள்பந்துக்களாகச் சொல்லப்பட்டிருப்பதுடன் அவர்களுக்குப் பிண்டப்பிரதானஞ் செய்யும்படியான யோக்கியதை

கொஞ்சமேனும் கிடையாது. (7 பம். ஸ. தி. 192; 2 ஸ. 180; 5 ஸ. 215) காசியிராச்சிய அனுஷ்டானப்படிக்குக்கூட அக்காதங்கைகள் வார்சுகளல்ல. (இ. லா. ரி. 5 அ. 311) அக்காதங்கைகள் வேறு கோத்திரத்தைச்சேர்ந்தவர்களாயினும் அண்ணன் தம்பிகளோடுரக்த சம்பந்தமுள்ளவர்களாயிருப்பதால் மிதாட்சர சித்தாந்தப்படி பந்துக்களாவார்களென்றுநிச்சயஞ்செய்து அவர்களுக்கு வார்சுபாத்தியமுண்டென்று மதராஸ்ஹைகோர்ட்டார் தீர்மானித்திருக்கிறார்கள். (இ. லா. ரி. 5 ம 241) மதராஸ் இராஜதானியில் வேறுதாய்வயிற்றிற்பிறந்த அக்காதங்கைக்கு வார்சுபாத்தியமில்லை. (இ. லா. ரி. 5 ம. 29) பம்பாயிராஜதானியில் அக்கா தங்கைகளுடைய வார்சுபாத்தியம் முற்றிலும் உறுதிப்பட்டிருக்கின்றது அண்ணன் தம்பிகளோடுசேர்ந்துகூட ஒரேகுடும்பத்திலுண்டானவர்களானதால் அவர்கள்சகோத்திரசபிண்டர்களாவார்களென்றும்,வேறுகோத்திரத்தில் கல்யாணஞ்செய்துகொள்ளுங் காரணத்தால் ஒரேகோத்திரத்தில்பிறந்த தன்மை கெட்டுப்போகாதென்றும் மயூககிரந்தஞ் சொல்லுகின்றது. இந்த சாஸ்திரத்தின்படி தகப்பன் தாயார்களுக்குப்பிறகு தமக்கைதங்கைகள் வார்சாகிறார்கள். (இ. லா. ரி. 2 பம். 445.) மேலும், சொந்த அக்காதங்கைகளில்லாவிட்டால் வேறுதாய்வயிற்றிற் பிறந்த அக்கா தங்கைகள் வார்சுகளாவார்கள். (1 பம். ஐ. 118; 9 மூ. இ. அ. 516; இ. லா. ரி 3 பம். 353, 369; இ. லா. ரி. 4 பம். 183, 198.)

410. சகோதரிபிள்ளைகளின் வார்சுபாத்தியம்.—(1) தாயபாகத்தில் தங்கைதமக்கை பிள்ளைகளின்வார்சுபாத்தியம் பந்துவரிசையில் தெளிவாகச்சொல்லப்பட்டிருப்பதால் பங்காளாதேசத்தில் அவர்களுடைய பாத்தியம் ஆதிமுதல் ஸ்திரப்பட்டிருக்கிறது. மேலும், பங்காளா சம்பிரதாயப்படி சொந்த அக்காதங்கைகளுக்கும் வேறுதாய் வயிற்றிற்பிறந்த அக்காதங்கைகளுக்கும் வார்சுபாத்தியத்தில் பேதமில்லாததால் அவர்களுடைய வார்சுகள்சேர்ந்து பொதுவார்சுகளாகிறார்கள். (2 w. மேக் 86. இ. லா. ரி. 11 க. 69) மிதாட்சரத்தில் தங்கைதமக்கைகள் பிள்ளைகளின் வார்சுபாத்தியம் பந்துவரிசையில் தெளிவாய் சொல்லப்படவில்லை. முற்காலத்தில் அவர்களுக்கு வார்சுபாத்தியமில்லையென்றெ தீர்மானிக்கப்பட்டுவந்தது. ஆனல், அவர்களுடைய வார்சுபாத்தியம் இப்பொழுது உண்டென்று உறுதிப்பட்டு தீர்ப்பு செய்யப்பட்டிருக்கிறது; (6 ம. ஐ. 278; 2 ம. 304; 20 அல

191.) மேலும், தங்கைதமக்கைகளைக்காட்டிலும் முந்தியே அவர்கள் பிள்ளைகள் வார்சாகிறார்கள். (இ. லா. ரி. 5 ம. 241) சகோதரி பிள்ளையைப்போல பின்னோதரி பிள்ளையும் வார்சாகிறான். (15 ம. 300.) பம்பாய் தேசத்தில் தங்கை தமக்கைகளுடைய பிள்ளைகளின் வார்சுபாத்தியம்ஆதிமுதல் ஸ்திரப்பட்டிருக்கிறது. சொந்தத்தங்கை தமக்கைபிள்ளைகளில்லாவிட்டால் வேறுதாய்வயிற்று தங்கை தமக்கைபிள்ளைகள் வார்சாகிறார்கள். (வே பு. 493, 495.)

(2) சகோதரிபிள்ளைக்குப்பிறகு அம்மான்வார்சானாலும், அம்மானுக்குப்பிறகுதான் சகோதரியின்பிள்ளைபின்பிள்ளை (சகோதரி பேரன்) வார்சாகிறான். இவனுக்குப்பிறகு அம்மான்பிள்ளை வார்சாகிறான். (20. ம. 342.)

411. மிதாட்சர சம்பிரதாயப்படி வார்சுகளின் வரிசைக்கிரமம்.- மிதாட்சரப்படி வார்சுகளின் வரிசைக்கிரமம் இதன்கீழ் காட்டப்பட்டிருக்கிறது. சமானோதகர்கள் வரையிலுள்ள வார்சுகளுடைய வரிசை இதன்கீழ் எழுதப்பட்டிருக்கிற வம்சாவளியால் தெரியவரும். முதல்மூன்று தலைமுறை சபிண்டர்களுடைய வார்சு வரிசையை யனுசரித்துப் பிறகு வருகிறவர்களின் வரிசைகளேர்ப்படுத்தப்பட்டிருக்கின்றன. பந்துவரிசையிலுள்ள வார்சுகளுடைய வரிசைக்கிரமம் அனேகம்பெரிய கிரந்தகர்த்தாக்கள் செய்திருக்கிற கிரந்தங்களை யனுசரித்து எழுதப்பட்டிருக்கின்றன.

## மிதாட்சரப்படி வார்சுகளின் வரிசைக்கிரமம்.

### (1) சபிண்டர்கள்.

1. பிள்ளை.
2. பேரன்.
3. கொள்பேரன்.
4. பெண்சாதி. (பிள்ளை, பேரன், கொள்பேரனில்லாதபோது.)
5. பெண். (1) விவாகமாகாதவள்.
   (2) விவாகமான ஏழைப்பெண்.
   (3) விவாகமான பணக்காரப்பெண்.
6. தௌகித்திரன் (பெண்ணின் பிள்ளை)
7. தாய்.
8. தகப்பன்.

9. (1) ஒரே தாய்வயிற்று அண்ணன் தம்பிகள்.
(2) வேறு தாய்வயிற்று அண்ணன் தம்பிகள்.
10. (1) (சொந்த) அண்ணன் தம்பிகள் பிள்ளைகள்.
(2) வேறு தாய்வயிற்று அண்ணன் தம்பி பிள்ளைகள்.
11. (1) சொந்த அண்ணன் தம்பிகளின் பேரன்கள்.
(2) பின்னேதா அண்ணன் தம்பிகளின் பேரன்கள்.
12. தகப்பனுடைய தாயார் (பாட்டி)
13. பிதாமகன். (தகப்பனுடைய தகப்பன்)
14. சிற்றப்பன்-பெரியப்பன்.
15. சிற்றப்பன் பெரியப்பன் பிள்ளைகள்.
16. சிற்றப்பன் பெரியப்பன் பேரன்கள்.
17. பிதாமகன் தாயார். (கொள்பாட்டி)
18. பிரபிதாமகன் (பிதாமகன் தகப்பன்.)
19. சிறியபாட்டன் பெரியபாட்டன்.
20. சிறியபாட்டன் பெரிய பாட்டன் பிள்ளைகள்.
21. சிறியபாட்டன் பெரியபாட்டன் பேரன்கள்.
22. கொள்பேரன் பிள்ளை.
23. கொள்பேரனின் பேரன்.
24. கொள்பேரனின் கொள்பேரன்.
25 அண்ணன் தம்பிகளின் கொள்பேரன்கள்.
26. ,, கொள்பேரனின் பிள்ளைகள்.
27. ,, கொள்பேரனின் பேரன்கள்.
28. சிறிய தகப்பன் பெரிய தகப்பன் கொள்பேரன்கள்.
29. ,, கொள்பேரனின் பிள்ளைகள்.
30. ,, கொள்பேரனின் பேரன்கள்.
31. சிறியபாட்டன் பெரியபாட்டன் கொள்பேரன்கள்.
32. ,, கொள்பேரனின் பிள்ளைகள்.
33. ,, கொள்பேரனின் பேரன்கள்.
34. பிரபிதாமகனுடைய தாயார்.
35. ,, தகப்பன்.
36. ,, அண்ணன் தம்பிகள்.
37. ,, அண்ணன் தம்பிகள் பிள்ளைகள்.
38. ,, தகப்பனுடைய தாயார்
39. ,, தகப்பனுடைய தகப்பன்.
40. ,, சிறிய தகப்பன் பெரிய தகப்பன்.
41. பிரபிதாமகனுடைய சிறிய தகப்பன் பெரிய தகப்பன் பிள்ளைகள்
42. ,, பாட்டனுடைய தாயார்.

43. ,, பிரபிதாமகன்.
44. ,, பிதாமகனுடைய அண்ணன் தம்பிகள்
45. ,, ,, பிள்ளைகள்.
46. பிரபிதாமகனுடைய அண்ணன் தம்பிகளின் பேரன்கள்.
47. ,, ,, கொள்பேரன்கள்.
48. ,, ,, கொள்பேரனின் பிள்ளைகள்.
49 ,, ,, கொள்பேரனின் பேரன்கள்.
50. பிரபிதாமகனுடைய சிறியதகப்பன் பெரியதகப்பனுடையபேரன்கள்.
51. பிரபிதாமகனின் சிறிய தகப்பன் பெரிய தகப்பனுடைய கொள்பேரன்கள்.
52. ,, ,, கொள்பேரனின் பிள்ளைகள்.
53. ,, ,, கொள்பேரனின் பேரன்கள்:
54. பிரபிதாமகனுடைய சிறிய பாட்டன் பெரிய பாட்டன்களுடைய பேரன்கள்.
55. ,, ,, கொள்பேரன்கள்.
56. ,, ,, கொள்பேரனின் பிள்ளைகள்
57. ,, ,, கொள்பேரனின் பேரன்கள்.

## (2) சமானோதகர்கள்.

58. கொள்பேரனின் கொள்பேரன்முதல் 7 தலைமுறைவரையில்.
59. மேலே 27 - வதில் சொன்னவர்களுக்குக் கீழ் 7 தலைமுறைவரையில்.
60. ,, 30 ,, 7 தலைமுறைவரையில்.
61. ,, 33 ,, ,,
62. ,, 49 ,, ,,
63. ,, 53 ,, ,,
64. ,, 57 ,, ,,
65. ,, 43 - ல் சொன்னவருடைய தாயார்.
66. ,, 43 - ல் ,, தகப்பன்
67. ,, 43 - ல் ,, சிறியதகப்பன் பெரியதகப்பன், அவர்களுடையபுத்திரசந்ததி 13 தலைமுறைவரைக்கும்.
68. ,, 66 ,, தாயார்.
69. ,, 66 ,, தகப்பன்.
70. ,, 66 ,, சிறியதகப்பன் பெரிய தகப்பனும் அவர்களுக்குப்பிறகு 13 தலை முறைவரையில்.

71. சமேதஞேதகர்கள் இவ்விதம் பதிமூன்று தலைமுறைவரையில் வார்சுகளாகி, பிறகு பந்துக்கள் வார்சாவார்கள்.

## (3) பந்துக்கள்.

1. பிள்ளையின் தௌகித்திரன்.
2. பேரனின் தௌகித்திரன்.
3. தகப்பனின் தௌகித்திரன். (சகோதரி புத்திரர்கள்)
4. அண்ணன் தம்பிகளின் தௌகித்திரன்.
5. ,, பிள்ளையின் தௌகித்திரன்.
6. பாட்டனின் தௌகித்திரன். (அத்தை பிள்ளை)
7. பெரியதகப்பன் சிறியதகப்பன் தௌகித்திரன்.
8. தாயின் தாய்
9. தாயின் தகப்பன். (15 ம. 421.)
10. மாமன்.
11. தௌகித்திரன் பிள்ளை (11 ம. 287,)
12. மருமான் பிள்ளை. (20. ம. 342)
13. மாமன் பிள்ளை.
14. சிறியதாயார் பெரியதாயர் பிள்ளைகள்.
15. மாமன் பேரன்.
16. தகப்பனுடைய அத்தை பிள்ளைகள்.
17. சிறியபாட்டன் பெரியபாட்டன் தௌகித்திரன்.
18. தகப்பனின் மாமன்.
19. தகப்பனின் மாமன்பிள்ளை.
20. தகப்பனின் சிறியதாயார் பெரியதாயார் பிள்ளைகள்
21. தகப்பனின் மாமன்பேரன்.
22. தாயின் தகப்பன்.
23. தாயின் சிறியதகப்பன் பெரியதகப்பன்.
24. ,, ,, பிள்ளைகள்.
25. தாயின் அத்தை மகன்.
26. தாயின் மாமன்.
27. தாயின் மாமன் பிள்ளை.
28. தாயின் சிறியதாயார் பெரியதாயார் பிள்ளைகள்.
29. தாயின் மாமன் பேரன். (5 ம. 69.)
30. தாயின் பாட்டன்.
31. தாயின் சிறியபாட்டன் பெரியபாட்டன்.
32. ,, ,, பிள்ளைகள்.
33. தாயின் சிறியபாட்டன் பெரியபாட்டன் பேரன்கள்.

34. தாயின் கொள்பாட்டன்.
35. பிள்ளையின் பெண். (இ. லா. ரி. 14 ம. 149)
36. அக்கா தங்கைகள். (8 ம. ஐ. 88; இ. லா. ரி, 5 ம. 241)
37. பெண்ணின் பெண் (17 ம. 182)
38. அத்தை. (இ. லா. ரி. 13 ம. 10)
39. அத்தையின் பெண்.

**412.** பம்பாய் தேசாசாரங்கள்.—(1) பம்பாயிராச்சியத்தில் முக்கியமாய் குஜராத்தி தேசத்திலும் பம்பாய் பட்டணத்திலும் ஆதாரமாக வழக்கத்திலிருந்து வருகிற மயூககிரந்தத்தின்படி ஒரே கோத்திரமுள்ள சபிண்டர்களுடைய பெண்சாதிகள்கூட சபிண்டர்களாக எண்ணப்பட்டு, புருஷர்களிறந்துபோயிருந்தால் அவர்கள் ஸ்தானத்தில் வார்சுகளாக ஏற்படுகிறார்கள்.(6 பம். ஐ. 152; இ. லா. ரி. 5 பம். 110; இ. லா. ரி. 9 பம். 31.) இவ்விதம் ஆஸ்திகாரனுடைய பிள்ளையின்பெண்சாதி, பேரனின்பெண்சாதி, கொள்பேரனின் பெண்சாதி, தௌகித்திரன் பெண்சாதி. அண்ணன்தம்பிகளின் பெண்சாதி, சிறியதகப்பன்பெரியதகப்பன் பெண்சாதி இவர்கள்முதலியவிதலைவகள் தஙகள்புருஷனுக்குப்பிறகு மயூககிரந்தப்படி வார்சுகளாகிறார்கள்.

(2) மேலும், ஒரேகுடும்பத்திற்பிறந்தகாரணத்தால், அதிலுள்ள பெண்களும் புருஷர்களும் ஒரேகோத்திரத்தாராய் பாவிக்கப்பட்டு, பெண்களுக்கு வேறுகோத்திரத்தில் கல்யாணமானாலும் ஒரேகோத்திரத்தில் பிறந்தநிலைமை தப்பிப்போகாதென்று மயூககிரந்தம் சொல்லுகிறது. இந்த அபிப்பிராயத்தின்படி தங்கைதமக்கைகள், அவர்கள் பெண்கள், அண்ணன்தம்பிகளின் பெண்கள், பிள்ளையின்பெண்கள், பெண்ணின்பெண்கள், இவர்கள்முதலிய பெண்வரிசை வார்சுகள் ஏற்பட்டிருக்கிறார்கள். அத்தை ஒருகோத்திரத்திற் பிறந்த சபிண்டையாகபாவிக்கப்பட்டு, தாயுடன்பிறந்த மாமனுக்கு முந்தி வார்சாகிறாள். (8 பம். ஐ. 244.)

**413** தாயபாக அனுஷ்டானப்படி வார்சுக்கிரமங்கள்.—தாயபாகப்படி முதல் மூன்றுதலைமுறை சகோத்திரசபிண்டர்களுடன் கலந்து வேறுகோத்திர சபிண்டர்களான பிதாவின்பந்துக்களும் மாதாவின் பந்துக்களும் வார்சுகளாகிறார்கள். அதன்பிறகு சகுல்யர்கள், அதாவது, 4, 5. 6 தலைமுறையுள்ள சகோத்திர சபிண்டர்

களும், அவர்களுக்குப்பிறகு சமானோதகர்களும் வார்சுகளாகிறார்கள். இதன்கீழ் காட்டப்பட்டிருக்கிற வார்சுகிரமத்தை, தற்காலம் அனே கத்தீர்ப்புகளின் ஆதாரத்தைக் கொண்டுஏற்படுத்தப்பட்டிருக்கிறது. (15 க. ஐ. 35. இ லா. ரி. 4 க. 411; இ. லா. ரி. 9 க. 563, 566; இ. லா. ரி. 15 க. 780 ) பங்காளராச்சிய அனுஷ்டானப்படி ஸ்திரீ களுக்கு வார்சுபாத்தியங்கிடையாது. ஆனால், பெண்சாதி, பெண், தாயார், தகப்பனுடையதாயார், பாட்டனுடையதாயார், இந்த ஐந்து பேர்கள்மட்டும்வார்சுகளாக ஏற்படலாமென்று சுருதிவாக்கியங்கள் ஏற்பட்டிருப்பதால் அவர்கள் மட்டும் வார்சுகளாக அங்கீகரிக்கப் பட்டிருக்கிறார்கள்.

## தாயபாக அனுஷ்டானப்படி வார்சுகளின் வரிசைக்கிரமம்.

### (1) சபிண்டர்கள்.

1. பிள்ளை.
2. பேரன்.
3. கொள்பேரன்.
4. பெண்சாதி.
5. பெண்.
6. தௌஹித்திரன்.
7. தகப்பன்.
8. தாய்.
9. சகோதரர்கள்.
10. ,, பிள்ளைகள்.
11. ,, பேரன்கள்.
12. சகோதரிகளின் பிள்ளைகள்.
13. தகப்பனுடைய தகப்பன் (பாட்டன்.)
14. தகப்பனுடைய தாய்.
15. சிறியதகப்பன் பெரியதகப்பன்.
16. ,, ,, பிள்ளைகள்.
17. ,, ,, பேரன்கள்.
18 பாட்டனுடைய தௌஹித்திரன்.
19. ,, தகப்பன் (கொள்பாட்டன்)
20. ,, தாயார்.
21. சிறியபாட்டன் பெரியபாட்டன்.

22. சிறியபாட்டன் பெரியபாட்டன் பிள்ளைகள்.
23. ,, ,, பேரன்கள்.
24. கொள்பாட்டனுடைய தௌகித்திரன்.
25. பிள்ளையின் தௌகித்திரன்.
26. பேரனுடைய தௌகித்திரன்.
27. அண்ணன் தம்பிகள் தௌகித்திரன்.
28. ,, பிள்ளைகளின் தௌகித்திரன்.
29. சிறியதகப்பன் பெரியதகப்பன் தௌகித்திரன்.
30. ,, ,, பிள்ளையின்தௌகித்திரன்
31. சிறியபாட்டன் பெரியபாட்டன் தௌகித்திரன்
32. ,, ,, பிள்ளையின்தௌகித்திரன்.
33. தாயின் தகப்பன்.
34. மாமன்.
35. ,, பிள்ளை.
36. ,, பேரன்.
37. சிறியதாயார் பெரியதாயார் பிள்ளை.
38. தாயின்பாட்டன்,
39. தாயின் சிறியதகப்பன் பெரியதகப்பன்.
40. ,, ,, பிள்ளை.
41. ,, ,, பேரன்.
42. தாயின் பாட்டனுடைய தௌகித்திரன்
43. தாயின் கொள்பாட்டன்.
44. தாயின் சிறியபாட்டன் பெரியபாட்டன்.
45. ,, ,, பிள்ளை.
46. ,, ,, பேரன்.
47. தாயின்கொள்பாட்டனுடைய தௌகித்திரன்.
48. மாமனுடைய தௌகித்திரன்,
49. ,, பிள்ளையின் தௌகித்திரன்.
50. தாயின் சிற்றப்பன் பெரியப்பனுடைய தௌகித்திரன்.
51. ,, ,, பிள்ளையின் தௌகித்திரன்.
52. தாயின் சிறியபாட்டன் பெரியபாட்டனின் தௌகித்திரன்.
53. ,, ,, பிள்ளையின் தௌகித்திரன்,

(2) சகுல்யர்கள்.

54. கொள்பேரனுடைய பிள்ளை.
55. ,, பேரன்.
56. ,, கொள்பேரன்.
57. சகோதரர்களின் கொள்பேரன்.

58. சகோதரர்களின் கொள்பேரனுடைய மகன்.
59. ,, ,, பேரன்.
60. சிற்றப்பன் பெரிபப்பன் கொள்பேரன்.
61. ,, ,, ,, பிள்ளை.
62. ,, ,, ,, பேரன்.
63. சிறியபாட்டன் பெரியபாட்டன் கொள்பேரன்.
64. ,, ,, ,, மகன்.
65. ,, ,, ,, பேரன்.
66. கொள்பாட்டனின் தகப்பன்.
67. ,, சகோதரர்கள்.
68. ,, ,, பிள்ளை.
69. ,, ,, பேரன்.
70. ,, சகோதரிகள் பிள்ளை.
71. ,, பாட்டன்.
72. ,, சிற்றப்பன் பெரியப்பன்.
73. ,, ,, ,, பிள்ளை.
74. ,, ,, ,, பேரன்.
75. ,, பாட்டனுடைய தௌகித்திரன்.
76. ,, கொள்பாட்டன்.
77. ,, பாட்டனுடைய சகோதரர்கள்.
78. ,, ,, பிள்ளை.
79. ,, ,, பேரன்.
80. ,, கொள்பாட்டனுடைய தௌகித்திரன்.
81. ,, சகோதரர்களின் தௌகித்திரன்.
82. ,, ,, பிள்ளையின் தௌகித்திரன்.
83. ,, சிறியதகப்பன் பெரிய தகப்பனுடைய தௌகித்திரன்.
84. ,, பிள்ளையினுடைய தௌகித்திரன்.
85. ,, சிறியபாட்டன் பெரியபாட்டனுடைய தௌகித்திரன்.
86. ,, ,, ,, பிள்ளையின் தௌகித்திரன்.
87. ,, அண்ணன் தம்பிகள் கொள்பேரன்.
88. ,, ,, ,, பிள்ளை.
89. ,, ,, ,, பேரன்.
90. ,, சிரிபதகப்பன் பெரியதகப்பன் கொள்பேரன்.
91. ,, ,, ,, ,, கொள்பேரன் பிள்ளை.

92. கொள்பாட்டனின் சிற்றப்பன் பெரியப்பனின் கொள்பேரன் பேரன்.
93. ,, பாட்டனுடைய சகோதரர்களின் கொள்பேரன்.
94. ,, ,, ,, கொள்பேரன் பிள்ளை.
95. ,, ,, ,, கொள்பேரன் பேரன்.

(3) ஸமானோதகர்கள்.

96. மேலேகுறித்த 56 வதிலுள்ளவருக்குக்கீழ்7-தலைமுறைவரைக்கும்.
97, ,, 59 ,,
98. ,, 62 ,,
99. ,, 65 ,,
100. ,, 89 ,,
101. ,, 92 ,,
102. ,, 95 ,,
103. ,, 76 ன்-தகப்பன் ,,
104. ,, 76 ன்-சிற்றப்பன் பெரியப்பன்களுடைய ஆண்சந்திக்குக்கீழ் 13 தலைமுறைவரைக்கும்.
105. ,, 103 ன்-தகப்பன்
106. ,, 103 ன்-சிறியதகப்பன் பெரியதகப்பன் இவர்களின் ஆண்சந்தி 13 தலைமுறைவரைக்கும்.
107. இவ்விதமே சமானோதகர்கள் 13தலைமுறைவரைக்கும் வார்சுகளாவார்கள்.

**414.** வார்சுகளில்லாத சோத்து சர்க்காரைச்சேருவது.—மேலே சொல்லப்பட்ட சபிண்டர்கள், சமானோதகர்கள், பந்துக்கள் இவர்களில் ஒருவருமில்லாவிட்டால், பிராமணனுடைய சொத்து அவனுடைய குருவுக்குப், குருவில்லாவிட்டால் சிஷ்யனுக்குப், சிஷ்யனில்லாவிட்டால் கூடப்படித்தவனுக்கும், அவனுமில்லாவிட்டால் படித்தறிந்த வித்வானுக்கும், அவனுமில்லாவிட்டால் எந்த பிராமணனுக்காவது சேருமென்றும், பிராமணனைத்தவிர மற்ற ஜாதியாருடைய சொத்து விஷயத்தில் பாத்தியஸ்தர்களில்லாவிட்டால் சர்க்காருக்குச் சேருமென்றும் தர்மசாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கின்றன. ஆனால், குரு சிஷ்யன் முதலியவர்கள் எவராவது பிராமணனுடைய சொத்துக்கு வார்சாக ஏற்பட்ட கேசுகள் இதுவரையில் காணப்படவில்லை. மேலும் பிராமணனுடைய சொத்தாயிருந்தாலும் வார்சுதார

ரில்லாவிட்டால் சர்க்காருக்குச் சேருமென்றே தீர்ப்புகள் செய்யப்பட்டிருக்கின்றன. (8 மூ. இ. அ. 500; 11 இ. அ 619.) பாத்தியஸ்தர்கள் ஒருவருமில்லையென்று தெளிவாக ருசுவில்லாவிட்டால்தான் சொத்து சர்க்காருக்குச் சேருமேயொழிய இல்லாவிட்டால் சேர மாட்டாது. (12 மூ. இ. அ. 448) சர்க்காருக்குச் சொத்துச் சேர்ந்தால் அதற்குமுந்தின பாத்தியஸ்தனால் ஒத்திபக்கம் முதலிய பராதீனங்களுக்கு உட்படுத்தப்பட்டிருந்தால் அந்த பராதீனங்களாலும், அவனுடைய கடன்களாலும் அவர்கள் கட்டுப்படுவார்கள். மேலும் கடைசி வார்சு விதவை முதலிய சொல்ப பாத்தியமுடையவர்களாயிருந்தால் அவளுடைய அதிகாரத்தைமீறி அவசியமன்றியில் செய்திருந்த பராதீனங்களை சர்க்காரில் ஆட்சேபித்து ரத்து செய்துகொள்ளலாம். (8 மூ. இ. அ. 529) சன்னியாசி சொத்துக் கூடவிருந்தவரைச்சேரும். (10 ம. 384.) சூத்திரர்களுக்குச் சன்னியாசி யாசிரமங்கிடையாது. அவ்வித வழக்கமிருப்பதாக ருசு செய்யப்பட்டாலன்றி மற்றபடி சூத்திர சன்னியாசி சொத்து அவன் பிள்ளை முதலிய வார்சுக்கேசேரும். (22 ம. 302.)

415. சேர்ந்திருந்தவர்களுக்குண்டான வார்சு பாத்தியம்.—ஒருதரம் பிரித்துக்கொண்டு மறுபடி சேர்ந்திருந்தவர்கள் மிதாட்சர குடும்பத்திற்போல பொது பாத்தியமுள்ளவர்களாகாமல் கொஞ்சமேற்றத்தாழ்ச்சியாக தாயபாகக் குடும்பத்தின்பிரகாரம் தனி பாத்தியமுள்ளவர்களாக ஆகிறார்களென்று காணப்படுகிறது. சேர்ந்த பாகஸ்தர்களிலொருவனிறந்தால், தர்மசாஸ்திரப்படி அவனுடைய சொத்துக்கு முதலில் (1) ஆண்சந்ததிகள் வார்சாகிறார்கள். அவர்களில்லாவிட்டால் (2) சேர்ந்த சகோதரர்களில் ஒரு தாய்வயிற்றிற் பிறந்தவர்கள் வார்சாகிறார்கள். இவர்களில்லாவிட்டால் (3) சேர்ந்த வேறு தாய்வயிற்றுச் சகோதரர்களுடன் பிரிந்த ஒரே தாய்வயிற்றுச் சகோதரர்கள் சேர்ந்து பொதுவில் வார்சாகிறார்கள். பிறகு (4) பிரிந்த ஒரே தாய்வயிற்று சகோதரர்களும் பிறகு (5) சேர்ந்த தகப்பன், இவனில்லாவிட்டால் (6) சிறியதகப்பன், பெரியதகப்பன், (7) பிரிந்த வேறு தாய்வயிற்று தகப்பன் சகோதரர்கள் (8) தாய், (9) பெண்சாதி, (10) அக்கா தங்கைகள், இவர்களொருவருமில்லாவிட்டால் கிருகஸ்தனுடைய மற்ற சபிண்டர்களும் சமானோதகர்களும் வார்சாகிறார்கள். (5 ஸ. 249; 7 ஸ. 35; 20 ஸ. 197; இ. லா. ரி. 1 க. 27.)

### (d) வார்சுபாத்தியத்தைக் கெடுப்பவைகள்.

**416.** வார்சுபாத்தியத்தைக் கெடுக்கும் காரியங்கள்.—மதத்துக்கும் ஜாதிக்கும் தக்கபடி சாஸ்திரங்களிற் சொல்லப்பட்டிருக்கிற கர்மங்களைச்செய்யச் சொத்து ஏற்பட்டிருக்கிறதென்றும், சொத்துக்குவார்சாகிறவர்கள் கிருஹஸ்தனுடைய ஆத்மா நற்கதியை யடையவேண்டுவதற்கு வேண்டியகர்மங்களை நடத்தயோக்கியதையுள்ளவரா யிருக்கவேண்டுமென்றும், அந்த யோக்கியதையில்லாதவர்கள் வார்சாகமாட்டார்களென்றும் தர்மசாஸ்திரங்கள் சொல்லுகின்றன. வார்சுபாத்தியத்தைக்கெடுக்கும் தோஷங்கள் அனேகஞ் சொல்லப்பட்டிருந்தாலும் அவைகளில் சிலவற்றிற்கு அதாவது:—பொய்சொல்லுவது, மோசஞ்செய்வது, லோபித்தனம், துர்நடத்தை, தகப்பனுக்குக்கீழ்ப்படியாமை, சூதாடுதல், குடிமுதலியவைகளுக்குப் பிராயச்சித்த மேற்பட்டிருப்பதால், அவைகள் இந்தக்காலத்தில் கோர்ட்டுகளிலெடுத்துச் சொல்லத்தக்கினவைகளல்ல. ஆகையால், பிராயச்சித்தத்தால் நிவர்த்திசெய்யக்கூடாத தோஷங்கள்மட்டுந்தான் முக்கியமானவைகள். அவைகளாவன:—ஜாதிப்பிரஷ்டனாய் வேறுமதத்திற்சேருவது, நபுஸ்கனாயிருப்பது, பிறவிக்குருட்டுத்தனம், செவிடு, ஊமை, பைத்தியம், அங்கயீனம், நிவர்த்திசெய்யக்கூடாத வியாதிகள்முதலான தோஷமுள்ளவர்கள் வார்சுபாத்தியத்தால் சொத்தை யடையமாட்டார்களென்று மனுஸ்மிருதிமுதலிய தர்மசாஸ்திரங்களிற் சொல்லப்பட்டிருக்கின்றன

**417** ஜாதிப்பிரஷ்டம்.—வேறுமதத்தைச் சேருவதாலாவது லபகிஷ்காரம் முதலிய வேறு எந்தக்காரணத்தாலாவது ஜாதியைவிட்டு விலகினவனுக்கு சொத்துபாத்தியங்களாவது வார்சுபாத்தியங்களாவது போகமாட்டாதென்று 1850 ஆம் வருஷத்து 21-வது ஆக்டில் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. ஆகையால், எவராவது கிறிஸ்துமுதலிய பிறமதங்களைச்சேர்ந்தால் அவர்களுக்கு சொத்தின்வார்சுபாத்தியம் போகமாட்டாது. ஆனால், வேறுகாரணங்களால் அப்படிப்பட்ட பாத்தியம் போய்விடும். அவைகளாவன:—

(1) ஒரு கிருகஸ்தனிறந்துபோகும்போது அவனுடையவிதவையும், அதற்குமுந்தி ஜாதியைவிட்டு விலகினபிள்ளையுமிருந்தார்கள். சொத்துமுழுவதும் பிள்ளைக்குச்சேரும்.

(2) ஒரு கிருகஸ்தனிறந்துபோகும்பொழுது அவனுக்கு ஆண் சந்ததியிலொருவருமில்லை. விதவாவிவாகத்தில் சேர்ந்தவர்களுடன் போஜனஞ்செய்ததால் ஜாதியைவிட்டு நீக்கப்பட்ட அவன்பெண் சாதியும், ஜாதியிலிருந்து விலகின தாயாதிகளுமிருந்தார்கள். ப்பெண் சாதியே அவன்சொத்துக்கு வார்சாவாள்.

(3) ஒரு கிருகஸ்தனிறந்துபோகும்பொழுது அவனுக்கு ஆண் சந்ததியிலொருவருமில்லை. விலக்கப்பட்டு விபசாரியாயிருந்தவந்த விதவையும், தூரஞாதிகள்மட்டுமிருந்தார்கள். விதவை வார்சாக மாட்டாள். ஏனென்ருல் 1850ளூத்து 21-வது ஆக்ட்படி விலக்கப் பட்டிருந்த தோஷம் பாத்திபத்தைக் கெடுக்காவிட்டாலும், விப சாரியாயிருந்த காரணத்தால் வார்சுபாத்தியம் நீங்கிவிடும். (5 க. ஐ. 466; 13 க. ஐ. 1, 25, 75; இ. லா. ரி. 5 க. 776)

(4) அலகாடாத் இராச்சியத்தில் "த" என்றபிதாவும், "ம" என்றமகனும் இந்துமதத்தைவிட்டு கிறிஸ்துமதத்தைச்சேர்ந்தார் கள். பிறகு "த" என்பவனிறந்தான். "ம" என்பவன் இந்துமதத் திலிருந்த அவனுடைய சிறியதகப்பன் சொத்துக்கு வார்சாவானெ ன்று தீர்மானிக்கப்பட்டது. (இ. லா. ரி. 11 அ. 100.)

(5) மைசூர் முதலான சில சுதேச ராஜ்யங்களில் மேற்சொல் லிய 1850ளூத்து 21-வது ஆக்ட் அனுஷ்டானத்துக்குக் கொண்டு வரப்படாததால் அந்த தேசங்களில் ஜாதியைவிட்டு விலகினவனு க்கு வார்சுபாத்தியம் போய்விடுமென்றே சொல்லத்தக்கதாயிருக் கிறது.

**418.** குருடு, செவிடு, முதலியவை.—நபும்ஸகர்களுக்கும், பிற விக்குருடு, செவிடு, ஊமை, முதலியவியாதிகளால் நிவர்த்தியில்லா மலிருப்பவர்களுக்கும் வார்சுபாத்தியங்கிடையாது. ஆனல், மேற் கண்டதோஷங்கள் நடுவில்வந்திருந்தாலும், நிவர்த்திசெய்யக்கூடிய தாயிருந்தாலும் வார்சுபாத்தியம் போகமாட்டாது. (1 க. ஐ. 117; 14 க. ஐ. 273; இ. லா. ரி. 18 க 387, 111; இ. லா. ரி. 1 பம். 177, 557; 4 பம். ஐ. 135; 1870 பம். ஸ. தீ. 661; இ. லா. ரி. 6 அ. 332; 26 ம. 133; 19 ம. 74; 22 கல். 864; 27 ம. 132.)

**419.** பைத்தியம்.—பைத்தியம் பிடித்தவர்கள் வார்சுபாத்தியத்திற்கு யோக்கியமுள்ளவர்களல்ல. பைத்தியமென்றால் முழுவதும் புத்தி கெட்டுப்போய் கெட்ட காரியங்களைச்செய்து பிறருக்குக் கெடுதியுண்டாகும்படியான நிலைமையென்று எண்ணக்கூடாது. தான் செய்கிற காரியம் சரியானதில்லையென்று அறிந்துகொள்ளப் போதுமான அறிவில்லாமை பைத்தியமென்றெண்ணப்படும். (இ. லா. ரி. 12. அ. 530, 1 ம. ஐ. 214) பைத்தியத்தால் வார்சுபாத்தியம் போவதற்கு, அது பிறவிமுதலாயிருக்கவேண்டியதா, அல்லது பிறகு உண்டாயிருந்தால் போதுமானதாவென்கிற விஷயத்தில் ஐகோர்ட்டார்கள் வெவ்வேறு அபிப்பிராயமுள்ளவர்களாயிருக்கிறார்கள். பிறவிமுதல் பைத்தியமாயிருந்தால்மட்டும் வார்சுபாத்தியம் போகுமென்று பம்பாய் ஐகோர்ட்டார் தீர்மானித்திருக்கிறார்கள். (இ. லா. ரி. 1 பம். 177, 182, 554; 13 மூ. இ. அ. 519: 14 மூ. இ. அ. 176.) ஆனால், பிறவிமுதல் பைத்தியமில்லாவிட்டாலும் வார்சுபாத்தியமுண்டாகுங்காலத்திலிருந்தால் வார்சுபாத்தியம் போய் விடுமென்றும், அந்தப் பைத்தியம் எப்பொழுதும் நிவர்த்திசெய்யத் தக்கதாயிருப்பது அவசியமில்லையென்றும் கல்கத்தா, அலகாபாத் ஹைகோர்ட்டார்கள் தீர்மானித்திருக்கிறார்கள். (இ. லா. ரி. 5 அ. 509; 9 க. ஐ. 198, 204; இ. லா. ரி. 8 க. 149; இ. லா. ரி 10 க. 63.) ஆனால் ஒருகேசில் அலகாபாத் ஹைகோர்ட்டார் பிறவிமுதல் பைத்தியமில்லாமல் நடுவில் பைத்தியம்பிடித்த ஒருவனுக்கு வார்சுபாத்தியமுண்டென்று தீர்ப்புசெய்திருக்கிறார்கள். (28 அல. 247.)

**420.** அங்கஹீனர்கள்.—கை கால்கள் இல்லாமல் வேலை செய்ய முடியாத அங்கஹீனர்கள் வார்சுபாத்திய மற்றவர்களென்று சொல்லப்பட்டிருக்கின்றது. பிறவிமுதல் அங்கஹீனர்களாக வில்லாமல், மத்தியகாலத்தில் வியாதியினாலாவது, வேறு எந்தக் காரணத்தினாலாவது கால் கைகள் போய் அசையமாட்டாமலிருக்கும் நொண்டிகளும் முடங்களும் வார்சுபாத்திய மற்றவர்களென்று சொல்லத்தக்கதாயிருக்கின்றது. (இ. லா. ரி. 1 பம். 185; ப. ஸி. ரி 151; வெ. பூ. 578.)

**421.** நீங்காத வியாதி.—நீங்காத குஷ்டரோகம் முதலிய வியாதிகளால் பாதிக்கப்பட்டவர்கள் வார்சுபாத்திய மற்றவர்களென்று

சொல்லப்பட்டிருக்கின்றது. இந்த வியாதிகள் பிறந்தது முத லிருக்கவேண்டியதனவசியம். மத்திய காலத்திலுண்டாயிருந்தா லும் அவைகள் மிகவும் கெட்டவைகளாகவும், நீக்கத் தகாதவை களாகவுமிருந்தால் வார்சுபாத்தியம் போய்விடும். தேகமெல்லாம் புண்ணும் அவைகளை யாற்றி நிவிர்த்திசெய்ய முடியாமலிருந்தாற் றான் குஷ்டரோகத்தால் வார்சுபாத்தியம் போகும். (1860 ஸூ ம. தீ. 239; இ. லா. ரி. 1 பம். 554; இ லா. ரி. 5 பம். 145) க்ஷய ரோகம், ராஜபிளவை, இவைகள்கூட நிவர்த்திசெய்ய முடியாத ஸ்திதியிலிருந்தால் வார்சுபாத்தியம் போய்விடுமென்று சொல்லப் படுகின்றன. (2 ஸ. 125)

422. வியபசாரம்.—இறந்துபோன கிருகஸ்தனுக்கு ஆண் சந்ததியொருவருமில்லாமல் அவனுடைய பெண்சாதிவார்சாகயேற் படுங்காலத்தில், அதற்கு முந்தியே அவளுக்கு விபசார தோஷமுண் டாயிருந்தால், வார்சுபாத்திய முண்டாகமாட்டாது. பெண், தா யார், பாட்டி, பாட்டனுடைய தாயார், இவர்கள் முதலிய பெண் வார்சுகளுடைய வார்சுபாத்தியத்திற்கு பங்காளா தேசத்தில் மட் டும் வியபசாரதோஷத்தால் கெடுதலுண்டேயொழிய மற்ற விடங் களில் பாதகமில்லையென்று இதற்கு முந்தியே தெரிவித்திருக்கிறோம். (5 ம. 119; 26 ம. 509.)

423. புனர்விவாகம்.—புருஷனிறந்தபிறகு பெண்சாதி புனர் விவாகஞ் செய்துகொண்டால், புருஷனுடைய சொத்திலுள்ள பாத் தியமெல்லாம் போய் அநந்தர வார்சுகள் அந்த சொத்துக்கு பாத் தியஸ்தர்களாவார்கள். அந்த சொத்து அவளுக்குத் தானமாகக் கொடுக்கப்பட்டிருந்தாலும், புனர்விவாகஞ் செய்துகொள்ளும்படி புருஷன் அனுமதிகொடுத்துப் போயிருந்தாலும், பெண்சாதியின் பாத்தியம் போகமாட்டாது. பெண், தாயார், தகப்பனுடைய தா யார் முதலிய பெண் வார்சுகள் திரும்ப விவாகஞ்செய்துகொண்டா லும், அவர்களுடைய வார்சுபாத்தியத்திற்குக் கெடுதியுண்டாக மாட்டாது.

424. துறவி.—சன்னியாசம், வானப்பிரஸ்தம், நித்ய பிரம் மசர்யம் முதலிய விஷயங்களில் எதிலாவது புகுந்து, மிகுந்த வைராக்கியமடைந்து, இவ்வுலக நடவடிக்கைகளை முற்றிலும் விட்டு

விட்டவர்களுக்கு வார்சுபாத்தியம் நிற்கமாட்டாது. அப்படிப்பட்டவர்கள் இறந்தவர்களாக எண்ணப்பட்டு, அவர்களுக்குப்பிந்திய வார்சுகள் பாத்தியஸ்தர்களாவார்கள். ஒன்றையும் மேற்போட்டுக்கொள்ளாமல் விரக்தியாயிருந்தால் மட்டும் வார்சுபாத்தியம் போய்விடுமென்று எண்ணக்கூடாது. (1 ஸ. 209; 22 ம. 302.) வழக்கமிருந்தாலொழிய சூத்திரசன்னியாசிக்கு வார்சுபாத்தியம் போகாது.

**425.** ஔரஸ தத்வம்.—எந்த வார்சுகளாயினும் அவர்களுடைய தாய் தகப்பனுக்குக் கிரமமாகப் பிறந்த பிள்ளைகளல்லது பெண்களல்லவென்று தெளிவாக ருசுக் காணப்பட்டால் அவர்களுக்கு வார்சுபாத்திய முண்டாகமாட்டாது. 1872ளுடத்து 1-வது ஆக்டாகிய சாட்சிய ஆக்ட் 112-வது பிரிவின்படி ஸ்திரீ புருஷர்கள் சேர்ந்திருக்கும் பொழுதாவது, அவர்கள் பிரிந்திருந்த விஷயத்தில் பிரிந்த தேதிமுதல் 280 தினங்களுக்குள்ளேயாவது பிறந்த குழந்தை அவர்களுக்குப் பிறந்ததாகவே எண்ணப்படும். ஆனால், கர்ப்பமுண்டாகக்கூடிய எக்காலத்திலாவது அந்த ஸ்திரீ புருஷர்கள் சேர்ந்திருக்கவில்லையென்று தெளிவாக ருசுக் காணப்பட்டால், அவர்களுக்குப் பிறந்ததாக உளகிக்க முடியாது.

உதாரணம்.—(1) ஸ்திரீ புருஷர்களிரண்டு பேரும் சேர்ந்திருக்கையில் பிள்ளை பிறந்தது. ஆனால், பிறந்ததுமுதல் புருஷன் நபும்ஸகன் என்றும் அது நிவர்த்தியாகத் தக்கதில்லை யென்றும், அவன் ஸ்திரீகளுடன் புணர அசக்தனென்றும், அவனால் கருப்போற்பத்தி யுண்டாக்குவது முடியாதென்றும் அவனைப் பலவாறு செவ்வையாய்ப் பரீக்ஷித்த டாக்டர் முதலியவர்களுடைய ருசு எற்பட்டது. அந்தப்பிள்ளை அவனுக்குப் பிறந்ததாக, எண்ணப்படமாட்டாது.

(2) பெண்சாதி புருஷனைவிட்டுப் பிறந்த வீட்டுக்குப் போயிருந்தாள். பிறகு ஒரு வருஷத்தில் அவளுக்குக் குழந்தை பிறந்தது. பெண்சாதி புருஷனைவிட்டுப் போனதன்பிறகு அந்த ஸ்திரீ தன் புருஷனுடன் சேரவில்லையென்று எற்பட்டால் அந்தக்குழந்தை அவனுக்குப் பிறந்ததாக எண்ணப்படமாட்டாது.

(3) புருஷன் தேசாந்திரம்போய் சிலவருஷம் அங்குமிங்கும் திரிந்துவிட்டுப் பிறகு பெண்சாதியிடஞ் சேர்ந்தான். அப்படிச்சேர்ந்த நாலைந்து மாதங்களுக்குள் அவர்களுக்குச் சந்ததி யுண்டாயிற்று. அது அவனுக்குப்பிறந்த சந்ததியாகமாட்டாது.

(4) புருஷனிறந்து போகுங்காலத்தில் பெண்சாதி கர்ப்பமாயிருந்து பிறகு சந்ததியுன்டானால், அந்தச் சந்ததியவர்களுக்குப் பிறந்ததாக எண்ணப் படும். மேலும் வார்சுபாத்தியம் ஏற்படும் காலத்திற்கு முந்தியே பிறந்திருந்த பெண்கள் அல்லது பிள்ளைகளுக்கும் எவ்விதமான பாத்தியங்களுண்டோ தகப்பனிறந்த காலத்தில் கர்ப்பத்திலிருந்து பிறகு பிறந்தவர்களுக்கும் அதே பாத்தியங்களுண்டு. (5 பம். ஸ. தீ. 315; 9 க. ஐ. 397.)

(5) புருஷனிறந்த காலத்தில் பெண்சாதி கர்ப்பமாயிருக்காளென்று சொல்லப்பட்டது. ஆனால், புருஷனிறந்த ஒரு வருஷத்திற்குப் பிறகு அவளுக்குச் சந்ததியுண்டாயிற்று. இந்தச் சந்ததி ஔரஸப் பிள்ளையாக நினைக் கப்படமாட்டான். சில ஸ்திரீகள் 4, 5 வருஷங்கள் வரையில் கர்ப்பமென்று சொல்வதுண்டு. அதைக்கோர்ட்டார் நம்பமாட்டார்கள்.

**426.** மேற்பிரிவுகளில் சொன்ன தோஷங்களின்காலம்.— (1) மேலே 416 முதல் 425-வது வரையில் சொன்ன தோஷங்கள் வார் சுபாத்திய முண்டாவதற்குமுந்தி ஏற்பட்டால் கெடுதியோயொழிய வார்சுபாத்திய முண்டானபிறகு உண்டானால் பாதகமில்லை. (1854ஹு பம். ஸ. தீ. 244; இ. லா. ரி. 5 அ. 509; இ. லா ரி. 5 க. 776; 22 க. 864; 7 இ. அ. 115; இ. லா. ரி. 14 ம. 294.) மேலுமந்ததோஷங்களை யுடையவர்களுக்கு குற்றங்குறையில்லாத ஆண்சந்ததியிருந்தால் அந்த சந்ததிக்குச் சொத்துச்சேரும். (2 பங் கால் லா ரிபோர்ட் 103.) மேலேசொன்ன தோஷங்கள் ஸ்திரீ புரு ஷர்களுடைய வார்சுபாத்தியங்களைக் கெடுத்தாலும், வார்சு பாத்தி யமாயில்லாமல், உயில்மூலமாயாவது தானமூலமாயாவது சொத் துக்கிடைத்தால் அந்த சொத்தை அவர்களடையத் தடையில்லை. (இ. லா. ரி. 18 க. 341; இ. லா. ரி. 2 அ. 809)

(2) எந்த தோஷத்தாலாவது புருஷர்களுக்கு வார்சுபாத்தியம் கெட்டுப்போய்விட்டால் அவர்களுக்கும் அவர்கள் பெண்சாதி, சுவீ காரப்பிள்ளை முதலியவர்களுக்கும் ஜீவனும்ச பாத்தியமட்டுமுண்டு. அப்படி வார்சுபாத்தியமிழந்தவர்களுக்கு யேதேனும் சுவயார்ஜித சொத்திருந்தால் அது அவர்களுடைய பெண்சாதிகளுக்கும்,சுவீகார ப்பிள்ளைக்குஞ் சேரும். (1857ஹு ம. தீ. 210) ஆனால், அப்படி பா த்திய மிழந்தவர்களுக்கு தோஷமற்ற அவுரஸப் புத்திரனாவது பேர னாவதிருந்தால் அவர்களுக்கு வார்சுபாத்திய முண்டாகும்.

**427.** அநந்தர வார்சுகள்.—மேலே சொல்லியபடி பாத்தியமி ழந்தவர்கள் வார்சுகளாக ஏற்படும்பொழுது, அவர்களில்லாதது போலவே, அதாவது இறந்ததுபோலவே எண்ணப்பட்டு அவர்களு க்குப்பிந்திய அநந்தரவார்சுகளுக்குச் சொத்துச்சேரும். (13 மூ. இ. அ. 519.)

உதாரணம்.—(1) இறந்த கிரகஸ்தனுக்கு பைத்தியம்பிடித்த பிள்ளை யும், நல்ல ஸ்திதியிலிருக்கிற பெண்ணுமிருந்தால், பெண் வார்சாவாள். (2 W மேக் 42.) பைத்தியமுள்ள பிள்ளை வார்சாகமாட்டான்.

(2) இறந்தவனுக்கு பைத்தியமுள்ளபெண்ணும், அவள் வயிற்றிற்பிற ந்த பிள்ளையுமிருந்தால், அவள்பிள்ளை (தௌகித்திரன்) வார்சாவான்.

(3) இறந்தவனுக்கு குருடனான ஒரு பிள்ளையும், நல்ல ஸ்திதியிலுள்ள ஒரு பெண்ணுமிருந்தார்கள். ஆனால், கிருகஸ்தனிறந்துபோகும்போது குரு டன் பெண்சாதி கர்ப்பமாயிருந்து நல்ல ஆண்குழந்தையைப்பெற்றாள். அந்த ஆண்பிள்ளை (பிள்ளைவயிற்றுபேரன்) வார்சாவான். கிருகஸ்தனிறந்த பிறகு குருடன் பெண்ஜாதி கர்ப்பமாகி பிள்ளைபெற்றால் அந்தப்பேரன் பெண்ணுக்குப் பிறகுதான் வார்சாவான்.

(4) இறந்தவனுக்கு பிரிந்த நல்லஸ்திதியிலிருக்கிற சகோதரனும், குஷ் டரோகியான பிரிந்த வேறொரு சகோதரனும், அந்த ரோகிக்குப்பிறந்த நல்ல ஸ்திதியிலிருக்கிற பிள்ளையுமிருந்தால், நல்ல ஸ்திதியிலிருக்கிற பிரிந்த சகோதரன் சொத்துமுழுவதையு மடைவான். இறந்தவனுக்கு குருடனான தங்கை பிள்ளையும், நல்ல ஸ்திதியிலுள்ள தங்கை பேரனுமிருந்தால், தங்கை பேரனுக்கு ஒருக்காலும் வார்சுபாத்தியமில்லை. (2 க. ஜ. 115; 9 க ஜ. 198, 203.)

(5) கிருகஸ்தனிறந்துபோகும்போது அவன்சொத்து அவன் மகனுக்கு எந்த தோஷத்தாலாவது சேராமல், வேறு ஆண்சந்ததிக்குச் சேர்ந்தபிறகு அந்தமகனின் பெண்சாதி கர்ப்பந்தரித்து நல்ல ஸ்திதியிலுள்ள பிள்ளையைப் பெற்றாலும், அந்தப்பிள்ளைக்கு வார்சுபாத்தியமுண்டாக மாட்டாதென்று பம்பாய் கல்கத்தா ஹைகோர்ட்டார்கள் தீர்மானித்திருக்கிறார்கள். ஆனால், மதராஸ் ஹைகோர்ட்டார், வார்சுபாத்தியமிழந்த பிள்ளையின் பெண்சாதி கிரு கஸ்தனிறந்த பிறகு கர்ப்பந்தரித்து நல்ல பிள்ளையைப்பெற்றால் அந்தப்பிள் ளைக்கு கிருகஸ்தனுடைய சொத்தில் சரியான பாகமடையலாமென்றே தீர் மானித்திருக்கிறார்கள். (இ. லா. ரி. 9 ம. 64; இ. லா. ரி. 6 பம். 616; இ. லா. ரி. 5 அ. 509; 1 க. ஜ. 117; 2 க. ஜ. 103.)

**428.** வியாதிநிவர்த்திக்குப் பிறகு சொத்துபாத்தியம்.—வார்சு பாத்தியத்தைக் கெடுத்த தோஷங்கள், பிறகு நிவர்த்தியானால், பாக

த்திற்குப் பிறகு பிறந்த பிள்ளைகளின் விஷயத்தைப்போல, வார்சு பாத்தியம் திரும்பவுண்டாகுமென்று தர்மசாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கின்றன. ஆனால், தோஷம் நிவர்த்தியாவதற்கு முந்தியே சொத்து வேறொருவருக்குச் சேர்ந்துபோகிற பட்சத்தில், அது திரும்பவரமாட்டாது.

உதாரணம்.—(1) ஒரு கிருகஸ்தனிறந்துபோகுங்காலத்தில், அவனுடைய பெண்சாதியும், பிறவிக்குருடனான ஒரு பிள்ளையுமிருவருடனிருந்தால் பெண்சாதி வார்சாவாள். பிறகு அந்தப் பிள்ளைக்குக் கண்ரோகம் நிவர்த்தியானாலும் விதவையின் சுவாதீனத்திலிருந்து சொத்து அவனுக்குச் சேரமாட்டாது. ஆனால், அவளுக்குப்பிறகு பிள்ளையே நெருங்கின வார்சானதால் அவனுக்குச் சொத்துசேரும்.

(2) ஒரு கிருகஸ்தனிறந்துபோகுங்காலத்தில் அவனுக்கொரு பிறவிக்குருடனான பிள்ளையும், பிரிந்த சகோதரனுமிருந்தால், சொத்து சகோதரனுக்குச்சேரும். பிறகு அந்தப் பிறவிக்குருடனுக்குக் கண்ரோகந் தீர்ந்தாலும் அவனுக்குச் சொத்துகிடைக்கமாட்டாது. ஏனென்றால், அந்தப்பிரிந்த சகோதரன் முழுவார்சுபாத்தியமுடையவனானதால் அவனுக்குப்பிறகு அவனுடைய பிள்ளைகளே வார்சாவார்கள். அந்தப் பிரிந்த சகோதரனுக்குப் பிள்ளை முதலிய வார்சுகளொருவருமில்லாவிட்டால், கண்ரோகந்தீர்ந்த அண்ணன் மகனே நெருங்கிய வார்சானதால் அவனுக்குச் சொத்துச்சேரும்.

### (e) பெண்வார்சுகள் விஷயமாய் விதிகள்.

429. பெண்களுக்குசொத்தில் முழுசுதந்திரமில்லை.—ஒருவனிறந்தபிறகு அவனுடைய சொத்து அவனுடைய வம்சஸ்தர்களுடைய அநுபவத்திலேயே யிருக்கவேண்டுமேயொழிய, மற்றவம்சஸ்தர்களுக்குச் சேர்ந்துபோகக்கூடாதென்கிற கருத்து இந்துக்களில் ஸ்திரப்பட்டிருக்கிறது. இக்கருத்தால் ஆண்வார்சுகளுக்கும் பெண்வார்சுகளுக்கும் சிலவித்தியாச மேற்பட்டிருக்கிறது. புருஷவார்சுக்குச் சொத்துக்கிடைத்தால், அதில் அவனுக்குச்சகல சுவதந்திரமுண்டாகிறது. அந்த சொத்தை அவனிஷ்டம்வந்தபடி செலவுசெய்யவும், மற்றப்படி வினியோகஞ்செய்யவும் பாத்தியமுண்டு. மேலும் அவனிறந்தபிறகு அவனுடைய பிள்ளைமுதலிய வார்சுகளுக்குச் சொத்துச்சேருமேயொழிய, ஆதிகிருகஸ்தனுடைய வார்சுக்குச் சேரமாட்டாது. பெண்சாதி முதலியவர்களுக்கு வார்சுபாத்தியத்தால் புருஷனுடைய சொத்துக்கிடைத்தால், அதில் அவர்களுக்கு முழுபாத்

தியமுண்டாகாமல், ஆயிசுவரையிலனுபவிக்கவும், அவசியமான காரியங்களுக்குச் செலவுசெய்யவுமட்டும் பாத்திய முண்டாகிறது. அதுவுமல்லாமல் அவர்களிறந்த பிறகு இறந்துபோன மூலபுருஷ னுக்கு எவர் நெருங்கியவார்சாயிருப்பார்களோ அவருக்கே அந்தச் சொத்துச் சேருமேயொழிய அந்த ஸ்திரீகளுடைய வார்சுகளுக்குச் சேரமாட்டாது. (9 கல். 725; 8 மூ. இ. அ. 529; 11 மூ. இ. அ. 487; 4 க. 744; 6 இ. அ. 15; 3 ம. 290; 8 ம. ஐ. 88; 5 பம். 670; 6 ம. 310.) பம்பாய் பிரெசிடென்சியைத்தவிர மற்றவிடங் களில் எல்லாப்பெண்வார்சுகளுக்கும், அதாவது பெண்சாதி, பெண், தாயார், தகப்பனுடைய தாயார், பாட்டனுடைய தாயார், தமக்கை முதலிய பெண்வார்சுகளுக்கும் மேலே சொல்லப்பட்ட குறைவான பாத்தியந்தான் ஏற்பட்டிருக்கிறது. அந்த சொத்துக்கள் ஸ்தாவர மானதாயிருந்தாலும், ஜங்கமமானதாயிருந்தாலும், ஸ்வயார்ஜிதமா யிருந்தாலும், பிதுரார்ஜிதமாயிருந்தாலும் அதில் பெண்களுக்குக் குறைவான பாத்தியந்தவிர சர்வசுதந்தரமான பாத்தியமில்லை. (2 ம ஐ. கோ. ரி. 402; 6 அல. 431; இ. லா. ரி. 8 ம. 290, 305; 13. மூ. இ. அ. 139, 487.) சமணமதஸ்தர்களில் மட்டும் கிருகஸ்தனு டைய ஸ்வயார்ஜித சொத்தின்பேரில் பெண்வார்சுகளுக்கு சகல பாத்தியமுமுண்டென்றும், பிதுரார்ஜித சொத்தில்கூட அவர்களு க்கு அதிக பாத்தியமுண்டென்றும் காணப்படுகிறது (6 அ. ஐ. 382, இ. லா. ரி. 1 அ. 688) மிதிலதேசத்திலும் பம்பாய்தேசத்திலும் மேலே சொன்னபாத்தியம் பெண்களுக்கு ஸ்தாவரஜங்கம சொத் துக்களில் ஏற்படுகின்றன. பாகம்பிரித்துக் கொள்ளுங்காலத்தில் பொதுசொத்தில் ஸ்திரீகளுக்கு பாகம் கொடுக்கப்பட்டால், அதில் கூட அவர்களுக்குக்குறைவான பாத்தியந்தானுண்டாகும். ஆனால், பாகஷரத்தில் முழுபாத்தியம் கொடுத்திருந்தால் செல்லும். (இ. லா. ரி. 16. க. 758; 11 க. ஐ. 459; 1 அ. ஐ. 10)

430. பம்பாய் தேசத்தில் சிலவிதிவிலக்குகள்.—பம்பாய் இராச்சியத்தில் பெண், தங்கை தமக்கைகள் முதலிய சில பெண் வார்சுகளுக்கு மட்டில் சம்பூர்ணமான பாத்தியம் உறுதிப்பட்டிருக் கிறது. அங்கே ஆதாரமாகச் செல்லுகிற மயூக கிரந்தத்தின்படியும், அதற்குச் சம்பந்தப்பட்ட மிதாட்சர வசனத்திற்கும் அங்கே செய்

யப்பட்ட அர்த்தத்தைக் கொண்டும், பெண் வார்சுகளிரண்டு வகுப்புகளாக ஏற்படுத்தப்பட்டிருக்கிறார்கள். (1) வேறு கோத்திரத்தில் பிறந்து விவாகத்தால் கிருகஸ்தனுடைய கோத்திரத்தில் சேர்ந்தவர்கள். அவர்களாவன:—பெண்சாதி, தாயார், தகப்பனுடைய தாயார், பாட்டனுடைய தாயார், பிள்ளையின் பெண்சாதி யிவர்கள் முதலியவர்கள். (2) கிருகஸ்தனுடைய கோத்திரத்தில் பிறந்து விவாகத்தால் வேறு கோத்திரத்தைச் சேர்ந்தவர்கள். அவர்களாவன:—பெண், சகோதரி, பேத்தி, தமயன் பெண், அத்தை முதலியவர்கள். முதல்வகுப்பு ஸ்திரீகள் புருஷர்களுடைய சொத்துக்கு வார்சாகும்பொழுது அதில் அவர்களுக்கு முழுபாத்தியமு முண்டாகாமல், அவர்களிறந்த பிறகு, அது மூலபுருஷனுடைய வார்சுகளுக்கே சேரும். (இ. லா. ரி. 16 பம். 229) இரண்டாம் வகுப்பு ஸ்திரீகள் புருஷர்களுடைய சொத்துக்கு வார்சாகும்பொழுது அதில் அவர்களுக்குப் புருஷர்களைப்போலவே முழுபாத்தியமும் உண்டாகமாட்டாது. மேலுமவர்களிறந்த பிறகு அந்த சொத்து முதல் கிருகஸ்தனுடைய வார்சுகளுக்குச் சேராமல் அந்த ஸ்திரீகளே புருஷர்களாயிருந்தால் அவர்களுக்கு யார் வார்சாவார்களோ அப்படிப்பட்டவர்களுக்கே சேரும். அவர்களாவன:—பிள்ளை, பெண், பெண்ணின் பிள்ளை, தாய் தகப்பன்கள் வகையரா வார்சுகளுக்குச் சேரும். (இ. லா. ரி. 9 பம். 501; இ. லா. ரி. 12 பம் 505.)

**431.** ஸ்திரீகளின் அனுபவ பாத்தியம்.—பம்பாய் தேசத்தில் பெண்சாதி முதலிய ஸ்திரீவார்சுகளுக்கும் மற்ற தேசங்களிலுள்ள எல்லா ஸ்திரீ வார்சுகளுக்கும் புருஷர்களிடமிருந்து கிடைத்த சொத்தில் அவர்களுக்கு முழுபாத்தியமில்லாவிட்டாலும் அவர்கள் அதைத் தங்களாயிசுவரையிலிஷ்டப்படி அனுபவிக்கலாம். அந்த சொத்தின் வரும்படி யெவ்வளவாயிருந்தாலும் அதைக் கொஞ்சங்கூட மீர்க்காமல் செலவுசெய்து கொள்ளலாம். அதைச்சேர்த்து வைக்கவாவது அதைப்பற்றி வேறுயாருக்காவது கணக்கு சொல்லவாவது கடமை கிடையாது. சொத்தின் வரும்படியைக்கொண்டு வாங்குகிற சொத்துக்களை அவளிஷ்டம்போல் விநியோகஞ்செய்யலாம். (6 மூ. இ. அ. 433; 8 ம. 290; 25 ம. 351.) அப்படி வாங்குகிற சொத்து மூலபுருஷன் சொத்தோடு கலக்காமல் தனதாக பா

வித்து நடவடிக்கை நடத்தியிருந்தால் விநியோகம் செல்லும். (5 கல். 512; 14 கல். 861; 4 ம. 152; 14 இ. அ. 63; 10 பம். 478.) அசல் ஐவேஜியை வட்டி முதலானதற்கு விட்டு விருத்திசெய்ய வேண்டிய நிர்ப்பந்தமுமில்லை. அதை விரயஞ்செய்யாமல் தங்கள் சுவாதீனத்திற்கு எந்த நிலமையில் வந்ததோ அந்த நிலமையில் தங்களுடைய அநந்தர வார்சுகளுக்குச் சேரும்படி காப்பாற்றினால் போதுமானது. மேலும் வரும்படியை எவ்விதமாகவாகிலும் செலவு செய்யலாமேயொழிய சிற்சில அவசியமான சந்தர்ப்பங்களைத் தவிர மற்ற எந்த சமயத்திலும் அசல் சொத்தை செலவு செய்யக்கூடாது. (இ. லா. ரி. 4 ம. 152; 8 ம. 290; இ. லா. ரி. 9 க. 244; இ. லா. ரி. 8 பம். 190; 21 கல். 190.)

மரணபண்டுத் தொகை சுவயார்ஜித சொத்தானதால் அவிபக்த சகோதரனுக்கு பாத்தியப்படாமல் இறந்தவன் பெண்சாதிக்குச்சேரும். (29 ம. 121.)

432. பெண்வார்சுகள் சேர்த்துவைத்த ஆதாயம்.—சொத்தின் வரும்படியைத் தனக்கிஷ்டமானபடி செலவு செய்யவும், தன்னிஷ்டப்பட்டவர்களுக்கு இனமாகக் கொடுக்கவும் பெண்வார்சுகள் பாத்தியஸ்தர்களாக விருந்தபோதிலும், அவர்களிறந்துபோன காலத்தில் செலவிடாமல் மிகுந்திருந்த ஆதாயம் அசல் சொத்தோடு சேரும். ஆகையால், அதை அந்தப்பெண்வார்சுகள் உயில் மூலமாய்க்கொடுக்க அதிகாரமில்லை. மேலுமசல் சொத்தின் ஆதாயத்தைச் சேர்த்துக்கொஞ்சந்தொகை யேற்பாடு செய்யப்பட்டால், அல்லது அதைக்கொண்டு கொஞ்சம் சொத்து சம்பாதிக்கப்பட்டால் அது அசல் சொத்துடன் சேர்ந்ததென்று சாதாரணமாய் எண்ணப்பட்டு அதன் விஷயத்தில் பெண்வார்சுகளுக்கு முழுபாத்தியம் தப்பிப்போய்விடும். (இ. லா ரி. 10 க. 334; 5 அ. ஐ. 197, 206) ஆனால் அப்படி ஆதாயத்தைச்சேர்த்து சம்பாதிக்கப்பட்ட சொத்தை அந்தப் பெண்வார்சுகள் முதன் முதற்கொண்டு தனக்காகவே உபயோகப்படுத்திக்கொள்ளுகிற எண்ணத்துடன் அசலுடன் சேர்க்காமல் தனியாக வைத்திருந்தால், அதையவள் உயிருடனிருக்கையில் மறுபடி விரயசெய்யலாம். விநியோகத்தை ஆக்ஷேபிக்கிறவன் மூலசொத்தின் பாகமென்று ருசுசெய்ய வேண்டும். வார்சுபாத்தியத்தா லடைந்த

மூலசொத்தின் வரும்படியைக்கொண்டு தனக்கென்று சேர்த்த சொத்து ஸ்திரீதன மாகாமல் மூலபுருஷன் வார்சுக்கே சேரும். (9 கல். 758; 10 கல். 324; 8 ம. 90; இ. லா. ரி. 16 க. 574; இ. லா. ரி. 10 பம். 478; 25 ம. 351.)

433. வைதீக காரியங்கள் நடத்த சொத்துவினியோகம்.—வரும்படி போதாத பட்சத்தில் சில அவசியமான காரியங்களுக்காக அசல் சொத்தைக்கூடப் பெண்வார்சுகள் செலவுசெய்யலாம். அந்தக்காரியங்களாவன:—(1) அந்த சொத்து புருஷனிடத்திலிருந்து கிடைத்திருக்கும்பொழுது அவனுடைய உத்தரகிரியைகள், சிரார்த்தம்முதலிய கர்மங்களிவைகளை அசல் சொத்தை விரயஞ்செய்தாவது நடத்தி, அவனுடைய ஆத்மாவுக்கு நற்கெதி யுண்டாகும்படி செய்ய வேண்டியது. மேலுமவனுல் சிரார்த்தம் முதலிய கர்மங்கள் நடத்தப்படத்தக்கவர்களுடைய கர்மங்களைக்கூட நடத்தவேண்டியது. (11 க, ஐ. 418; இ. லா. ரி. 8 க. 36.) புருஷனுக்கு நற்கதிகிடைக்க வேண்டுமென்கிற எண்ணத்துடன் தீர்த்தயாத்திரைகள், தான தர்மங்களையும், பிராமணர்களுக்கு தானங்களையும், கோவில், குளம் முதலிய பிரதிஷ்டைகளையும் செய்யலாம். ஆனல், இவைகளுக்காக ஏராளமான ஜவேஜி உள்ளவர்கள் மட்டும் கொஞ்சம்செலவு செய்யலாமேயொழிய அதிகமாய் செலவிடக்கூடாது.சொத்து சொல்பமாயிருந்தால் அவைகளுக்காகக் கொஞ்சங்கூட செலவிடக்கூடாது. (இ.லா. ரி. 11 ம. 288; 11 க. ஐ. 118; 8 ம. 552.) விதவை தன்நற்கதிக்காகச் செய்யும் தீர்த்தயாத்திரை தானதர்மம் முதலியவைகளுக்காக அசல்சொத்தை செலவிடக்கூடாது. (இ. லா. ரி. 4 அ. 482; 22 க. 506) சொத்தின் வரும்படியில் செலவு செய்ய அட்டியில்லை. தர்ம விஷயமாயும், மதவிஷயமாயும் உள்ள செலவுகளுக்காக பெண்சாதியைத்தவிர மற்ற ஸ்திரீவார்சுகள் கொஞ்சங்கூட மூலசொத்தை செலவிடக்கூடாது.

(2) கிருகஸ்தன் வாங்கியிருந்த கடன்களைத் தீர்ப்பதவசியமானதாயிருந்தால், அசல் ஆஸ்தியை விற்கலாம். (13 ம. 189; 18 பம். 534; 21 க. 190.) அக்கிரமமான கடன்களைத் தீர்ப்பது அவசியமானதல்ல. (இ லா. ரி. 2 பம். 499) காலாவதியால் பாதிக்கப்பட்ட கடன்களைத் தீர்ப்பதற்காக அசல் சொத்தை விரயஞ்செய்யக்

கூடாதென்று சில கேசுகளில் தீர்மானிக்கப்பட்டிருந்தன. (14 ஸ. 147; 6 பம் ஐ. 270) ஆனல், பிந்திய தீர்மானங்களால் காலாவதியால் பாதிக்கப்பட்டிருக்கிற கடன்களைத் தீர்ப்பதற்காகக்கூட அசல் சொத்தை விரயஞ் செய்யலாமென்றும் ஸ்திரப்பட்டிருக்கிறது. (இ. லா. ரி. 13 ம 189; இ. லா. ரி. 11 பம். 320, 325) காலாவதியாகாத மற்றக்கடன்களைக்கொடாமல் அப்படிக் காலாவதியான கடன்களைத் தீர்ப்பது மோசக்கருத்துடன் செய்ததாக ஏற்படக்கூடாது. (இ. லா. ரி. 11 பம். 666.)

(3) பெண்வார்சுகளுக்குக் கிடைத்த சொத்தைக் கொண்டு கொடுக்கவேண்டிய ஜீவனும்சங்களுக்காகவும் (12 க. 52.) செய்யவேண்டிய விவாக முதலியவைகளுக்காகவும் அவசியமானல் சொத்தை விரயஞ்செய்யலாம். (16 ஸ. 52; இ. லா. ரி. 5 பம் 450; 22 ம. 113.) ஆனல், எப்பொழுது அவசியமுண்டாகப்போகிறதென்று முந்தியே சொத்தை விரயஞ்செய்து பணத்தை வாங்கிவைத்துக் கொள்ளக்கூடாது.

(4) மேலே சொன்னவைகளைத்தவிர வேறேதேனும் நீக்கக் கூடாத நிர்ப்பந்தங்களேற்பட்டால் அவைகளுக்காகவும் பெண்வார்சுகள் அசல் சொத்தை விரயஞ்செய்யலாம். சர்க்கார் கிஸ்திபாக்கி, ஏதேனும் டிக்கிரிப்படி செலுத்தவேண்டிய தொகை, சொத்து விஷயமாகக்கொடுக்கப்பட்ட பிராதில் பிரதிவாதியாகச் சேர்க்கப்பட்டு அதைக்காப்பாற்றுவதற்காகச் செய்யப்பட்ட நியாயமான வியாஜ்ஜிய செலவுகள், அழிந்துபோகும் நிலம் கிணறு, வீடு முதலிய சொத்தைக் காப்பாற்றுவதற்காகச் செய்யப்பட்ட மராமத்துச் செலவுகள் இவைகள் அவசியமான செலவுகளாக எண்ணப்படும். நீக்கக்கூடாத நிர்ப்பந்த முண்டா, இல்லையாவென்பது அந்தந்த சந்தர்ப்பங்களைப் பார்த்து அறிந்துகொள்ளவேண்டியது. சர்க்கார் கிஸ்திபாக்கி முதலிய நிர்ப்பந்தங்கள் பெண்வார்சுகளுடைய அனியாயச்செலவாலுண்டாயிருந்தாலும் பாதகமில்லை. சொத்தையடைந்தவனுடைய கெட்ட நடத்தையாலாவது தாண்டுதலின் பேரிலாவது அந்த நிர்ப்பந்தமுண்டாயிருக்கக்கூடாது. (இ. லா. ரி. 11 பம். 609; இ. லா. ரி. 12 க. 52. இ. லா. ரி. 4. அ. 532; இ. லா. ரி. 6 க 843; 10 க. 823; 6 மூ. இ. அ. 423.)

434. பெண்வார்சுகளால் விற்பனை.—மேல்பிரிவில் சொல்லப்பட்ட அவசியமான காரியங்கள் நேரிட்டபொழுது அசல் சொத்தைச் செலவுசெய்யாமல் கடன்வாங்கி அந்தக் கடனை சொத்தின் வரும்படியைக்கொண்டு நாளளவில் தீர்க்கவாவது, சொத்தின் ஒரு பாகத்தைக்கூடக் கிரயஞ் செய்யாமல் ஒத்திவைத்துத் தொகைவாங்கி அதனுல் தனக்குவரும்படியைக் குறைத்துக்கொள்ளவாவது பெண் வார்சுகள் கட்டுப்பட்டவர்களல்ல. சொத்தில் சில பாகத்தை தடையில்லாமல் விற்று அந்த அவசியமான காரியங்களை நடத்தலாம். (31 ம. 153.) பெண்வார்சுகளுக்கு நியாயமாகத் தோன்றுகிறபடி சொத்தை ஒத்திவைத்தாவது, விற்ருவது, அந்தப் (பெண்வார்சும் அவளிடத்தில் சொத்தைப் பெற்றுக்கொள்ளுகிறவனும் கெட்ட எண்ணமில்லாமல்) செலவுக்கு ஏற்பாடு செய்திருந்தால், விற்பதைக்காட்டிலும் ஒத்திவைப்பது இலாபகரமென்கிற காரணத்தைக்கொண்டு அநந்தரவாசுகள் ஆட்சேபிக்கவாவது பணத்தைக்கொடுத்துவிட்டு கிரயத்தை ரத்துசெய்து கொள்ளவாவது பாத்தியமில்லை. (9 ஸ. 284; 3 க. ஐ. 375) ஆனுல், மிகவும் குறைவான விலைக்கு மிகுந்தசொத்து அனியாயமாக விற்கப்பட்டிருந்தால், பெண்வார்சுகளுள்ளவரையில் செல்லும். (7 அ. 163; 8 அ. 365, 646; 10 கல். 324) அவளிறந்தபிறகு அநந்தர வார்சுதாரன் ஆட்சேபிக்கக்கூடும். அப்பொழுது வட்டியுடன் கிரயத்தொகையை அந்த அநந்தரவார்சுதாரனைக்கொண்டு கொடுக்கும்படி செய்வித்து கோர்ட்டார் கிரயத்தை ரத்துசெய்யக் கூடும். (9 ஸ. 108; 11 க. ஐ. 416.) எவ்வளவு ஸ்பஷ்டமாக அனியாயம் நடந்ததாக காணப்பட்டாலும் விலைக்கு வாங்கினவன் அந்த அனியாயத்தை யறிந்திருந்தானென்று தெளிவாக நினைக்க வழியில்லாத நிலைமையில் மேற்சொன்னவிதமாகக் கோர்ட்டார் நடத்தமாட்டார்கள். பெண்வார்சுகளுக்குக் கிடைத்த சொத்து ஒத்திக்குள்பட்டிருந்து, அந்த ஒத்தியை மீட்டுக்கொள்ளப்போதுமான தொகை அவள் வசத்திலிருந்தும், அசல் சொத்தில் சில பாகத்தை அவள் விற்று ஒத்தியை மீட்டால், அவளிறந்தபிறகு அநந்தர வார்சுதாரன் பிராது மூலமாய் அந்தக்கிரயத்தை ரத்துசெய்து கொள்ளலாம். ஆனுல், கிரயத்தொகையை வட்டியுடன் செலுத்திவைக்க அவன் கட்டுப்பட்டவன். (இ. லா. ரி. 5 பம். 450; 14 க. ஐ. 226.)

ஸ்திரீவார்சுகளால் அநியாயமாய் விற்கப்பட்ட சொத்தை அவளிறந்த பிறகு அநந்தரவார்சுகளும், அநந்தரவார்சுகளால் அந்த சொத்தில் சிலவற்றைகிறயம் பெற்றவர்களும் சேர்ந்து தாவாசெய்து அப்படி பெண்வார்சால் விற்கப்பட்ட சொத்தை திருப்பியடையலாம். (33 கல். 367.)

பெண்வார்சுகள் செய்த துர்விநியோகத்தை ரத்து செய்ய தாவா அவளிறந்த 12-வருஷங்களுக்குள் கொண்டுவரலாம். விநியோகம் செய்தாள் முதலல்ல. (33. கல். 257.)

435. கடன் கொடுக்கிறவர்களுக்குச் சம்பந்தமானவைகள்.—(1) பொதுக்குடும்பத்தின் மானேஜருக்குப் பொதுசொத்தில் எவ்விதமான பாத்தியமுண்டோ, அவ்விதமான பாத்தியந்தான் பெண்வார்சுகளுக்குண்டென்று சொல்லலாம். மேலும், மானேஜருக்குக் கடன்கொடுத்து சொத்தைக் கட்டிக்கொள்ளுகிறவனுக்கு என்ன விதிநிஷேதங்களுண்டோ, அவைகள் பெண்வார்சுகளுக்கு முண்டு. சொத்தை வாங்கிக்கொள்ளுகிறவன் விரயஞ்செய்யத் தகுந்த நிர்ப்பந்த மிருந்ததென்று ருசுசெய்பக் கடமைப்பட்டவனாயிருக்கிறான். மேலும் அவன் நன்றாய் விசாரித்து மோசமில்லாமல் நல்ல எண்ணத்தோடு வாங்கவேண்டும். (4 பம். 482; 11 பம். 320; 14 அல. 420; 21 கல். 190.) அவசியமிருந்ததென்று ருசுச்செய்துவிட்டால் விரயஞ்செய்து பெற்றுக்கொண்ட தொகையைப் பெண்வார்சு நியாயமாகச் செலவிட்டாளென்று ருசுச்செய்வது கட்டாயமல்ல. மேலும் தகுந்த ஜாக்கிரதையுடன் விசாரித்து அவசியமிருந்ததாக உறுதியாக நம்பியெவ்விதமானகெட்ட எண்ணமில்லாமல் பணங்கொடுத்து சொத்தை சுவாதீனம் செய்துகொண்டவனுக்கு, அந்த அவசியவிஷயமாகச் சொல்லப்பட்ட சங்கதிகள் கடைசியில் பொய்யென்றேற்பட்டாலும் கெடுதியில்லை. ஏதோ ஒரு அவசியமிருந்ததாக தஸ்தாவேஜில் எழுதப்பட்டிருப்பதை கொண்டுமட்டும், அந்த அவசியம் வாஸ்தவத்திலிருந்த தென்றாவது, அதைப்பற்றித் தகுந்தபடி விசாரிக்கப்பட்ட தென்றாவது, எண்ணப்படமாட்டாது.

(2) ஸ்திரீவார்சுகளால் செய்த விநியோகத்தைப் பெற்றவன் நியாயமான செலவுக்காக விநியோகிக்கப்பட்டதென்றும் தகுந்தபடி விசாரித்துத் தான் விநியோகத்தைப்பெற்றதாகவும் ருசுச்செய்ய வேண்டும். (6 கல். 843; 4 பம். 462; 24 இ. அ. 183; 21 கல்.

190) டிரான்சுபர் ஆப்பிராபர்டி ஆக்ட் 38-வது பிரிவு.) ஆகையால் ஸ்திரீகளுக்கு கடன்கொடுக்கிறவர்களும், சொத்தை வாங்குகிறவர்களும் செலவின் அவசியத்தை நன்ருய் விசாரித்து ஜாக்கிரதையாயும் யோக்கியமாயும் நடவடிக்கை நடத்தவேண்டும். (6 கல். 843.)

(3) அவசியமான காரியங்களுக்காக ஒரு பெண்வார்சு கடன் வாங்கி அந்தக் கடனுக்காகச் சொத்தைப் பாத்தியப்படுத்தாமல் அவள் பத்திரம்மட்டும் எழுதிக்கொடுத்திருந்தால் அதனுல் அனந்தர வார்சுகள் கட்டுப்படமாட்டார்கள். (இ. லா. ரி. 4 ம. 375) அவசியமான காரியங்களுக்காகக் கடன்வாங்கப்பட்டதாக ருசு ஏற்பட்டால், சொத்தைப் பாத்தியப்படுத்தாமலிருந்தாலும் அந்தக் கடன்களைத் தீர்க்க அநந்தரவார்சு கட்டுப்பட்டவன். (இ. லா. ரி. 6 க. 36) ஸ்திரீகளின் நியாயமான பந்தகபராதீனங்களுக்கு அநந்தரவார்சு சம்மதி கொடுத்தாலும் கொடாமலிருந்தாலும் அவன் அவைகளுக்கு கட்டுப்பட்டவனுயிருக்கிருன். (18 பம். 534.)

(4) கடன் கொடுத்தவர்கள் பெண்வார்சுகளின்பேரில் செய்யும் பிராதில் பெறப்படும் டிக்கிரியால் அநந்தர வார்சுகள்கூடக் கட்டுப்படவேண்டுமென்று இஷ்டப்பட்டால், அந்தத்தொகை அவசியமான காரியங்களுக்கு வாங்கப்பட்டதென்று பிராதில் சொல்வதுடன், அநந்தரவார்சுகளையும் பிரதிவாதிகளாகச் சேர்க்கவேண்டுமென்பது கோர்ட்டாருடைய அபிப்பிராயமாகக் காணப்படுகிறது. (11 மூ. இ. அ. 267) மேலே சொன்னபடி பிராதில் சொல்லாமலும், அனந்தர வார்சுகளைச் சேர்க்காமலும் ஒரு பெண்வார்சின் பேரில் டிக்கிரி பெறப்பட்டால் அவளுடைய ஆயுசுவரையில் அனுபவிக்கும் பாத்தியம் அந்த டிக்கிரிக்குக் கட்டுப்படும். (11 மூ. இ. அ. 241; இ. லா. ரி. 4 ம. 401.)

பெண்வார்சுகள் நியாயமாய் வழக்கிட்டுதோற்ற வியாஜ்யத்தை அவள் ஜீவதெசைக்கு பிறகு அனந்தரவார்சுகள் அதே வியாஜ்ஜியத்தை தொடரக்கூடாது. (28 அல. 231.)

**436.** பெண்கள் செய்த அனுவசியமான வினியோகங்கள். தகுந்த அவசியமில்லாமல் பெண்வார்சுகள் செய்யும் வினியோகங்கள் அநந்தரவார்சுகளைக் கட்டுப்படுத்தாமல், அந்தவினியோகங்களைரத்து செய்யலாம். ஆனுல், அவைகள் அவளாயிசுவரையில் செல்லுகிறதற்கு

ஒரு தடையுமில்லை. (1 ம. ஐ. 206; 2 ம. ஐ. 393. இ. லா. ரி. 8 க. 204; 10 க. 324; 22 ம. 522; 1 அ. 503.) அநந்தர வார்சுகள் ஒருவருமில்லாவிட்டாலும் சொத்தை அவசியமின்றியில் வினியோகஞ் செய்ய பாத்தியம் பெண்வார்சுகளுக் குண்டாகமாட்டாது. அன்னிலமையில் சர்க்கார் பாத்தியஸ்தர்களானதால் அந்த வினியோகங்களை அவர்கள் ஆட்சேபிக்கலாம். (8 மூ. இ. அ. 500.)

437. பெண்வார்சுகள் சொத்தை விடுவது.—(1) ஒரு பெண் வார்சுக்குக் கிடைத்த சொத்து விஷயமாயுள்ள எல்லா பாத்தியத்தையும் அவளிஷ்டப்படும்பொழுது விட்டுவிட்டு, அக்காலத்தில் அநந்தர வார்சாயுள்ளவருக்கு சொத்தைக் கொடுத்துவிடலாம். இப்படிச் செய்வதால் சிலருக்கு நஷ்டமுண்டானாலும் பாதகமில்லையென்று முன்தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. (8 ஸ. 500.)

உதாரணம்.—(1) புருஷனுக்கு வார்சாக அவனுடைய ஆஸ்தியை அனுபவித்துவரும் விதவை அக்காலத்தில் அடுத்த வார்சாயிருந்த தௌகித்திரனுக்கு எல்லாச் சொத்தையும் கொடுத்துவிட்டாள். அதற்குப்பிறகு அந்த விதவை ஜீவித்திருக்குங்காலத்தில் தௌகித்திரனிறந்தான். விதவை இறந்துபோகுங்காலத்தில் அவள் மைத்துனன் சமீப வார்சாயிருந்தான். இந்த ஸ்திதியில் விதவை பாத்தியத்தை விட்டுவிடாமலேயிருந்தால் மைத்துனனுக்குச் சொத்து வருமென்பது நிச்சயந்தான். ஆனலவள் எப்பொழுது தன்னுடைய பாத்தியத்தை விட்டாளோ அப்பொழுதே தௌகித்திரன் சர்வ பாத்தியமுள்ளவார்சாக ஏற்பட்டதால் அவனுக்குப்பிறகு அந்தச்சொத்து அவனுடைய பிள்ளை முதலானவர்களுக்குச்சேரும்.

(2) தற்காலத்தில் அநந்தா வார்சாயுள்ளவன் கிழவனுகவாவது, வியாதி பிடித்துச் சீக்கிரத்தில் இறந்துபோகக்கூடியவனுகவாவதிருந்தால், மேற்சொல்லியபடி வார்சான ஸ்திரீ தன் பாத்தியத்தை விட்டுவிட்டு அவனுக்காவது அவன் வார்சுகளுக்காவதுச்சொத்துச்சேரும்படி செய்யலாம்.

(2) பிற்காலத்தில் ஸ்திரீகளின் அந்தியகாலத்தில் ஏற்படும் அநந்தர வார்சுக்குத்தான் பாத்தியம் உண்டாகுமென்று சில தீர்ப்புகள் செய்யப்பட்டிருக்கின்றன. (19 இ. அ 30; 19 கல். 236; 21 ம. 128.

438. அநந்தரவார்சினிஷ்டப்படி சொத்து வினியோகம். — பெண்வார்சால் செய்யப்பட்ட சொத்து வினியோகங்கள் அநந்தர

வார்சின் சம்மதியுடன் செய்யப்பட்டிருந்தால் அவை யவசியமாயிருந்தாலும் இல்லாவிட்டாலும் செல்லும். (9 ஸ. 350; இ.லா.ரி. 5 க. 49; 10 கல். 1102; 5 பம். 563; 3 அ. 362.) அநந்தரவார்சுகள் தஸ்தாவேஜில் கையெழுத்துப்போட்டிருந்தால் அவர்கள் சம்மதித்தார்களென்று ருசுச்செய்ய அனுகூலமாயிருக்கும். (24 ஸ. 127) விபக்த சகோதரனின் பெண்சாதி மைத்துனர்களின் சம்மதியின் பேரில் செய்த வினியோகம் செல்லுமென்று தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. (12 C. W. N. 74. பிரிவி கவுன்சில்; 22 கல். 354; 13 ம. லா. ஜர்னல் 323; 31 ம. 366 புல் பெஞ்சு.) அநந்தர வார்சு முழுபாத்திய மில்லாத ஸ்திரீயாயிருந்தால் அவளுடைய சம்மதியினால், அவளுக்குப்பின் வரும் வார்சுகள் கட்டுப்படமாட்டார்கள். (இ. லா. ரி. 11 அ. 253; 14 மூ. இ. அ. 176.) தனக்கு இனிமேல் கிடைக்கக்கூடிய அநந்தரவார்சு சொத்தை விற்றால் செல்லாது. (24 அல. 94, 29 ம. 120.)

439. சம்மதிக்கவேண்டியவர் யார்?–(1) அநந்தரவார்சு சம்மதியென்கிறபொழுது. தற்காலத்தில் நெருங்கிய அநந்தரவார்சினுடைய சம்மதிபோதுமா, அல்லது பெண்வார்சு இறந்துபோகுங்காலத்தில் ஜீவித்திருப்பவர்களில் எவர் சமீப வார்சோவென்று தெரியாததால் எல்லா அநந்தரவார்சுகளும் சம்மதிக்கவேண்டுமா, என்கிறவிஷயம் கொஞ்சம் கஷ்டமாயிருக்கிறது. அநந்தரவார்சுகளில் நெருங்கினவன் வினியோகத்துக்குச் சம்மதித்திருந்து அவனந்த ஸ்திரீ உயிருடனிருக்கும்பொழுதே இறந்துபோனால் அவனுடைய சம்மதியால் மற்ற அநந்தர வார்சுகள் கட்டுப்படுவார்கள். (இ. லா. ரி. 5 க. 44; 1856ஷு பம். ஸ. தீ. 604.)

(2) அநந்தரவார்சுகள் அனேகரிருந்தால் அவர்களில் பெரும்பான்மையோருடைய சம்மதம் வேண்டும். மேலும் சமீபவார்சுகளின் சம்மதம் பெறாமல் தூரவார்சுகளின் சம்மதம் பிரயோசனப்படாது. தூரவார்சை மோசம்பண்ண சமீபவார்சின் சம்மதத்தின் பேரில் ஸ்திரீகள் செய்கிற வினியோகமும் செல்லாது. (13 மூ. இ. அ. 228.)

(3) பெண்வார்சு இறந்துபோகுங்காலத்தில் யாரார் வார்சுகளாயிருக்கத் தகுந்தவர்களோ அவர்களெல்லோரும் சம்மதிக்கவேண்

டிய தவசியமென்றும் அநந்தர வார்சுகளில் தற்காலத்தில் நெருங்கினவன் ஒருவன் மட்டில் சம்மதித்தால் போதாதென்றும், பம்பாய் அலகாபாத் ஐகோர்ட்டார்கள் அபிப்பிராயப்பட்டிருக்கிறார்கள். ஒரு பம்பாய் கேசில் புருஷனுடைய சொத்து விதவையினுடைய அநுபவத்திலிருந்தது. அவளுடைய பெண்ணும், அவள் புருஷனுடைய ஒரு தூர ஞாதியும் அநந்தர வார்சுகளாயிருந்தார்கள். பம்பாய் தேசவழக்கப்படி முழுபாத்தியமுள்ள வார்சாகிய அந்தப் பெண்ணினுடைய சம்மதியுடன் விதவை சொத்தை வினியோகஞ்செய்தாள். அதற்குப்பிறகு முதலில் பெண்ணும் பிறகு விதவையுமிறந்தார்கள். அந்த வினியோகம் தூரஞாதியைக் கட்டுப்படுத்தமாட்டாதென்று சொல்லிச்சொத்தை அவனுக்குக் கொடுக்கும்படி தீர்மானஞ் செய்தார்கள். (இ. லா. ரி. 5 பம். 563; 13 மூ. இ. அ. 228; இ.லா.ரி. 3 அ. 362; இ. லா. ரி. 6 அ. 116, 288; இ. லா. ரி. 10 அ. 407.)

(4) ஆனால், கல்கத்தா ஐகோர்ட்டார் தற்காலத்தில், வினியோகஞ் செய்தபோது நெருங்கின வார்சான அனந்தரவார்சு ஒருவன் சம்மதி போதுமென்றும் அவன் பெண்வார்சு உயிருடனிருக்கும் பொழுதே இறந்துபோனாலும் வினியோகம் ரத்தாகமாட்டாதென்றும் தீர்மானித்திருக்கிறார்கள். (இ. லா. ரி. 10 க. 1102) வினியோக காலத்தில் ஒரே வரிசையிலிருக்கிற அனேக அநந்தர வார்சுகளிருந்தால், அவர்களாவன:—தௌகித்திரன், அண்ணன் தம்பிகள் முதலிய இரண்டு மூன்று பேர்களிருந்தால், அவர்களெல்லோருடைய சம்மதியும் அவசியமென்றும் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது (இ. லா. ரி. 17 க. 896.)

**440.** அநந்தரவார்சு தாவா.—(1) சரியான அதிகாரமின்றி விதவை ஸ்வீகாரமெடுத்துக்கொண்டால் அது தெரிந்ததுமுதல் 6 - வருஷத்துக்குள் அதை ரத்துசெய்ய தாவா கொண்டுவரவேண்டும். (18 ம. 53; ஸ்பெஸிபிக் ரிலீப் ஆக்ட் 4-வது பிரிவு.) தக்க அவசியமில்லாத சமயத்தில் பெண்வார்சுகள் தானம் விற்பனை முதலியவைகள் செய்தால் அந்த வினியோகஞ்செய்த 12-ளுடத்திற்குள் அநந்தர வார்சு பிராது கொடுத்து, அது அந்தப் பெண்வார்சு ஜீவித்திருக்கும் வரையில் தான் செல்லுமென்றும், அநந்தரவார்சுகளைக் கட்டுப்படுத்த மாட்டாதென்றும் தீர்ப்புப்பெறலாம். (இ. லா. ரி. 10 ம. 90; இ. லா. ரி. 9 க. 934.) மேற்சொல்லியபடி பிராது செய்யாமல்

சும்மாவிருந்து விட்டால் அந்தப் பெண்வார்சிறந்து அநந்தரவார்சுக்கு பாத்திய முண்டானதற்குப்பிறகு 12-வருஷத்திற்குள் தாவா செய்து வினியோகசொத்தை சுவாதீனப் படுத்திக்கொள்ளலாம். (8 க. 442; 10 க. 324; 26 இ. அ. 71.) ஆனுல், காலதாமதத்தால் ருசு முதலானது அகப்படாமல் போய்விடுமாதலால் பெண்வார்சு உயிருடனிருக்கும் பொழுதே தாவாசெய்வது நலமாயிருக்கும். (இ. லா. ரி. 8 அ. 365, 946; 14 க. ஐ. 226.) ஆனுல், சொத்து மட்டும் அவளுக்கு பிற்காலத்தில் தான் அநந்தரவார்சைச்சேரும். (6 கல். 198.)

(2) பெண்வார்சு உயிருடனிருக்கும்பொழுது அநந்தரவார்சு தாவா செய்து அவளுக்குப்பிறகு அந்தவாஸ்தி தன்னைச் சேரவேண்டியதென்று தீர்ப்புப்பெற அதிகாரமில்லை. ஏனென்ருல், அவளிறந்து போகுங்காலத்திலிவன் ஜீவித்திருந்தால் மட்டும் அநந்தர வார்சாகிருன். (15 க. ஐ. 83; இ. லா. ரி. 8 க. 12.) அவளாயிசுகாலத்தில் கொண்டு வரப்படும் அநந்தரவார்சு தாவா பிரயோசனமில்லை. (22 அ. 294.)

(3) அநந்தரவார்சுக்கு அதிக நஷ்டமுண்டாகும்படி பெண் வார்சு தன்னுடைய சொத்தை யனுபவித்தால், அக்காலத்தில் அநந்தர வார்சாயிருப் வன் தாவாசெய்து அப்படி நடத்தாமலிருக்கும்படி கோர்ட்டு மூலமாய் அவளுக்கு இஞ்சங்க்ஷன் கொடுக்கும்படி செய்யலாம். (4 க. ஐ. 1; 1 ஸ. 125; 6 மூ. இ. அ. 433.) ஆஸ்தி முழுவதும் நஷ்டமாகும்படி செய்யுங்காலத்தில் அதை யவள் வசமிருந்து நீக்கி ரிஸீவர் ஏற்படுத்தும்படி கேட்கலாம். (1854வரு பம். ஸ. தீ. 351; 1 க. ஐ. 24) ரிஸீவரேற்படுத்தப்பட்டால் ஆஸ்தியின் வரும்படி யெல்லாம் பெண்வார்சுக்கே அவளாயிசுவரையில் கொடுக்கப்படும். (1 ம. ஐ. கோ. ரி. 286; 2 ம. ஐ. கோ. ரி. 399.) சொத்தை செவ்வையாய்ப் பரிபாலனஞ்செய்ய அநந்தரவார்சே தகுந்தவனுகக் காணப்பட்டால், அவனே ரிஸீவராக நியமிக்கப்படலாம். (1859 பம். ஸ. தீ. 210; 5 அல 555.) பெண்வார்சுமூலமாய் சொத்தையடைந்து யாராவது அக்கிரமமான வழியாய் அனுபவித்து அதை நாசஞ்செய்தால் அவன் பேரில் கூட அநந்தரவார்சு பிராது செய்யலாம். (3 ம. ஐ. 119; க. ஐ. ஸப்ளி மெண்ட் வாலியூம். 48.)

அநந்தர வார்சு கிரமப்படி சொத்தை யடையவேண்டுமென்று தாவாசெய்கிறவர்கள் இறந்தவருடைய அபரக்கிரியைச்செலவுகளை அந்த சொத்திலிருந்து கொடுக்கக்கடமைப்பட்டவர்கள். (32 பம். 26.)

**441.** பிராதுசெய்ய வேண்டியவர்கள்.—தற்காலத்தில் அநந்தர வார்சாயிருப்பவன் மாத்திரம் மேற்பிரிவிற் சொல்லப்பட்ட பிராதுகள் செய்யலாமே யொழிப தூரவார்சாவது, அநந்தர வார்சின் சம்மதி பெற்றுக்கொண்டு அவனுக்கடுத்தவார்சாவது செய்யக்கூடாது. (இ லா. ரி. 5 அ. 532; இ. லா. ரி 6 அ. 428; 14 மூ. இ. அ. 176) அநந்தரவார்சு முழுபாத்தியமில்லாத ஸ்திரீயாயிருந்தால், அவளுக்குப்பிந்திய வார்சுதாரன் மேற்சொல்லிய தாவா செய்யலாம். (இ. லா. ரி. 13 ம. 195; 15 ம. 422; 14 மூ. இ. அ. 176) மேலும் அநந்தரவார்சு பெண்வார்சுடன் மோசடியாய்ச் சேர்ந்து சொத்து வினியோகஞ்செய்யப்பட்டாலும், அப்படி மோசடியாகச் சேர்ந்து பிராதுசெய்யாமலிருந்தாலும் அவனுக்குப்பிந்தின அநந்தர வார்சு பராதீனம் பெற்றவன்பேரில் வியாச்சியஞ்செய்து சொத்தைத் திருப்பியடையலாம். (இ. லா. ரி. 11 ம. 106; இ. லா. ரி. 9 அ. 441; 14 மூ. இ. அ. 176.)

**442.** அநந்தரவார்சு கிரமத்தில் கிடைத்த சோத்தை சுவேச்சையாய் வினியோகஞ்செய்யலாம்.—ஒருவன் தன் மகன் துஷ்டர்களோடு சேர்ந்து துர்வினியோகஞ் செய்கிறனென்று தன் பிள்ளையின் பெண்சாதிக்கு தனக்கு அநந்தரவார்சு கிரமத்தில் கிடைத்த சொத்தை எழுதிவைத்தான். அநந்தரவார்சாய்கிடைத்தசொத்து வியாஜ்ஜிய மூலமாய் கிடைத்ததென்றும் அதற்கு குடும்பபொது சொத்து செலவழிக்கப்பட்டிருப்பதால் அதுவும் குடும்ப பொதுச் சொத்தென்றும் அவன் மகன் அது தனக்குச்சேரவேண்டுமென்றும் வழக்காடினன். அவ்வழக்கு செலவு ஒரு கடனாக பாவிக்கவேண்டுமென்றும். அநந்தரவார்சால் கிடைத்த சொத்தை சுவேச்சாவினியோகம் செய்ய பாத்தியமுண்டென்றும் தீர்ப்புச்செய்யப்பட்டது. (28 அல. 347.)

ஹிந்துலா முற்றிற்று.

---